உ

சிவமயம்.

# ஓர் அறிவிப்பு.

# தமிழ்ப் பரிசு ரூபாய் ஆயிரம்.

இப்போது திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்து அதிபர்களாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாத ஸ்வாமிகள் அவர்கள் தமிழ்ப் பாஷாபிவிருத்தி விஷயமாகச் செய்துள்ள ஒரு சாசுவதமான தருமத்தைத் தெரிவிக்கிறேன்.

சென்னை, ஸர்வகலா சங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்டுள்ள ஓரியண்டல் டைட்டில் பரீக்ஷைகளுள் தனித்தமிழ் வித்வான் பரீக்ஷையில் வருஷந்தோறும் முதல்வகுப்பில் முதல்வராகத் தேறும் மாணுக்கருக்கு ரூபாய் ஆயிரம் பரிசாக அளித்தற்பொருட்டு இவர்கள் 1928-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் அமெரிக்கா கண்டத்தில் டாரண்டோ என்னும் நகரத்திலுள்ள 'தி மானுபாக்ச்சரர்ஸ் லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி' (The Manufacturers' Life Insurance Company) யில் தங்கள் ஆயுளை ரூபாய் 40,000-க்கு இன்ஷ்யூர் செய்து 4,46,416 என்னும் எண்ணுள்ள பாலிஸியை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த மூலதனம் ஏறக்குறையப் பன்னிரண்டு வருடங்களில் நிறைவடையும். அதுவரையில் இவர்கள் வேறு வரும்படியிலிருந்தே ஷை பரிசை வருஷந்தோறும் அளித்துவருவதாக நிச்சயித்து 1929-ஆம் வருஷம் முதற்கொண்டு அளித்து வருகிறார்கள்.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜில் தமிழ்ப் பண்டிதராக உள்ள ம-ா--ா-ஸ்ரீ வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்கள் 1929-ஆம் ஆண்டிலும், சிதம்பரம் அண்ணாமலை யூனிவர்ஸிட்டியில் தமிழ்ப் பண்டிதராக உள்ள ம-ா-ா-ஸ்ரீ ஆ. பூவராகம் பிள்ளையவர்கள் 1930-ஆம் ஆண்டிலும், ம-ா-ா-ஸ்ரீ **K.** சுந்தரமூர்த்தி ஐயர், **M.A.**, அவர்கள் சென்ற ஆண்டிலும் முறையே இப்பரிசைப் பெற்றிருக்

கிறார்கள். இவ்வருஷம் திரிசிரபுரம் நாஷனல் காலேஜிலுள்ள தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ T. P. பழனியப்ப பிள்ளை யவர்கள் இப்பரிசை அடையக் கூடுமென்று தெரிகிறது.

மேற்கண்ட பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேறுபவர்களில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் சமமான மார்க்குகள் பெற்றிருந்தால் அவர்களுடைய பெயர்களைத் தனித்தனியே சீட்டுக்களில் எழுதித் தக்கவர்கள் முன்னிலையில் ஷை சீட்டுக்களைக் குலுக்கிப் போட்டு எடுப்பதில் தெய்வ சம்மதமாக எவருடைய பெயர் கிடைக்கிறதோ அவரே ஷை பரிசைப் பெறுவதற்கு உரிமையுள்ளவராவர்.

இதனைக் கண்ணுறும் தமிழ் மாணுக்கர்கள் விசேஷமான முயற்சியை மேற்கொண்டு தமிழைப் படித்து இந்தப் பரிசைப் பெறுதற்குரிய வழியைத் தேடிக்கொள்ளும்பொருட்டு இவ்வாறு தெரிவிக்கலானேன்.

ஸ்ரீகாசி மடம்,<br>திருப்பனந்தாள்<br>8—8—'32.

இங்ஙனம்,<br>சுப்பராய பிள்ளை.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

# இப்புத்தகத்தில் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

திருவரங்கக் - திருவரங்கக் கலம்
திருவா - திருவாசகம். [பகம்.
திருவாரூர்மும் - திருவாரூர் மும்மணிக்கோவை.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.
திருவிடை - திருவிடைமருதூர்ப் புராணம்.
திருவிடை. மும்மணி - திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.
திருவிளை - திருவிளையாடற் புராணம்.
திருவெங்கைக், வெங்கைக் - திருவெங்கைக்கோவை.
திருவேங்கடத் - திருவேங்கடத்தந்
திவ் - திவ்யப் பிரபந்தம். [தாதி.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
பட்டீச்சரப் - பட்டீச்சரப்புராணம்.
பரி - பரிபாடல்.
பன்னிரு - பன்னிருபாட்டியல்.
பாக - பாகவதம்.

பிரபு - பிரபுலிங்கலீலை.
பிரயோக - பிரயோக விவேகம்.
பு. வெ - புறப்பொருள் வெண்பா
புறநா - புறநானூறு. [மாலை.
பெரிய - பெரியபுராணம்.
பெருங் - பெருங்கதை.
பெருவுடை - தஞ்சைப்பெருவுடையாருலா.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மதுரைக் - மதுரைக்காஞ்சி.
மதுரைக்கலம் - மதுரைக்கலம்ப
மயிலை - மயிலைநாதருரை. [கம்.
மயிலைத் திரிபந் - திருமயிலைத்திரிபந்தாதி.
மலைபடு - மலைபடுகடாம்.
மாயூரப் - மாயூரப் புராணம்.
மீனாட்சி. திருவிரட்டை - மீனாட்சியம்மைதிருவிரட்டைமணிமாலை.
மீனாட்சி. பிள்ளை - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
மேற் - மேற்கோள்.
யா. கா - யாப்பருங்கலக் காரிகை.
யா. வி - யாப்பருங்கல விருத்தி.
வி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.

உ

கணபதி துணை.

# முகவுரை.

## திருவாசகம்.

திருச்சிற்றம்பலம்.

உடையா ளுன்ற னடுவிருக்கும்
உடையா ணடுவு ணீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரும்
இருப்ப தானு லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்குமரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே.

திருச்சிற்றம்பலம்.

கவிஞர்கள் தாம் பிறந்த இடங்களிலும் பழகிய இடங்களிலும் உள்ள தெய்வங்களையும் தம்மை ஆதரித்தோர்களையும் பாராட்டி முறையே பக்தியாலும் செய்ந்நன்றியறிவாலும் தம் உள்ளக்கருத்தை அமைத்துப் பிரபந்தங்களையும் தனிப்பாடல்களையும் இயற்றுதல் இயல்பு. பெருங்காப்பியங்களைப் படித்து அறிந்து கொள்ளவேண்டிய செய்திகளைப் பிரபந்தங்களால் எளிதில் அறிந்துகொள்ளலாமென்று அறிஞர் கூறுவர்.

இப்புத்தகத்தில் கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய கோடீச்சுரக் கோவை, தஞ்சைப் பெருவுடையாருலா, சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகமென்ற மூன்று பிரபந்தங்கள் அடங்கியுள்ளன. முன்னரே இவற்றின் மூலங்கள் மட்டும் அச்சிடப்பெற்று வழங்கிவந்தன. ஆனாலும், இவை நாளடைவில் அடைந்திருந்த பிழைகளைப் பார்த்தபொழுது இவற்றை நன்றாக ஆராய்ந்து குறிப்புரை முதலியவற்றுடன் வெளிப்படுத்த வேண்டுமென்ற எண்ணம் எனக்கு முன்னமே இருந்து வந்தது.

ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகருடைய பரம்பரையில் உதித்தவர்களும் இப்பொழுது திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் தலைவர்களாக வீற்றிருப்பவர்களும் தமிழ் நூலாராய்ச்சியிற் சிறந்தவர்களுமாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாத ஸ்வாமிகளவர்கள்பால் இப்பிரபந்தங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தபொழுது இவற்றைக் குறிப்புரை முதலியவற்றுடன் பதிப்பித்து வெளியிடுதல் நலமென்று கூறி அப்பதிப்பிற்குரிய பொருட்செலவை மடத்திலிருந்தே கொடுப்பதாக வாக்களித்துக் கோடீச்சுரக் கோவையைத் தாம் படித்துவந்தபொழுது குறித்து வைத்திருந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் அக்கோவையின் முதற் பதிப்பிலிருந்த சிறப்புப் பாயிரப்பாடல் ஒன்றையும் கொடுத்துதவினார்கள். அவர்கள் செய்த பொருளுதவியைக் கொண்டே இம்மூன்று பிரபந்தங்களும் ஒருங்கே இப்பொழுது பதிப்பிக்கப்பெற்றன. இவ்வாறே இவர்கள் தமிழ்ப் பாஷாபிவிருத்தி விஷயமாக ஆராய்ந்து செய்து வரும் நற்காரியங்கள் பல; அவை தமிழ் நாட்டார் யாவராலும் பாராட்டற்குரியன. இப்புத்தகத்தின் அநுபந்தமாகத் தனியே பதிப்பிக்கப்பெற்றிருக்கும் ஆயிரம் ரூபாய்த் தமிழ்ப்பரிசு என்பதைப் பற்றிய அறிவிப்பாலும் இவ்விஷயம் நன்கு விளங்கும்.

கோடீச்சுரக்கோவையில், கிளவி, துறை, மூலத்திலுள்ள கடினமான சொற்கள் ஆகிய இவற்றிற்குப் பொருளும் முடிபும் நயங்களும் தஞ்சைப் பெருவுடையாருலாவிற் கடினமான சொற்களுக்குப்பொருளும் முடிபும் நயங்களும் எழுதப்பட்டுள்ளன. இவ்விரண்டு நூல்களுக்கும் உரிய ஏட்டுப் பிரதிகள் கிடைக்கவில்லை. கிடைத்த அச்சுப் பிரதிகளில் வழுவென்று தெரிந்தவற்றைக் களைந்து திருத்தமான பாடங்கள் ஊகித்து நிச்சயிக்கப்பட்டன.

என்னுடைய இளமைப் பிராயத்தில் சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகத்திலுள்ள, "வாசலிது வாசலிது" என்னும் கீர்த்தனத்தை என்னுடைய சிறிய தந்தையார் எனக்குக் கற்பித்தார். அதன் சுவையிலும் மெட்டிலும் ஈடுபட்டு அடிக்கடி அதை நான் பாடிவருவதுண்டு. அந் நாடக அச்சுப்பிரதி பலவாறு முயன்றும் முதலில் அகப்படவில்லை. தமிழ் நாடகங்கள் பலவற்றை எழுதி உபகரித்து வரும் ம-ள-ள-ஸ்ரீ ராவ் பகதூர் ப. சம்பந்த முதலியாரவர்களிடமிருந்து அதன் அச்சுப்பிரதியொன்று இரண்டு வருஷங்க

ளுக்குமுன் கிடைத்தது. அது தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹால் புத்தக சாலையிலுள்ள ஏட்டுப் பிரதியோடு ஒப்பு நோக்கப்பட்டது ; பதிப்பித்தோரால் அதிற் புதியனவாகச் சேர்க்கப் பெற்றனவென்று தெரிந்தனவும் ஏட்டுப் பிரதியிற் காணப்படாதனவும் ஆகிய சில பிழையான பகுதிகள் இப்பதிப்பில் விலக்கப்பட்டன. இக் குறவஞ்சி பெரும்பாலும் எளிய நடையில் அமைந்திருத்தலின் இன்றியமையாத சொற்களுக்கு மட்டும் பொருளும், நயங்களும் வேறு பல குறவஞ்சிகளிலிருந்து ஒப்புமைப் பகுதிகளும் எழுதப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பிரபந்தத்திற்குமுரிய நூன்முகத்தில் அவ்வப் பிரபந்தத்தைப் பற்றிய ஆராய்ச்சி காணப்படும். கோடீச்சுரக் கோவைக்கு மட்டும் தனியே நூன் முகமும் பொருட்டொடர்பும் ஆராய்ச்சியும் எழுதப்பட்டிருக்கின்றன. நூலாசிரியர் வரலாறும், * சரபோஜி மன்னர் சரித்திரமும், இம் மூன்று பிரபந்தங்களின் மூலத்திலும் குறிப்புரை முதலியவற்றிலும் உள்ள அரும்பதங்கள் தெய்வங்கள் தலங்கள் உவமைகள் அணிகள் முதலியவற்றின் அகராதியும் ஆராய்ச்சி செய்வார்க்குப் பயன் படுமென்று கருதி எழுதி இப்புத்தகத்தின் அங்கமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

கொட்டையூர் சம்பந்தமான செய்திகளையும், தஞ்சை சம்பந்தமான செய்திகள் முதலியவற்றையும் தெரிவித்து உதவிய அன்பர்கள்பால் நன்றி பாராட்டுகின்றேன்.

இப் பதிப்பு விஷயத்தில் உடனிருந்து பலவகையான உதவிகளைச் செய்தவர்கள், சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி, வித்வான் வி. மு. சுப்பிரமணிய ஐயரும், மோகனூர்த் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி, கி.வா. ஜகந்நாதையரும் ஆவர்.

இப் பதிப்பில் எதிர் பாராத பிழைகள் அங்கங்கே வந்திருத்தல் கூடும். அவற்றைப் பொறுத்துக் கொள்ளும்படி அன்பர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"தியாகராஜ விலாஸம்"<br>திருவேட்டீசுவரன்பேட்டை,<br>25-7-1932.

இங்ஙனம்,<br>வே. சாமிநாதையர்.

---

* இச்சரித்திரம் எழுதுவதற்கு உதவியாக இருந்தவை சாஸனங்கள், தஞ்சை மகாராஷ்டிரர் சரித்திரம் முதலியன.

# * நூலாசிரியர் வரலாறு.



இப்பதிப்பில் அடங்கியுள்ள கோடீச்சுரக்கோவை முதலியவற்றின் ஆசிரியராகிய ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் கோடீச்சுரம், ஏரண்டபுரமென நூல்களில் வழங்குவதும் கும்பகோணத்திற்கு அருகில் காவிரிநதியின் வடபாலுள்ளதும் தேவாரம் பெற்றதுமாகிய கொட்டையூரென்னும் தலத்தில் ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன், பரம்பரைச் சைவாசாரியமரபினரும் †அருணிறைந்த தேசிகர் கோத்திரத்தினருமாகிய தண்டபாணி தேசிகரென்பவருக்குக் குமாரராக உதித்தவர். இவருடைய முன்னோர்கள் சற்றேறக்குறைய 300 வருடங்களாக அவ்வூரிலிருந்து வந்தனரென்று கேள்வி. இவருடைய பெயராகிய சிவக்கொழுந்தென்பது கொட்டையூருக்குத் தென்பாலுள்ள திருச்சத்தி முற்றத்திற் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் சிவபெருமான் திருநாமமாதலின் இவருடைய முன்னோர்களில் தாய்வழியினரேனும் தந்தை வழியினரேனும் அத்தலத்திற் பற்றுடையவராக இருந்திருத்தல் கூடுமென்றும் அதுபற்றி இவருக்கு இப்பெயர் வைக்கப் பெற்றிருக்கலாமென்றும் தோற்றுகின்றது.

இவர் இளமையிலேயே தக்கவர்களிடம் முறையாகத் தமிழ்க் கல்வி பயின்று பலவகை நூல்களை அறிந்தனர். இன்னாரின்னாரிடம் பாடங்கேட்டனரென்று இப்பொழுது தெரியவில்லை. ஆனாலும், இலக்கண விளக்க நூலாசிரியராகிய ஸ்ரீ வைத்தியநாத தேசிகருடைய பரம்பரையினரும் தமிழ்ப்புலமை வாய்ந்தவரும் திருவாரூரில் இருந்தவருமாகிய ஒரு பெரியாரிடத்தில் இவர் பாடங் கேட்ட துண்டென்று சொல்வார்கள்.

வாழ்க்கைக்குப் போதிய நிலங்களும் வீடுகளும் தோட்டமும் கொட்டையூரில் இவருக்கு இருந்தன. ஆதலால், காவிரி ஸ்நானமும் சிவபூஜையும் சிவதரிசனமும் செய்துகொண்டும் சில

* இவ்வரலாறு, ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாதஸ்வாமிகளவர்களும் பிறரும் கூறிய சில செய்திகளையும் சிவக்கொழுந்து தேசிகரவர்களுடைய நூல்களிலுள்ள சில பகுதிகளையும் ஆதாரமாகக்கொண்டு எழுதப் பெற்றது. † பூர்ணேசுவர கோத்திரமென்றும் கூறுவர்.

மாணாக்கர்களுக்குப் பாடஞ்சொல்லிக்கொண்டும் பல தனிச்செய்யுட்கள் செய்து இன்புற்றும் இன்புறுவித்தும் மனநிறைவோடு காலங் கழித்து வந்தார். இவர் கல்வியிற் சிறந்தவரென்னும் புகழ் எங்கும் பரவியது.

அக்காலத்தில் தஞ்சையில் இருந்த சரபோஜி மன்னர் புதியதாக ஒரு புத்தகசாலையை அமைத்து அதிற் பல பாஷைகளிலுள்ள பலவகை நூல்களைத் தொகுத்தும் பல வித்துவான்களை வருவித்துத் தக்க பொருளுதவிசெய்து ஆதரித்துப் பல புதிய நூல்களைச் செய்வித்தும் வந்தனர். அம் மன்னர் இவருடைய முத்தமிழ்ப் புலமைத் திறத்தையும் செய்யுள் செய்யும் வன்மையையும் தக்கவர்களாற் கேள்வியுற்று இவரையும் வருவித்துத் தம் அரண்மனை வித்துவானாக அமர்த்திக் கொண்டார். அவருடைய விருப்பத்திற்கிணங்கப் பலவகைத் தமிழ்நூல் ஏட்டுப்பிரதிகளைத் தக்க விலைகொடுத்து வருவித்துத் தொகுப்பித்ததன்றி, சரபேந்திரர் வைத்திய முறைகள், சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள், சரபேந்திரர் வைத்தியம் என்னும் * மூன்று நூல்களை இவர் இயற்றினர். அவை அச்சரபோஜி மன்னருடைய விருப்பத்தின்படி அனுபவ வைத்திய முறைகளை அறிந்து தமிழ்ச் செய்யுள் உருவத்தில் அமைக்கப் பெற்றன ;

> " இம்முறைகேள் பண்பாய்ச் சோழ, மண்டலத்திற் கதிபதி
> யாஞ் சரபேந்த்ர பூபதிசொல் மார்க்கந் தானே "
>
> (சரபேந்திரர் வைத்திய முறைகள், 18),

> " இன்னமுறை தஞ்சைவளர் சரபோஜி மன்னர்மகிழ்ந்
> திசைத்த தாமே "
>
> (சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள், 161),

> " பார்க்கண்வளர் நகர்க்கெல்லா முயர்ந்தபுகழ்த் தஞ்சைப்
> பதிமருவு சரபோஜி மன்னர்முறை யிதுவே "
>
> (சரபேந்திரர் வைத்தியம்)

என்பவற்றால் இச்செய்தி உணரப்படும். அந்நூல்களிலுள்ள செய்யுட்கள் பிற வைத்திய நூல்களிலுள்ள பாடல்களைப்போல் இரா

---

* இந்நூல்கள் மூன்றும் தஞ்சைச் சரபோஜி மகாராஜர் ஸரஸ்வதி மஹால் புத்தகசாலையில் உள்ளன.

மல் நல்ல நடையில் அமைந்துள்ளன. அவற்றிலுள்ள சில செய்யுட்கள் வருமாறு:

1. சரபேந்திரர் வைத்திய முறைகள்.

ஆசிரியவிருத்தம்.

"செங்கழுநீர் கோட்டமதி மதுரநெல்லி முள்ளிகருஞ் சீர கம்பின்
கொங்கடர்ந்த சீரகந்திப் பிலிமூலம் வாய்விளங்கங் குணமா மஞ்சள்
அங்கந்தச் சிறுதேக்கு மரமஞ்சள் வெட்பாலை யரிசி யப்பால்
பங்கமிறிப் பிலிசெவிய மிந்துப்பு வசம்பின்னும் பகரு வேனே."

இந்நூல் 403 - செய்யுட்களை உடையது.

2. சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள்.

வெண்பா.

"கைகால் செவியுச்சி கண்டமூக் குக்குளிர்ந்து
மெய்தான் சுழன்று விழிசிவந்து—பையயவே
வாயுமே ஞெக்கி வயிறுதனிற் சூலைவரின்
ஆயுநிலை யில்லென் றறி."

ஆசிரியவிருத்தம்.

"உள்ளிப் பருப்பி லரைப்படிதா னுறவே யரைத்துச் சேலைதனில்
மெள்ளச் சுருட்டி வேம்பினெய் விட்டே யெரியும் பெருஞ்சுடரிற்
றெள்ளப் பிடித்துப் பிழிதயிலஞ் சிரசு பிடரி தமிற்றடவி
உள்ளுக் கீந்தாற் றுடியிடையா யுடனே தீரும் புறவீச்சு."

இந்நூல் 360 - செய்யுட்களை உடையது.

3. சரபேந்திரர் வைத்தியம்.

வெண்பா.

"நாகமல்லி கைவேர் நறுஞ்சா ரணைவேர்பின்
வேக மருவுகொடு வேலிவேர்—வாகாம்
தவசி முருங்கைவேர் சம்பீரச் சாற்றில்
இவையரைத்து மூலத் திடு."

இந்நூல் 362 செய்யுட்களை உடையது.

இவற்றுள், சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகளென்னும் நூலெழுதிய சுவடியிலுள்ள குறிப்பினால் அந்நூல் கி.பி. 1826-இல் இவரால் இயற்றப்பெற்றதாகத் தெரிகிறது. அக்காலத்தில் இவரு

டன் அங்கே இருந்த தமிழ்ப் பண்டிதர்கள் காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், திருவேங்கடத்தா பிள்ளை, சுப்பராயக் கவிராயர், வேங்கடாசலம் பிள்ளை முதலியோர்.

இவர் 90 - பிராயம் வரையில் இருந்தனரென்பர். இவருக்கு மனைவிமார் இருவர்; குமாரர்கள் இருவர்; குமாரிகள் ஐவர்; முதல் மனைவியார் குமாரர் ஸ்ரீவடுகநாததேசிகரென்பவர். அவர் வடமொழி தென்மொழிகளில் நல்ல பயிற்சியுடையவராக இருந்தார். ஸ்ரீ வடுகநாத தேசிகருடைய குமாரர் ஸ்ரீ குருசாமி தேசிகர். அவருடைய குமாரர்கள், ஸ்ரீ தியாகராஜ தேசிகர், ம-ா-ா-ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரவர்கள், ம-ா-ா-ஸ்ரீ சோமசுந்தர தேசிகரவர்கள் என்னும் மூவர். அவர்களுள் ம-ா-ா-ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரவர்களுடைய குமாரர்கள் இப்பொழுது திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களாக வீற்றிருந்து விளங்கிவருபவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாத ஸ்வாமிகளவர்கள்.

இரண்டாம் மனைவியாருடைய புதல்வர் ஸ்ரீ சாமிநாத தேசிகர் என்பவர். அவர் திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களிடம் பாடங் கேட்டுச் சிறந்த தமிழ்ப் புலமை வாய்ந்து கி. பி. 1864-ஆம் வருஷத்திற் கும்பகோணம் காலேஜிலும் அதன்பின் திருவனந்தபுரம் மகாராஜா காலேஜிலும் தமிழ்ப் பண்டிதர் வேலைபார்த்துப் பின்பு உபகாரச் சம்பளம் பெற்றுக் கொண்டனர். அவருக்குச் சிவராஜ தேசிகரென்றும் நடராஜ தேசிகரென்றும் இரண்டு குமாரர்கள் உண்டு.

இப்பதிப்பிலுள்ள மூன்று பிரபந்தங்களுள் கோடீச்சுரக் கோவை மிகவும் ஆராய்ந்து செய்யப் பெற்றது. அவ்வப்பொழுது மெல்லமெல்ல யோசித்து முடித்த ஒவ்வொரு செய்யுளையும் எழுதித் தொகுத்து இவர் அந்நூலை இயற்றி முடித்தார். அதனை இயற்றிக்கொண்டிருக்கும்பொழுது ஒருநாள் இரவிற் சயனித்துக்கொண்டே யோசனைசெய்து ஒருசெய்யுள் முற்றுப் பெற்றபின் உடனே சிகிமுகி (சக்கிமுக்கி)க் கல்லின் உதவியால் அருகிலிருந்த விளக்கையேற்றி அச்செய்யுளை எழுதிவிட்டுப் பின்பு துயின்றனரென்பர். கொட்டையூருக்கு ஒருலா இவரால் இயற்றப்பெற்றதென்றும் கேள்வியுண்டு; அது கிடைக்க

வில்லை. இவர் இயற்றிய குறவஞ்சி நாடக இசைப்பாட்டுக்களின் மெட்டுக்கள் தஞ்சையிலிருந்த பொன்னையா என்னும் நட்டுவர் ஒருவருடைய உதவியினால் அறிந்து அமைக்கப்பட்டன என்பர். அதில் 39 கீர்த்தனைகளும் 3 வெண்பாக்களும் 2 அகவல்களும் 25 விருத்தங்களும் 2 கொச்சகக் கலிப்பாக்களும் உள்ளன.

உத்தர ராமாயணக் கீர்த்தனை, பாகவதம் தசமஸ்கந்தக் கீர்த்தனை என்னும் இசைநூல்களை இயற்றியுள்ள ஸ்ரீ அநந்த பாரதியென்பவர் தாம் செய்த, 'திருவிடை மருதூர் நொண்டி நாடகம்' என்னும் நூலில்,

"வாழிசிவக் கொழுந்தும் பரம்பரையும் வாழி
வாழிஜயா றப்பமுனி வரனும் வாழி
வாழிதஞ்சைச் சரபோஜி ராஜன் வாழி"

என்று பாராட்டிப் பாடியிருத்தலால் அவர் இவரிடத்தில் மிக்க அன்புடையவரென்று தோற்றுகின்றது.

திருவிடைமருதூருக்கு இவர் ஒரு புராணம் செய்துள்ளார். அது சரபோஜி மன்னர் விருப்பத்தின்படி பாடப்பெற்றதென்பர். அதிற் காப்பிய இலக்கணங்கள் செவ்வனே அமைந்துள்ளன. அது 1387 செய்யுட்களையுடையது. ஆச்சாபுரமென வழங்கும் திருப்பெருமண நல்லூருக்கு ஒரு புராணம் இவரால் இயற்றப் பெற்றது. அதன் செய்யுள்நடை முதலியவற்றை ஊன்றிப்பார்க்கையில் இவர் அதனை இளமையிற் செய்திருக்கலாமென்று தோற்றுகின்றது.

அந்நூலில் வரும்,

"புயற்காரின் வருமகவான் பணிவள்ளல் பணிவிடைகள்
பொருந்தி நாளும்
செயற்காக வெங்கள்தலந் தனையடிமை கொண்டுவளர்
தேவ தேவன்
அயற்காதி யமலனருள் செய்தபுர மெனவுலக
மனைத்துங் கூறும்
வயற்காழி நகர்ச்சட்டை நாதனிரு பதமலரை
வணங்கி வாழ்வாம்" (சட்டைநாதர் காப்பு)

என்னும் செய்யுளும், இவர் தம் முதற்புதல்வருக்கு வடுகநாத

தேசிகரென்று பெயர் வைத்தமையும் * இவரது குலதெய்வம் சீகாழிச் சட்டைநாதரென்பதைப் புலப்படுத்துகின்றன. இவருடைய சந்ததியார்கள் இக்காலத்தும், சீகாழிச் சட்டைநாதப் பெருமானை முதலில் வழிபட்டுப் பின் விவாகம் முதலிய சுப காரியங்கள் செய்வதும் குழந்தை பிறந்தால் முதல் முடி சீகாழியில் இறக்குவதும் உண்டென்பர். அப்புராணத்திலுள்ள செய்யுட்கள் 533. பல தலங்களைப்பற்றியனவும் அகத்துறையமைதியுடையனவும் வினாவிடையாக உள்ளனவுமாகிய பல செய்யுட்களை இவர் இயற்றியுள்ளார். அவை **சரசக்கழிநெடில்** என்னும் பெயர் முதலியவற்றால் வழங்கும். அவை இப்பொழுது கிடைக்கவில்லை.

பல வருஷங்களுக்கு முன்பு சென்னையில் துரைத்தனத்தார் ஒரு கல்விச்சங்கம் அமைத்துப் பல வித்துவான்களை வருவித்துப் பல நூல்களை இயற்றுவித்தும் பழைய நூல்களை ஆராய்ந்து பதிப்பித்தும் பலருக்குப் பாடஞ்சொல்வித்தும் வந்தார்கள். அக்கல்விச் சங்கத்தில் தலைமைத் தமிழ் ஆசிரியராக இருந்து வந்த வித்துவான் ஸ்ரீ தாண்டவராய முதலியாருக்கு உடனிருந்து உதவி செய்ய ஒரு தமிழ்வித்துவான் வேண்டியிருந்தமையின் அச்சங்கத்தார் இவரை அனுப்பவேண்டுமென்று சரபோஜி மன்னருக்குத் தெரிவித்தனர். அவ்வாறே இவர் அனுப்பப்பட்டுச் சென்னை வந்து தாண்டவராய முதலியாரோடு தமிழாசிரியராகச் சிலகாலம் நல்ல மதிப்புப் பெற்று இருந்து வந்தனர். **திருவாசகம்** இவரால் அக்காலத்து முதன் முறை அச்சிடப்பட்டது.

65 வருடங்களுக்கு முன்பு கருந்திட்டைக்குடியைச் சார்ந்த ஓர் அக்கிரகாரத்தில் இருந்தவரும் இவருக்கு மிக்க நண்பரும் ஸ்ரீ வைஷ்ணவருமான ஸ்ரீநிவாசாசாரியரென்னும் முதியார் ஒருவர் இவ்ருடைய பொழுது போக்கையும் பாடஞ் சொல்லும் முறையையும் சுவை பயக்கும் வண்ணம் செய்யுட்களை இயற்றும் ஆற்றலையும்

---

*"வேலையின் மிதந்த புகலியந் தோணி விளங்கிடு
வடுகனுங் கடவுள்
காலைமென் போதை யுச்சியிற் கொள்வாங் கடுந்துயர்
மாலைதீர்ந் திடவே"

(திருவிடைமருதூர்ப் புராணம், கடவுள். 8)

என்பதும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது.

செய்யுட்களின் பொருளை நயம்படக் கூறி விளக்குந் திறனையும் சொல்லி மனம் உருகியதோடு இவர் இயற்றிய சரசக் கழி நெடிலிலிருந்து சில செய்யுட்களையும் வேறு தனிப் பாடல்களை யும் கூறிப் பொருளுரைத்தார். அவர் கூறிய பாடல்கள் யாவும் செம்பாகமாகவும் இனிய கருத்துக்களை உடையனவாகவும் இருந்து மனத்தைக்கவர்ந்தன. பல இடங்களிலுள்ள தமிழறிஞர்கள் இவருடைய பாடல்களைக் கூறிப் பாராட்டி வந்ததுண்டு.

சென்னையிலிருந்த புரசை அஷ்டாவதானம் ஸ்ரீ சபாபதி முதலியார் இவருடைய சம்பாஷணையால் உண்டாகும் இன்பத் தைக் குறித்துப் பாராட்டிச் சொல்லுவார்.

கொட்டையூரில் சந்திரசேகர மூர்த்தியின் திருவுருவம் சில மாக இருந்ததையறிந்து புதிய மூர்த்தி வார்ப்பித்து வைத்ததன்றி, சங்கராந்தியன்று தீர்த்தங் கொடுத்தற்கு அந்த மூர்த்தி எழுந் தருளுவதற்காக இரதம் ஒன்றும் இவர் செய்வித்து அத்திருநாள் வருஷந்தோறும் நடைபெறுவதற்காக அவ்வூரிலுள்ள தென்னந் தோப்பொன்றை வழங்கினர்.

இவர் கொட்டையூரில் அசௌக்கியமாக இருந்ததையறிந்து இவரைப்பார்க்க வந்தவர்களில் ஐரோப்பியர்கள் இருவர் இவருக் குப் பிரியமாகவுள்ளனவென்று அறிந்து விதையில்லாத மாதுளம் பழங்களைக் கையுறையாகக் கொணர்ந்து கொடுத்தனரென்றும், ஊரார் அக்கனவான்களுடைய அன்பையும் இவருடைய மதிப்பை யும் அறிந்ததன்றி அதுகாறும் அறிந்திராத அப்பழங்களை உண்டு வியப்புற்றனரென்றும் கூறுவர்.

சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய பாடல்கள் எளியநடையில் அமைந்தவை. சொல்லணிகளை அமைப்பதிலும் பலவகையான தொனிகளை அழகுபெற அமைப்பதிலும் இவர் மிக்க ஆற்றலை யுடையவர். ஒரு தொகுதியாகவுள்ள பல்பொருள்களின் பெயர் களைத் தொனியில் அங்கங்கே அமைத்திருத்தல் அறிந்து பாராட் டுதற்குரியது. கோடீச்சுரக்கோவையிற் காணப்படும் மிகுதியான தொனிகளைப்போல வேறு எந்தத் தமிழ் நூலிலும் காணல் அரிது. தற்குறிப்பேற்றம் முதலிய அணிகளையும் அங்கங்கே விரவுவித்துப் பாடுவார். ஒரு பொருளினது பெயரைக்கொண்டே பல செய்தி களைக் கற்பித்தலும் பரியாயப் பெயர்களை வைத்து வாக்கியங்களை

முடித்தலும் சொல் முரண்கள் பொருள் முரண்கள் மடக்கு முதலியவற்றை அமைத்தலும் தலப்பெயர்களைத் தொனியில் எடுத்தாளுதல், அவற்றின் வரலாற்றைச் சிலேடையாகப் பொருத்தல் முதலியனவும் தலங்களைப்பற்றிக் கூறுவதற்குரிய சந்தர்ப்பத்தைக் கற்பித்துக்கொண்டு அவ்வாறு செய்தலும் இவருடைய சிறப்பியல்புகள்.

பலதலங்களைப்பற்றிய வரலாறுகளை இவர்நூல்களிற் காணலாம். இலக்கணச்செய்திகளை இவர் பல இடங்களில் தொனியிலும் சிலேடையிலும் உவமையிலும் வழங்குகின்றார். கோவை உலா என்னும் பிரபந்தங்களின் பெயர்களைத் தொனியில் வைத்துப் பாடிய செய்யுட்கள், இவர் அவ்விருவகைப் பிரபந்தங்களைச் செய்ய வேண்டுமென்னும் அவாவுடையராக இருந்ததனையும், அந்த அவா கோடீச்சுரக்கோவை, கோடீச்சுர உலா, பெருவுடையாருலா என்பவற்றை இயற்றுதற்குக் காரணமாயிற்றென்பதையும் புலப்படுத்துகின்றன. தாம் பிறந்த தலத்தினிடத்து இவருக்குள்ள அன்பு, அத்தலத்திற்கு ஒரு கோவையும் ஒருலாவும் பாடினமையாலும், அதன் வரலாறுகளையும் பெயர்களையும் சிலேடை முதலியவற்றில் அமைய வைத்ததனாலும் அத்தலத்தைப்பற்றிக்குறவஞ்சியிற் கூறியிருத்தலினாலும் உணரப்படும். "நங்கேதந் தீர்த்தருள் கோடீச்சுரநம்பர்", "நம், ஏய்துதி கொண்டருள் கோடீச்சுரேசர்", "என்னை முன் னாண்டருள் கோடீச்சுர வள்ளல்", "நடத்தொழி றில்லைப் பொதுவிற்செய் தாண்மலர் நாளுமென்னெஞ், சிடத்துறச் செய்பரன்", "எனைத்தன் னடிமை யெனத்தடுத் தாண்டரு ளீசர்" (கோடீச். 91, 194, 207, 287 - 8) என்பன இவருக்குள்ள சிவபக்திப் பெருக்கைத் தெரிவிக்கும்.

இவருடைய தமிழ் நூற்பயிற்சி, கவித்திறன் முதலியவற்றை ஒவ்வொரு பிரபந்தத்துக்கும் முன்னே அமைக்கப்பட்டுள்ள நூன்முகம், ஆராய்ச்சி, குறிப்புரை என்பனவற்றால் அறிந்துகொள்ளலாம்.

---

# கோடீச்சுரக் கோவை நூன்முகம்.

---

கோவையென்பது அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைந்த தமிழ்ப் பிரபந்தங்களுள் முதன்மை வாய்ந்தது. ஏனைய சில பிரபந்தங்களில் அகப்பொருளிலக்கியச் செய்யுட்கள் அமைந்திருப்பினும் கிளவிகளாக வகுத்துத் துறைகளாக விரித்து ஒரு வரலாற்றுத் தொடர்ச்சியமையக் கோக்கப்பெற்றுப் பாடப்படுவதாதலின் இது கோவையென்னும் பெயர் பெற்றது. அகப்பொருட்குரிய ஐந்திணைகளும் அமைந்திருத்தலின் இஃது 'ஐந்திணைக்கோவை' எனவும் வழங்கப்பெறும்; "குலோத்துங்க சோழனைச்சொல்லியவைந் திணைக்கோவை பாட" (குலோத். கோவை), "திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை" (துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகள் பாடல்), "நம்மா லியற்றிக் கொடுத்திடுமைந்திணைக்கோவை யேற்றனையால்" (ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடல்) என்பவற்றைப்பார்க்க. இப்பிரபந்தம் நானூற்றின் மிக்க கலித்துறைச் செய்யுட்களை உடையது.

பொருளால் தொடர்புடையதாதலின் இது தொடர்நிலைச் செய்யுளின் பாற்படும்; "'கோவையுந் தொகையு மாவயின் வரையார்' என்பதனால் இது தொடர்நிலைச் செய்யுள்" (252) எனப் பேராசிரியர் திருச்சிற்றம்பலக் கோவையார் உரையுட் கூறியுள்ளது இதனைப் புலப்படுத்தும். அன்றியும் தண்டியலங்கார உரையாசிரியர் 'தமிழ் முத்தரையர்கோவை' என்னும் ஒன்றைச் சிறுகாப்பியத்திற்கு உதாரணமாகக் காட்டுவதால் கோவைகள் சிறுகாப்பியங்களென்பதும் பெறப்படும்.

கோவையுட் கூறப்படுவனவற்றிற்கு இலக்கணம் இறையனாரகப்பொருளும், நாற்கவிராச நம்பியகப்பொருளுமே. தோல்காப்பியத்திலுள்ள அகப்பொருளிலக்கணத்துட் கூறப்பட்ட செய்தி ஒரு கதைபோலத் தொடர்ந்த துறைகளாகக் கூறப்படவில்லை. இறையனாரகப்பொருளுரையில் அகப்பொருளிலக்கணம் தொடர்புபெறக் கூறப்பெற்றிருப்பதுடன் அவ்வத்துறைகளுக்குரிய உதாரணச் செய்யுட்களும் காட்டப்பெற்றிருக்கின்றன. அவ்வுரையிற்

கூறப்பட்ட செய்திகளையே தொகை வகை விரியாகச் சில வேறு பாடுகளுடன் அமைத்து நாற்கவிராச நம்பிகள் தமது அகப்பொருள் விளக்கத்தை இயற்றினர். தமிழ்நெறிவிளக்க மென்னும் இலக்கணநூலொன்றும் கலித்துறையாலமைந்த இலக்கணமொன்றும் இத்தொடர்புமுறையையே பின்பற்றி இலக்கணம் அமைக்கின்றன.

நற்றிணை முதலிய சங்கநூல்களிலும் பிற்காலத்துக் கல்லாடம் முதலிய நூல்களிலும்உள்ள அகத்திணைச்செய்யுட்கள் ஒரு தொடர் பின்றிப் பலவகைத்துறைகளும் கலந்து அமைவன. கோவைகளுள் திருவாதவூரடிகள் இயற்றிய திருச்சிற்றம்பலக்கோவையாருக்கும் பிற கோவைகளுக்கும் சில வேற்றுமைகள் உண்டு. ஏனைய கோவைகளெல்லாம் இறையனாரகப்பொருளுரையிற் காட்டப் பெற்றுள்ள பாண்டிக்கோவையையும், அகப்பொருள் விளக்க உரையிற் காட்டப்பெற்றுள்ள தஞ்சைவாணன் கோவை முதலியவற்றையும் பின்பற்றி அமைந்துள்ளன. கோவைநூல்களையன்றி அகப்பொருட் செய்யுட்களைத் தொடர்பாகக் கொண்ட வேறு சில வெண்பா நூல்கள் இருப்பதாகத் தெரிகிறது. அவை கிளவி மாலை, கிளவி விளக்கம் முதலியன.

இந்தக் கோவைச் செய்யுட்களிற் பாட்டுடைத் தலைவன், கிளவித் தலைவன் என இருவர் கூறப்படுவர். பாட்டுடைத் தலைவனின்றிப் பாடப்பட்டது அம்பிகாபதி கோவை ஒன்றே. கடவுளரையும் அரசர்கள் முதலிய உபகாரிகளையும் பாட்டுடைத் தலைவர்களாக அமைத்துக் கோவை பாடப்படும்.

எழுத்து முதலிய ஐவகை இலக்கணங்களிலும் வல்ல புலவர்களே கோவையைப் பாடத்தக்கவர்கள்; "யாவையும் பாடிக் கோவை பாடு" என வழங்கும் பழமொழி கோவை இயற்றுவதன் அருமையைப் புலப்படுத்தும்.

நூற்றுக்கணக்கான கோவைகள் தமிழில் உள்ளன. அவையனைத்தும் ஒரேவகை இலக்கண அமைதி உடையனவாயினும் ஒரேவகைச் செய்திகளைக் கூறுவனவாயினும் புலவர்களுடைய அறிவாற்றலின் திறங்களால் ஒவ்வொன்றிலும் தனித்தனியே நயங்கள் பல அமைந்துள்ளன.

கோடீச்சுரக் கோவையென்பது சோழநாட்டில் தேவாரம் பெற்ற தலமாகிய கொட்டையூரில் திருக்கோயில் கொண்டு எழுந்

தருளியுள்ள ஸ்ரீ கோடீச்சுரரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சிவக்கொழுந்து தேசிகரால் இயற்றப்பட்டது. இத்தலத்து விருட்சம் கொட்டையாதலின் இவ்வூர் கொட்டையூர் என்னும் பெயர் பெற்றது. அப்பெயர் ஹேரண்டபுரமென வடமொழியில் வழங்கும்; ஹேரண்டம் - கொட்டைச் செடி. இத்தலத்துச் சிவபெருமான் திருநாமம் கோடீசுவரரென்பது. இச்சிவலிங்கப் பெருமான் திருமேனி *பல சிவலிங்கங்களாலமைந்த தென்பதும் இவரைத் தரிசித்ததனால் கோடிலிங்கங்களைத் தரிசித்த பயனுண்டென்பதும் ஐதிஹ்யங்கள். அத்திரி மகரிஷியின் புத்திரரான ஆத்திரேய முனிவர் இத்தலத்திற் கொட்டைச் செடியின் அடியில் இருந்து தவம்புரிந்து அருள் பெற்றனர். அம்முனிவர் கொட்டைச்செடியின் கீழிருந்து தவம் புரிந்தமையால் ஹேரண்ட முனிவர் என்னும் திருநாமமும் பின்பு பெற்றனர். அவர் சிவபூசை செய்யும் நிலையிலமைந்துள்ள திருவுருவ மொன்று இத்தலத்தில் உண்டு.

இத்தலத்திற்கு அருகிலுள்ள திருவலஞ்சுழி யென்னும் தலத்தில் ஒருகாலத்திற் காவிரியானது பூமிக்குட் புகுந்து சென்றது; அப்பொழுது அது மேலே ஓடிவருமாறு செய்வதற்காக ஹேரண்ட முனிவர் காவிரி பூமியிற்புக்க பிலத்தில் இறங்கினர்; உடனே காவிரி பிலத்திற் செல்லாமல் மேலே செல்லத் தொடங்கியதென்பர். அத்தலத்தில் மூலஸ்தானத்திற்கு ஈசான மூலையிலுள்ள வலஞ்சுழி நாதர் என்னும் திருநாம முடைய சிவலிங்கப் பெருமானை இம்முனிவருடைய திருவுருவமென்று சொல்லி அடியார்கள் வழிபட்டு வருகின்றனர்.

இத்தலத்தில் தவம்புரிந்த பத்திரயோகி என்பவருக்குச் சிவபெருமான் வெளிப்பட்டு, "இத்தலத்திற் செய்யப்படுகின்ற ஒரு நற்செயல் ஒரு கோடிப்பங்கு பலனைத்தரும்" என்று அருள் புரிந்தனர்.

---

* "மடைவழிப் புகுவாய் நன்னீர் வாய்மடுத் துண்டு தேக்கி, உடையவ ருவகை பூப்ப வொன்றுபல் கிளைக ளாக, அடையவுங் கிளைத்துத் தோன்று முதலெலா மவிர்பூஞ் சோலை, புடைவளை தருமே ரண்டபுரத்துறை முதலே நேரும்" (தியாகராசலீலை, நாடு. 115) என்ற செய்யுள் இச்செய்தியைப் புலப்படுத்துகின்றது.

இங்குள்ள அம்பிகையின் திருநாமம், கிரீடாகந்துகாம்பா அல்லது கந்துகக் கிரீடாம்பிகை என்பது. பந்தாடியம்மை என்பது தமிழ்த்திருநாமம். இத்தலத்துத் தீர்த்தம் கோடி தீர்த்தம்.

இந்தக் கோடீச்சுரக்கோவையில் தலசம்பந்தமான வரலாறுகளும் முதல் கரு உரிப்பொருளமைதியும் சொற்பொருள் நயங்களும் நிரம்ப அமைந்துள்ளன; அவற்றைப் பின்னுள்ள நூலாராய்ச்சியால் நன்கு அறியலாம்.

இந்நூலிலுள்ள செய்யுட்களின் தொகை, 444.

# கோடீச்சுரக் கோவையின் பொருட்டொடர்பு.



அறிவும் பெருமையும் உடையவனும் காளைப் பருவத்தினனும் அரசகுலத்திற் பிறந்தவனுமாகிய ஒரு தலைவன் பற்பல ஏவலிளைஞரும் பாங்கரும் சூழ வேட்டையாடச்சென்று அவ்விளைஞரைப் பிரிந்து ஒரு மானைத் துரத்திச் செல்லுகையில் மலைச்சாரற் சோலையில், பலபாங்கியருடன்வந்து அவர்கள் மலர்கொய்தல் முதலியவற்றிற்காகப் பிரியத் தனித்துநின்ற பேரழகுடைய மலைவாணர் கன்னி ஒருத்தியைக் கண்டான். கண்டபொழுது அவளுடைய உருவம் அவனுடைய மனத்தைக் கவர்ந்தது. அவ்வுருவத்தைப் பலவகை மலர்கள் பூத்த * ஒரு வாவியென்று நினைந்தான். பின் அவ்வுரு ஒரு பெண்ணென்று தோற்றியது. தோற்றவே, "இம் மாது மானிடமகளோ? தெய்வ மகளோ?" என்று ஐயுற்றான். ஐயுற்றுக் கால் நிலம்தோய்தல் முதலியவற்றால் அவளை மானிட மகளென்று துணிந்தான். அக்காலத்து அவளுடைய விழிகளிலுண்டான சிறப்புநோக்கத்தைக் கண்டு அவளுக்குத் தன்பால் விருப்பம் உண்டென்று அறிந்தான். † அறிந்தவன் தன் கருத்தைச் சொல்லி இரந்துநிற்றற்கு எண்ணி அவள் முன்சென்று, "இங்கே நீ தனியே நிற்றற்குக்காரணம்யாது"? என வினவி அவள் கூந்தலிலுள்ள மாலையில் மொய்த்திருக்கும் வண்டுகளை ஓட்டுவான் போல நெருங்கி அவளது மெய்யைத் தீண்டி அப்பால் அவளது அழகைப் புனைந்து கூறித் தாம் சென்று கவலையின்றி இருத்தற்குரிய ஒருசோலையைக்காட்டி வழிபடுவானாயினன். அதனால் தலைவி நாணி மறைந்து கொள்ளுதற்பொருட்டு அருகிலுள்ள ஒரு ‡ குருக்கத்திக்கொடியைச் சார்ந்து தன் விழிகளைப் புதைத்துக்கொண்டு அதன் மறைவில் நின்றாள். அதுகண்டு துன்புற்ற தலைவன் காலம் நீட்டித்தலை யறிந்து வருந்தினான். தலைவி தனது நாணத்தை விட்டொழித்துத் தலைவனது கருத்துக்கு உடன்பட்டுப் புன்னகை

---

* கொடிமுதலியனவாகச் சொல்லுவதுமுண்டு.

† இதுகாறும் கைக்கிளை; இதுமுதல் இயற்கைப்புணர்ச்சி.

‡ அசோகமரத்தைக் கூறுவதுமுண்டு; தஞ்சை வாணன்கோவை.

செய்தாள். தலைவன் அந்நகையால் உடன்பாட்டுக் குறிப்பினை அறிந்து தலைவியின் நலம் நுகர்ந்து அவளைப் பாராட்டினான். அக்காலத்து நிலைகுலைந்த ஆபரணங்களை முன்போலவே அணிந்து * வண்டுகளை நோக்கிக் கூறுதல் முகமாகத் தன் காதலைப் புலப்படுத்தி வேறு வேறிடங்களிலிருந்த தம்மைச் சேர்த்து வைத்த தெய்வத்தை வியந்தான். அப்பால் தமக்குப் பிரிவென்பதுமுண்டென்பதைக் குறிப்பித்தற்பொருட்டு, "உன்னை இனி யான் என்றும் பிரியேன்" என்று வற்புறுத்திக் கூறினான். பின்பு, "இன்றியமையாத ஒரு காரியத்தின்நிமித்தம் சிறிது நேரம் பிரிந்து மீண்டும் விரைவில் வருவேன்" என்று சொன்னான். † தலைவி அவன் சொல்லியவற்றைத் தெளிந்து தன் ஆயத்தை அடைதற்குச் சென்றாள்.

‡ அவ்வாறு அவள் செல்லும் அழகைத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறி மகிழ்ந்து தன் பாகனுக்கும் தெரிவித்தான். $ பிரிந்து சென்ற தலைவி பாங்கியர் கூட்டத்தை அடைந்தாள். பாங்கியர் பலர் அவளுக்கு வழிபாடு செய்வதைத் தலைவன் கண்டு, "இவ்வளவு பாதுகாப்பிலிருக்கும் இவளை அடைந்து மகிழ்ந்தது பொய்யோ!" என்று எண்ணினான். அப்பொழுது தலைவி தன்னுடைய கண்ணினால் தன் உயிர்த்தோழியைப் ¶ பார்த்து நின்றாள். அப்பார்வைக் குறிப்பினால் தலைவியைப் பெறுதற்குரிய ஒரு சார்பு அத்தோழியென்றறிந்த தலைவன் ஆற்றாமை நீங்கித் தலைவியின் அழகைத் தன்னுள்ளே புகழ்ந்து அவளைப் பெற்ற தாய்தந்தையர்களை வாழ்த்தித் தன்னிடம் சென்றனன். சென்று தலைவியைப் பிரிந்த துயரினால் துயில் பெறாமல் இராப்பொழுதில் வருந்தினான்.

§ மறுநாள் பின்னும் தலைவியைக் காணவேண்டுமென்ற அவாவினால் தூண்டப்பட்ட தலைவன் முன் அளித்த தெய்வம் பின்னும் தருமென எண்ணி முன்னர் அவளைக்கண்ட இடத்தை அடைந்தான். அன்றும் தலைவியைக்கண்டு அளவளாவி மகிழ்ந்து பாங்கியர் கூட்டத்தை அடையும்படி அவளை விடுத்தான்.

---

* இது முதல் வன்புறை. † இது தெளிவு.

‡ இதுமுதல் பிரிவுழி மகிழ்ச்சி. $ இது முதல் பிரிவுழிக் கலங்கல்.

¶ இங்ஙனம் பார்த்தல் தன்னுடைய நிலையை இவள் அறிவாளோ என்னுங் கருத்தினால்.

§ இதுமுதல் இடந்தலைப்பாடு.

*அப்பால் தலைவன் தன்னுடைய உயிர்த்தோழனை அடைந்தான். தலைவனுடைய தோள்மெலிவு முதலியவற்றைக் கண்ட பாங்கன் அவனை நோக்கி, "இந்த மெலிவிற்குக் காரணம் யாது?" என வினவ, அவன் தலைவியைக் கண்டது முதலியவற்றைக் கூறினான். கேட்ட பாங்கன், "நல்லறிவு வாய்ந்த நீ ஒரு பெண்பாலிடத்து மயங்கல் முறையன்றே" என்று இடித்துரைக்க அவன், "நீ அவளைக் கண்டிருந்தால் இங்ஙனம் கூறாய்" என மறுத்துச் சொல்லவே பாங்கன் அவனைப்பழித்தான். அவன் தன் வேணவாவைச்சாற்றி ஆற்றாதுயினான். அதற்குப் பாங்கன் மிக வருந்தி, "நீகண்ட தலைவியின் இடம்யாது? இயல்யாது?" என்று கேட்கத் தலைவன் அவற்றைக் கூறினான். கேட்ட பாங்கன், "நான் சென்று கண்டு வருவேன்" என்று கூறித் தலைவனை ஆற்றுவித்து அவனாற் குறிப்பிடப்பட்ட இடத்திற்குச் †சென்றான். சென்று அங்கே நின்ற தலைவியைக் கண்டு அவளுடைய ஒப்பற்ற பேரழகை உணர்ந்து முன்னம் தலைவனை இகழ்ந்த தன் அறியாமைக்கு இரங்கி, அவளது அழகைக்கண்ட தலைவன் அதில் ஈடுபட்டு அங்கேயே இருந்து விடாமல் மனத்திட்பத்தோடு தன்னிடத்து மீண்டு வந்தமையையும் தலைவியின் இயல்பினையும் வியந்து மீண்டு தலைவன்பால் வந்தான். வந்து தலைவி தனியே நிற்றலை உணர்த்தினான். தலைவன் அவ்விடம் சென்று அவளைக்கண்டு இன்புற்று அவளைப் புகழ்ந்தான். பின் அவளை நோக்கி, "இனி நீ வருங்கால் உன் உயிர்த்தோழியோடு வருக" என்று சொல்லி அவளைப் பாங்கியர் கூட்டத்தை அடையச் செய்தான்,

‡தலைவனைப் பிரிந்து சென்ற தலைவி தன்னுயிர்த்தோழியோடு சென்று மலைவாணர் வழக்கப்படி தினைப்புனங்காத்து வந்தாள். அவளது வேறுபாட்டைக் கண்ட பாங்கி அவளுடைய $ஒழுக்கம் முதலியவற்றால், "இவள் ஒருதலைவன்பால் நட்புப் பூண்டாள்" என்பதை முதலில் அறிந்தனள். பின்னும் நன்றாக

---

*இது முதல் பாங்கற் கூட்டம்.

†பாங்கன் சென்ற பின்னர் அவன் உரிய இடத்திற் சென்று தலைவியைக் காண்பானோ மாட்டானோ என ஐயுற்றுத் தலைவன் வருந்துவதாகவும் ஒருதுறை இங்கே கூறுவதுண்டு.

‡இது முதற் பாங்கிமதியுடன்பாடு. $ஒழுக்கம், நாற்றம், தோற்றம், உண்டி, செய்வினை மறைப்பு, செலவு, பயில்வு என்பவை.

அறிந்து கொள்ளவேண்டி, "இந்தப் பிறையைத் தொழுவாயாக" என்று கூறினாள். தலைவி கன்னித்தன்மை நீங்கி ஒரு தலைவனது நட்பை உற்றவளாதலாலும் அவனையல்லாமல் பிறதெய்வத்தை வணங்குதல் கற்புடைமைக்கு இயல்பன்றாதலாலும் அதனை வணங்காதிருந்தாள். தோழி அவளை, "உன்பால் உண்டான வேறுபாடுகளுக்குக் காரணம் யாது?" என வினாவினள். அவள், "யான் ஒரு சுனையில் நீராடி வந்தேன்" என்று கூறப் பாங்கி, "ஒரு சுனை இத்தகைய வேறு பாட்டைச் செய்ததோ!" என்று அச்சுனையை வியந்து, "அத்தகைய சுனையில் யானும் ஆடுவேன்; என்னையும் அழைத்துச் செல்" என்று நகைத்துக் கூறினள். அவள் நாணவேண்டுமென்று கருதி அவளை நோக்கி அறியாதாள்போன்று, "உன்னைப்போலவே உள்ள எங்கள் மங்கை சிறிதுநேரத்திற்கு முன் புனலாடப் போனாள். அவள் திரும்பி வருவாள்; சற்று இரு" என்று கூறினாள். தலைவி நாணிநின்றாள். பின், "உதிரத்தாற் சிவந்த கொம்புகளையுடைய யானையொன்றை ஒரு வீரன் தன் கைவேலால் குத்தினான்" எனப் பாங்கி கூறினள். கேட்ட தலைவி அங்ஙனம் செய்தவன் தன் தலைவன் தானோவென்றும், யானையின் கொம்பு அவனைக் குத்தியே சிவந்ததோவென்றும் நினைந்து நடுங்கினாள். அந்நடுக்கத்தாலும் பாங்கி உண்மையை அறிந்தாள்.

இவர்கள் இவ்வாறிருப்பத் தலைவன் பாங்கியை இரந்து தலைவியைப் பெறலாமெனவெண்ணி அவர்களிருந்த தினைப்புனத்திற்குச்சென்று அவர்களோடு பேசுதற்கு முயன்று, "உம்முடைய ஊர் எங்குள்ளது?" என்று வினாவினான். அவர்கள் விடை கூறவில்லை. பின், "உமதுபெயர் யாது?" என்றான். அதற்கும் விடைகூறவில்லை. பின்பு, "நான் வேட்டையாடுகையில் தப்பி ஒருமான் இங்கு வந்ததோ?" எனவும், "உங்கள் ஊருக்குப்போகும் வழியையேனும் சொல்வீராக" எனவும் கூறினான். அவர்கள் ஒன்றும் பேசவில்லை. "யான் வினாவியவற்றுக்கு விடையாக ஒரு மொழியையேனும் சொல்வாயாக" எனப் பாங்கியைக் கேட்டான். இம்மொழிகளைக் கேட்ட பாங்கி, "இவர் கூறுவன எல்லாம் ஒன்றற்கொன்று மாறுக உள்ளன; ஆதலால் இவர் எண்ணம் யாதோ" என்று ஆராய்ந்து தலைவியைப் பெறுதற்குத் தலைவன் எண்ணினானென்று துணிந்தாள். தலைவன் மீண்டும்வந்து அவர்களைநோக்கி

"என் மனம் உங்களிடம் வந்ததோ?" என்று தன் விருப்பம் புலப்படும்படி வினவினன். கேட்ட பாங்கி, "யாம் யாதும் கண்டிலேம்" எனக் கூறிவிட்டு, "இவர் கையிலேயுள்ள தழையினல் விலங்குகளை வேட்டையாடினர் போலும்!" எனப் பரிகசித்தாள். தலைவியின்பால் உண்டாகிய குறிப்புக்களையும் தலைவனுடைய செயல்களையும் ஆராய்ந்து, "இவ்விருவரும் தம்முள் நட்புக் கொள்ளுதற்கே அமைந்தனர். இத்தலைவன் குறையை அறிவேன்" என்று தலைவியைவிட்டுப் பாங்கி தனியாகச் சென்றாள்.

* தலைவன் அவள்பாற் சென்று தான் தலைவிபாற்கொண்ட காதலைக் கூறினன். கேட்ட பாங்கி தலைவனது குலத்தின் மேம்பாட்டையும் தங்கள் குலத்தின் தாழ்வையும் எடுத்துச் சொன்னாள். தலைவன் அஃது ஒரு குறையன்றென்று காரணங்காட்டி எடுத்துக்கூறப் பாங்கி அவன் விரும்பிய மங்கையை இன்னளென அறியாள் போன்று, "இங்கே மாதர் பலருள்ளார். அவருள் நின் மனம் யாரை விரும்பியதோ?" எனக் கேட்டாள். தலைவன் தலைவியினது சிறப்பிலக்கணத்தைக் கூறினன். கேட்ட பாங்கி, "நீ குறித்த மங்கை பெறுதற்கரியவள்" என்று கூறத் தனக்குத் தலைவி இன்றியமையாதவளென்று தலைவன் சொல்ல, "அங்ஙனமாயின் உன்னுடைய குறையை நீயே தலைவியிடம் சொல்வாயாக" என்றனள். அதுகேட்ட தலைவன் பாங்கியைப் பழித்தான். அவள், தலைவி பேதைப் பருவத்தினளென்பதைக் கூற அவன் தலைவி முதிர்ந்த அறிவுடையாளென்பதைத் தான் அறிந்தவாறு விளக்கினன். அதனல் முன்னமே அவ்விருவருக்கும் நட்பிருத்தலை அறிந்துகொண்ட பாங்கி, "இனி எனது உதவி எதற்கு?" என்றாள். "நின் உதவி இருந்தால்தான் அவளை நான் எளிதிற் பெறமுடியும்" என்று தலைவன் கூற, "ஒரு மங்கையை ஒருதலைவன் மணஞ்செய்து கொண்டு அடைதல்தான் முறை" என்று பாங்கி ஆன்றோரொழுக்கத்தை எடுத்துரைத்து, "நீ தலைவியை மணந்துகொண்டு இன்புறுவாயாக" என்றாள். தலைவன் தனது மிக்க ஆர்வத்தைப் புலப்படுத்தப் பாங்கி, "தலைவியினது சுற்றத்தார்கள் உன் செயலை அறியின் துன்புறுத்துவார்கள்" என அச்சுறுத்தினாள்.

---

* **இது முதற் பாங்கியிற் கூட்டம்.**

அப்பால் தலைவன் தழைகளாலும் மலர்களாலும் ஆக்கப் பெற்ற உடைகளையும் கண்ணிகளையும் கையுறையாகக் கொண்டு வந்து, "தலைவிக்காக இவற்றைக் கொணர்ந்தேன்" என்று அவற்றைச் சிறப்பித்துக் கூறினான். பாங்கி அவற்றைப் பெற மறுக்கவே தலைவன் அதனைப் பொறாத நெஞ்சுடையவனாகி வருந்தி நின்றான். அவனது துயரத்தைக்கண்டு இரங்கிய பாங்கி, "நீ இப்பொழுது போய்விடு. நான் தலைவியின்பாற் சென்று அவள் மனத்தை இரங்கச்செய்து இக்கையுறையை ஏற்றுக் கொள்ளுமாறு செய்வேன்" என்றாள். தன்னை அவள் போகச் சொல்லுதலைக் கேட்டு வருந்திய தலைவன், பனைமடலாற் செய்யப்பட்ட குதிரையின் மேலேறி வீதியிற் செல்லுதலே தலைவியைப் பெறுதற்கு உரிய உபாயமென்று கருதி அக்கருத்தை உலகின்மேல் வைத்து, "தாம் விரும்பிய மங்கையரைப் பெறாதார் மடலேறுதல் வழக்கம்" என்றும், பிறகு அதனைத் தன்மேல் வைத்து, "நான் நாளைத்தினம் உங்கள் தலைவியின் உருவத்தை ஒரு கிழியில் எழுதிக்கொண்டு மடலேறி வருவேன்" என்றும் கூறினான். பாங்கி தலைவியினுடைய அவயவங்கள் படத்தில் எழுதுதற்கு அரியன என்று மொழிய, "அவற்றை எழுதி முடிப்பேன்" என்று தலைவன் உறுதி கூறப் பாங்கி, "மடலின் பொருட்டுப் பனையை நீ வெட்டினால் அதன்மேலுள்ள பறவைகள் துன்புறும்; அப்பறவைகளின் முட்டைகள் உடையும். ஆதலால் அச்செயல் நினது அருளியல்புக்கு மாறாகும்" என்று சொல்லிப் பின் தலைவன்பால் இரங்கி அவனுக்கு உதவிசெய்ய நினைந்து, "உன்னுடைய துயரங்களைநான் தலைவியிடம் கூறுகின்றேன். அவள் மறுத்தால் நீ மடலேறுக" என்று உரைத்தாள்; உரைத்தவள் மீண்டும் தலைவனது உறுதியை அறிவதற்காக, "தலைவி மிக இளையள்" என்றாள். தலைவன், பார்வை முதலியவற்றால் தலைவி தன்னை வருத்திய வண்ணம் உரைத்து, அவள் தக்க பருவமுடையாளென்பதைப் புலப்படுத்தினன். பாங்கி தலைவியைப் பார்த்தற்குரிய காலம் பெறுதற்கரியதென்றாள். அவன், "என் பெயரைக் கேட்கு முன்னரே அவள் உவந்து உன்னைத் தழுவிக்கொண்டே இங்கே வந்துவிடுவாள்" என்று அத்தலைவிக்கும் தனக்கும் உள்ள நட்பைக் குறிப்பித்தான். கேட்ட பாங்கி, "இவ்வளவும் என்னை மறைத்து நடத்தப்பட்டன. இனி அவ்வாறு வாய்ப்பதைப் பார்ப்

பேன்!" என்று கூறி நகைத்தாள். அந்த நகையைப் பொருமல் தலைவன் வருந்தா நிற்கப் பாங்கி இரங்கி, "நான் தலைவியை உன் பால் வரச்செய்வேன்" என்று கூறி அவனைத் தேற்றிவிட்டு அவன் ஏந்திவந்த கையுறையைப் பெற்றுக்கொண்டு தலைவிபாற் சென்றாள். பாங்கி தன் துயரைத் தீர்ப்பாளென்று நம்பித் தலைவன் ஆறுத லுற்றான்.

தலைவிபாற் சென்ற பாங்கி அவளிடம், "யாரோ ஒரு வீரன் கையில் தழையுடையோடு வாடித்திரிகின்றான்" என்று குறிப்பாகத் தலைவன் வருந்துவதை மொழிந்தாள். தலைவி தலைவனை முன்பு அறியாதவள் போன்று பாங்கி கூறியவற்றை உட்கொள்ளாதவளாகி வேறு பொருத்தமில்லாத ஒரு செய்தியைச் சொன்னாள். பின் பாங்கி வெளிப்படையாக, "முன்பு யானை வந்ததோ வென்றும் மான் வந்ததோவென்றும் மனம் வந்ததோவென்றும் நம்பால் வந்து கேட்டவர், இப்பொழுது வேறு எதைக் கேட்க வந்தனரோ அறியேன்; இந்தச் சோலையில் வந்துள்ளார்" என்றாள். தலைவி, "வழியிற் போவோர்கள் எவையேனும் கேட்டால் அவற்றிற்கும் எனக்கும் என்ன தொடர்புண்டு?" என்று சொன்னாள். தலைவி அவ்வாறு மறைத்துப் பேசுதலை யறிந்த பாங்கி, "நாம் இருவரும் ஈருடல் ஓருயிராக இதுகாறும் பழகியிருந்தோம். அதனை உணராமல் இப்பொழுது நீ என்னை வேறுபடுத்தி மறைத்து ஏன் பேசுகின்றாய்?" என்று சொல்லித் தான் தலைவனிடமிருந்து பெற்றுவந்த தழையுடையைப் புகழ்ந்து தலைவன் வருந்துகின்ற நிலையையும் தான் அவனுக்குப் பலவகைப் போக்குக் காட்டிப் பொய்புகன்றும் அவன் நீங்காது நிற்கும் திறத்தினையும் மடலேறும் குறிப்புடன் அவன் உள்ளானென்பதனையும் புகன்றாள். தலைவி அவற்றைக் கேட்டுப் பராமுகமாக இருப்ப, "இதுகாறும் பழகிய பழக்கத்தால் இவ்வளவும் நான் கூறினேன். அவை பிழையெனிற் பொறுப்பாயாக. இனி நின் உள்ளக் கருத்தை அன்புள்ள வேறு உயிர்ப்பாங்கியரிடம் கூறுக" என்று சினக்குறிப்புடன் உரைத்தாள். தலைவி எதிர் சினந்து, "நம் குலத்துக்குப் பழிவருமென்று அஞ்சுவேனா? அன்றி உனக்கு அஞ்சுவேனா? ஒன்றும் அறிகிலேன்" என்று கையுறையை ஏற்றாள். அதைக்கண்டு உவந்த பாங்கி தலைவன்பாற் சென்று அவன் தந்த தழையைத் தலைவி ஏற்றதனைச் சொல்லி,

"இன்ன இடத்தில் தலைவியைக் காண்பாயாக" எனக் குறியிடங் கூறி விட்டுச் சென்று அவ்விடத்திற்குத் தலைவியை அழைத்துச் சென்றாள். சென்று, "நீ இங்கே இரு; நான் மலர் கொய்து வருவேன்" என்று தலைவியைத் தனியே வைத்துவிட்டுப் பிரிந்தாள். தலைவன் அங்கேவந்து தலைவியை எதிர்ப்பட்டு அளவளாவி இருந்து நீங்கினான். பாங்கி மீண்டு தலைவிபால் வந்து தான் பறித்துவந்த மலர்களைக் காட்டி ஆயத்திற்கு அழைத்துச் சென்று விட்டுவிட்டு, தலைவன்பால் வந்து, "இத்தலைவியை இக்காலத்திற்போல எக்காலத்தும் மறவாமல் அன்போடு பாதுகாத்தருள்க" என்றாள். தலைவன் தன் ஊருக்குச் செல்ல விடை கேட்கப் பாங்கி, "விருந்துண்டு செல்க" என்று சொல்லிச் செல்லுதலை விலக்கினாள். "உங்கள் விருந்தை உண்பேன்" என்று அவன் கூறினான்.

அன்றுமுதல் இவ்வண்ணமாகவே பாங்கியின் உதவியால் தலைவியைத் தலைவன் சந்தித்து வந்தான்.

* தலைவன் பிரிந்து சென்றபின் அப்பிரிவிற்குத் தலைவி ஆற்றாளாயினாள். மாலைக் காலத்தைக் கண்டு வருந்தினாள். பாங்கியும் அவள் நிலைகண்டு வருந்தினாள். அப்பொழுது பாங்கி அவன் வந்து விடுவானென்றும் "நீ வருந்துதல் அறிவின்மை" என்றும் இடித்துரைத்தாள். அதனால் அவள்பால் வெறுப்புற்ற தலைவி அவளை நோக்கிக் கூறாமல், "முற்றும் அறியாதவர்களாயினும் முழுதும் அறிந்தவர்களாயினும் சொன்னால் அறிவார்கள்; இவ்விரு திறத்தார் அல்லாதவர்களுக்குச் சொன்னால் யாவும் பிழைபடும்" என்று புறமாகக் கூறிவிட்டுப் பின்பு, தலைவனைப் பிரிந்திருத்தல் உயிருக்கேதுன்பந் தருவதென்று சொன்னாள். பாங்கி, "நீ இங்ஙனம் இருந்தால் நம் உறவினர் உன்பால் ஐயுற்று நம்மைத் தினைப் புனத்தினின்றும் நீக்கி வீட்டிற்குக் கொண்டுபோய் வைத்துவிடுவார்கள்" என்றாள். தலைவனைப் பிரிதற்கு அருமையை நினைந்து தலைவி மிக வருந்தினாள். அப்போது தலைவன் அங்கே வந்தான். அவன் வந்ததைப் பாங்கி தலைவிக்குச் சாற்றினாள். தலைவன் வந்து வேலிப் புறத்தே நின்றான். அப்பொழுது பாங்கி கிளி முதலியவற்றிற்குக் கூறுவாள் போன்று, "நாங்கள் வீட்டுக்குச்

* இதுமுதல் ஒருசார் பகற்குறி.

செல்கின்றேம். இனி நீர் சுகமாக இரும்" என்று தாங்கள் செல்வதை அவனுக்கு அறிவித்தாள். அப்பால் அவன் வந்து முன்னே நின்றான். அப்பொழுது அவனைநோக்கிக் கூறுமல் வண்டை நோக்கிக் கூறுவாள் போன்று அச்செய்தியை அறிவுறுத்தினள். பின்பு வெளிப்படையாகவும், "தினைக்கதிர்கள் முதிர்ந்துவிட்டன. அவற்றை இனி அறுத்துவிடுவார்கள். எங்கள் காவல் இனி வேண்டுவதில்லை; ஆதலின் எங்கள் உறவினர் எங்களை வீட்டுக்கு அழைத்துச்சென்று விடுவார்கள். நாங்கள் போகின்றோம். நீயும் அங்கே வந்து தலைவியைக் காண்பாயாக" என்றாள். தலைவி பிரிவதை உணர்ந்த தலைவன் மிக வருந்தினன்.

[பகற்காலத்துத் தினைப் புனத்தின்கண் பாங்கியின் உதவியால் தலைவியைக்கண்டு வரும் தலைவனுடைய இந்த ஒழுக்கத்தினிடையே சில தடைகள் நிகழ்வதும் உண்டு. அவ்வாறு நிகழ்தலைக் கூறும் பகுதி 'பகற்குறி இடையீடு' எனப்படும். அதன் பொருட்டொடர்பு வருமாறு :

பகற்காலத்துக் குறித்த இடத்திற்கு வந்து தலைவியைக்கண்டு செல்லும் தலைவன்பால் பாங்கி, "அன்ப, தலைவியின்தாய் இன்னகாலமென்பதின்றி எப்பொழுதும் வருகிறாள். ஆதலால் இனி இங்கே அடிக்கடி வாரற்க" என்றாள். பின்னொருநாள், "நீ தலைவியைக் கண்டு சென்றபின் அன்னைவந்தாள். அவள் தலைவியின் மேனியில் அமைந்திருக்கும் வேறுபாடுகளை அறிந்து ஐயுற்றுக் கோபித்தாள். இனி எங்களை வீட்டிற்கு அழைத்துச்சென்று விடுவாள்" என்றாள். தலைவன் வருந்திச் சென்றான். தான் தினைப்புனத்தைப் விட்டுப் பிரியப்போவதை எண்ணிய தலைவி அங்கே தான் விளையாடிய இடங்களைப் பார்த்துப் பார்த்து வருந்தினள். பாங்கி அவளை அழைத்துக்கொண்டு வீட்டிற்குச் சென்றாள். சென்றபின் தலைவன் தான் வழக்கமாகத் தலைவியைக் காணும் இடத்திற்கு வந்து அங்கே அவளைக் காணமல் வருந்தி அவளுடைய ஊரைநோக்கி, "இவ்வூருக்கு நாம் செல்லல் அரிது" என மயங்கிச் சென்றான்.]

*அவ்வாறு வருந்திய தலைவன் பாங்கியை, "இராக்காலத்து உங்கள் வீட்டிற்கு வந்து தலைவியை அடையுமாறு செய்யவேண்டும்" என வேண்டிநின்றான். பாங்கி தலைவன் வரும் வழியிலுள்ள இடையூறுகளை எடுத்துக்கூறத் தலைவன், "அவ்விடையூறுகளுக்கு யான் அஞ்சேன்" என்றான். பாங்கி அவனது நாட்டிலுள்ள

* இதுமுதல் இரவுக்குறி.

மகளிர் அணியும் ஆபரணங்களும் அவர்கள் இயலும் யாவை யென்று அவனைக்கேட்க அக்குறிப்பை அறிந்த அவன், "அவற்றைப் பின்பு கூறுவேன்; உனதுநாட்டு அணியையும் இயலையும் கூறுக" என்று கேட்க அவ்வாறே அவள் கூறினாள். பின்பு அவள் தலைவிபாற்சென்று தலைவன் இரவில் வருதலை விரும்புகின்றானென்பதை அறிவித்தாள். தலைவி, "இவள் சிறிதேனும் வழியின் அருமையை யறியாமல் இவ்வாறு சொல்கின்றாளே" என நெஞ்சொடு வருந்தி, "அவ்வாறு செய்தல் இன்றியமையாதெனின் நின்கருத்துக்கு இசைந்ததைக் கூறுக" என்று குறிப்பினால் உடன்பாட்டை அறிவித்தாள். அதனைப் பாங்கி தலைவனுக்குச் சொன்னாள்.

தலைவன் ஊர் சென்று இராக்காலத்துத் தலைவியின் வீட்டின் அருகே வந்து தன்னுடைய வரவைத் தலைவிக்குப் புலப்படுத்தற்காக ஓரொலியைச் செய்தனன். அதனை அறிந்த பாங்கி, தாய் துயில்கின்றாளோ இல்லையோ என்பதை அறிவதற்கு, "ஓரானை வந்து நஞ்சோலையை அழிக்கின்றது" என்று குறிப்பால் தலைவன் வந்தமையைத் தலைவிக்குக் கூறினாள். தாய் ஒன்றும் பேசாமல் உறங்குதலை யறிந்த பாங்கி தலைவன் வந்திருப்பதைப் பின்பு தெளிவாகத் தெரிவித்துத் தலைவியைக் குறிப்பிட்ட இடத்துக்குக் கொண்டு சென்று, "நீ இங்கே இரு; நான் சென்று நின்கூந்தற்கு அணிதற்குரிய மலர் கொய்து வருவேன்" என்று தலைவியை அங்கு இருக்கச் செய்து நீங்கினாள். தலைவன் அக்காலத்துத் தலைவியை எதிர்ப்பட்டு, "நீ எவ்வாறு இராக்காலத்து இங்கே தனியே வந்தாய்!" என்று வியந்தான். அவள் தலைவன் வந்த வழி வருதற்கரியதாய் இருத்தலை அறிந்து வருந்தினாள். அவ்வழி எளிதாயிருந்ததென்று கூறித் தலைவன் அவளைத் தேற்றினான். பின் இருவரும் அளவளாவி இருந்தனர்.

அப்பால் தலைவி தலைவனை நோக்கி, "என்னைக் காண்பதற்காகப் பலவகை இடையூறுகளையுடைய இந்தக் காட்டுவழியில் இனி வாரற்க" என்று கூறினாள். தலைவன் அவளை வீட்டிற்கு அருகே கொண்டுபோய் விட்டான். அப்பொழுது மலர்கொய்யச் சென்றிருந்த பாங்கி தான் பறித்துவந்த மலர்களை அவளுக்குக் காட்டி அவளை வீட்டிற்கு அழைத்துச்சென்று விட்டுவிட்டு, மீண்டு வந்து தலைவனைக் கண்டு, "இனி இவ்வாறு வருதல் தக்கதன்று" என

விலக்கினாள். அதனைக்கேட்ட தலைவன் மிக வருந்தினான். பாங்கி, "நீ இவ்வழியில் திரும்பிச் சென்று உன் இடம் அடைவாயோ வென்று தலைவி கவலுகின்றாள். ஆதலின் நீ உன் வீடு சென்ற வுடன் அதற்கு அறிகுறியாகக் கொம்பை ஊதுக" என்று கூறி விடுப்ப அவன் சென்றான்.

இங்ஙனம், இரவுக்குறியாகிய இந்த ஒழுக்கம் நிகழ்ந்து வந்தது.

[இரவுக்குறிக்கண் சில தடைகள் நிகழ்வதும் உண்டு. அந்நிகழ்ச்சியைக் கூறும் பகுதி 'இரவுக்குறி இடையீடு' என்று பெயர் பெறும். அதன் பொருட்டொடர்பு வருமாறு :

தலைவன் வந்திருத்தலைப் பாங்கி தலைவிக்கு அறிவித்தாள். தலைவி அதற்கு முன்னர்ச் சோலையில் உண்டான ஓரொலியைக் கேட்டு அது தலைவன் செய்த சங்கேதமென்று நினைந்து சென்று ஒருவரையும் காணாமற் சும்மா வந்தவளாதலின் தான் அவ்வாறு குறிமருண்டமையைக் கூறினாள். கேட்ட பாங்கி, தலைவி அறிந்துகொள்ளாதபடி குறிப்புச் செய்தானென்று தலைவனைக் குறை கூறினாள். அப்பொழுது வெளியே நின்ற தலைவன் ஒருவரும் வாராதது கண்டு வருந்திச் சென்றான். பொழுது புலர்ந்த பின்னர், தலைவி சோலையிற் குறிப்பிட்ட இடத்திற்குச் சென்று பார்த்து வருந்தினாள். பின் மீண்டு வந்து பாங்கியிடம், "தலைவர் பொய்கூற மாட்டாரென இதுகாறும் எண்ணியிருந்தேன். ஆனால், நேற்று அவர் குறித்த இடத்திற்கு வாராமற் பொய்யராயினார்" என்று கூறி இரங்கினாள். பாங்கி, "நீ அவ்வாறு நினையாதே. அவர் நேற்று இரவு வந்து தாம் வந்ததற்கு அடையாளமாகக் கருங்குவளை மலர் மாலையை மகிழ மரத்தில் வைத்துவிட்டுச் சென்றனர்" என்றுகூறித் தலைவியின் துயரை ஆற்றினாள்.

அன்றிரவு தலைவன் வந்தான். அவனைக் கண்ட பாங்கி, "நேற்று நீ இங்கே வராமல் இருந்து விட்டாய்; அதனால் வருந்திய யாம் நின் ஊருக்குவர எண்ணினோம். உன் ஊரையும் பேரையும் சொல்லாமையினால் வர இயலவில்லை" என்று குறிப்புத் தவறிய குற்றத்தை அவன் மேல் ஏற்றிக் கூறினாள். அவன், "நான் வந்திருந்தேன். யாரும் வரக்காணாமையால் ஊர் சென்றேன்" என்னப் பாங்கி, தலைவி வேறு ஒலிகளை அவன் செய்தனவாக எண்ணிச் சென்று ஏமாந்ததை அறிவித்தாள். மீண்டு வந்து, தான் செய்த குறிப்பை அறிந்து தலைவி வரவில்லையென்று தலைவன் கூறியதாகப் பாங்கி சொன்னாள். அவள், "ஒலியுண்டாகும் பொழுதெல்லாம் அவற்றை அவர் செய்த குறிப்பென்றெண்ணிச் சென்று சென்று ஏமாந்தேன்" என மொழிந்து வருந்தினாள்.

இங்ஙனம், இரவில் தலைவன் வந்து போகுங்காலையில் தலைவி, அவனைக் காணமுடியாதவாறு தாயும் நாயும் ஊராரும் தூங்குவதில்லையென்றும் அவன் மறைந்து வரமுடியாத வண்ணம் ஊர்காவலர் சுற்றிச் சுற்றி ஊரைக் காக்கின்றனரென்றும் கூறித் துன்புற்றாள். நிலவு வெளிப்பட அது தலைவன் வருவதற்கு இடையூறாக இருத்தலைக் குறித்து வருந்தினாள். கோட்டான் ஒலித்தலைக் கேட்டு அஞ்சினாள். கோழி எழுந்து கூவுதலைக்கேட்டுப் பொழுது விடிந்துவிட்டதென்று திடீரென்று எழுந்து ஊரார் தலைவன் வருதலை அறிந்து விடுவார்களோவென்றஞ்சினாள்.]

* இங்ஙனம் இராக்காலத்துத் தலைவன் வந்து போய்க்கொண்டிருக்கும் காலத்து இடையூறுகளால் தலைவன் வருதற்கு இயலவில்லை. அதனால் தலைவி வாட்டமடைந்திருப்ப, அதனைக் கண்ட பாங்கி, "ஏன் இங்ஙனம் இருக்கிறாய்? உனக்கு நேர்ந்த துன்பம் யாது?" என்று வினவினாள். தலைவி, "எனது வேறுபாடுகளைச் செவிலித்தாய் கண்டு, 'இவை எதனால் உண்டாயின?' என்று கேட்டாள். அவளுக்குப் பிறராலறிதற்கரியதாகிய நம் களவொழுக்கம் தெரிந்து விட்டதுபோலும். தலைவர் இங்கே வருதற்குச் சந்திரன், கோழி, கூகை முதலிய பல இடையூறுகள் உள்ளன. இவற்றை யெல்லாம் கடந்து அவர் எங்ஙனம் வருவார்? ஆதலின் அவருடைய ஊருக்குச் செல்லலாமென்று தோன்றுகின்றது. ஆனால் அவர் தம்மூரை வெளிப்படையாகச் சொன்னாரில்லை. இனி என் செய்வது?" என்று கூறி வருந்தினாள். பாங்கி அவன் வாராமைக்காக அவனைப் பழித்தாள். கேட்ட தலைவி, தலைவன் நற்குணமுடையானென்பது விளங்க, "அவர் அறியாதவரல்லர். அவர் வாராமைக்குக் காரணம் என் தீவினையே" எனச் சொல்லி, உறங்குங் காலத்துத் தலைவனைக் கனவிற்கண்டு திடீரென்று விழித்துக்கொண்டு தான் துயருறும் நிலையைக் கூறினாள். அன்றியும் தன் மேனியிலுள்ள அழகெல்லாம் விரகதாபத்தினால் அழிதலைச் சொல்லி, "யாரேனும் என்னுடைய துயரத்தை அவரிடம் சொல்லிவருவாரெனின் அவர்கள் மிக்க உபகாரம் செய்தவர்களாவார்கள்" என்று தன் விருப்பத்தை அறிவித்தாள். "அவரே தம் வாக்குப் பிறழ்ந்தாரெனின் பிறர் சொன்னால் கேட்பாரோ? வேண்டுமெனின் நீயே போய் நின் குறையை உரைப்பாயாக" என்று பாங்கி

---

* **இதுமுதல் வரைதல் வேட்கை.**

கூறினாள். தலைவி பலர் தன் நிலையைக் கண்டு கூறும் பழி மொழிகளாலும் தலைவன் வரும்வழியின் அருமையினாலும் தான் கொண்ட அச்சத்தைச் சொன்னாள். பின் விரகதாபம் மிக்கமையால் அங்கே உள்ள பல அஃறிணைப் பொருள்களை மயக்கத்தால் விளித்து இரங்கினாள். முற்கூறிய வழியில் வாராத வண்ணம் தலைவனை விலக்கவேண்டுமென்றும், "யாம் மீண்டும் தினைப்புனங் காக்க வருகின்றேம். ஆதலின் இங்கே வந்து அலைய வேண்டாம்" என்று கூறவேண்டுமென்றும் பாங்கியிடம் சொன்னாள். தலைவியினுடைய வேறுபாடு கண்ட தாய் முதலியோர் அவளைப் பேய் தீண்டியதென நினைத்து வேலனைக்கொண்டு முருகவேளை வழிபட்டு வெறியாடத் தொடங்கினர். "அவ்வாறு செய்தலை நீ விலக்கவேண்டும்" என்று தலைவி பாங்கியிடம் கூறினாள் தலைவியை மணம் செய்துகொள்ளும் பொருட்டுப் பலர் பரிசம் கொண்டு வந்தனர். அதுகண்ட தலைவி, "தமர்களிடம் உண்மையைக்கூறிப் பிறர் மணம் பேச வருதலை விலக்கித் தலைவர் மணம் புரியவந்தால் ஏற்றுக்கொள்ளும்படி சொல்லவேண்டும்" என்று பாங்கியை வேண்டினாள்.

* இவ்வாறு மணத்தைப்பற்றிய செய்திகள் நிகழ்ந்துகொண்டிருப்ப, வழக்கம்போல் வந்த தலைவனை ஒருநாள் பாங்கி கண்டு, "தலைவியினது வேறுபாட்டைக் கண்ட செவிலித்தாய், இவளுக்கு இஃது எதனால் வந்ததென்று கேட்டாள். ஒரு சிங்கத்தைக்கண்டு பயந்தாளென்று நான் மறைத்துக் கூறினேன். நீ தலைவியின்பால் அன்பு பூண்டிருப்பதை இவ்வூரிலுள்ள மகளிர் அறிந்து பழி தூற்றுகிறார்கள். நீ அன்றொரு நாள் வந்து அகன்ற பின்னர்த் தலைவியின் சோர்வைக் கண்ட தாய் கோபக்குறிப்போடிருந்தாள். உங்கள் களவொழுக்கத்தை அவள் அறிந்துவிட்டாள். அன்றியும் இவளுடைய நோயை நீக்கும்பொருட்டு வெறியாடத் தொடங்கினாள். அயலார் பலர் தலைவியை மணம் செய்துகொள்ள முயல்கின்றனர். ஆதலின், நீ விரைவில் அவளை மணம் புரிந்துகொள்ள வேண்டும். நீ மணம் செய்தற்குரிய பரிசத்தோடு வரின் எம்மவர் மனமகிழ்ந்து உன்னை ஏற்றுக்கொள்வர். வேங்கைமரம் மலர்ந்தது. சந்திரன் பரிவேடங்கொண்டான். அதனால் இதுவே மணம்புரிதற்குரிய காலம். தலைவியும் மூதறிவுடையவளாக இருக்கின்றாள்"

---

* இதுமுதல் வரைவுகடாதல்.

எனக் கூறினாள். தலைவன் விரைவில் மணம் புரியத் துணியானாக, வேறொரு நாள் பாங்கி, "நீ வருவதை அன்னை கேட்டறிந்தாள். இனி இங்கே வந்துவிடவுங் கூடும். ஆதலின், இனி வேறிடத்தைக் குறிப்பிட்டுக் கொள்க" என்றாள். அவன் பகல் வந்த காலத்து இரவில் வருவாயாக வென்றும், இரவில் வந்தால் பகலில் வாவென்றும், பகலிலும் இரவிலும் வருகவென்றும், இரண்டு பொழுதும் இங்கு வரல் வேண்டாமென்றும் பலவாறுகக் கூறி அதனாலாவது களவொழுக்கத்தினால் உண்டாகும் தீங்கை அவனறிந்து மணம்புரிந்து கொள்வானென்றெண்ணினாள். அவன் பழையபடி களவொழுக்கத்தை விடாதவனாகி இருந்தான். ஒருநாள் பாங்கி, "இவ்வாறு நீ ஒழுகுவது உனது நாடு, ஊர், குலம் முதலியவற்றிற்குத் தக்கதன்று" என்றாள். "நீ வரும் வழியிலுள்ள இடையூறுகளை நினைந்து தலைவி அஞ்சுகின்றாள். அவளுடைய துன்பம் அவளால் ஆற்றற்கரிதாயிருக்கிறது. முன்னையினும் இப்பொழுது காவல்மிகுதியாக இருக்கிறது. அன்னை எப்பொழுதும் அருகில் இருக்கிறாள். தலைவியின் விரகம் அளவிடற்கரியதாயுள்ளது. கனவில் உன்னைக்கண்டு விரைவில் விழித்துக்கொண்டு அரற்றுகின்றாள். அவளுடைய அழகெல்லாம் குறைந்துகொண்டு வருகிறது" என்று மணந்துகொள்ள வேண்டுமென்னும் கருத்தைப் பின்னும் புலப்படுத்தினாள்.

* பின்னும் களவொழுக்கத்தில் ஒழுகிவந்த தலைவன் தன் ஊருக்குச் சென்று சிலநாள் இருந்துவர எண்ணினான். தலைவியைப் பிரிந்துசென்று மீண்டுவருவேனென்பதை அவன் பாங்கியிடம் கூறினான். "நீ அவ்வாறு போனால் நாங்கள் இங்கே இறந்துபடுவோம்; ஆதலின் நீ செல்லுதலை ஒழிக" என்று பாங்கி விலக்கினாள். தான் போதற்குரிய காரியம் ஒன்று உளதென்பதைத் தலைவன் வற்புறுத்திக் கூறினான். "இங்கே தலைவிக்குத் துன்பம் உண்டாகுமுன் வரக்கூடுமெனிற் சென்றுவருக" என்று அவள் விடைகொடுத்தாள். தலைவன் சென்றான். அவன் பிரிந்த செய்தியை அவள் தலைவிக்கு உணர்த்தினாள். கேட்ட தலைவி மிக வருந்தினாள். சென்ற தலைவன் திரும்பிவரச் சற்றுத் தாமதிக்க, தலைவி ஆற்றாமை மிகுதியால் கடற்கரையிலுள்ள பல பொருள்களையும் விளித்துப் புலம்பினாள். பாங்கி அவளை

---

* இதுமுதல் ஒருவழித்தணத்தல்.

ஆற்றுவித்தாள். பின்னர்த் தலைவன் வந்தனன். அவனது வரவைப் பாங்கி தலைவிக்கு உணர்த்திவிட்டு அவன்பாற் சென்று, "தெய்வத்தின் அருளால்தான் நாங்கள் பிழைத்திருக்கின்றோம். இவ்வளவுகாலம் எங்களைப் பிரிந்திருந்தது நியாயமா?" என நொந்து வினவினாள். அவன், "இதுகாறும் தனிமையைத் தலைவி எவ்வாறு ஆற்றியிருந்தாள்? நீ எங்ஙனம் ஆற்றுவித்தாய்?" என நொந்து வினவினன். அவள், "நீ வந்துவிடுவாயென்று சொல்லியும் நின் ஊரைக்காட்டியும் நின் புகழை உரைத்தும் ஆற்றுவித்தேன்" என்று கூறினாள்.

* இங்ஙனம் இருந்து வருகையில் தலைவியை மணம் செய்து கொள்ளுவதற்குப் பரிசம் வேண்டுமாதலின் அதற்குரிய பொருளை ஈட்டுதற்காகத் தலைவன் வேற்று நாட்டுக்குச் செல்ல எண்ணி அதனைப் பாங்கிக்குக் கூறினான். அவள், "நீ பொருளுக்காகப் பிரிவதை நீயே தலைவிக்கு உரை" என்றாள். அவன், "நான் விரைவில் வந்து விடுவேன்" என்று சொல்லி விட்டுச் சென்றான். அவன் அவ்வாறு சென்றதைப் பாங்கி தலைவிக்குக் கூறினாள். அவள் மிக வருந்தினாள். அப்பொழுது பாங்கி, "நீ ஏன் வருந்துகின்றாய்? அவர் இப்பொழுது பிரிந்து சென்றது உன் நன்மையின் பொருட்டுத் தானே" என இடித்துரைத்தாள். கேட்ட தலைவி, "இதுகாறும் உன்னை என்னுயிர் போலப் பாவித்திருந்தேன். என் மன நிலையை அறியாமல் இங்ஙனம் சொல்லுகின்றாயே" என்று வருந்தினாள். தலைவன் மீண்டு விரைவில் வந்து விடுவானென்பதைப் பாங்கி வற்புறுத்தி மொழிந்தாள்.

இப்படியிருக்க, தலைவன் தான் மீண்டு வருவதாகக் கூறிய கார்ப்பருவம் வந்தது. அதைக் கண்ட தலைவி, "கார்காலம் வந்தும் இன்னும் அவர் வரவில்லையே" எனத் துன்புற்றாள். பாங்கி, "இது கார்கால மன்று; இப்பொழுது பெய்யும் மழை கால மல்லாத காலத்துப் பெய்வதாகும்" என்று கூறத் தலைவி, "கார்காலமல்லாவிடின் மயிலாடுமோ? கொன்றை பூக்குமோ? இந்திர கோபப் பூச்சிகள் உண்டாகுமோ? இந்திரவில் உண்டாகுமோ?" என்று வினவினாள். "அந்த மேகமானது தலைவருடைய தூதாகி இக்காலத்தில் வந்தது" என்று பாங்கி சொல்லி ஆற்றுவிக்கத் தலைவி ஆற்றியிருந்தாள்.

---

* இது முதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிதல்.

பிரிந்து சென்ற தலைவன் தான் சென்ற விடத்துத் தலைவியின் பிரிவாற்றாமல் வருந்தினான். பின்பு விரைவிற் பொருளீட்டிக் கொண்டு தேரூர்ந்து மீண்டுவந்தான். வரும்பொழுது, தலைவன் தேர்ப்பாகனை நோக்கி, "விரைவில் தேரை விடு" என்றும், மேகத்தை நோக்கி, "மேகமே, நான் வருதலை முன்பு போய்த் தலைவிக்குச்சொல்" என்றும் கூறித் தன் ஆர்வத்தைப் புலப்படுத்தினான். பின்பு தன் வரவைத் தலைவி அறிதற்காகச் சங்கநாதம் செய்தான். அவ்வொலியைக் கேட்ட பாங்கி அவன் வரவைத் தலைவிக்கு அறிவித்தாள். தலைவி, "தலைவரது தேர் வரவை முன்னதாகவே அறிவித்த இந்தச் சங்கம் சிறப்பெய்துக!" என வாழ்த்தினாள். தலைவன் வந்து சேர்ந்தான். அவனை நோக்கிப் பாங்கி, "பிரிந்திருந்த காலத்து நீர் தலைவியை நினைத்ததுண்டோ?" என வினவ, அவன், "நான் மறந்திருந்தாலன்றோ நினைக்கவேண்டும்" என்று தான் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பதைப் புலப்படுத்தினான். பாங்கி அவன் பிரிந்திருந்த காலத்தில் தலைவியைப் பலவிதமாக ஆற்றுவித்திருந்ததைக் கூறினாள்.

* தலைவன் தலைவியை மணம் செய்துகொள்ள வேண்டுமென விரும்பி முதியோர்கள் முகமாகப் பரிசத்தை அனுப்பினான். அவன் அவ்வாறு விடுத்தமையைப் பாங்கி தலைவிக்கு உணர்த்தினாள். தலைவி, தன்னைத் தலைவன் மணம்செய்து கொண்டால் அது நற்றாய்க்கு மிக்க மகிழ்ச்சியுண்டாக்குமென்று நினைந்தாள். அப்பால் தலைவியின் தமர் தலைவன் விடுத்த பரிசத்தை அங்கீகரித்து அவன் வரைதலை ஏற்றுக்கொண்டனர். அதனைப் பாங்கி தலைவிக்குக் கூற அவள் மிக்க உவகை யடைந்தாள். பாங்கி, மணத்திற்குரிய முயற்சிகளைச் செய்த தலைவனைக் கண்டு அவனை வாழ்த்தினாள். கலியாணத்தின் பொருட்டுத் துர்க்காதேவியைத் தலைவி வழிபட்டனள்; பாங்கி அந் நிலையை அவனுக்குக் காட்டினாள். அவன் அது கண்டு களித்தான்.

[களவொழுக்கம் நிகழ்ந்து வருகையில் தலைவி, தலைவன் வரும் வழியிலுள்ள துன்பத்தை நினைந்து மிக அஞ்சினாலும், அவள் பழிக்கு அஞ்சினாலும் காமத்தை ஆற்றாளாயினும், தமர் வெறியாட்டு எடுத்தாராயினும், பிறர் தலைவியை மணம் செய்துகொள்ள முயன்றாராயினும்

---

* இது முதல் வரைவு மலிவு.

தோழி உண்மையைத் தாய்க்குக் கூறுவள். அவ்வாறு கூறும் கிளவி 'அறத்தொடு நிற்றல்' எனப்படும், அதன் அமைப்பு வருமாறு :

"தலைவன் இன்ன காலத்தில் வருவேன்" என்று கூறிச்சென்ற படி வாரானாகத் தலைவி கண்ணீர்விட்டு அழுதாள். அது கண்ட பாங்கி அங்ஙனம் அவள் அழுதற்குக் காரணம் கேட்பத், தலைவன்தான் கூறிச் சென்றபடி வாராமையையும், அவன் தெய்வத்தைக் காட்டி, "நின்னைப் பிரியேன்" என உரைத்த சபதத்தை நம்பினமையையும் அது பழுது பட்டமையையும் அதனால் தலைவனுக்கு வரும் ஏதத்தைக் குறித்து அஞ்சினமையையும் கூறி வருந்தினாள். கேட்ட பாங்கி, "உன்னுடைய அன்பை அவர் சிறிதும் உணரவில்லை. அவர் மனம் கல்லைப்போலும்" என்று தலைவன் இயல்பைப் பழித்துக் கூறத் தலைவி, "ஏதேனும் தக்க காரணமின்றி அவர் தாமதிக்கமாட்டார் ; வந்து விடுவார்" என்று அவன் நற்குணமுடையவனென்பது தோன்றக் கூறி, "அவர் சத்தியம் செய்து தவறியதைப் பொறுக்கும்படி தெய்வத்தைப் பிரார்த்திக்கச் செல்வோம்" என்றாள்.

அப்பொழுது தலைவியைத் தமர் பாதுகாத்தல் மிகுதியாயிற்று. அவள் துயருற்று நின்றாள். தாய் முதலியோர் அவள் வேறுபாட்டிற் குக் காரணம் பேயென்றெண்ணி முருகனைப் பூசை செய்து ஆட்டுக் குட்டியைப் பலியிட எண்ணினார்கள். அதனைக் கண்ட பாங்கி, "ஐயோ! வீணாக இந்த ஆட்டை ஏன் கொல்லுகிறீர்கள் ? இந்தத் தெய்வத்தையே கேளுங்கள். இத்தகைய செயல்களால் தலைவியினது துன்பம் தீராது" என்று கூறினாள். அதனைக் கேட்டுச் சினந்த செவிலி, "நாங்கள் முருகனை வழிபடுகையில் நீ தடுத்ததன் காரணம் யாது ? இவள் மெலிவிற் குக் காரணம் தான் என்ன ?" என்று வினவினள். அவளுக்கு உண்மை யைக் கூறப்புக்க பாங்கி, "நாங்கள் தினைப்புனத்திலிருந்த காலத்தில் ஒருநாள் ஒரு தலைவன் ஒரு தாமரைப் பூவைத் தலைவி கையிற் படும்படி தந்தான். அது தொடங்கி இவள் அவனை நினைந்து வருந்துகின்றாள். பின் ஒருநாள் காவிரியில் நீராடும்பொழுது சுழி ஒன்றில் இவள் அகப் பட்டு வருந்தா நிற்க, அங்கே வந்து கொண்டிருந்த அவ்வீரன் அதைக் கண்டு இவளை எடுத்துக் கரையிற் சேர்த்தான். வேறொரு நாள் தன் பால் வந்த யானையைக் கண்டு இவள் அஞ்சி ஓடியபொழுது அவ்வீரன் அக்களிற்றை வேலாலெறிந்து இவளைக் காத்தான். தனக்கு உயி ரளித்த பேருதவியை நினைந்து எப்பொழுதும் அவன் ஞாபகமாகவே உள்ளாள்" என்று சில பொய்க் காரணங்களால், அவன்பால் அன் புண்மையைப் புலப்படுத்தினாள். செவிலி உண்மையை உணர்ந்தனள்.

தலைவியின் நற்றாய் தன்மகளது நிலைகண்டு அதற்குக் காரணம் யாதென்று செவிலியைக் கேட்க அவள் தாய்க்கு உண்மையைக் கூறினள். தாய் அதனைத் தமருக்கு அறிவித்தனள்.]

[தலைவன் முயற்சி செய்வதனாலும் அறத்தொடு நிற்பதனாலும் மணம் நிகழும். சில காலங்களில் தமர் தலைவன் வரைதற்கு உடன்படார். அக்காலத்துத் தலைவன், தலைவியை ஒருவரும் அறியாதவண்ணம் அழைத்துச் சென்றுவிடுவான். அப்பகுதி 'உடன்போக்கு' என்னும் பெயர் பெறும். அதன் பொருட்டொடர்பு வருமாறு:

தலைவன் மணஞ்செய்வதற்குத் தமர்கள் உடன்படாரென்பதையறிந்து, அவனிடம் சென்று, "எம்மவர் இவளை நீ வரைதற்கு உடன்படார்; ஆதலால் இவளை உடன்கொண்டு நின்னூருக்குச் செல்க" எனப் பாங்கி அறிவிக்க அவன், "தலைவி மிக்க மென்மையையுடையவள். போதற்குரிய வழியிலேயுள்ள பாலைநிலம் அதிக வெம்மையையுடையது. இவள் எவ்வாறு அதில் நடப்பாள்? அவ்வழியில் அஞ்சத்தக்க பேயும், புலி முதலிய விலங்குகளும் திரியும்" எனக்கூறி மறுத்தான். பாங்கி, "உன்னுடன் அவள் வந்தால் வழியெல்லாம் அவளுக்குக் குளிர்ந்திருக்கும்; யாதொரு துன்பமும் இராது" எனக்கூறித் தலைவனை உடன்படச் செய்ய அவன் அதற்கு உடன்பட்டான். பாங்கி தலைவியின்பால் வந்து, "தலைவர் உன்னை அழைத்துச் செல்ல விரும்புகிறார்" என்றறிவிக்க, அவள் அங்ஙனம் சென்றால் தன்னுடைய நாணம் அழிந்துவிடுமேயென்று இரங்கினாள். அப்பொழுது பாங்கி, "நாணினும் கற்புச் சிறந்தது; நீ உடன் சென்றால்தான் உன் கற்பு நிலைபெறும்" என்று கூறத் தலைவி தலைவனுடன் செல்லுதற்கு உடன்பட்டாள். அப்பொழுது பாங்கி பாலை நிலத்தின் இயல்பை உரைக்க, தலைவி தான் அதற்கு அஞ்சாமல் செல்லத் துணிந்திருத்தலைச் சொல்லி, "நான் அவருடன் செல்வேன்; நீ பின்பு வருவாயாக" என்றாள். பாங்கி தலைவியை அழைத்துச் சென்று தலைவன்பால் அடைக்கலமாகக் கொடுத்து, "இனி இவளுக்கு யாவரும் நீயே; ஆதலின் இவளை இன்றுபோல என்றும் காப்பாயாக" எனச் சொல்லி, "நீங்கள் முன்பு செல்லுங்கள். நான் இங்கே யுள்ளவர்கட்குச் சமாதானம் சொல்லிவிட்டு வருவேன்" என்று கூறி அவர்களை விடுத்தாள்.

தலைவன் தலைவியைப் பாலைநிலத்து மெல்ல அழைத்துக்கொண்டு சென்றான். வழியிலேயுள்ள ஒரு சோலையைக் கண்டு வியந்து தலைவியின் இளைப்பை அறிந்து அதில் இருந்து இளைப்பாறித் தலைவியினுடைய கூந்தலில் மலர் சூட்டினான். பின்னர் இருவரும் மேற்செல்லத் தொடங்கினர். அவ்விருவரையும் வழியிற் கண்டோர்கள்,

"இவர் தேவரோ? மானிடரோ?" என்று சந்தேகித்தனர். அவர்களைக் கண்ட பாலை நிலத்தினர், "பொழுது போயிற்று. நீங்கள் இனிப் போதற்கு இவ்வழி உரியதன்று. எங்கள் வீட்டில் இரவில் தங்கிச் செல்லுங்கள்" எனச் சொல்லி விலக்கினார்கள். வழியிற் சந்தித்தவர்கள் ஊர் அருகிலுள்ளதென்று கூறினர். ஊருக்கு அருகில் அவர்கள் வந்து சேர்ந்தபின், தலைவிக்கு அவ்வூரிலுள்ள இடங்களையெல்லாம் தலைவன் காட்டினன்.]

[உடன் போக்கின் பின் செவிலி அதனைப் பாங்கியால் அறிந்து வருந்துதல் முதலியவற்றைச் சொல்லும் பகுதி 'கற்பொடு புணர்ந்த கவ்வை' எனப்படும். அதன் பொருட்டொடர்பு வருமாறு:

தலைவனுடன் சென்ற தலைவியைக் காணாத செவிலித்தாய் பாங்கியை அவள் எங்கே போயினளென்று கேட்டாள். பாங்கி, "நம்மவர் மணத்திற்கு உடன்படாமையால் நின்மகள் தன்னுடைய விருப்பத்தின் படியே தலைவனுடன் போயினாள்" என்று கூறச் செவிலி மிக வருந்தினாள். "தலைவனுடன் போதலைத் தலைவி குறிப்பால் எனக்கு அறிவித்தும் அதனை நான் அறிந்து கொள்ளாமற் போனேனே" என்று தன் அறிவின்மையை நொந்துரைத்துத் தலைவியை விரைவில் மீண்டு வரும்படி செய்யவேண்டுமென்று முருகக்கடவுளைத் துதித்தாள். பின் நற்றாய்க்குத் தலைவி தலைவனுடன் சென்றதை அறிவித்தாள். அத்தாய் பாங்கியை நோக்கி, "நீ முன்பே உண்மை கூறியிருந்தால் அவளுடைய விருப்பத்தை முற்றுவித்திருப்போமே" எனப் புலம்பினாள். பின்பு அவள் பிறபாங்கியர்களோடும் அயலாரோடும், தன் துயர் புலப்பட வருந்தினாள். பின் அவள் தலைவி விளையாடும் இடங்களைக் கண்டு அழுதாள். காக்கையைப் பார்த்து, "என் மகள் மீண்டு வரும்படி நீ கரைவாயாயின் உனக்குச் சிறந்த உணவை அளிப்பேன்" என்று சொல்லிக் காக்கைக் குறி பார்த்தாள். "பாலை நிலம் என் மகளுக்குக் குளிர்ந்திருக்கும்படி நீ செய்யவேண்டும்" என்று சூரியனை வேண்டிக்கொண்டாள். "ஐயோ, மலரை மிதிப்பினும் பொறாத என் மகளுடைய அடிகள் பாலை நிலத்தின் வெம்மையை எவ்வாறு பொறுக்கும்? மிக்க இளமையை யுடையவளல்லவோ! அவளை அங்கே பாதுகாப்பார் யார்? வழியில் யானை முதலிய விலங்கினங்களைக் கண்டு மிக அஞ்சுவாளே!" எனச் சொல்லிப் புலம்பினாள். அவளுடைய துயரத்தைக் கண்டவர்களும் வருந்தினார்கள்.

அப்பொழுது செவிலி, "நீ வருந்தாதே; நான் அவளைத் தேடிச் சென்று அவள் எங்கே இருந்தாலும் அழைத்து வருவேன்" என்று உறுதிகூறிப் புறப்பட்டுச் சென்றாள். வழியில் திரிதண்டத்தைக்

கொண்டு எதிர்வரும் அந்தணர்களைக் கண்டு, "இவ்வழியே ஒரு பெண் ஒரு வீரனுடன் சென்றதுண்டோ?" என வினவ அவர்கள், "யாம் கண்டேம்; நீ என் வருந்துகின்றாய்? முத்து, தான் பிறந்த சங்கைவிட்டு அணிபவர்களிடம் சென்றுவிடுகின்றது. நீயும் பெற்றவர்களை நீங்கி ஒரு தலைவனை அடைந்தாய். அதுபோல உன் மகளும் ஒரு தலைவனுடன் சென்றிருத்தற் குரியளே" எனச் சொல்லி ஆற்றுவித்தனர். செவிலி, மேலும் பாலையிற் செல்லும்பொழுது ஒரு மறத்தியைக் கண்டு, "ஒரு தலைவனும் தலைவியும் இவ்வழியே வரக் கண்டனையோ?" என்று கேட்டாள். அந்நிலத்தில் இருந்த குராமரத்தைக் கண்டு, "நீயேனும் அவளைக் கண்டு கேட்டனையோ; சொல்லக் கூடாதோ?" என்று கூறிப் புலம்பினாள். மேலும் செல்லுகையில் ஓரிடத்தில் இருவருடைய அடிச்சுவடுகளையும் கண்டு இரங்கினாள். அப்பொழுது ஒரு காதலனும் ஒரு காதலியும் சேர்ந்து எதிர் வந்தனர். அவர்களைக் கண்டு, "உங்களைப்போலவே இந்த வழியே செல்லும் என் மகளையும் அவள் தலைவனையும் கண்டீரோ?" என்று கேட்டாள். ஆவர்கள், "நீ கூறிய அவ்விருவரையும் கண்டோம். அவர்கள் இதற்குள் ஊரை அடைந்திருப்பார்கள்" என்று சொல்லி அவள் வருத்தத்தை ஆற்றுவித்தனர். பல இடங்களில் தேடியும் தலைவியைக் காணாத செவிலி வருத்தத்தோடு மீண்டனள். * மீண்டு வந்த செவிலி தான் பல இடங்களில் தேடியும் தலைவியைக் காணவில்லை யென்பதை நற்றாய்க்குக் கூறினாள்.

இவள் நிலை இங்ஙனமாக, தலைவனுந் தலைவியும் தங்கள் ஊருக்கு மீண்டு வந்தனர். அவ்வாறு வருகையில், முன் செல்வோர்தம்மோடு தான் வருதலைப் பாங்கியர்க்குத் தலைவி உணர்த்தி விடுத்தாள். அவர்கள் அவ்வாறே சென்று பாங்கியர்க்கு உணர்த்தினர். அப்பாங்கியர் கேட்டு நற்றாய்க்கு உணர்த்தினர். அதனை அறிந்த தாய் மிக மகிழ்ந்தாள். தன் மனையிலேயே அவர்கள் மணந்துகொள்ள வேண்டுமென்பது அவளுடைய விருப்பம். ஆதலின் முருகபூசை பண்ணுபவனை அவள் பார்த்து, "தலைவன் என் மகளைத் தன்னூருக்கு அழைத்துச் செல்வானோ? அல்லது எம்மனைக்கே அழைத்து வருவானோ?" என்று கேட்டாள். † செவிலியை நோக்கி, "அவர்கள் வீட்டில் முன்னர்ச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்தாலும் நம் வீட்டில் மணம் செய்து கொள்ளச் செய்யுமாறு தலைவனுடைய தாயினிடம் சொல்வாயாக" என்று தன் ஆர்வத்தை வெளியிட்டாள். அப்பொழுது செவிலியிடம் பாங்கி தலைவன் தன் மனையிலேயே மணந்துகொண்டானென்று அறிவித்தாள். அச்செய்தியைச் செவிலி நற்றாய்க்கு உணர்த்தினாள்.

---

* இது முதல் மீட்சி. † இது முதல் தன்மனை வரைதல்.

தலைவன் மணம் செய்துகொண்டு மணக்கோலத்தோடு தலைவியின் வீட்டிற்கு வந்தான். அப்பொழுது தலைவன் பாங்கியிடம், "நான் மணந்து கொண்டமையை நம்மவர்களுக்குச் சொல்லுக" என்றான். பாங்கி, "அதனை முன்பே அறிவித்துள்ளேன்" என்று கூறி அழைத்துச் சென்றாள்.]

[உடன்போக்கு நிகழ்கையிற் சில தடைகள் உண்டாவதும் உண்டு. அவற்றைக் கூறும் பகுதி 'உடன்போக்கு இடையீடு' என்று பெயர் பெறும். அதன் பொருட்டொடர்பு வருமாறு:

தலைவனும் தலைவியும் பாலை நிலத்து வழியே செல்லுகையில், எதிர் வந்த அந்தணர்களை நோக்கித் தலைவி தான் பிரிந்து தலைவனுடன் செல்வதைப் பாங்கி தாய் முதலியவர்களுக்குச் சொல்லி விடுப்ப, அதனைக் கேட்டுச் சென்ற அந்தணர்கள் தாயைக் கண்டு தலைவி தலைவனுடன் போதலை அறிவித்தனர். அவள் வாயிலாக உறவினர்கள் அறிந்து சினங் கொண்டு தலைவியை அழைத்து வருதற்காகப் படைக்கருவிகளுடன் தொடர்ந்து சென்றனர். அவர்கள் வருதலைக் கண்ட தலைவி, "ஐயோ, இனி என் செய்வோம்!" என வருந்தினள். வருபவர்களைத் தலைவியின் உறவினரென்றறிந்து அவர்களோடு போர் செய்தலாகாதென்று எண்ணிய தலைவன் அவர்கள் பால் அவளை விடுத்துச் சென்றான். தமருடன் சேர்ந்த தலைவி தலைவன் செல்வதைக் கண்டு வருந்தினாள்.]

* தலைவன் மணம் புரிதலைத் தமர்கள் ஏற்றுக் கொண்ட பின் மணம் நிகழ்ந்தது.

† மணம் புரிந்து கொண்ட தலைவனும் தலைவியும் இல் வாழ்க்கை நடத்தத் தொடங்கினர்.

உடனிருந்த பாங்கியை நோக்கித் தலைவன், "உன் உதவியாலன்றோ நான் இவளை அடைந்தேன்!" என்று தலைவியின் முன் புகழ்ந்தான். கேட்ட பாங்கி, "அடியேனுக்கு முகமன் எதற்கு? என்னையும் எம் குலத்தையும் இந்தத் தலைவியையும் நீ காப்பாற்றினை. நீயும் இவளும் நீடூழி வாழ்க!" என வாழ்த்தினாள்; தலைவியைநோக்கி, "இப்பொழுது இடைவிடாமல் உடனுறையும் அன்புடைய நீ தாயினுடைய காவலிலும், இவர் பொருள்தேடச்சென்ற காலத்திலும் எப்படி ஆற்றியிருந்தாய்!" என்றாள். "தலைவரது கருணை எனக்கு இன்பத்தையே அளித்து வந்தமையால் வருந்தாதிருந்தேன்" என்று தலைவி கூறினாள். பாங்கி, "நீ இவளை மணப்

* இது வரைவு. † இது முதல் இல்வாழ்க்கை.

பதற்கு முன் எவ்வாறு ஆற்றியிருந்தாய்!" என்று தலைவனை வியந்தாள். பின்னர், பாங்கி தலைவி பிறந்த வீட்டிற்குச் சென்று செவிலியிடம் தலைவன் தலைவி ஆகிய இருவருடைய காதற் சிறப்பையும் இல்வாழ்க்கையின் நன்மையையும் உரைத்தாள். கேட்ட செவிலி தலைவன் வீட்டிற்கு வந்து இருந்து அவர்கள் இல்வாழ்க்கை நடத்தும் திறமையைக் கண்டு மகிழ்ந்து சென்றாள். சென்று நற்றாயினிடம் தலைவியினது கற்பின் திறத்தையும் மனைவாழ்க்கைத் தன்மையையும் இருவர் காதலையும் பாராட்டிக் கூறினாள்.

* இல்வாழ்க்கை நிகழ்ந்து வருகையில் தலைவன் பரத்தையின் இன்பம் நுகர்தற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து சென்றான். தலைவி பிணங்கி யிருந்தாள். தலைவன் செல்லும் பொழுது கண்டவர்கள், "இவன் இங்ஙனம் பிரிந்து செல்வது தலைவியின் ஊடலுக்குக் காரணமாகும்" என்றனர். தனித்திருந்த தலைவி தலைவன் செயலை நினைந்து வருந்தினாள். அதுகண்ட பாங்கி, "நீ இங்ஙனம் துன்புறுதற்குக் காரணம் யாது?" என்று வினவத் தலைவி தலைவனுடைய செயலை உணர்த்தினாள். கேட்ட பாங்கி, "தலைவருடைய குற்றத்தைக் கூறுதல் கற்புடைமைக்குத் தகாது" என்று இடித்துரைத்தாள்.

தலைவன் இங்ஙனம் பரத்தையர்பால் இருந்து வருகையில் தலைவி பூப்புற்றாள். அதனைத் தலைவனுக்குஅறிவித்தற்காக ஒருத்தியைச் செம்மலர்,செவ்வாடை, செவ்வணி முதலியவற்றைஅணிந்து கொள்ளச் செய்து பரத்தை வீட்டில் இருக்கும் அவன்பால்அனுப்பினாள். அதனைக் கண்ட பாங்கியர் முதலியோர், "இச்செயலாற் பரத்தையர் இன்னும் தலைவியைப் பழிப்பார்" என்றார்கள். அவ்வாறே செவ்வணி யணிந்து சென்றவளைப் பரத்தையர் கண்டு பழித்தனர். பின், நீராடியபின் ஈராறு நாளும் தலைவியுடன் தலைவன் இருக்க வேண்டுமென்ற விதியை அறிந்து அவர்கள் அவனைத் தலைவிபால் விடுத்தனர். அவன் வீட்டிற்கு வந்ததைத் தோழியரும் பாங்கியும் தலைவிக்கு உணர்த்தத் தலைவி எதிர்கொண்டு பணிந்தனள். பின்பு இருவரும் அளவளாவி இருந்தனர்.

சிலநாளில் தலைவன் மீண்டும் பரத்தையர்பாற் சென்றான். தலைவி கருவுற்று ஓர் ஆண்மகனை ஈன்றாள். அவள் தான்

* இது முதற் பரத்தையிற் பிரிவு.

புதல்வனைப் பெற்றமையைத் தலைவனுக்கு அறிவித்தற்கு நினைந்து மங்கலச் சின்னங்களாகிய வெண்மலர் வெள்ளாடை முதலியற்றை அணிந்துகொள்ளச் செய்து ஒரு சேடியை அவன்பால் விடுத்தாள். அதனைக் கண்ட அவன் தன் வீட்டிற்கு வந்து, "நான் தலைவியைக் காணும்படி செய்ய வேண்டும்" என்று பாங்கியை வேண்டினான். அவள் தலைவி * நெய்யாடியதைத் தெரிவிக்க அவன் மிக மகிழ்ந்தான். பாங்கி அவன் வரவைத் தலைவிக்குச் சாற்றினாள். தலைவி பிணக்குற்றாள். தலைவன் தூதாகப் பாணனை விடுத்தான். அவனைக் கண்ட தலைவி வெகுண்டாள். பாணன் தான் மறுக்கப்பட்டதைத் தலைவனிடம் வந்து கூறினான். பின் அவன் விறலியை விடுத்தான். அவளையும் தலைவி வெகுண்டாள். பாங்கியைத் தூதாக விடுத்தான். அவளையும் மறுத்தாள். அப்பொழுது அங்கே வந்த விருந்தினர் ஒருவரை அழைத்துக் கொண்டு தலைவன் உட்புகுந்தான். விருந்தினரைக் கண்டவுடன் தலைவி பிணக்கை விடுத்து உபசரித்தாள். பின்னர்த் தலைவன் தலைவியோடு அளவளாவ நினைந்து அணுகுகையில் அவள் ஊடினது கண்டு வருந்தி அவளை வழிபட்டான். அப்பொழுது தலைவி, "நீர் இங்ஙனம் செய்தலைப் பரத்தையரறிந்தால் உம்மைப் பெரிதும் பழிப்பார்கள்" என்றாள். தலைவன், "நீ குறிக்கும் பரத்தையர் ஒருவரையும் இதுகாறும் அறிந்திலேன்" என்றான். தலைவி, "அன்றொருநாள் நம் குழந்தை வீதியில் விளையாடுகையில் அதனை அங்கே சென்ற ஒருத்தி எடுத்தணைத்து விடுத்துச் சென்றாள். அருகில் நின்ற ஒருத்தி இவள்தான் இக்குழந்தையின் சிறிய தாயென்றாள். ஊர் முழுவதும் உம்களவை அறிந்திருக்கின்றது" என்றாள். தலைவி மிக்க ஊடலுடையவளாக இருத்தலை அறிந்த பாங்கி அவளிடம், "இவ்வாறு நீ இருத்தல் கூடாது" என்று அறிவுறுத்தினாள். தலைவி பின்னும் ஊடல் தணியாளாக இருப்பக் கண்ட தலைவன், "நெஞ்சே, முன்பு நம்பால் அன்பு வைத்திருந்த ஒருத்தியல்லள் இவள்" எனக்கூறி வருந்தித் தானும் ஊடினான். அது கண்ட பாங்கி, "பரத்தையர் மேல் வைத்த அன்பினால் எம் தலைவியைச் சினவற்க" என்றாள்.

தலைவன் மிக்க ஆற்றாமையுடன் கையிற் புதல்வனை எடுத்துக் கொண்டு வந்து தலைவியைக் கண்டான். அப்பொழுது தலைவி ஊடல்

---

* நெய் - தைலம்.

நீங்கினள். இருவரும் மகிழ்ந்தனர். தலைவன் சென்றபின்பு பாங்கியை நோக்கி, "வீதிவழியே சென்றுகொண்டிருந்த தலைவரை நம் வீட்டிற்கு வருமாறு இவன் செய்தான்" என்றுகூறித் தன் மைந்தனைப்புகழ்ந்து, "தலைவர் இயற்கை வேறுபடவில்லை. அவர் என்றும் போல அன்புடையவராகவே இருக்கின்றார்" என்று தலைவனைப் புகழ்ந்தாள். பாங்கி, தலைவி தலைவன்செய்த பிழையைப்பொறுத்து ஏற்றுக்கொண்டமையைப் பாராட்டி அவளை வியந்தாள்.

[இங்ஙனம், இருந்து வருகையில் * ஓதற் பொருட்டேனும், நாடு காத்தற்பொருட்டேனும், இருவேந்தரைப் பகை தணிவித்து நட்பாக்குதற் பொருட்டேனும், தன்னுடைய நண்பனாகிய அரசனுக்குப்போரில் துணைசெய்யும் பொருட்டேனும், பொருள் காரணமாகவேனும் தலைவியைத் தலைவன் பிரிவதுண்டு. அவை முறையே ஓதற்பிரிவு, காவற் பிரிவு, தூதிற் பிரிவு, துணைவயிற் பிரிவு, பொருள் வயிற்பிரிவு என்னும் பெயர் பெறும். அங்ஙனம் பிரிகையில் தலைவன் தன் கருத்தைப் பாங்கிக்கு உரைத்து † இன்னகாலத்தில் மீண்டு வருவேன் என்று சொல்லுவான். அவள் தலைவி வருந்துவாளென்று கூறுவாள். அவன் பிரிவின் இன்றியமையாமையை எடுத்துக்கூறிச் செல்வான். பின் அவள் அவன் பிரிவைத் தலைவிக்கு உணர்த்துவாள். தலைவன் வரக்குறித்த பருவம் வந்தவுடன் தலைவி, "அவர் இன்னும் வரவில்லையே" என்று வருந்துவாள். பாங்கி, "அவர் வந்து விடுவார்" என்று கூறி ஆற்றுவிப்பாள்.]

‡ தலைவன் பொருள் தேடி வருவதற்காக வேற்றுநாடு செல்ல எண்ணித் தன் கருத்தைப் பாங்கிக்கு உணர்த்திச் சென்றான். அதனை அவள் தலைவிக்கு உணர்த்தினாள். தலைவன் வருவதாகச் சொல்லிச் சென்ற இளவேனிற் பருவம் வந்தது. அதுகண்ட

---

* "இவன் தானேதிய புருடார்த்தமாகிய தருமார்த்த காமங்களையொழிய வேறும் புருடார்த்தமாகக் கூறப்படுவன உளவோ வென்பதனை ஆராயவேண்டுங் கருத்தினானாதலானும், கல்வியாற்றன்னிற் றாழ்ந்தாரைத் தனது கல்வி மிகுதி காட்டி அவர்களை யறிவித்தல் தருமநூல் விதியாதலானும் பிரியுமென்ப" திருச்சிற்: 308, பேர். அவதாரிகை.

† இங்கே கார் முதலிய பருவங்கள் முறையே கூறப்படும்.

‡ "இனிப் பொருள் வயிற் பிரிதலென்பது குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள் கொண்டு இல்லறஞ் செய்தால் அதனான் வரும் பயன் அவர்க்காம் அத்துணை யல்லது தமக்காகாமையால் தமது பொருள் கொண்டு இல்லறஞ் செய்தற்குப் பொருள் தேடப் பிரியா நிற்றல்" திருச்சிற். 332, பேர். அவதாரிகை.

தலைவி, "இன்னும் அவர் வரவில்லையே" என்று வருந்தினாள் பாங்கி, "அவர் வந்து விடுவார்; வருந்தாதே" என்று ஆற்ற வித்தாள்.

பொருளீட்டச் சென்ற தலைவன் பொருள்பெற்று மீண்டு வரு கையில் தன் ஆர்வமிகுதியினால் தலைவியின் உருவம் வழியிடையில் உருவெளித்தோற்றமாகத் தோன்றக்கண்டு வியந்தான். பின் ஊர் வந்து சேர்ந்தான். விரைவில் தேர்செலுத்தித் தன்னை ஊரிற் சேர்த்தியதை வியந்து தேர்ப்பாகனைப் புகழ்ந்தான். தலைவன் வந்ததைக்கண்டு பாங்கி, "இனி, தலைவியின் இல்வாழ்வு மிகச் சிறப்போடு நடைபெறும்" என்று கூறி மகிழ்ந்தாள். தலைவன் தலைவியோடு இன்புற்று வாழ்ந்து வந்தான்.

# கோடீச்சுரக் கோவை ஆராய்ச்சி.

## 1. தலச் செய்திகள்.

இந்தக் கோவையில் ஆசிரியர் தல விஷயங்களை ஆங்காங்கே எடுத்தாளுகின்றார். அவை வருமாறு:

ஏரண்டமாபுரம், 58, 332; கோடி விநாயகர், காப்பு; பந்தாடுமை, 37, 280; பத்திரயோகி வரலாறு, 127; ஏரண்ட முனிவர் வரலாறு, 310; காவிரி, 155, 302, 333, 357; தீர்த்தம், 333; தேர், 333.

## 2. சிவ்பெருமான் திருநாமங்கள்.

இவர் சிவபெருமானுடைய பலவகை இயல்புகளையும் திருவிளையாடல்களையும் திருநாமங்களையும் செய்யுள்தோறும் எடுத்தாளுகிறார். சிவபெருமானுக்குரிய விசேடணங்கள் அவரது சிறப்புக்களைப் புலப்படுத்துகின்றன. அவை வருமாறு:

### திருமேனி.

1. திருமேனி சம்பந்தமானவை: "செக்கர் நன்மேனியர்" (60), "பொன்போலு மெய்யரன்" (165), "ஒளியார் செம்மேனியர்" (174), "பொன்னுறழ் மெய்யரன்" (198), "சிவந்தபொன் மெய்யரன்" (329), "பொன்னுறு மேனியர்" (440.)

2. அரவாபரணர்: "படந்திகழ்பூண்புனைகோடீச்சுரவள்ளல்" (12), "பணிபெறு பூணினர்" (25), "வெங்நாக கங்கணர்" (39), "நாகமங்கத்திற் புனையும் புராணர்" (93), "படமன்னுபூணினர்" (105), "பணந்தரு பூணினர்" (154), "பணங்கொண்டபூணினர்" (185), "அரவிடையீசர்" (197), "அரவக்கதிர்ச்சடைக்கோடீச்சுரேசர்" (232), "அரவப் பணியார் சடையெழிற் கோடீச்சுரேசர்" (243), "வளர்பிறை நாளும் வளரா திருக்க வளர்சடைமேற், களவெம் பணியுய்த்த கோடீச்சுர வள்ளல்" (264), "விடவாளரவணி கோடீச்சுர வள்ளல்" (304), "கோளாடரவணிகோடீச்சுரேசர்" (353), "வன்புற்றரவணி கோடீச்சுரேசர்" (383), "பணவரவம்புனை கோடீச்சுரேசர்" (391.)

3. **யக்ஞோபவீத தாரணர்:** "மெய்யாக நூலினர்" (57), "இழைவளர் மார்பினர்" (87), "இழைநோக்கு மார்பரன்" (168.)

4. **திகம்பரர்:** "திசையணி யாடையர்" (279.)

5. **தோலாடையர்:** "சிங்கத் துரிபுனை கோடீச்சுர நித்தர்" (31), "ஆடைவன் றோலுடைக் கோடீச்சுரேசர்" (428.)

6. **உமாபாகர்:** "பாலார் மொழி பங்கர்" (4), "பந்தாடு மை பங்கர்" (37), "உமைக்கீந்திடு மத்தர்" (72), "சிற்றேரிடை பங்கர்" (89), "பாக மங்கைக்கருள் பரமர்" (93), "முத்தநகை மின்னமர் பாகத்தர்" (95), "தனத்தத்தை மானுக்குதவு கோடீச்சுரத் தாணு" (160), "மாதாரமார் பங்கர்" (177), "பெண்புண ரத்தத்தர்" (190), "தகரக் குழல்பங்கர்" (205), "பெண்ணூறு பாகத்தர்" (224), "இமய மங்கை பங்காளர்" (225), "பரையே யிடத்தினர்" (227), "பந்தேற்ற கையுமை பங்கர்" (280), "தந்தன நேரிடை பாகர்" (290), "பண்டே மொழி பங்கர்" (355), "முற்றுமுலை பங்கர்" (361), "உமையா ளிடத்தினர்" (379), "அருளூற்ற மெய்யரன்" (396), "திருந் திழை பாகர்" (420.)

7. **சங்கர நாராயணர்:** "மாலோர் புறங்கொண்ட கோடீச் சுரேசர்" (85), "மாலொரு பாகர்" (305), "மாலையிடங் கொண்ட கோடீச்சுரேசர்" (345), "மால்பற் றிடத்தினர்" (369), "மாலுறு பாகத்தர்" (382.)

## திருக்கரம்.

8. **சூலபாணி:** "நெய்ப்பட்ட சூலத்தர்" (10), "வலிவுறு சூற் படைக் கோடீச்சுரேசர்" (14), "தூவென்ற சூலத்தர்" (29), "மின்னுறு சூற்படைக் கோடீச்சு ரேசர்" (53), "போரண்டு சூலத்தர்" (58), "சூலாயுதத்தினர்" (115), "மூவிலை கொளுஞ் சூலத்தர்" (140), "சமரவெஞ் சூலத்தர்" (150), "மறக்கதிர்ச் சூலத்தர்" (167), "திருக்கையிலங்கயிற் சூலத்தர்" (182), "சின த்திரி சூலத்தர்" (188), "மின்செயுஞ் சூலத்தர்" (202), "மின் போலுஞ் சூலத்தர்" (233), "வெஞ்சமர்ச் சூற்படைக் கோடீச் சுரவள்ளல்" (299), "நெய்திகழ் சூலத்தர்" (306), "ஊனலை

சூலத்தர்" (410), "வையுறுஞ் சூலத்தர்" (411), "நிறந்தருஞ் சூலத்தர்" (422.)

9. **பாசுபாணி:** "ஆரூர் மழுவினர்" (74), "மழுத்தடங் கையினர்" (117), "வெவ்வாண் மழுப்படைக் கோடீச் சுரவள்ளல்" (178), "நெய்யார் மழுவினர்" (204), "நெய்யார் மழுவரன்" (255), "கொன்னூர் கணிச்சியர்" (325), "பாலங்கொள் கையரன்" (430), "திறத்தார் மழுப்படைக் கோடீச் சுரேசர்" (443.)

10. **அக்கினிதரர்:** "அங்கைக் கனலரன்" (311.)

11. **மிருகபாணி:** "மறியாரிடத்தினர்" (28), "மறியுறுகையரன்" (131), "மறிகொண்ட கையரன்" (234), "மறியார் கரத்தரன்" (385), "வாமான் கரங்கொண்ட கோடீச் சுரேசர்" (415.)

## திருக்கழுத்து.

12. **நீலகண்டர்:** "கனமுந்துறுகண்டர்" (5), "அல்லணி கண்டத்தர்" (24), "நஞ்சிற்பொலிகண்டர்" (35), "கடுவமர் கண்டத்தர்" (47), "கறையுறுகண்டத்தர்" (68), "நஞ்சமரும் வெங்கந்தரத்தர்" (72), "காரூர் களத்தரன்" (90), "மழைநிகர் கண்டத்தர்" (108), "விடமுறு கண்டத்தர்" (112), "கனத்துக் கிசைகண்டர்" (136), "கார்மேவிய கண்டர்" (201), "நீலுண்ட கண்டத்தர்" (208), "மையுறுகண்டர்" (248), "காரிலகுங்கண்டர்" (256), "கனமுறுங்கண்டர்" (271), "கருந்திருக்கண்டர்" (318, 394), "கனத்தினை நேர்கண்டர்" (320), "அன்னோர்மிடற்றினர்" (338, 392), "விடத்தேசமர்கண்டர்" (354), "மையமர் கண்டர்" (381), "கனம் வந்தனகண்டர்" (397), "வேயிருட் கண்டர்" (413), "நீடல்லெனுங் கண்டர்" (435), "கடுவொன்று கந்தரர்" (437.)

## திருமுகம்.

13. **பஞ்சானனர்:** "வதனமொரைந்துடைக் கோடீச் சுரேசர்" (260, 356.)

## திருவாய்.

14. "செவ்வாயினன்" (432.)

**15. வேதம் சொல்பவர்:** "நவின் மறையார்" (93), "வழங் காரணன்" (119), "சொல்லுஞ் சுருதியர்" (348.)

**16. ஆகமஞ்சொல்பவர்:** "சைவா கமஞ்சொன்ன கோடீச் சுரேசர்" (128), "வேதாகமம்புகல் கோடீச் சுரநம்பர்" (245.)

திருவிழி.

**17. திரிநேத்திரர்:** "விழியொரு மூன்றுடைக் கோடீச் சுர வள்ளல்" (40), "சித்திரபானு சுபானு மதியெனுஞ் சீர்நயனர்" (126), "ஏயுஞ் சுடர்க்கண்ணர்" (316), "ஒன்றிரு மூன்றுகட் கோடீச் சுரவள்ளல்" (376.)

**18. இருசுடர்க்கண்ணர்:** "அசை ஞாயிறு திங்கட் கண்ணன்" (432.)

**19. பாலநேத்திரர்:** "நாட்டங்கொள் பாலத்தர்" (7), "கோவார் நுதலினர்" (111), "விழியுறு பாலத்தர்" (113,129.)

திருச்செவி.

**20. தோடணி காதர்:** "தோடுறுங் காதினர்" (71), "குழை காட்டுங் காதினர்" (82), "தோட்டுவிற்காதரன்" (179.)

திருமுடி.

**21. சடாதரர்:** "கொந்தார் மலர்ச்சடைக் கோடீச்சுரேசர்" (15), "வாருறு வேணியர்" (27), "மின்வார் சடையினர்" (32), "மின்னேய செஞ்சடைக் கோடீச் சுரசித்தர்" (135), "திந்தே மலர்ச்சடைக் கோடீச்சுரேசர்" (147), "சுரும்பார்மலர்ச்சடைக் கோடீச்சுரேசர்" (215), "மின்னை நிகர்சடைக் கோடீச்சுர வள்ளல்" (253), "மின்னன வேணியர்" (273, 289), "தார்வார் தரு சடைக் கோடீச்சுர நம்பர்" (298), "தாரிருந்தார்சடைக் கோடீச் சுரேசர்" (341), "மின்னார் சடையண்ணல்" (344), "சடாடவி விண் மின்னை யொப்பார்" (357), "மின்னிற் கிளர்சடைக் கோடீச்சுர வள்ளல்" (442.)

**22. வில்வதரர்:** "வில்வநறு வல்லரி சூடிய கோடீச்சுரேசர்" (187.)

**23. கொன்றை யணிபவர்:** "கடியேறு கொன்றையர்" (3), "விரையார் கடுக்கையர்" (49), "தேன்வளர் கொன்றையர்" (50), "சுரும்புறு கொன்றையர்" (61), "பொன்னுறு கொன்றை

யர்" (96), "தண்ணார் கடுக்கையர்" (98), "கானியல் கொன்றை யன்" (139), "தேனந்த மார்கொன்றைக் கோடீச்சுரேசர்" (143), "தாதாடு கொன்றையர்" (159), "முடிவனை கொன்றை யர்" (183), "தாரார் கடுக்கையர்" (206, 277), "மருக்கொண்ட கொன்றையர்" (213), "விரையே யிதழியு மத்தமுஞ் சூடுறு வேணி யினார்" (227), "நறியமென் கொன்றையர்" (230), "வனக் கொன்றை சூடரன்" (261) "மருத்தண் கடுக்கையர்" (314), "தேனூட்டு கொன்றையர்" (321), "நெருங்கிதழ்க் கொன்றை யர்" (336), "நனையீன்ற கொன்றையர்" (352), "தேன்வந்த கொன்றையர்" (360), "பொன்மலர்ச் செஞ்சடைக் கோடீச் சுரேசர்" (365), "கான் செய்த கொன்றையர்" (377), "மாம லர்க் கொன்றையர்" (393), "தேங்கமழ் கொன்றையர்" (412), "மருப்பயில் கொன்றையர்" (418), "மென்மலர்க் கொன்றை யர்" (438.)

24. **சந்திரசேகரர்:** "துண்ட மதிபுனை கோடீச்சுரேசர்" (16), "வானேர் மதியணி கோடீச்சுர நித்தர்" (22), "கலை யொன்று வேணியர்" (36), "திங்கட் கொழுந்தணி கோடீச் சுரேசர்" (65, 84), "தெள்ளக் கலைச்சடைக் கோடீச்சுரே சர்" (189), "மேலூர் மதிச்சடைக் கோடீச்சுர வள்ளல்" (221), "இளவெண் மதிபுனை கோடீச்சுரேசர்" (250), "வள்ளம் புலிபுனை கோடீச்சுரேசர்" (302), "வின்மதி சூடரன்" (315), "தெள்ளம் புலிபுனை கோடீச்சுரேசர்" (372), "திங்களங் கண்ணி யர்" (378), "சந்திரசேகரர்" (386), "மதிபுனை வேணியர்" (426), "வானூர் மதிச்சடைக் கோடீச்சுரேசர்" (433.)

25. **கங்காதரர்:** "தெண்ணீர்கொண்ட வேணியர்" (1), "நதி யுறு வார்சடைக் கோடீச்சுரேசர்" (38), "சலங்காத்த வேணி யர்" (64), "நதியிருக்குஞ் சடைக்கோடீச்சுரேசர்" (76), "நதி வார்சடையரன்" (144), "மந்தா கினிச்சடைக் கோடீச் சுரேசர்" (170), "வனந்தங்கு வார்சடைக்கோடீச்சுரேசர்" (172), "வனை யாறுறுசடைக்கோடீச் சுரேசர்" (192), "இலகம் புனைசடைக் கோடீச்சுரவள்ளல்" (199), "வெள்ளங்கொள்வேணியர்" (200), "கங்கைச் சடையினர்" (209), "சீதள நீர்ச்சடைக் கோடீச்சுர நம்பர்" (257), "வேணியிலாற்றினர்" (401), "அப்புறுவேணி யர்" (406), "கங்கைகொள் வேணியர்" (439.)

பெருமை.

26. **பிரஹ்மபூஜ்யர் :** "*மருமலரோன்பணி கோடீச் சுரேசர்*" (73), "*நாலாரணன்பணி கோடீச்சுரேசர்*" (364), "*பதுமாதனன்பணி கோடீச்சுரேசர்*" (390.)

27. **திருமாலாற்போற்றப்படுபவர் :** "*ஒணத்தவன் போற்றவிட்டத்தன்*" (137), "*பொன்னுக மால்புகழ் கோடீச் சுரேசன்*" (203), "*பகலூடிரவழைத்திட்டோன் பரவும் பரமர்*" (246), "*இந்திரன்மால் பரவி வணங்குதென் கோடீச்சுரவள்ளல்*" (389.)

28. **மாலயனுற் போற்றப்படுபவர் :** "*பூவேறி ஞனு மலேயேறி ஞனுமுன் போற்றிசைப்பச், சேவேறி வந்தருள் கோடீச்சுரேசர்*" (110), "*பொன்மா லயன்புகழ்கோடீச் சுரநம்பர்*" (125), "*கருமுத்த மாலயன் விண்ணோர் பணிந்து கலந்துவலம், வருமுத்த மாலேயர்*" (153), "*மாலயன் போற்றிடு கோடீச் சுரநித்தர்*" (317), "*மாலயன் போற்றரன்*" (398.)

29. **பிரமற்கரியவர் :** "*அயனோர்ந்திடாமுடிக் கோடீச்சுர நம்பர்*" (42), "*முன்னரவ்வேதனுங் காணுமுடியினர்*" (95.)

30. **பிரமன்மாற்கரியவர் :** "*அரியா ரணன்முன் னடிமுடி காண்டற் கரியவர்*" (155), "*ஏடவிழ் தாமரைக் கண்ணனுங் கண்ணனுமின்னலுற்றுத், தேடமுன் னின்றவர்*" (270.)

31. **தேவகணத்தாற் பணியப்படுபவர்:** "*பெருவானவர் புகழ் கோடீச் சுரேசர்*" (79), "*தேவா திபர்பணி கோடீச் சுரேசர்*" (104), "*உம்பர்கள் போற்றிடுங் கோடீச் சுரேசர்*" (118), "*மேலும்பர் போற்றரன்*" (123), "*பெருவிண் ணவர்புகழ் கோடீச் சுரேசர்*" (171), "*பொன்னுட் டினர்பணி கோடீச் சுரநம்பர்*" (176), "*சுராசுரர் போற்றரன்*" (251), "*முதல், வருகோ டினம்பணி கோடீச் சுரநம்பர்*" (272), "*செழுவான் பணிசிவன்*" (349), "*வானவர் சூழ்ந்திடு கோடீச் சுரநம்பர்*" (373.)

32. **புகழுடையவர் :** "*தக்கோர்புகழ்....நம்பர்*" (13), "*சகமுழுதும் புகழ் கோடீச் சுரேசர்*" (19), "*வகைபூத்த சீருடைக் கோடீச்சுரநித்தர்*" (20), "*செறிப்புறு வான்புகழ்க் கோடீச் சுரேசர்*" (44), "*படித்தலம் போற்றிடு கோடீச்சுர நம்பர்*" (62), "*படிபுகழ் சீரினர்*" (78), "*மேலோர் புகழ்பரன்*" (107), "*எவ்*

வுலகினுக்கும், வித்தே யெனும்புகழ்க் கோடீச் சுரநித்தர் "(116), "பார்கேட்ட கீர்த்தியர்" (120), "வையம் புகழ்பரன்" (121), "திகைகொண்ட வான்புகழ்க் கோடீச்சுரநித்தர்" (146), "நல்லார் புகழ்சிவன்" (158), "சிறந்தார் புகழ்சிவன்" (161), "நீடும் புகழரன்" (175), "திசையுலவும் புகழ்க் கோடீச்சுர நம்பர்" (181), "நாவலர் போற்றிடுங் கோடீச் சுரேசர்" (214), "பெருமை யுறுபுகழ்க் கோடீச் சுரேசர்" (240), "புலமெய்த் தவர்புகழ் கோடீச்சுரேசர்" (263), "நல்லார் தொழுந்திருக் கோடீச் சுரத்துறை நம்பர்" (301), "இருக்கோவிடும்புகழ்க் கோடீச் சுரவிறை" (327), "புகழிற் பெரிதுறு கோடீச்சுரேசர்" (340), "விண்பெற்ற கீர்த்தியர்" (342), "ஆய்ந்தார் புகழ்ந்திடுங் கோடீச்சுரேசர்" (346), "சொல்லத் தகையரன்" (370), "எள்ளருஞ் சீரரன்" (399), "சேணையுறு புகழ்க் கோடீச்சுரேசர்" (404), "விண் மிசைவாய் புகழ்த்திருக் கோடீச்சுர வண்ணல்" (432.)

33. **ஒப்பிலாதவர்:** "தன்னொத் திடுசிவன்" (138), "தன்னேரி லாவரன்" (229), "தன்னொடு தானுறழ் கோடீச்சுரேசன்" (266), "தம்மை நிகர்பவர்" (408.)

34. **பிற:** "நிருவிகற்பத்தினர்" (109), "நாதாந்தமேவரன்" (124), "ஆருறின் மேலுறை கோடீச்சுர நம்பர்" (149), "தூய சோதி" (228), "பரமுத்தர்" (259), "வேதாந்த மேவிய கோடீச் சுரநித்தர்" (300), "முழுமுதல்" (347.)

இயல்பு.

35. **அன்பருக்கருள்பவர்:** "மெய்யன்பருக்கருள் கோடீச்சுர நித்தர்" (11), "செந்நெறி சேர்த்தருள் கோடீச்சுரேசர்" (56), "எனைத்தேடி யாள்சிவன்" (67), "கருதடியார்கட் குயர்வர நல்குங்கருணையினர்" (75), "நங்கேதந் தீர்த்தருள் கோடீச்சுர நம்பர்" (91), "அன்பர்க் கேர்கொண்ட வின்பருள் கோடீச் சுரவள்ளல்" (102), "மறவினை தீர்த்தருள் கோடீச்சுரேசர்" (132), "எங்கேத மன்ப ரிருக்கினு மாங்குற் றிசைக்குமவர், வெங்கேதந் தீர்த்தருள் கோடீச்சுரேசர்" (163), "நீளா சுகச்செயுங் கோடீச் சுரநம்பர்" (164), "உள்ளன்புணர்ந்தருள் கோடீச்சுரேசர்" (191), "நம் ஏய்துதி கொண்டருள் கோடீச்சுரேசர்" (194),

"காவென் றுரைக்குமுன் வாவென் றழைத்துக் கதியருளும்,தே" (196), "என்னைமுன் னாண்டருள் கோடீச்சுர வள்ளல்" (207), "அடியார்க்கெளியவர்" (238), "இல்லென்றவர்க்கருள் கோடீச்சுர நம்பர்"(284), "தொண்டானவர்க்கருள் கோடீச்சுர நம்பர்" (286), "எனைத்தன் னடிமையெனத்தடுத் தாண்டருளீசர்" (288), "சொரிவள் ளருளரன்" (303), "உன்னிடமே வரன்" (319), "ஓங்கருளீசர்" (337), "வினைத்துயர் தீர்த்திடுங் கோடீச்சுர நம்பர்" (388), "ஊற்று மணலெனத் தன்னடிக் கென்னெஞ் சுருகிடச்செய், கோற்றொடி பாகன்" (402), "அக வினை தீர்த்தருள் கோடீச்சுரேசர்"(407.)

36. **பிற இயல்பு:** "கேட்டையுளான்" (137), "உலகந்தரு சிவன்" (166), "மாயாவினோதர்" (195), "விமலர்" (212), "சீரலர் செங்கையிற் சென்னியும்....கொள் கோடீச்சுர வள்ளல்" (222), "தாயா யுலகிற்குத் தந்தையு மாயருள் சங்கரர்" (223), "உன்னற்கரியவர்" (237), "எட்டார் வடிவத்தர்" (242), "பாருயி ராம்புன றீவளி வானம் பரிதிமதி, ஆருயிராம் பரன்" (275), "வன்னெஞ்சிடத்தகல் கோடீச்சுரேசர்" (322.)

## பராக்கிரமங்கள்.

37. **புராரி:** "பகையைச் சிரித்துச் சிதைத்திட்ட கோடீச்சுரேசர்" (46), "கூடார் புரத்தை நகைத்து வன்னிக்,காடாக்கிய சிவன்" (55), "வணங்கார் புரம்வென்ற கோடீச்சுரேசர்" (211), "செய்நகையா, லரண்டுகளாக்கிறை" (216), "மூப்புரந் தீயுறப் புரி கோடீச்சுரேசர்" (362), "புரத்தை யெரித்தவர்" (403.)

**பூரதர்:** "சகத்திருத்தேரினர்" (148.)

**பாம்பை நாணாக உடையவர்:** "வின்னாண் பணிகொண்ட கோடீச் சுரவள்ளல்" (180), "வின்னாணரவினர்" (296.)

**மேருவில்லினர்:** "வில்லாரசலவிற் கோடீச் சுரேசர்" (17), "மலையேறுகையரன்" (52), "பருவரைவில்லினர்" (75), "மலையாய வில்லினர்" (86), "வாங்கிய மேருவிற் கோடீச் சுரநித்தர்" (145), "நாணவொண் ணாகவிற் கோடீச் சுரேசர்" (156), "ஆடகவில்லினர்" (184), "வில்லரி மேரு வெனமேல் வளைத்தவர்" (187), "மகமேருவில்லினர்" (258), "மலைகண்ட வில்லினர்" (276), "பொன்னகங்கோட்டரன்" (312), "மலைவில்

லரன்" (331), "இளையாடக வில்லர்" (343), "வன்னக வில்லரன்" (358), "ஆடக வில்லரன்" (387), "வின்மால் வரைச் சிவன்" (405), "பொன்னல மேருவிற் கோடீச்சுரேசன்" (427), "மலைவளை கையினர்" (441.)

38. சலந்தராரி: "சலந்தரற் காய்ந்தவர்" (193.)

39. தக்கயாகசங்காரர்: "மகமேலழித்தோர்" (190.)

40. மதனாரி: "வின்மதன் றன்னைவெல் கோடீச்சுர நம்பர்" (33.)

41. கஜசங்காரர்: "வேழ முரித்தவர்" (8), "மறக்குஞ்சர முரி கோடீச்சுரேசர்" (210), "வேழத் துரிபுனை கோடீச்சுரேசர்" (292), "கடமா வுரிபோர்த் தினமுகில் சூழுங் கதிர்ப் பவளத், தடமால் வரைபுரை கோடீச்சுரேசர்" (423.)

42. காலகாலர்: "கூற்றினை வாட்டிய கோடீச்சுரேசர்" (267), "காலனைக் காய்கொண் டுதைத்துயிர் வாட்டிக் கலங்கிடாரு, பாலனைக் காத்தவர்" (434.)

## திருவருட் செயல்கள்.

43. சக்கரப்பிரதர்: "விற்றிகிரி, மாலான வர்க்கருள் கோடிச் சுரேசன்" (400), "சக்கர மாற்கருள் கோடீச் சுரேசர்" (419.)

44. நஞ்சுண்டவர்: "வேலைநஞ்சுண்டவர்" (339.)

45. தட்சிணாமூர்த்தி: "அரிய மறைப்பொருள் தன்னைமுன் னால்வருக் காலடியிற், றெரிய வுணர்த்தரன்" (69), "ஆலார் நிழலுறை கோடீச் சுரவள்ளல்" (80), "பம்பா லடியுறை கோடீச் சுரவள்ளல்" (324), "அறங்காட்டு சொல்லரன்" (409.)

46. நடராசர்: "நடநவிலீசர்" (18), "மன்றாடு மீசர்" (45), "மன்றிடை யாடல்செய் கோடீச்சுரேசர்" (127), "ஆனியி லம்பலத்தாடி" (139), "நடத்தொழி றில்லைப் பொதுவிற்செய் ....பரன்" (287), "மன்றினு ளாடல்செய் கோடீச்சுர நம்பர்" (310), "மன்றினு ளாடல்செய் கோடீசன்" (332.)

47. பாவைபாற்றூதுசென்றவர்: "தூதனாகிப் பரவைதன்பா லன்பிற் சென்று வந்த, பவன்" (228.)

## பிற சிறப்புக்கள்.

48. **முருகக்கடவுள் தந்தையார்:** *“நங்கந்தரத்தர்”* (72), *“கந்தனைத் தந்தவர்”* (77), *“சேய்தந்த நாட்டத்தர்”* (134), *“சேய்தந்த கண்ணினர்”* (235), *“வேலையன்றாதை”* (291), *“கந்தனந்தாதை”* (368), *“கந்தனை யீன்றவர்”* (417.)

49. **திருவாதிரை நாளுக்குரியவர்:** *“செங்கையங் நாளினர்”* (99), *“ஆதிரையார்”* (190.)

50. **பூதப்படையினர்:** *“படையுற்ற பூதத்தர்”* (66.)

51. **ரிஷபவாகனர்:** *“கனவல் விடபத்தர்”* (48), *“திறல் விடையூர்தியர்”* (83), *“பொருந்திய மால்விடைக் கோடீச்சுரேசர்”* (151), *“சேவுற்றுகைப்பவர்”* (152), *“சேவை யுகைப்பவர்”* (157, 371), *“ஊர்திறலேற்றினர்”* (186), *“நரைவிடைப் பாகர்”* (269), *“ஊரும் விடையரன்”* (281), *“விடையூருமத்தர்”* (283), *“சினங்காலு மேற்றரன்”* (313) *“ஆனேற்றினர்”* (374), *“ஒன்னுரை வெல்விடைக் கோடீச்சு ரேசர்”* (416), *“வெற்றிகொண் மால்விடைக் கோடீச் சுரவள்ளல்”* (424), *“செயிர் விடைப் பாகர்”* (429.)

52. **ரிஷபத்துவசர்:** *“சேவார் கொடியினர்”* (6), *“விடையுறுகேதனர்”* (9), *“விடைபட்டகேதனர்”* (41), *“சேவணக் கேதனர்”* (54), *“ஏறூர் கொடியரன்”* (130) *“ஆவணியார் கொடியான்”* (139), *“சேவலர் கேதனர்”* (141), *“கொடியிடையேற்றரன்”* (328), *“தூயவிடை, யேற்றூர் கொடியரன்”* (334.)

53. **திருநீற்றணியர்:** *“வெளிதரு நீற்றரன்”* (23), *“வண்ண வெண் ணீற்றரன்”* (114), *“வெண்பொடி பூசத்தர்”* (190), *“நீறணி மேனியர்”* (231), *“தவளப்பொன் னீற்றரன்”* (239), *“வெண்டிரு நீற்றரன்”* (326), *“வாலிய னீற்றரன்”* (384.)

## வேறு தலங்கள்.

54. *“பூங்கயிலாயத்தர்”* (51), *“திருப்புகலூ ருறைபவர்”* (246), *“சித்தரெனக் கூடலில் விளையாடிய சித்தர்”* (259), *“மதுரை, யச்சங்கத்தே தமிழாய்ந்த....ஆதி”* (285), *“அருங்கயிலாயத்தர்”* (297), *“மருதவனத்துறை....நம்பர்”* (335.)

### பிற திருநாமங்கள்.

55. "*சங்கரர்*" (30), "*அங்கணர்*" (30, 225), "*பரன்*" (119), "*சிவன்*" (133, 196, 228, 295, 333), "*தாணு*" (160), "*நித்தர்*" (162), "*வள்ளல்*" (226), "*பேராயிரத்தரன்*" (265), "*சோதி*" (347), "*விமலர்*" (375), "*தேவர்பிரான்*" (380), "*பேரின்பன்*" (431), "*நிராகுலன்*" (431), "*அற்புதன்*" (432.)

## 3. தொனி.

*இந்நூலில் பலவகைப்பெயர்கள் தொனியில் அமைக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு:*

### தெய்வப்பெயர்.

1. மும்மூர்த்திகள், 115.
2. முத்தேவியர், 244.

### மக்கள்.

3. சம்பந்தர் முதலிய மூவர், 424.
4. மூவேந்தர், 222.
5. பெண்கள் பருவப்பெயர், 99.

### வான்வகை.

6. சோமசூரியாக்கினி, 223.
7. இராசிகள்: *இடபம்*, 48; *கற்கடகம்*, 123; *சிங்கம்*, 123, 237; *கன்னி*, 48, 123, 237; *துலாம்*, 237; *தனு*, 48, 123; *மகரம்*, 48; *கும்பம்*, 48; *மீனம்*, 48.
8. நட்சத்திரம்: *திருவாதிரை*, 190; *பூசம்*, 190; *மகம்*, 190; *ஹஸ்தம்*, 144, 190; *கேட்டை*, 137; *ஓணம்*, 137; *அவிட்டம்*, 137.

### பிறபொருள்கள்.

9. பூங்கொடியும் அதனுறுப்புக்களும்: 3, 20, 102, 151, 238, 304, 420.
10. மரம், 110-11, 249, 345.
11. விலங்கு, 103, 162.
12. உலோகங்கள், 273, 358.
13. ஆபரணங்கள், 306.

28. ஆறு, 173, 439.

29. திணைகள், 195, 236, 335, 339.

30. நாடு : கொங்கு, 225 ; சோழநாடு, ஈழம், கலிங்கம், 292, பொன்னி நாடு, 250.

31. திசை, 259.

32. தலம் : அளகை (தஞ்சை), ஆரூர் (கமலை), ஆலங்குடி, இன்னம்பர், எரண்டமாபுரம், கநகசபை, கருவாய்வனம், கழிப்பாலை, காசி, காஞ்சி, குமரி, கூடல், கேதாரம், கொடுங்குன்றம், சண்பை, சத்திமுத்தம், சாயாவனம், சிவபுரம், சீரங்கம், சுடர்க்கிரி (அருணசலம்), செந்நெறி, திங்களூர், திருக்கோலக்கா (காவணம்), திருச்செங்கோடு, திருத்தணிகை, திருநறையூர், திருப்போரூர், திருமங்கலக்குடி, திருவாலம்பொழில், திருவாவடுதுறை, திருவாணைக்கா, திருவேடகம், திருவேரகம், திருவைகா, திருவையாறு, திருவொற்றியூர், நல்லூர், நள்ளாறு, நாலூர், நெல்லை, பரங்கிரி, பழனம், பூவணம், பெருமணம், மயிலை, மாயூரம் (மயிலாடுதுறை), முதுகுன்றம், முல்லைவாய், வடமலை (வேங்கடம், திருப்பதி), வல்லம், வலஞ்சுழி, விசயமங்கை, 13, 21, 54, 56-8, 61, 74, 79, 101, 113, 138, 173, 177, 184, 195, 221, 250, 270, 310, 327, 337, 430, 435.

## காலம்.

33. வருஷம் : சித்திரபானு, சுபானு, 126 ; துன்மதி, ஆனந்த, துந்துபி, மன்மத, தாது, விஜய, 438.

34. மாதம் : ஆனி, ஆடி, ஆவணி, 139.

35. கிழமை : ஞாயிறு முதல் சனிவரை, 432 ; செவ்வாய், 178.

36. சிறுபொழுது : காலை, உச்சி, மாலை, 339.

37. திதி முதலிய ஐந்து, 144.

## தொழில்.

38. பந்தடிக்கத் செய்தல், 246.

39. உத்தியோகம் : கரணம், மணியம், 43 ; பண்டிதம், 336.

40. சரியை முதலிய நான்கு, 69.

## சாதி.

41. **தட்டாரப் பெண்**, 242; சாலியப்பெண், 384; வாணிகர், நெய்வார், 401.

## 4. பொருளணிகள்.

இந்நூலில் ஆங்காங்கே காணப்படும் பொருளணிகள் பல. அவற்றுட் சில வருமாறு :

1. வேற்றுப்பொருள் வைப்பணி: "தனமுந் தயையுமுள்ளாரில்லை யென்பர்கொல் சார்ந்தவர்க்கே" (5), "மெய்ப்பட் டிடுதனம் பெற்றார்க்கெவ் வின்பமு மேவுறுமே" (10), "ஈதல் கற்றோரென்று மீவர்" (39), "ஏனும் வகை முயன்றான் முடியாததென்" (123), "வெய்ய பசியுடை யோர்க்கொரு போதும் விலக்கிலையே" (248), "ஏரில ராயிடிற் சீருள ராவர்கொ லேழையரே" (256), "மென்குறிப்புச் செய்யாமுன் னோர்வார்க் குரையாற் பயனென்னை" (395), "மிக்கவர் நேச மிடையூ றுறாது" (419.)

2. சிலேடை : 1, 3, 5, 7-8, 10, 12-5, 20, 23, 37,41-2, 46-7,49, 52, 63, 68, 70, 72, 80, 86, 94-5, 100, 102,105, 108, 115-6, 118, 126, 141-2, 147, 162, 172, 197, 217, 224-6, 231, 234-5, 237-8, 243-4, 253, 262, 278, 298, 309, 337, 341, 348, 381, 388-90, 393, 398, 402-4, 418, 423, 427.

பலபொருளொருசொற்களுடைய வெவ்வேறு பொருள்களை வெவ்வேறு இடங்களில் அமைத்து அதற்கேற்பப் பிறசெய்திகளின் தொடர்பைஆசிரியர் தொனி, சிலேடை முதலியவற்றால் அமைத்துக் காட்டுகிறார்.

தலைவியைப் பொன்னென்று கூறியதற்கேற்ப, "பொருள்... உளது" (12) எனவும், "அப்பொனிங்கெளிதின் உறாது" (94) எனவும், "அகத்தே பொன்னை யீட்டிவைத்திங் கிரவதின் மேவிற் பழிப்பாம்" (232) எனவும் வேறு பொருளமையக் கூறுகின்றார்.

பசலை நிறத்தைக் குறிக்கும் பொன் என்னும் பெயரை, "பொன்னிற மால்வரை காட்டிநிற்கின் றனள்" (63), "கொங்காளும் வேடன் படைதனி யேன்பொற் குவைகளெல்லாம்.... சூறையிட் டோடிற்று" (225), "பொன்னிற மேற்று மாலாயினள்" (226) என வேறுபொருளும் தொனிக்கும்படி ஆளுகிறார்.

கிளியின் பெயராகிய சுகமென்பதை, "நீடு சுகம் பயிலும் தகைபூத்த கா" (20), "ஓர் சுகங்கண்டிலனுந் திகழொருவன்" (126) என்ற இடங்களில் இன்பமென்னும் வேறுபொருளும் அமையும்படி கூறுகிறார்.

வண்டுக்குரிய அளியென்னும் பெயரை, அன்பென்னும் வேறு பொருளமைய, "போதமுட னளிவாய்ந்துறை மாதவியே" (14), "அளிகொண்டு நீடு சுகம்பயிலும்" (20), "வீறளியார்களிரங்க" (231) எனவும், அன்பென்னும் பொருள்தரும் இடங்களில் அச் சொல்லை வண்டென்னும் பொருளும் அமையும்படி, "நீயம் மடலே றளியரசே" (116), "மணங்கொண் டெய்தளியார் தமக்கு" (235), "உன்னளி.......அலருண்டது" (238) எனவும் தெரிவிக்கின்றார்.

மயக்கமென்னும் பொருள்தரும் மாலென்னும் சொல்லை, "மாலாயினும்........விடத்தோ டமிர்தம் விளைந்த தொக்கும்" (4), "மாலா மெனக்குன் றிருவாய் மொழியொன்று வந்துரையே" (80), "கடன்மன்னு மாலிற் களித்து நில்லேல்....விடமென்ன வந்து வளைந்துகொள் வாரிந்த வேலையிலே" (105), "மாலாய வுன்னை யுருத்திர ணுமென்பர் மற்றயனே" (115), "பொன்னிற மேற்று மாலாயினள்" (226), "மாலா யென்னின்ப மருவியவர், பொதுமாத ரின்பு முறவகன்றார்" (390) என்னும் இடங்களில் திருமாலென்னும் பொருளுக்கும் ஏற்பச் செய்திகளை அமைக்கின்றார்.

தலைவியை அன்னமென்று குறிக்கும் சில இடங்களில் சோறென்னும் வேறு பொருளும் அச்சொல்லிற்குப் பொருந்துமாறு அமைக்கின்றார்: "உங்கள், அன்னமில்லாவிடிற் சற்று நில்லா தென்ற னுருயிரே" (95), "முன்னிற் சமைவுற்ற வன்னத்தைக் கொண்டிடு" (100), "இந்த மடவன்னமின்றி.......எவ்வாறு நீ வந்தடர்தனுறு, வெய்ய விரகப் பசிபொறுத்தாய்" (381.)

தலைவியை மானென்று கூறும் சில இடங்களில் மானென்னும் விலங்கிற்குமேற்ற சில செய்திகளைப் பொருத்திச் சிலேடையும் தொனியும் அமைக்கின்றார்: "கைத் தழைகாட்டி நங்குல மானைக்கொண் டேகிடச் சார்ந்தனரே" (82), "எம்மான்........நீ குறிக்கும், இரலைதன் வாயொலி கேட்டபின் றன்களிப் பெய்து

வதே" (197), "என் னிளமா னடைந்த வருஞ்சுரத்தில், நீரிருந் தாலிங்கிவ் வாறலே யாதென்ற னெஞ்சகமே" (341), "எங்கள் மானொரு கானேபின் சென்றதுண்டே" (351), "ஓர், மடமானே யென்றனக் கீந்தாயம் மானொடு வாழ்ந்திடநான், திடமார் கலே யிறை யாயினன் ஞேகவின் சேயிழையே" (423.)

இங்ஙனமே ஒருபொருட் பன்மொழிகளே வேறுபொருள்பட அமைத்துச் சொல்லவேண்டிய செய்தியைச் சொல்லுகின்றார்:

"தோழியர் பாங்கிய ராத்தனி போந்துநின்று" (14), "பணிபெறு பூணினர்" (25), "தேமொழியைத் தந்தார்கண் மாமனு மாமியு மாகுக" (37), "அரி மாலாகி நிற்பன் மலரோன் பிரம மருவிடும்" (59), "மழைமத வேழங் கயமா முழையு மறி தருமே" (87), "ஒண்டளிரைக், குழையென மேலெவர் சாற்றி னரோ....குழைவுறுகின்றது" (108), "முறியிது....குழையாம்" (131), "போதா மதன்கணே யாருயிராந் தென்றல்" (159), "நமக்குயி ராவியி லீந்த முதல்வர்" (180), "கிள்ளே யினங்கள் சுகமா யிருந்தன கேகயமென், உள்ள மருளமுற் ஞேகைய தாயங் குறைவுற்றதே" (200), "பண்ணிசைவரி" (211), "திங்களொ ரம்புலி கோழியொர் வாரணஞ் சேண்பொழிலில், தங்குங் குடிஞை யோர் கோட்டான்" (220), "செல்லென் றுனேயறிந் தோர் சொல்ல நீமுன்னர்ச் செல்லுகின்றாய்..........முகிலே" (284), "யானே பலதந்தி யாயினும்" (315), "சிலேயான வெற்பினர்" (359), "தேமாங் கனியார்ந்து சுகமா விருந்திடு வண்கிளி" (412.)

3. தற்குறிப்பேற்றம், 11, 23, 36, 150, 190, 193, 264.

இயல்பாக நிகழுஞ்செய்தியை வேறு பொருள்பட அமைத்துத் தம் குறிப்பை ஏற்றிக் கூறுவார்: "உன் கண்ணேக்கி மீன் பயங் கொண்டலேயும், ஒளியுறு மின்னுன் னிடைநோக்கி வானி லொளித்திருக்கும், களியுறு மன்னம் பறந்திடு நின்னடை காண் பொழுதே" (23), "எண்பயி ஞுக மடந்தையர் தாழ்ந்தவ ரேத்தி மையோர், நண்புறு மாதர்க ளந்தரத் தோர்மண்ணி னண்ணில ரே" (190), "நலந்தரு மீதுன் னகையெழி ஞேக்கிமுன் ஞுணமுற்று, மலர்ந்திடல் போலுள் ளுடைந்தாங்கு நின்றது வாய்திறந் தே" (193.)

4. விரோதவணி, 3.

5. சொற்பின் வருநிலை, 45, 78, 125, 149, 252, 285-6, 338.

6. தொடர்பின்மையணி, 306.

7. பரியாயவணி, 140-41.

8. பரிவருத்தனையணி, 33.

9. ஒட்டணி, 183, 185.

10. விலக்கணி, 258.

11. இடைநிலைத் தீவகம், 117.

12. இலேசவணி, 237.

13. கருத்துடை யடைகோளியணி, 417.

14. உருவகம்.

15. நிரனிறை, 54, 62, 198, 317, 380, 443.

## 5. சொல்லணிகள்.

1. மடக்கு.

2. எழுத்துச் சுருக்கம், 205.

3. எழுத்து வருத்தனம், 205.

4. எழுத்தலங்காரம், 216, 366-7.

5. நடுவெழுத்தலங்காரம், 106.

## 6. யாப்பு நயம்.

1. யமகம், 182.

2. திரிபு, 72, 125, 153, 160, 163-4, 177, 187, 199, 252, 269, 272, 410, 431.

3. வழியெதுகை, 55, 124, 338.

4. முற்றுமோனை, 189, 289.

5. முரண், 9, 132, 259-60, 319, 344, 347, 354.

6. பூட்டுவிற் பொருள்கோள், 46, 295.

## 7. உலக வழக்கு.

இதிற் பல வழக்குத் தொடர்களை இடையிடையே அமைத்துள்ளார்: இடம்பொருளேவலர், 12 ; வெட்டுண்டது, 215 ; பயல், 219 ; அராசங்கரா, 251 ; தேரோடுகின்ற தெருவோடலைவன், 293 ; ஆட்டும் பாட்டும், 307 ; ஒவ்வோரிலையாகத் தேடுதல், 359.

## 8. வழக்கங்கள்.

தழை காட்டி மானைப் பிடித்தல், 82 ; மாதுளங்காயைத் தந்திரத்தாற் பழுக்கச்செய்தல், 181 ; அடிமையோலை கொள்ளல், 234 ; அஞ்சனம் பார்த்தல், 299.

## 9. பழமொழிகள்.

புண்ணிலே கோலிட்டது, 6 ; நம்பினவரை நட்டாற்றில் விட்டாய், 97 ; கிணற்றுத்தண்ணீரை வெள்ளங் கொண்டு போகுமோ ? 191 ; வெள்ளம் வருமுன் அணைகோலவேண்டும், 372.



# கோடீச்சுரக் கோவைக் கிளவிகளின் அகராதி.

[எண் - பக்க எண்.]





# கோடீச்சுரக் கோவைத் துறையகராதி.

[எண்-பக்க எண்.]

கணபதி துணை.

# தேவாரம்.

## திருவலஞ்சுழியும் கொட்டையூரும்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய்
கல்லா னிழற்கீ ழிருந்தான் கண்டாய்
பருமணி மாநாகம் பூண்டான் கண்டாய்
பவழக்குன் றன்ன பரமன் கண்டாய்
வருமணிநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் வரதன் கண்டாய்
குருமணிபோ லழகமருங் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (க)

கலைக்கன்று தங்கு கரத்தான் கண்டாய்
கலைபயில்வோர் ஞானக்க ணுளன் கண்டாய்
அலைக்கங்கை செஞ்சடைமே லேற்றான் கண்டாய்
அண்ட கபாலத்தப் பாலான் கண்டாய்
மலைப்பண்டங் கொண்டு வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
குலைத்தெங்கஞ் சோலைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (உ)

செந்தா மரைப்போ தணிந்தான் கண்டாய்
சிவன்கண்டாய் தேவர் பெருமான் கண்டாய்
பந்தாடு மெல்விரலாள் பாகன் கண்டாய்
பாலோடு நெய்தயிர்தே னாடி கண்டாய்

65.

மந்தார முந்தி வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியின் மன்னு மணாளன் கண்டாய்
கொந்தார் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (௩)

பொடியாடு மேனிப் புனிதன் கண்டாய்
புட்பாகற் காழி கொடுத்தான் கண்டாய்
இடியார் கடுமுழக்கே றார்ந்தான் கண்டாய்
எண்டிசைக்கும் விளக்காகி நின்றான் கண்டாய்
மடலார் திரைபுரளுங் காவிரிவாய்
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
கொடியாடு நெடுமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (௪)

அக்கரவ மரைக்கசைத்த வம்மான் கண்டாய்
அருமறைக ளாறங்க மானான் கண்டாய்
தக்கனது பெருவேள்வி தகர்த்தான் கண்டாய்
சதாசிவன்காண் சலந்தரனைப் பிளந்தான் கண்டாய்
மைக்கொண்மயிற் றழைகொண்டு வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியான் கண்டாய் மழுவன் கண்டாய்
கொக்கமரும் வயல்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (௫)

சண்டனைநல் லண்டர்தொழச் செய்தான் கண்டாய்
சதாசிவன் கண்டாய்சங் கரன்றான் கண்டாய்
தொண்டர்பலர் தொழுதேத்துங் கழலான் கண்டாய்
சுடரொளியாய்த் தொடர்வரிதாய் நின்றான் கண்டாய்
மண்டுபுனற் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிவர் தம்முடைய மருந்து கண்டாய்
கொண்டறவழ் கொடிமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (௬)

அணவரியான் கண்டா யமலன் கண்டாய்
அவிநாசி கண்டாயண் டத்தான் கண்டாய்
பணமணி மாநாக முடையான் கண்டாய்
பண்டரங்கன் கண்டாய் பகவன் கண்டாய்

அல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதவற்கு நான்முகற்கும் வரதன் கண்டாய்
குணமுடைநல் லடியார்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (எ)

விரைகமழு மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய்
வேதங்க டொழநின்ற நாதன் கண்டாய்
அரையதனிற் புள்ளியத ளுடையான் கண்டாய்
அழலாடி கண்டா யழகன் கண்டாய்
வருதிரைநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் கண்டாய்
குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (அ)

தளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய்
தசரதன்றன் மகனசைவு தவிர்த்தான் கண்டாய்
இளம்பிறையு முதிர்சடைமேல் வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையு மானான் கண்டாய்
வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிக டொழுதெழுபொற் கழலான் கண்டாய்
குளங்கிளர்செங் குவளைகிளர் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (கூ)

விண்டார் புரமூன் றெரித்தான் கண்டாய்
விலங்கலில்வல் லரக்கனுட லடர்த்தான் கண்டாய்
தண்டா மரையானு மாலுந் தேடத்
தழற்பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய்
வண்டார்பூஞ் சோலைவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் மறையோ டங்கம்
கொண்டாடு வேதியர்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## அடைவு திருத்தாண்டகம், அ.

திருச்சிற்றம்பலம்.

நாடகமா டிளநந்தி கேச்சுரமா காளேச்
 சுரநாகேச் சுரநாக ளேச்சுரநன் கான
கோடீச் சுரங்கொண்டீச் சுரந்திண் டீச்
 சுரங்குக்கு டேச்சுரமக் கீச்சுரங்கூ றுங்கால்
ஆடகேச் சுரமகத்தீச் சுரமயனீச் சுரமத்
 தீச்சுரஞ்சித் தீச்சுர மந்தண் கானல்
ஏடுதிரை யிராமேச்சுர மென்றென் றேத்தி
 இறைவனுறை சுரம்பலவு மேத்து வோமே.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

# க. கோடீச்சுரக்கோவை.

## காப்பு.

### கோடி விநாயகர்.

**வெண்பா.**

கோடீச் சுரனுதவு கோடி விநாயகவிக்
கோடீச் சுரக்கோவை கூறுவிப்பாய் - நாடிவந்து
வஞ்சக மாதி மருவுமெளி யேன்வலிய
நெஞ்சகத்தே நீயொருசார் நின்று.

(குறிப்புரை.) எளியேன் வலிய நெஞ்சகம் : பொருள் முரண். விநாயக, நாடி வந்து நின்று கூறுவிப்பாய்.

## நூல்.

### கைக்கிளை.

[கைக்கிளை - ஒருதலைக் காமம். அஃது ஆண்பாற் கைக்கிளை பெண்பாற் கைக்கிளையென இருவகைப்படும்; அவற்றுள் இஃது ஆண்பாற் கைக்கிளை.]

### காட்சி.

(தலைவன் தலைவியைக் காண்டல்.)

**கட்டளைக் கலித்துறை.**

1. சீர்கொண்ட தாமரைப் போதைந் திரண்டு செழுமுகைநல்
ஏர்கொண்ட நீல மிரண்டோர் குமுத மிவற்றொடுதெண்
ணீர்கொண்ட வேணியர் கோடீச்சு ரேசர் நெடுவரைமேற்
கார்கொண்ட காவி னிடையிலொ ராவிநங் கண்ணுற்றதே.

(கு - உரை.) போது - மலர். முகை - அரும்பு : தாமரைப்போதை அடுத்துச் சொன்னமையால் முகையென்றது தாமரையரும்பையென்று

கொள்க. ஏர் - அழகு. நீலம் - கருங்குவளைமலர். குமுதம் - செவ்வல்லி மலர். கார் - கரிய நிறம், மேகம். கா - சோலை. இடையில் - நடுவில். ஓர் ஆவி - ஒரு குளம்.

கோடீச்சுரேசர்வரைமேல் காவினிடையில் ஓர் ஆவி ஐந்து தாமரை மலர் முதலியவற்றோடு நம்கண்ணுற்றதென்க.

ஐந்தாமரையென்றது தலைவியின் முகம் ஒன்று கைகள் இரண்டு, அடிகளிரண்டு என்பவற்றையும், இரண்டு முகையென்றது நகில்களையும் இரண்டு நீலமென்றது கண்களையும், ஓர் குமுதமென்றது வாயையும் குறிப்பிக்கும்.

குளம் என்றதற்கேற்ப நீரில்தோன்றிய சாதியாகிய தாமரை மலர் முதலியன கூறப்பெற்றன; இங்ஙனம் செய்யுளிற் கூறுதல் மரபின்பாற் படுமென்பர்; தொல். செய். சூ. 80, பேர். இடை இல் - இடையென்னும் உறுப்பில்லாதவென்பது ஒரு நயம். ஆவியென்றான், அவ்விம்மித வடிவம் தனக்கு இன்பமளித்து உயிர்போலத் தோன்றியதாதலின்.

ஐயம்.

(இம்மாது தெய்வமகளோ மானிடமகளோவென்று தலைவன் ஐயுற்றுக் கூறுதல்.)

2. பாரோ வலாரியின் பாருல கோகஞ்சப் பார்வையண்ணல்
ஊரோ விதிதன் பதியோ மதியோ டொளிரும்விண்ணில்
தேரோதை சூழ்தரு கோடீச் சுரநித்தர் திண்சிலம்பின்
ஏரோர் வடிவெடுத் தன்னவின் னாளோ டிலங்கிடமே.

(சூ - உரை.) பாரோ - பூமியோ? வலாரி இன்பு ஆர் உலகோ சுவர்க்கமோ? வலாரி - இந்திரன். கஞ்சப்பார்வை அண்ணல் - திருமால்; அவர் ஊர் திருவைகுந்தம். விதி - பிரமன். மதி - சந்திரன் விண்ணில் - வானம்போல. ஓதை - முழக்கம். சிலம்பில் - மலையில். ஏர் - அழகு. எடுத்தன்ன - எடுத்தாற்போன்ற. இன்னாள் - இந்த மங்கை, விண்போல இலங்கும் இடம். மதியோடுகூடிய விண் விளங்குதல்போல இவளோடு கூடிய இடம் விளங்குமென்பது தலைவன் கருத்து.

இதன்முதலடியில் பாரென்னும் மொழி மும்முறை மடக்கிவந்தது. தலைவிக்கு மதி உவமை: கோடீச். 196; "தரையிற், பிறந்த மதியம்" திருவிடைமருதூருலா, 430 - 31.

தெளிதல்.

(கால் நிலந்தோய்தல் முதலியவற்றால் இம்மாது மானிட மகளென்று தலைவன் துணிதல்.)

3. கடியேறு கொன்றையர் கோடீச் சுரவெற்பிற் கண்டதொரு
கொடியே யிதனடிக் கொண்டது பூமுகங் கொண்டதுவேர்

முடியே றியவண் டுருநோக்கி யையுறன் மூன்னுமிந்தப்
படியே யிதனிலை யென்றுநெஞ் சேயிவை பன்னிடுமே.

(கு - உரை.) கடி - நறுமணம். கண்டது - நம்மாற் காணப்பட்டது. ஒருகொடியே - ஒரு பூங்கொடியானது. அடி - பாதம், கீழ்ப்பாகம். பூ - பூமி, மலர். வேர் - வேர்வை, கொடியின் வேர். வண்டு ஏறிய - வண்டுகள் ஏறின; ஏறிய: முற்று. உருநோக்கி - உருவத்தைப் பார்த்து. ஐயுறல்=ஐயம் உறல் - சந்தேகமடையாதே; ஐயம்: விகாரம். மூன்னும் - கருதுகின்ற. இந்தப்படியே இதன் நிலை - இந்தப் பூமியே இந்தக் கொடியினது இருப்பிடம். இவை - மேற்கூறிய அடி முதலியவை. பன்னிடும் - விளங்கச் சொல்லும்.

தெய்வப்பெண்ணோவென ஐயமுற்ற தலைவனுக்குத் தலைவியின் பாதம் நிலத்தூறுதலும் முகத்திலுள்ள வேர்வையும் தலையிலணிந்த மலரில் மொய்த்த வண்டுகளும் அவள் மானிடப்பெண்ணென்பதைப் புலப்படுத்தின. தெய்வப்பெண்ணயிற் பாதங்கள் பூமியிற்படா; வேர்வை உண்டாகாது; அணிந்த மலரில் வண்டுகள் மொய்யா.

ஒரு பூங்கொடிக்கு இயல்பாக வேர் கீழும் பூ மேலுமாக இருப்பதற்கு மாறாக இக்கொடிக்குப் பூவானது கீழும் வேர் மேலுமாக இருக்கின்றன வென்பது மற்றொரு பொருள்.

இது சிலேடையொடு பொருந்திய விரோதவணி.

## குறிப்பறிதல்.

(தலைவிக்குத் தன்பால் வேட்கை யுண்டென்று அவளுடைய பார்வைக் குறிப்பைக்கொண்டு தலைவன் அறிந்துகொள்ளுதல்.)

4. பாலார் மொழிபங்கர் கோடீச் சுரவெற்பின் பாலுறுநாம்
மாலாயி னுமந்த மால்சோர்ந்து முன்பின் மகிழ்வுபெற
மேலாழி தன்னுள் விடத்தோ டமிர்தம் விளைந்ததொக்கும்
நூலா மிடையினள் வேல்விழித் தோன்றிய நோக்கங்களே.

(கு - உரை.) பாலார்மொழி - பாலையொத்த சொல்லையுடைய உமாதேவியார். மாலாயினும் - மயக்கத்தையுடையேமாயினேம்; திருமாலாயினேம். மால் முன் சோர்ந்து.

நோக்கம், பொதுநோக்கம் சிறப்புநோக்கமென இருவகைப்படும். பொதுநோக்கத்துக்கு விடமும் சிறப்பு நோக்கத்துக்கு அமுதமும் முறையே உவமை. கண்ணிற்குப் பாற்கடல் உவமை. திருமால் முன்பு சோரும்படி பாற்கடலில் உண்டாகிய விடத்தையும் அவர் மகிழும்படி உண்டாகிய அமுதத்தையும் நோக்கங்கள் ஒக்கும்.

## இயற்கைப் புணர்ச்சி.

[இயற்கை - ஊழ். ஊழ்வினை கூட்டுவிக்கக் கூடும் புணர்ச்சி; இது தெய்வப்புணர்ச்சியெனவும் கூறப்படும்.]

### இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

(தன் குறைகளைச் சொல்லித் தலைவியின்பின்னே இரந்து நிற்றற்குத் தலைவன் எண்ணுதல்.)

5. கனமுந் துறுகண்டர் கோடீச் சுரவெற்பிற் கண்டிடுமின்
இனமுந் துவளிடை யாளின்று நல்குநம் மின்னலெல்லாம்
மனமுந் துரைக்கின் மனமே வருதி வளருமிக்க
தனமுந் தையுமுள் ளாரில்லை யென்பர்கொல் சார்ந்தவர்க்கே.

(கு - உரை.) கனம் - மேகம். மின் இனமும்: உம்மை உயர்வு சிறப்பு. நல்கும் - நல்குவாள். இன்னல் எல்லாம் - துன்பமெல்லாவற்றையும். மன முந்துரைக்கின்; மன்ன - நிலைபெற; தொகுத்தல்விகாரம். உரைக்கின் இடையாள் நல்குமென்க. தனம் - நகில், திரவியம்; கோடீச்.
15. உரைக்கவருதியென ஒரு சொல் வருவிக்க.
இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பணி.

### இரந்துபின்னிலைநிற்றல்.

(இரந்து தலைவியின்பின்னே நின்ற தலைவன் வழிபாடுசெய்தற்கு முயன்று நிலை நிற்றல்.)

6. சேவார் கொடியினர் கோடீ ச ரேசர் சிலம்பிலென்மெய்ப்
பூவாளி தைத்தபுண் ணின் கணின் கண்ணெனும் பூமருவும்
ஏவா வதனையு மேவிப் பராமுக மேவியிங்ஙன்
பாவாய்வண் பாவாய் கிலர்போல நிற்றல்பண் பாவுனக்கே.

(கு - உரை.) சே - இடபம். என்மெய் - எனது உடம்பில். பூவாளி - மன்மதனுடைய மலரம்பு. புண்ணின்கண் நின் கண். பூமருவும் - பொலிவு மருவின. கண் என்னும் ஏ ஆவதனையும் - கண்ணாகிய பூம்பாணத்தையும். ஏவி - எய்து. பராமுகம் மேவி - பராமுகத்தை அடைந்து. பாவாய் - பாவையே. பா ஆய்கிலர் போல - செய்யுளை ஆராயாதவர்கள் பிறர் துயரங் கண்டு வறிதே நிற்றல்போல.

நின்கண்ணென்பதும் பாவாயென்பதும் இரட்டித்து வந்திருத்தலும், ஏவாவதனையும் ஏவி யென்பதும் இதிலுள்ள நயங்கள்.

புண்ணின்கண் ஏவாவதனையும் ஏவியென்றது புண்ணிலே கோலிட்டதென்னும் பழமொழியை யுட்கொண்டு நின்றது.

## முன்னிலையாக்கல்.

(தலைவியைத் தனக்கு முற்படுத்தித் தலைவன் கூறுதல்.)

7. நாட்டங்கொள் பாலத்தர் கோடச் சுரமன்ன நன்னுதலாய்
கூட்டங்கொள் பாங்கியர் தம்மைவிட் டேண்டுக் குறுகிமதன்
வேட்டஞ் செயுமிடத் தேதனி நின்றமை தென் மேன்மையொடு
தோட்டங்கொள் காவலர்க் காவனுற் றேவிது சொல்லுகவே.

(கு - உரை.) நாட்டம் - கண். பாலம் - நெற்றி. மதன் - மன்மதன். வேட்டஞ்செயும் - வேட்டையாடும்; வேட்டு அஞ்சு எயும் -விரும்பி ஐந்து பாணங்களை எய்கின்ற வென்பது மற்றொரு பொருள். தோடு அம் கொள் கா அலர்க்கு - இதழின் அழகைக்கொண்ட சோலையிலுள்ள மலர்களுக்கு; காவலரென்பதைப் பின்னும் கூறுவர்; கோடச். 8.

தோட்டங்கொள் காவென்பதும், காவலர்க் காவல் என்பதும் இதன்பால் அமைந்துள்ள நயங்கள்.

## வண்டோச்சிமருங்கணைதல்.

(நாணினால் வருந்தும் தலைவியின் பக்கத்தையடைந்த தலைவன் அவள் கூந்தலின்மாலையில் மொய்த்திருக்கும் வண்டுகளை ஓட்டுவான்போல நெருங்குதல்; மருங்கு - இடையுமாம்.)

8. வேழ முரித்தவர் கோடச் சுரநித்தர் வெற்பிலிந்த
ஏழை யிடத்துப் பலகீதம் பாடி யினைத்திவடன்
கூழை விரும்பி யுறைவண்டு காள்கணங் கொண்டுசென்று
சூழுமக் காவலர் நல்கமு தார்ந்து சுகம்பெறவே.

(கு - உரை.) வேழம் - யானையை. ஏழை - தலைவி. கீதம் - இசைப்பாட்டு. கூழை - கூந்தலை. கணம் - கூட்டம். காவலர் - சோலையிலுள்ள மலர். அமுது ஆர்ந்து - தேனையுண்டு. சூழும் - சூழ்ந்துகொள்ளுங்கள்; முன்னிலைப்பன்மை ஏவல். சுகம்பெறச் சூழுமென்க.

இதில் ஏழையினிடத்துக் கீதம்பாடிக் கூழை விரும்பி யுறையும் வண்டுகளே, காவலரை அடைந்து அங்கே கீதம்பாடி அமுதார்ந்து சுகம் பெற அவர்களைச் சூழுமினென்னும் ஒரு பொருள் தொனிக்கின்றது.

## இதுவுமது.

9. விடையுறு கேதனர் கோடச் சுரவெற்பின் மேவுமன்ன
நடையின ளுங்களை யென்கண் ணெனமுன் னவின்றிடுதல்
புடையுறு நானறி வேன்வண்டர் நீவிரிப் போதிவடன்
இடையை முறிக்கத் தலைப்பட் டிருக்கின்றி ரென்னிதுவே.

(கு - உரை.) கேதனர் - கொடியையுடையவர். அன்னநடையினள் - தலைவி. என்கண்ணென்றது தலைவியின்கூற்றைத் தலைவன் கொண்டு கூறியது. புடை - பக்கத்தில். வண்டர் - வண்டுகளே. தலைப்பட்டு - கூந்தலிற் சேர்ந்து. என் இது - இச்செயல் யாது ?

கீழ்மக்கள் தங்களைக் கண்போல் எண்ணியிருப்பவர்களுக்குத் தீங்கு செய்யும் இயல்புடையாரென்பது இதனாற் போந்த குறிப்புப் பொருள்; வண்டர் - கீழ்மக்கள். தலைப்பட்டிருக்கின்றிர் - தொடங்குகின்றீர்.

வண்டு மகளிர் கண்ணுக்கு உவமை கூறப்படும்; "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை யெங்கண்ணின், வண்ண நினக்குரிய வண்ணமே — கண்ணலமந், தாடு தொழிலு நினதேயங் கோடரியும், கூடியநின் னுமமெனக் கூறுவதே", "அன்னேநின், நன்னுருவம் போலுந் தடங்கண்" ஆனந்த. வண்டு. 376 - 7, 383 - 4.

## மெய்தொட்டுப்பயிறல்.

(தலைவியின் மெய்யைத் தீண்டித் தலைவன் நெருங்குதல்.)

10. நெய்ப்பட்ட சூலத்தர் கோடிச் சரவெற்பி னீடுசரத்
தைப்பட்ட மாரனெய் தாலுமெய் தானரந் தையடையோம்
கைப்பட்ட மாதன மாதன மீங்குநங் கைப்பட்டதால்
மெய்ப்பட் டிடுதனம் பெற்றூர்க்கெவ் வின்பமு மேவுறுமே.

(கு - உரை.) சரத்தை - பாணத்தை. பட்டமாரன் - இறந்துபோன மன்மதன். எய்தாலும் அரந்தை யடையோம்; அரந்தை - துன்பம்; மெய்தான் - இஃது உண்மையே; மெய் - உடம்புமாம். கைப்பு அட்ட - வெறுப்பை நீக்கிய. மாது அன்னம் - தலைவியாகிய அன்னத்தினுடைய. மா தனம் - பெரிய நகில்கள். மெய்ப்பட்டிடு தனம் - உண்மையான பொருளை; உடம்பிலெழுந்த நகிலை யென்பது மற்றொரு பொருள். இனி நாம் இன்பத்தை யடையலாமென்பது குறிப்பு.

மிக்க பொருளைப் பெற்றவன் எல்லா இன்பத்தையும் அடைவானென்பது, "வென்றி யாக்கலு மேதக வாக்கலும், குன்றி னார்களைக் குன்றென வாக்கலும், அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும், பொன்றுஞ் சாகத்தி னய்பொருள் செய்புமே", "பொன்னி னாகும் பொருபடை யப்படை, தன்னி னாகுந் தரணி தரணியிற், பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள், துன்னுங் காலைத்துன் னாதன வில்லையே" (சீவக. 1922 - 3) என்பவற்றால் அறியலாகும்.

இது சிலேடையொடு பொருந்திய வேற்றுப்பொருள்வைப்பணி. இரண்டாமடியிலும் மூன்றாமடியிலும் மடக்கு அமைந்துள்ளது.

## பொய்பாராட்டல்.

(தலைவியின் அழகைத் தலைவன் புனைந்து கூறல்.)

11. மெய்யன் பருக்கருள் கோடீச் சுரநித்தர் வெற்பணங்கே
பொய்யன் றிவைநின் னிடைக்கிணை யாமெனப் போந்துசிலர்
கைஃபி னடிபட் டரற்றுந் துடியதைக் கண்டுவெம்போர்
செய்யுங் கணைமதன் கண்மறை வாகித் திரிந்திடுமே.

(கு - உரை.) இவை - யான் சொல்லுபவை. பொய் அன்று : அன்று பன்மைப்பொருளையும் தருமென்பர் நேமிநாதமுடையார் ; சூ. 45. இணை - ஒப்பு. அரற்றும் - முழங்கும். துடி - உடுக்கை. துடி அரற்று மென்க. அதைக்கண்டு - துடி அடிபட்டு அரற்றுவதைக் கண்டு. திரிந்திடும் - திரிந்திடுவான்.

துடியின் இடையையும் மன்மதனையும் மகளிர் இடைக்கு உவமை கூறுவது மரபாதலின் இங்கே கூறினார் ; "இடையாய் மதன்" (93) என்பர் பின். துடி அடிபட்டு அரற்றும் : "இடை, சாயலுறு நற்றுடியை வாயிலறை வித்திடுமோர் சிங்கமே" சா. ௩௰.

துடி அடிபடற்கும் மன்மதன் உருவிழந்ததற்கும் வேறு காரணம் கற்பித்தலின் இது தற்குறிப்பேற்றவணி ; "வடிநெடுங் கண்ணி யிடைக் குநே ரென்று வந்திடு நிமித்திறு லின்னும், துடியினம் பலர்பா லடிபடும் ......மதவே ளுடல் பணி......சிறப்பில" திருவிடை. வரகுண. 79.

## இடம்பெற்றுத்தழாஅல்.

(உரிய இடத்தைப் பெற்றுத் தழுவுதலைத் தலைவன் விரும்பிக் கூறுதல் ; தழாஅல் - தழுவுதல்.)

12. படந்திகழ் பூண்புனை கோடீச் சுரவள்ளல் பைம்பொன்வெற்பில்
மடந்தைநற் பொன்னெனு நீயுந்தண் சோலை வளநிழலும்
தடம்பெறு மாரன் கணையுமிங் கேய்ந்திடச் சார்ந்தனன்யான்
இடம்பொரு ளேவல ரெல்லா முளவெனக் கென்குறையே.

(கு - உரை.) படந்திகழ் பூண் - பாம்பாகிய ஆபரணம். மடந்தை: அண்மைவிளி. பொன் - திருமகள், பொருள். எய்ந்திட - பொருந்த இடமென்றது சோலை நிழலை. பொருளென்றது தலைவியை. ஏவலர் - பாணமாகிய மலர், ஏவல்செய்பவர் ; "ஏவல ரின்றி மதனேங்கச் செய்குவ மேந்திழையே" (141) என்பர்பின். என் குறை - குறையில்லை.

இடம்பொருளேவலுள்ளவர்களுக்குக் குறையொன்றுமில்லை யென்பது குறிப்புப் பொருள்.

இதுவுமது.

13. தக்கோர் புகழ்சண்பைக் கோடீச் சுரநம்பர் தம்மகனார்க்
கக்கோலக் காவிற்றம் பொற்றாளந் தாமீந் தடிமையினேற்
கிக்கோலக் காவிலுன் பொற்றாள நீநல் கிடவரிகள்
மிக்கோதை செய்குழன் மாதேயின் றுன்னை விடுத்தனரே.

(கு - உரை.) சண்பை - சீகாழி; அதனை உடைய நம்பர் - சிவபெருமான்; எழுவாய். தம்மகனார்க்கு - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு. கோலக்காவில் - திருக்கோலக்கா வென்னுந் திருப்பதியில். இக்கோலக்காவில் - இந்த அழகிய சோலையில். உன் பொற்றாளமென்றது நகில்களை; நகில்களுக்குத் தாளம் உவமை: அழகர்கலம்பகம், 50; பிரபு. மாயையூசை. 50. வரிகள் - வண்டுகள். ஓதை - ஓசை.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரைக் கூறியதற்கேற்பச் சண்பை கூறப்பட்டது. கோடீச்சுரேசர் அக்கோலக்காவில் ஒருவருக்குப் பொற்றாளங்களைத் தாமே கொடுத்து இக்கோலக்காவில் எனக்கு அத்தாளங்களைக் கொடுத்தற்கு உம்மை விடுத்தனரெனத் தலைவியை நோக்கித் தலைவன் கூறினான்.

திருக்கோலக்காவென்பதை இரண்டு பொருள்பட அமைத்தது இதிலுள்ள நயம். தாளமென்னும் இசைக்கருவியைக் கூறியதற்கேற்ப, வரிகள் மிக்கோதைசெய்குழல் மாதேயென்பதற்கு இசைப்பாட்டுக்களை மிகமுழங்கும் வேய்ங்குழலை யுடையவளேயென வேறு பொருள் படுதலும் ஒருநயம்.

வழிபாடுமறுத்தல்.

(தலைவன்செய்யும் வழிபாட்டை நாணினால் மறுத்த தலைவி
தான் மறைந்துகொள்ளுதற் பொருட்டு ஒருமாதவிக்
கொடியைச் சார்தல்.)

14. வலிவுறு சூற்படைக் கோடீச்சு ரேசர் மணிவரைமேற்
பொலிவுறு தோழியர் பாங்கிய ராத்தனிப் போந்துநின்று
மெலிவுறு மென்றனைக் காத்தருள் சாந்த மிசைக்கொடுதண்
மலிவுறு போத முடனளி வாய்ந்துறை மாதவியே.

(கு - உரை) வலிவு - வன்மை. சூற்படை - சூலாயுதம். பாங்கியரா - பக்கத்திற் சென்றவராக. பாங்கியர் பூக்கள்கொய்தற்குத் தலைவியைப் பிரிந்து தனித்தனியே வேறுவேறிடங்களுக்குச் செல்வர். காத்தருள் - காத்தருள்வாயாக. சாந்தம் - சந்தனமரம், பொறுமை. கொடி மரத்தின்

மேற்படர்தல் இயல்பு. தண் மலிவுறு - தண்மை மிக்க. போதமுடன்: போது அம் உடன் - பூவின் அழகோடு; போதமுடன் - அறிவோடு. அளி-வண்டு, அருள். மாதவி - குருக்கத்தி, பெரியதவத்தையுடையவள்.

மாதவியே ! என்றனைக்காத்தருள்.

தோழியர் பாங்கியராவென்பது ஒரு நயம்.

பொறுமை, அறிவு, அருளென்பவற்றையுடைய தவமகள் மெலிவுறுவோரைப் பாதுகாத்தல் இயல்பென்பது இதன்பால் தொனிக்கின்றது.

## இடையூறு கிளத்தல்.

(அதன்பாற் சென்ற தலைவி நாணினால் தன் விழிகளைப் புதைத்துக்கொள்ள அதனாலுண்டாகும் துன்பத்தைத் தலைவன் கூறுதல்.)

15. கொந்தார் மலர்ச்சடைக் கோடீச்சு ரேசர் குவட்டில்வளர்
அந்தா மரைத்திரு வேநீ யெனக்கெவ் வளவுதனம்
தந்தாலு மாங்க தொருபெரி தன்று தரினமையும்
பைந்தாட் குவளை நிகருன் விழியருட் பார்வையதே.

(கு - உரை.) கொந்து - பூங்கொத்து. குவட்டில் - மலையில். அந்தாமரைத்திருவே: "அந்தாமரையன்னமே" (சிற். 12.) 'எனக்கு'என்றது யான் மிக்க செல்வவானென்பதை இங்கே புலப்படுத்தி நின்றது. தனம் - ஸ்தனம், திரவியம்; "தனமிங் கேழைத் தனியனேற் குதவலாம்" (திருவிடை. மாந்தாதா. 30.) அது - அத்தனம். பார்வையது; அது: பகுதிப்பொருள்விகுதி. அருட்பார்வையைத் தரின் அமையுமென முடிக்க; நீ என்னைப்பார்க்க வேண்டுமென்றபடி.

யான்மிக்க செல்வவானாதலால் நீ எவ்வளவு பொருள் கொடுத்தாலும் அஃது எனக்குப் பெரிதன்று; எனக்கு வேண்டுவது உன் அருட்பார்வையே என்னும் மற்றொரு பொருள் புலப்படுகின்றது.

## இதுவுமது.

16. துண்ட மதிபுனை கோடீச்சு ரேசர் சுடர்க்கிரிவாழ்
பண்டரு தீஞ்சொன் மயிலனை யாயிந்தப் பாரிடத்தே
தண்டரும் போதெங் கெனத்தேடி வண்டுகள் சார்தலுண்டு
வண்டிடந் தேடிநின் கைப்போது சார்ந்தது மாவியப்பே.

(கு - உரை.) துண்டமதி - மதித்துண்டத்தை; பிறையை. பண்தரு தீஞ்சொல் - இசையை ஒத்த இனியசொல்; தரு: உவமவுருபு; "தடங்கார் தருபெரு வான்பொழில்" (சிற். 31.) போது எங்கு என - பூக்கள் எங்கே உள்ளனவென்று. வண்டென்றது கண்களை. மா வியப்பு - பெரிய ஆச்சரியம்.

பூவைத்தேடி வண்டு செல்வதுண்டு. வண்டைத்தேடிப் பூச்செல்வது இல்லை. இந்நிகழ்ச்சி மிக்க வியப்பைத்தருகின்றது என்றான்.

நீடுநினைந்திரங்கல்.

(தலைவியின் செய்கையால் காலம் நீட்டித்தலை அறிந்து தலைவன் வருந்துதல்; நீடு - நீடுதல்.)

17. வில்லா ரசலவிற் கோடீச்சு ரேசர்தம் வெற்பிலிந்த
நல்லார் பதங்கை முகம்வாய் நடங்கொ ணயனமிவை
எல்லா மினிய மலரா வியற்றி யிதயமொன்றும்
கல்லா வகுத்ததென் னோவிதி யாகிய கைதவனே.

(கு - உரை.) வில் ஆர் அசலம் வில்-ஒளிநிறைந்த மலையாகிய வில்லையுடைய. நல்லார் - தலைவி; நல்லாரென்பது மகளிர்களின் இயற்பெயர். நயனம் - கண். பதமும் முகமும் தாமரைமலர். கை காந்தள். வாய் செவ்வல்லி. நயனம் கருங்குவளை. இதயம் - மனம். விதி - பிரமதேவன். கைதவன் - வஞ்சனையையுடையவன்.

வில்லாரசலவில் என்றதில் இரண்டுவில் வந்திருத்தல் ஒருநயம்.

தலைவியினுடைய புறமும் அகமும் ஒன்றற்கொன்று மாறுபாடாக இருக்கச்செய்தமை கைதவம்; அதாவது அவளுடைய புறவுறுப்புக்களையெல்லாம் மலராகவும் அகவுறுப்பைமட்டும் கல்லாகவும் செய்தமை.

மறுத்தெதிர்கோடல்.

(தன் நாணத்தை மறுத்துத் தலைவனைத் தலைவி ஏற்றுக்கோடல்.)

18. நடநவி லீசர்தென் கோடீச் சுரவெற்பி னுயினைய
அடன்மதன் றன்னிட மேய்ந்திடப் போம்விழை வாவதனை
விடலரு நாண்கொண் டகத்தசைத் தானு மெலச்செனுமால்
கடல்புரண் டான்மற் றதனைத் தடுக்குங் கரையில்லையே.

(கு - உரை.) நடம் - தாண்டவத்தை. இனைய - வருந்தும்படி. மதன்றன்னிடம் - மன்மதனிடத்தில்; மதனென்றது தலைவனை. ஏய்ந்திட - பொருந்த; மேய்ந்திட - மேய்வதற்கு. விழைவாவதனை - விருப்பத்தை; விழைவு ஆவதனை - விருப்பத்தையுடைய பசுவை. நாண் - இலச்சை, கயிறு. அகத்து - மனத்தில், வீட்டில். அசைத்தாலும் - கட்டினாலும். மெல்ல - பைய, மென்று உண்பதற்காக.

ஒருவருடைய பயிரை மேயச்செல்லும் பசுவைக் கயிற்றைக்கொண்டு கட்டினாலும் அது மேய்ந்து மெல்லுவதற்காகச் செல்லாநின்றதென்பது மற்றொரு பொருள்.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

## வறிதுநகைதோற்றல்.

(தலைவி புன்னகைசெய்தல் ; வறிது - சிறிது.)

19. சகமுழு தும்புகழ் கோடீச்சு ரேசர் தடஞ்சிலம்பிற்
ககமுல வுந்தளிர்க் காவிடத் திம்மணிக் கட்கரும்பின்
முகமதித் தோன்றிய முத்த நகைக்கயன் முத்தநகை
நிகரல நேரென் றுரைத்தாற் பழிப்பா நிகழதற்கே.

(கு - உரை.) சிலம்பில் - மலையில். ககம் (பட்சி) உலவும்கா - சோலை. மணிக்கட்கரும்பு - நீலமணிகளைப்போன்ற கண்களையுடைய கரும்பு போல்வாள் ; முத்துக்கள் தோன்றும் கணுக்களையுடைய கரும்பென்பது மற்றொருபொருள். முகமதித்தோன்றிய - முகமாகிய சந்திரனிடத்தே தோன்றிய. முத்தநகைக்கு - உதட்டினுள்ளே அடங்கிய பற்களுக்கு; முத்தம் - உதடு. அயல் முத்தநகை - ஏனைய இடத்தில் தோன்றிய முத்துக்களின் ஒளி. அதற்கு - அப்பல்லிற்கு.

முகமதித்தோன்றிய முத்தம்: முத்துப்பிறக்கும் இடங்களில் மதியும் ஒன்று ; இரத்தினச் சுருக்கம், 35.

இதில் முத்தநகையென்பது இரண்டு முறை வந்தது ஒருநயம்.

## முறுவற்குறிப்புணர்தல்.

(தலைவியின் புன்னகையாற் பெற்ற உடம்பாட்டுக்
குறிப்பினைத் தலைவன் அறிதல்.)

20. வகைபூத்த சீருடைக் கோடீச் சுரநித்தர் மால்வரைப்பால்
தொகைபூத்த வேர்கொண் டளிகொண்டு நீடு சுகம்பயி லும்
தகைபூத்த காவில் வளரிம் முலைக்கொடி தன்னிடத்தோர்
நகைபூத்த தின்னதி லோர்மணந் தோன்றிடு நந்தமக்கே.

(கு - உரை.) கீர்த்தியுண்டாதற்குக் காரணம் பலவாதலின், 'வகைபூத்தசீர்' என்றார். தொகை பூத்தவேர் - தொகுதியாகிய மரவேர் ; மிக்க அழகு ; ஏர் - அழகு. அளி - வண்டு, அன்பு. சுகம் - கிளி, இன்பம். தகை - பெருமை. கா - சோலை. முலைக்கொடி - தனங்களையுடைய கொடிபோல்வாள், முல்லைக்கொடி. நகை - சிரிப்பு, அரும்பு. மணம் - கலியாணம், வாசனை.

வேரையும் வண்டையும் தன்பாற் கொண்டதும் கிளிதங்கப்பெற்றதுமாகிய ஒரு சோலையில் வளர்ந்த இந்த முல்லைக்கொடியில் அரும்புதோற்றியது ; இதில் இனி நறுமணமும் தோற்றுமென்பது மற்றொரு பொருள்.

## முயங்குதலுறுத்தல்.

(சேர்தல்.)

21. செல்வங் கிளரெழிற் கோடீச் சுரநம்பர் திண்சிலம்பில்
வில்லங் கெடுத்தெதிர் வேள்படை சூழ்வர மேவியிங்குச்
சொல்லங்க முற்றணி யாரின்ன காரிகை துன்னுரங்கொள்
வல்லங்கைக் கொண்டனங் கூடல்பெற் றேமுண் மகிழ்வுறவே.

(கு - உரை.) வில் அங்கு எடுத்து. வேள்படை - மன்மதனுடைய ஆயுதம்; படை - சேனையுமாம். சூழ்வர - சூழ்ந்துவர. இங்கு மேவி. அங்கம் - அவயவத்தை, தேர் முதலிய நாற்படைகளை. உற்று - பொருந்தி. அணி - ஆபரணங்கள், படைவகுப்புக்கள். காரிகை - பெண், அழகு. உரம்கொள் - மார்பை இடங்கொண்ட, வன்மைகொண்ட. வல் அங்கைக் கொண்டனம்: வல் - சூதாடு கருவியைப்போன்ற தனத்தை; வல்லம் - ஒரு நகரம். கூடல் - புணர்ச்சி, மதுரை.

ஒரு சிற்றரசன்படை வில்லைத் தாங்கி எம்மைச் சூழ்ந்து இடையூறு செய்துவர யாம் அதற்கஞ்சாமல் இங்கே மேவிச் சதுரங்கசேனைகளைப் பொருந்திப் படை வகுப்பு நிரம்பிய இந்த அழகு சிறந்த உறுதியைக் கொண்ட வல்லம் என்னும் நகரத்தைக் கொண்டோம்; பின்பு கூடலென்னும் நகரத்தையும் பெற்றேமென்பது மற்றொரு பொருள். வேள்-சிற்றரசன். அங்கம் - கோட்டைக்குரிய உறுப்புமாம். வல்லம் ஒருநகரமென்பது, "வல்ல மெறிந்த நல்லிளங் கோசர் தந்தை மல்லல் யானைப் பெருவழுதி" என்னும் உதாரணத்தாலும் விளங்கும்.

அங்கம் - எழுத்து அசை முதலிய உறுப்புக்கள், அணி - அலங்காரம், காரிகை - ஒருயாப்பிலக்கண நூல் என்ற பொருள்களும் தொனிக்கின்றன.

வல்லம்: "வல்லநீ தேடிலையே சிங்கா" (சா. தற.); "சேலங்கைக் கொண்டுயர் வல்லமேன் பாலருள் செய்தனல்ல, காலம்" இராதுநாதன் ஒருதுறைச். 2.

## புணர்ச்சியின்மகிழ்தல்.

22. மானேயிக் காவோர் தடநீ கமல மலர்மலர்வண்
தேனே வளருநின் பேரின்பம் வந்துனைச் சேர்ந்ததுற்ற
நானேயத் தேனையுண் வண்டுகண் டாய்நன் னதியுடனே
வானேர் மதியணி கோடீச் சுரநித்தர் மால்வரைக்கே.

(கு - உரை.) இக்கா - இந்தச்சோலை. தடம் - தடாகம். நீ தாமரை மலர். தேனே நின் பேரின்பம். சேர்ந்து அது உற்ற; அது - அப்

பேரின்பத்தை. நான் வண்டு. கண்டாய்: முன்னிலைஒருமை அசைநிலை. வான் ஏர் மதி - வானில் எழுகின்ற சந்திரனை.

இது முற்றுருவகம் என்னும் அணி.

இச்செய்யுள், "செழுநீர் மதிக்கண்ணி" (சிற். 123) என்னும் செய்யுளை நினைப்பிக்கின்றது.

இச்செய்யுளோடு, இந்நூல் 116-ஆம் செய்யுள் ஒருவாறு ஒப்புமையுடையது.

புகழ்தல்.

(தலைவியின் நலத்தைத் தலைவன் பாராட்டல்.)

23. வெளிதரு நீற்றரன் கோடீச் சுரவண்ணல் வெற்பில்வளர்
குளிருமைக் கூந்தலுன் கண்ணோக்கி மீன்பயங் கொண்டலையும்
ஒளியுறு மின்னுன் னிடைநோக்கி வானி லொளித்திருக்கும்
களியுறு மன்னம் பறந்திடு நின்னடை காண்பொழுதே.

(கு - உரை.) வெளி—வெள்ளி - வெண்மை; தொகுத்தல். குளிரும் கூந்தல்; மைக்கூந்தலை உடையாய்; அன்மொழித் தொகை. உன்கண் நோக்கி - உன் கண்ணின் அழகைக்கண்டு. பயம்கொண்டு - நீரை இடமாகக்கொண்டு, அச்சங்கொண்டு; "விரிதரு பயமுற் றொளித்திருந் திடுதன் மீனின மன்றிவே றில்லை" (திருவிடை. நகர. 49.) மின் - மின்னலானது. வானில் ஒளித்து இருக்கும் - மேகத்துக்குள்ளே மறைந்திருக்கும்; ஒளித்து - ஒளியை உடையதாயென்பது செம்பொருள். அன்னம் - அன்னப் பறவை. பறந்திடும் - பறக்கும், விரைந்தோடும்.

தோற்றவர்கள் பயங்கொள்ளுதலும் ஒளித்துக்கொள்ளுதலும் விரைந்தோடுதலும் இயல்பு.

இது சிலேடையொடு பொருந்திய தற்குறிப்பேற்றம்.

ஏற்புறவணிதல்.

(நிலைகுலைந்த ஆபரணங்களை முன்போலவே தலைவன் தலைவிக்கு அணிதல்.)

24. சொல்லணி நீடு பொருளணி மேற்பல சூழிவற்றுட்
சில்லணி யொன்றினென் றேய்ந்ததை வேறு தெரித்துமுலை
வல்லணி மீதி னுலாவுறு கோவை வனைந்திடுகேன்
அல்லணி கண்டத்தர் கோடீச் சுரமன்ன வாரணங்கே.

(கு - உரை.) சொல் அண்ணி - புகழை அடைந்து; அணி - அழகுமாம். நீடு பொருள் அணி - உயர்ந்த பொன்னாலாகிய ஆபரணங்கள். மேல்பல - அவற்றிற்கு மேலே உள்ள நவமணியாலாகிய ஆபரணங்கள்

சில் அணி - சில ஆபரணங்கள். ஒன்றின் ஒன்று ஏய்ந்ததை வேறு தெரித்து - நிலை குலைந்து ஒன்றோடொன்று கலந்த ஆபரணத்தை வேறுவேறாகப் புலப்படும்படி அணிந்து. வல் - சூதாடு கருவி. உலாவுறு - அசைதலுற்ற. கோவை - கோக்கப்பட்டுள்ள முத்தமாலை முதலியவற்றை. வனைந்திடுவேன் - அணிவேன்.

சொல்லணி பொருளணி இவற்றுள் சில அணிகளை வேறு வேறாகப் புலப்படுத்தி ஒருலாவும் கோவையும் யான் வனைவேன் என்பது மற்றொரு பொருள்.

---

## வன்புறை.

[தலைவியை நோக்கித் தலைவன் நான் பிரியேன் என்று வற்புறுத்திக் கூறுதல்.]

### அணிந்துழி நாணியதுணர்ந்து தெளிவித்தல்.

(தான் புனைந்தமை வேறுபாட்டைப் புலப்படுத்துமென்று தலைவி நாணியதை அறிந்த தலைவன் முன்போலவே அணிந்தேன் என்று அவளைத் தெளிவித்தல்; அணிந்துழி - அணிந்தவிடத்து.)

25. பணிபெறு பூணினர் கோடைச் சுரவெற்பின் பான்மணஞ்செய்
கணிபெறு சோலையின் மாதே யுலாவுன்றன் கண்ணிலங்கு
மணிபெறு நன்மை யுறவீண் டெழுதினன் மன்னிமுன்போல்
அணிபெற வோதி முடித்தே னிதிலொன் றுமையமின்றே.

(து - உரை.) பணி - பாம்பு. மணம் செய் கணி - வாசனையை வீசுகின்ற வேங்கைமரம், விவாகத்தைச் செய்விக்கின்ற சோதிடன்; வேங்கை மரம் பூக்கும் காலம் விவாகத்துக் குரியதென்று குறிஞ்சி நிலத்தில் வாழ்பவர் எண்ணுவராதலின் மணஞ் செய் கணி என்றார்; தஞ்சை. 234, அம்பிகாபதி. 265. உலாவு உன்றன் கண்ணில் அங்கு மணிபெறும் நல் மை உற; அங்கு: அசைநிலை. மணி - அழகு. மை - அஞ்சனத்தை. அணிபெற - அழகு பெற. எழுதினன் - தீட்டினேன். ஓதி முடித்தேன் - கூந்தலை முடித்தேன். ஐயம் இன்று - இதிற் சந்தேகமில்லை. ஆதலால் நீ நாணுதலை ஒழிக என்பது குறிப்பெச்சம்.

உலாவென்னும் நூலை உன் விழிமணியின் கருமையைப்பெற்ற மைக்காப்புச் சாத்தும்படி எழுதினேன்; அதை அலங்காரம் அமையும்படி படித்தும் முடித்தேன்; அந்நூலிற் சிறிதும் சந்தேகமில்லை என்பது மற்றொரு பொருள். உன்றன் கண்ணில் - உன் பார்வையிலென்றுமாம். ஓதி - படித்து.

## பெருநயப்புரைத்தல்.

(தனது மிக்க காதலைப் புகழ்ச்சி வகையால் தலைவன் உரைத்தல்; நயப்பு - விருப்பம்.)

26. பங்க முறுதிரு போது மலர்ந்து பனியினொடு
திங்கட்கெய் யாதுமுண் மேல்வதி யாது திலகமுற்றிம்
மங்கை யெழின்முகம் போலோர் நளின மலர்வண்டுகாள்
எங்குள தோதுமின் கோடீச்சு ரேச ரிமயத்திலே.

(கு - உரை.) தாமரைமலரினும் தலைவியின் முகம் சிறந்ததென்பது இச்செய்யுளின் கருத்து.

பங்கம் - சேறு, குற்றம். இருபோது - பகல் இரவு. திங்கட்கு - சந்திரனுக்கு. எய்யாது - வாடாது ; எய்த்தல் - இளைத்தல். முள் மேல். வதியாது - தங்காது. திலகம் - பொட்டு, மேலாதல். இமயம் - இமய மலை.

தாமரை பங்கமுறும் ; இருபோதும் மலராது ; பனிக்கும் திங்கட்கும் வாடும் ; முள்ளையுடைய தண்டின்மேல் வதியும் ; முள் : ஆகுபெயர்.

"தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்து வைகாது, முண்மருவு தாண்மேன் முகிழாது - நண்ணி, இருபோதும் செவ்வி யியல்பாய் மலரும், அரிவை வதனும் புயம்" (தண்டி. சூ. 35, மேற்.) என்னும் செய்யுள் இதனோடு ஒப்பிடற்பாலது.

## தெய்வத்திறம்பேசல்.

(தம்மைச் சேர்த்துவைத்த ஊழ்வினையின் தன்மையைத் தலைவன் கூறுதல்; தெய்வம் - ஊழ்வினை.)

27. மேரு முடியிருப் போரு மதனடி மேவினரும்
நேருற நோக்கி மகிழ்ந்திட வேலன்ன நீள்விழியாய்
வாருறு வேணியர் கோடீச் சுரேசர் வளைத்ததெனச்
சேருறச் செய்தது நம்மைமுன் னூழின் றிறமதுவே.

(கு - உரை.) மேரு முடியிருப்போர் - தேவர். அதன் அடியில் மேவினர் - நாகலோகத்தில் உள்ளார். மகிழ்ந்திட வளைத்ததெனக் கூட்டுக. ஊழின் திறம் நம்மைச் சேருறச் செய்தது. அது : பகுதிப்பொருள் விகுதி.

மேருமலையின் முடியிலுள்ளோரும் அதன் அடியிலுள்ளோரும் ஒருவரையொருவர் எளிதிற் கண்டு அளவளாவி மகிழும்படி கோடீச்சுரேசர் அம்மலையை வில்லாக வளைத்ததுபோல ஊழ் நம்மைக் காணச் செய்தது

என்றான். வளைத்த காலையில் அம்மலையின் இருகாலும் ஒன்றுபட்டன வென்பர்; சிறு. 122-ஆம் செய்யுளைப் பார்க்க.

"மேக்குங் கிழக்கும்பொற் குன்றகம் வாழ்நர் விராவவளைத்
தாக்குந் திறத்திற் கழுமலத் தீச ரருட்பெரியர்
போக்கும் படியில் கிளையிற் பிரித்திப் பொலிமினையெற்
றாக்கும் படியளித் தாரவ ரேதெய்வஞ் சத்தியமே" (சீகாழிக். 6)

என்னும் செய்யுள் இதனைத் தழுவிவந்தது.

## பிரியேனென்றல்.

(என்றல் - என்று தலைவன் சொல்லுதல்.)

28. மறியா ரிடத்தினர் கோடீச் சுரேசர் மலரடிசெந்
நெறியா லடைந்தவர் நீங்குவ ரோதுடி நேரிடையாய்
வறியார் மனைப்பொன் மழைபோன் மருவுனை வைத்தகலற்
கறியா தவனல னின்னினும் வேறென் னரும்பொருளே.

(கு - உரை.) மறி - மான்கன்று. இடம் - இடக்கை. மலரடியை. செந்நெறி - சன்மார்க்கம்; கோடீச். 56. துடி - உடுக்கையை. மருவு உன்னை - என்பால்வந்த உன்னை. தலைவனுக்கு வறியாரும் தலைவிக்குப் பொன்மழையும் உவமை. நின்னினும் அரும்பொருள் வேறு என்? இல்லையென்றபடி. அறிவிலியாயின் யான் உன்னைவிட்டுப் பிரிவேனென்றான்.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

## பிரிந்துவருகென்றல்.

(போய்வருவேன் என்று தலைவன் தலைவிக்குக்
கூறுதல்; வருகு - வருவேன்.)

29. தூவென்ற சூலத்தர் கோடீச் சுரவெற்பிற் சூழெழைநீ
போவென் றுரைக்கினும் போகே னொடிவரைப் போதுசெலற்
கேவென்ற கண்ணி யுளதொன் றிரேனங் கிருந்திடினும்
வாவென்று கைக்கொடு வந்திடு மீங்கென் மனம்விரைந்தே.

(கு - உரை.) தூ என்ற - யாவருக்கும் பற்றுக்கோடென்று சொல்லப்பட்ட; "தூத்தூய்தூன் பற்றுக் கோடு" (சூடாமணி நிகண்டு.) நொடிவரைப்போது - ஒரு மாத்திரைப்பொழுது. ஏ வென்ற கண்ணி: ஏ - அம்பை. செலற்கு ஒன்று உளது; ஒன்று - ஒருகாரியம். அங்கு இரேன்.

மனம் கைக்கொடுவருமென்றது விட்டவிலக்கணி.

## இடமணித்தென்றல்.

(நம்முடைய ஊர்கள் ஒன்றற்கொன்று அணிமைக்கண் உள்ளன வென்பதைத் தலைவன் கூறுதல்; அணிமை - சமீபம்.)

30. சங்கர ரங்கணர் கோடீச் சுரமன்ன தாழ்குழலாய்
உங்கள் புனத்தி னுலாவுங் கிளிகளு மொண்மயிலும்
எங்க ணகர்ப்பளிங் கார்சுவர்த் தோன்றலை யென்றுமதிற்
றங்குறுஞ் சித்திர சித்திர மீதெனச் சாற்றுவரே.

(கு - உரை.) தோன்றலை - தோன்றும் நிழலை. சித்திர சித்திரம் - அழகையுடைய ஓவியம். நிழல் தோன்றக்கூடிய அண்ணிய இடத்திலுள்ளதென்பதன்முகமாக இருவரூரும் தம்முள் அணியனவென்பதைக் குறிப்பித்தான்.

## தெளிவு.

(தலைவன் பிரிந்து வருவேனென்றதைத் தலைவி தெளிதல்.)

31. சிங்கத் துரிபுனை கோடீச் சுரநித்தர் தென்மதுரை
தங்கத் தமிழ்ச்சங்கத் தார்சொற் றவறினுஞ் சார்ந்துநந்தம்
சங்கத் திருந்து தமிழாய்ந் தவர்சொற் றவறுவரோ
இங்கிற்றை யேவரு வார்மன மேதெளி யின்னதுவே.

(கு - உரை.) சிங்கத்துரிபுனை: "சிங்கத்துரி மூடுதிர் தேவர்கணந் தொழுநிற்பீர்" (சுந்தா. தே.); உரி - தோல். சொல் தவறினும். நம் சங்கத்து - நம்முடைய சேர்க்கையில். தமிழ் - இன்பத்தை. இற்றையே - இன்றைக்கே. இன்னதைத் தெளி.

சங்கப்புலவர்கள் சொற்றவறார் என்பதை, "வாய்மொழிக் கபிலன்" (அகநா. 78), "பொய்யாநாவிற் கபிலன்" (புறநா. 174) என்பன முதலியவற்றால் அறியலாம். சங்கம், தமிழென்பன சிலேடை.

---

## பிரிவுழி மகிழ்ச்சி.

[தலைவி பிரிந்து ஆயத்திடைச் செல்லுங்கால் அவள் தோற்றத்தைக் கண்டு தலைவன் மகிழ்ந்து கூறல்.]

### செல்லுங்கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லல்.

(கிழத்தி செலவு - தலைவி பாங்கிமாரிடம் செல்லுதலை; கண்டு - தலைவன் கண்டு.)

32. மின்வார் சடையினர் கோடீச் சுரநம்பர் வெற்பின்மதன்
தன்வார் சிலையு மிரதியின் சாபமுந் தம்முடியும்

கொன்வார் கணைகளும் வெம்போ ரதனிடைக் கொண்டுனையும்
பின்வாவென் றேகிடல் பார்மன மேயொரு பெண்ணரசே.

(கு - உரை.) மதன் சிலையும் இரதி சாபமும் புருவங்கள்; சாபம் - வில். தம் முடி - அவர்களுடைய கிரீடங்கள்; என்றது நகில்களை. கொன் - அச்சம். அவன்கணைகள் ஐந்தில் தாமரைமலர் தலைவியின் முகம், கருங்குவளைமலர் கண், முல்லையரும்பு பல், மாம்பூ தேமல், அசோகம் பூ நிறம்; "கருப்புச், சிலையி னுதறிகழச் செங்கமல வாச, மலரின் வதனம் வயங்க - நிலவு, தளவ முறுவ றயங்க வசோகத், தொளியின் வடிவ மொளிர - மிளிர்சூதப், போதிற் சுணங்கு பொலியக் கழுநீரிற், காதிற் பொருகண் களிசிறப்ப" சொக்கநாதருலா, 441 - 4.

தோற்றவர்கள் தம்முடைய படைக்கலங்களைக் கீழே எறிந்துவிடுதலும் வென்ற அரசர் அவற்றைக் கவர்ந்துகொள்ளுதலும் மரபு; "படையிடுவான் மற்கண்டீர் காமன்" (கலி. 109 : 19.); "படையிட்டு நடுங்குங் காமன்" (மணி. 3 : 23); "சங்கரன் கொடுத்த வாளும், வீரமுங் களத்தே போட்டு வெறுங்கையோ டிலங்கை புக்கான்" (கம்ப. கும்ப. 1.) என்பவற்றில் ஒருவாறு இக்கருத்து அமைந்திருத்தல் காண்க.

## பாகனொடு சொல்லல்.

(பாகன் - தேர்ப்பாகன்.)

33. வின்மதன் றன்னைவெல் கோடீச் சுரநம்பர் வெற்பிடத்துத்
தன்மன மென்கண்வைத் தென்மனந் தான்கொண்டு தங்கித்தங்கி-
முன்மதி நாணீர்த் திடப்பின் பயந்தள்ள முத்தநகை
மென்மருங் கோர்மின் செலல்பார் வலவ வியன்பொழிற்கே.

(கு - உரை.) என்கண் - என்னிடத்தில். மதி நாண் - மதிக்கப்படுகின்ற நாணம். மின் - தலைவி. வலவ - தேர்ப்பாகனே. பொழிற்கு - பொழிலின்கண்; உருபு மயக்கம்.

இதில் இரண்டாம் அடி பரிவருதகனையணி.

---

## பிரிவுழிக் கலங்கல்.

[தலைவி பிரிந்தவிடத்துத் தலைவன் மனங்கலங்குதல்.]

ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

(பாங்கியர் கூட்டம் தலைவிக்கு வழிபாடு செய்யத் தலைவன் கண்டு இவ்வளவு பாதுகாப்பிலிருக்கும் இவளை நான் அடைந்து இன்புற்றது பொய்யோவென்று எண்ணுதல்.)

34. அண்டர்தம் மாதர் நடுவிந்தி ராணியி னுயத்துறாஉம்
வண்டிரு மாதிவட் கோடீச் சுரநித்தர் மால்வரையிற்

கண்டிருப் போமங் கொருகாற் புணரக் கருத்திலிச்சை
கொண்டிருப் போமன்றிக் கூடியி ரோமுன் குறித்திடினே.

(கு - உரை.) அண்டர்தம் மாதர்நடு - தெய்வப்பெண்களின் இடையே. ஆயத்து - மகளிர் கூட்டத்தில். திருமாது இவள் - அழகிய மாதாகிய இவளை. குறித்திடின் - ஆராய்ந்தால். இந்திராணி தலைவிக்கு உவமை; "அந்தரர் கோன்றுணை யென்றார் சிலர்" கோடீச். 77.

இனி இவள் பெறுதற்கு அரியளென்பதாம்.

வாயில்பெற்றுய்தல்.

(தலைவியைப் பெறுதற்குரிய தூது இன்னாளென்றறிந்து தலைவன் ஆற்றாமை நீங்குதல். வாயில் தூது வழி யென்பன ஒருபொருட்சொற்கள்.)

35. நஞ்சிற் பொலிகண்டர் கோடீச் சுரவெற்பி னண்ணுமிந்த
வஞ்சிக் கொடிதன் மலர்முக மேவிய வண்டுசென்றப்
பஞ்சித் தளிரடிப் பூங்கொம்பர் மீதெதிர் பாய்தலெண்ணின்
விஞ்சிக் கொடிக்கந்தக் கொம்பர்பற் றுமென்று மேற்சொல்வதே.

(கு - உரை.) கண்டம், விடத்தைத் தன்பாற்கொண்டு இறைவனது நித்தியத்தைப் புலப்படுத்துவதாகலின், 'நஞ்சிற் பொலி கண்டர்' என்றார்; "முறையென வமரர் வேண்ட முளைத்தநஞ் சயின்று சான்று, யுறையென மிடற்றில் வைத்த வும்பரான்" (திருவிளை. பன்றிக்குட்டி களுக்கு. 2); "வெளியுறலுட் புகலின்றிக் களத்துநடு வமர்தருவெவ் விடமு நாளும்......தன்பெருமை யுணர்த்தவோவாத், தெளிகிளர்பட் டீசம்வளர் பட்டிலிங்கப் பெருமான்றாள் சேர்ந்து வாழ்வாம்" (பட்டீச் சுரப். கடவுள். 5.) வஞ்சிக்கொடிதன் - தலைவியினது. மலர்போன்ற முகத்தின் மேவிய வண்டென்றது கண்களை; மலர்முகம் - மலரிடமு மாம். பஞ்சி - இங்கே செம்பஞ்சு. பூங்கொம்பர் என்றது உயிர்த் தோழியை. இக்கொடிக்கு - இந்தத் தலைவிக்கு. பற்றும் - விருப்பமுடையவள் ஆவாள். சொல்வது - சொல்லாநின்றது. கொடி கொள்கொம் பின்மேற் படர்வதாகலின் இக்கொடிக்கு அந்தக் கொம்பு பற்றும் என்றான்; "கொம்பில்வாழ் கொடியே" (344) என்பர் பின்; "கொம்பரில் லாக்கொடி போலல மந்தனன் கோமளமே" (திருவா. நீத்தல். 20.) பாய்தல் சொல்வதென்க. இவள் வாயிலாகத் தலைவியை அடையலா மென்று தலைவன் கருதினான்.

கொடியிற்றோன்றிய மலரிடத்துள்ளவண்டு பூங்கொம்பொன்றிற் பாய்தலென்பது ஒருநயம்.

## பண்பு பாராட்டல்.

(தலைவியின் அழகைத் தலைவன் மிகப் புகழ்தல்;
பண்பு - அழகு)

36. கலையொன்று வேணியர் கோடீச் சுரேசர் கயிலையெனும்
மலைமுன் விளர்த்தது மேருவுஞ் சென்னி வணங்கிநின்ற
தலையுற்ற தொன்றன் றியாவுங் குறைபட்ட வாமெனினிம்
முலைநகை யாண்முலைக் கொப்பென் றெதனை மொழிவதுவே.

(கு - உரை.) கலை - சந்திர கலை; பிறை. விளர்த்தது - வெண்ணிற மாயிற்று. சென்னி - சிகரம்; சென்னி வணங்கி நின்றதென்பது வில்லானதைக் குறிக்கின்றது. ஒன்று அலை உற்றது - ஒரு மலை கடலை அடைந்தது; அது மைநாகம்; மந்தரமும் ஆம். யாவும் குறைபட்ட - எல்லா மலைகளும் இந்திரனுடைய வச்சிரப்படையாற் சிறை கொய்யப் பட்டன. குறைபட்டன என்றால். முலை நகையாள் - முல்லையரும்பைப் போன்ற பற்களையுடையாள்; "முலையணிந்த முறுவலாள்" (கலி. 1 : 13.) எதனை - எந்த மலையை.

தோல்வியுற்றவர்கள் நாணத்தால் விளர்த்தலும் தலைகுனிதலும் அலையுறுதலும் இயற்கையினின்றும் குறைபடுதலும் இயல்பென்பது இதிற் புலப்படுகின்றது.

முலைநகையாள் முலை: மடக்கு.

இது தற்குறிப்பேற்றவணி.

## பயந்தோர்ப் பழிச்சல்.

(தலைவியின் தாய்தந்தையர்களைத் தலைவன் வாழ்த்தல்.)

37. பந்தா டுமைபங்கர் கோடீச் சுரநித்தர் பைம்பொன்வெற்பில்
வந்தா கவஞ்செயும் வேள்வெங் கணைகளை மாற்றியென்றன்
சிந்தா குலந்தீர்த் தினிதாண் டருளிய தேமொழியைத்
தந்தார்கண் மாமனு மாமியு மாகுக தாரணிக்கே.

(கு - உரை.) பந்தாடு உமை - கந்துகக் கிரீடாம்பிகை; இஃது இத் தலத்திலுள்ள அம்பிகையின் திருநாமம். ஆகவம் - போர். வேள் - மன்மதனது. சிந்தாகுலம் - மனக்கவலையை. தேமொழியை - தேன் போன்ற மொழியை உடைய தலைவியை. தந்தார்கள் - பெற்றவர்களாகிய தந்தையும் தாயும். மா மன் - திருமகளுக்குத் தலைவராகிய திருமால்; "போதின், மாமனேயெனக் கூறுவார்" (திருவிடை. காருண்ணியா. 35.) மா மீ - திருமகளுக்கு மேற்பட்டவள்; மீ யென்பது மி என இங்கே குறுகி நின்றது. தாரணிக்கே - பூமியின்கண்.

பெண்ணைக் கொடுத்தபின் மாமனும் மாமியும் ஆனவர்களை அப் பெயர்களைக் கொண்டே உயர்த்திக் கூறியது ஒரு நயம்.

மாமனும் மாமியும்: "அன்புடைய மாமனு மாமியும் நீ" (திருநா. தே.) சிந்தாகுலம்..... தாரணிக்கே: "அணியுஞ் சுடர்விரி சங்குபங் கேருக மாடகமும், மணியுந் தரமன்னி வாழிய ரோதஞ்சை வாணன்வெற் பில், தணியுந் தொழிலொழித் தின்பமுந் துன்பமுந் தன்பதமே, பணி யும் பணியெனக் குப்பயந் தாளைப் பயந்தவரே" தஞ்சை. 32.

### கண்படைபெறாது கங்குனோதல்.

(தலைவியைப் பிரிந்த தலைவன் துயில்பெறாமல் இராப்பொழுதில் வருந்திக் கூறுதல்.)

38. நதியுறு வார்சடைக் கோடீச் சுரேசர் நளிர்வரைவான்
மதியென் மதியை மயக்கும்வண் டார்மதன் வண்டலைக்கும்
பொதிய மலையத் தனிக்கான் மலையும் புகலுமினிக்
கதியிர வெல்லைகண் டெல்லையெப் போதிங்குக் காண்பதுவே.

(கு-உரை.) நளிர் - குளிர்ச்சி. மதி - சந்திரன், புத்தி. வண்மை தார். மதன் வண்டு - மன்மதனது பாணம். பொதியமலை அ தனி கால் - பொதிய மலையிற்றோன்றிய அந்த ஒப்பற்ற தென்றற்காற்று. மலை யும் - என்னொடு போர்செய்யாநிற்கும். கதி - கதிக்கின்ற (விளங்குகின்ற.) இரவு எல்லையை - இராத்திரியின் முடிவை. எல்லை (சூரியனை)க் காண் பது எப்போது?

இச் செய்யுளில் இரண்டாமடி முதலியவற்றில் சொற்கள் மடங்கி வந்திருத்தலும் பொதியமலையமென்பதும் நயங்கள்.

---

## இடந்தலைப்பாடு.

[இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தைத் தலைவன் அடைதல்.]

### தந்ததெய்வந் தருமெனச் சேறல்.

(தலைவியை முன்பு அளித்த தெய்வம் இன்னும் தருமென்று தலைவன் தலைவியின் இடத்திற்குச் செல்லுதல்.)

39. வெந்நாக கங்கணர் கோடீச் சுரேசர் வியன்சிலம்பிற்
செந்நாண் மலர்மேற் றிருவனை யாளைமுன் சேர்த்ததெய்வம்
இந்நாளுஞ் சேர்த்திடு மீதல்கற் றோரென்று மீவர்கண்டாய்
சொன்னா லெழுநெஞ்ச மேசெல்கு வோமந்தச் சூழ்பொழிற்கே.

(கு - உரை.) வெந்நாகம் - வெவ்விய பாம்பு. செந்நாண்மலர்மேல் - செந்தாமரை மலரின்மேலுள்ள. சேர்த்த - நம்மைச் சேரச் செய்த. சொன்னால் ஈவர் கண்டாயெனக் கூட்டுக. அந்தப்பொழில் - முன்பு தலைவியைக் கண்ட சோலை.

இது வேற்றுப்பொருள் வைப்பணி.

## முந்துறக் காண்டல்.

(தலைவியைத் தலைவன் நேரிற் காணுதல்; முந்துறவென்பதற்கு முன்புபோல என்றும் பொருள் உரைப்பர்.)

40. விழியொரு மூன்றுடைக் கோமைச் சுரவள்ளல் வெற்பின்மதன்
அழகெனும்வெள்ளத்தகச்செங்கையாசையந்தூரிகைதோய்த்
தெழுதிய வோவிய மீதென்ன வோர்மங்கை யின்னுருவாய்
நிழல்செயிக் காவினந் நற்றவப் பேறெதிர் நிற்கின்றதே.

(கு - உரை.) மதன்: எழுவாய். அழகெனும் வர்ணக்குழம்பின் பெருக்கில். அகச் செங்கை - மனமாகிய செங்கையால். ஆசையாகிய தூரிகையை; தூரிகை - எழுதுகோல்; "எழுதா விடிற்புகழ் வேண்டிய யான், கையா லெடுத்தது தூரிகை யேயன்று காரிகையே" (வெங்கைக். 108.) ஓவியம்-சித்திரம். காவில் நம் நற்றவப்பேறு.

நமது நற்றவப்பேறு ஓவியம் ஈதென்னும்படி மங்கையின் உருவாய் நிற்கின்றதென்க.

அழகெனும் வெள்ளம், அகச்செங்கை, ஆசையந் தூரிகை என்பன உருவகவணி.

## முயங்கல்.

41. விடைபட்ட கேதனர் கோமைச் சுரநம்பர் வெற்பின்மலர்த்
தொடைபட்ட கோதை யிவள்வா யமிர்தச் சுவையினுக்குப்
படைபட்ட வேலை யமுதொத்தி டாது பகருமது
கடைபட்ட தேயன்ன தாகும்விண் மேவு கடவுளர்க்கே.

(கு - உரை.) கேதனர் - கொடியை உடையவர். கோதை - கூந்தலை உடையவள்; ஆகுபெயர். படைபட்ட - திருமாலுக்குப் பள்ளியிடமாகப் பொருந்திய; படை - படுக்கை. இவள் வாயிற்றோன்றும் அமிர்தச் சுவையினுக்கு வேலையமுது ஒத்திடாது. அது கடைபட்டது - அது கடைதலால் தோன்றியது; இழிவுபட்டதென்பது மற்றொருபொருள்; அருணைக்கலம். 94. அன்னது தேவர்களுக்கு ஆகும்.

புகழ்தல்.

(தலைவன் தலைவியைப் புகழ்தல்.)

42. அயனோர்ந்தி டாமுடிக் கோடீச் சுரநம்ப ரம்பொன்வெற்பிற்
புயலின நீரிவள் கூந்தற்கு முன்னர்ப் புகன்றிடுமுட்
பயமுற் றிருந்திடி னேர்தான் சிறிது பயமொழிந்தால்
நயமுற்றி டீர்கடற் போய்விழ வேண்டு நவின்றனனே.

(கு - உரை.) ஓர்ந்திடா - உணராத. புயலினம்: விளி. பயம் உற்று இருந்திடின் - நீரோடு கூடியிருந்தால்; அச்சமுற்றிருந்தாலென்பது மற்றொரு பொருள். நேர்தான் - ஒப்பாவீர். பயம் ஒழிந்தால் - நீரை நீங்கினால், அச்சம் நீங்கினால். நயம் - அழகை, இவளது அன்பை. கடலிற் போய்விழுதல் நீரையுண்பதற்கு. நீங்கள் அச்சம் தவிர்ந்தீராயின், கூந்தலால் வெல்லப்பட்டுக் கடலிற்போய் வீழ்வதற்கு உரியிராவிரென்பது மற்றொருபொருள். நீருண்ட மேகம் கறுத்திருப்பதும் வெளுத்த மேகம் நீரைக்கொள்ளுதற்குக் கடலுக்குச் செல்லுதலும் இயல்பு. பயம்: சிலேடை.

ஆயத்துய்த்தல்.

(பாங்கிமார் கூட்டத்தையடையும்படி
தலைவன் தலைவியை விடுத்தல்.)

43. மீயுற்ற பூம்பொழிற் கோடீச் சுரநம்பர் வெற்பிடத்திவ்
வேயுற்ற சாரற் றினைப்புனத் தேயன்றென் மீதுவைத்த
நேயத் தணைந்து கரணஞ்செய் தாயினி நீயகன்றுன்
ஆயத் துறைமணி யஞ்செய் திடுபணி யாரணங்கே.

(கு - உரை.) மீ - மேலிடம். வேய் - மூங்கில். தினைப்புனத்து - தினைக்கொல்லையில். அணைந்து - சேர்ந்து, வந்து. கரணம் - புணர்ச்சி விகற்பத்தை. ஆயத்து உறை - ஆயத்தில் உறைவாயாக. மணி அஞ்சு எய்திடுபணி - ஐந்து இரத்தினங்கள் பொருந்தப்பெற்ற ஆபரணத்தை உடைய; மணி அஞ்சைப் பஞ்சரத்தினமென்பர். மணிகள் இருமணியென்றும், மும்மணியென்றும், நான்மணியென்றும், ஐம்மணியென்றும், நவமணியென்றும் தொகுத்துக் கூறப்படுதல், இரத்தினப் பரீட்சையுடையார் துணிபு.

முன்பு கரணம் செய்தாய்; இனி ஆயத்துறைமணியஞ்செய்வாய்; இதுதான் உனக்கமைந்த வேலையாகுமென்பது மற்றொருபொருள். கரணம் - கணக்குவேலை. ஆயத்துறை - சுங்கச்சாவடி; "ஆயத்துறையிற் பிறந்து" (தனிப்.) மணியம் - ஒரு வேலை.

## பாங்கற் கூட்டம்.

[பாங்கனுடைய உதவியால் தலைவன் தலைவியை அடைதல்; கூட்டம் - கூடுதல்; இத்தொடருக்குப் பாங்கனைத் தலைவன் அடைதலென்றும் பொருள் கூறுவதுண்டு.]

### தலைவன் பாங்கனைச் சார்தல்.

(பாங்கனை - உயிர்த்தோழனை.)

44. செறிப்புறு வான்புகழ்க் கோடீச் சுரேசர் சிலம்பிடைநாம்
உறுப்பமை நன்னூ லிடைநீடு மைம்பா லுறுதொடர்பைச்
சிறப்புறு கேள்வி பெறுபாங்க னுக்குத் தெளிவுபெறக்
குறிப்பினு மோதும் வெளிப்படைச் சொல்லினுங் கூறுதுமே.

(கு - உரை.) உறுப்பு அமை - உறுப்பாக அமைந்த. நூலிடை - நூல்போன்ற இடையை உடையாளது. ஐம்பால் உறு தொடர்பை - கூந்தலோடுற்ற உரிமையை; தலைவனைத் தலைவியின் கூந்தற்கிழவனென்பர் சான்றோர்; "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரியவா நினக்கே" (குறுந். 225 : 6-7), "நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே" (புறநா. 113 : 9.) கேள்வி - வேதம்; 'கேள்வி பெறு பாங்கன்' என்பதனால், இவன் பார்ப்பனப் பாங்கனென்பது கொள்ளற்பாலது. குறிப்பாலும் வெளிப்படைச் சொல்லாலும்.

இதில் நன்னூலென்னும் இலக்கணத்தினிடத்தேயுள்ள ஆண்பால் முதலிய ஐம்பால்களின் பொருட்டொடர்ச்சியைக் குறிப்பாலும் வெளிப்படையாலும் கேள்விபெறு பாங்கனுக்குக் கூறுவேமென்னும் இலக்கணத் தொடர்புடைய வேறு பொருள் தொனித்தல் காண்க. "ஒருமொழி தொடர்மொழி" (நன். சூ. 259) என்னும் சூத்திரம் இங்கே கருதற்பாலது.

### பாங்கன் தலைவனை உற்றது வினுதல்.

(உற்றது - உற்றதுன்பத்தை; அது தோள்மெலிவு முதலியவற்றை.)

45. மன்றுடு மீசர்தென் கோடீச் சுரவெற்ப வாய்மையுரை
ஒன்றா தவரிடத் தொன்றினை யோகட லேழுமொன்றாய்ச்
சென்றார்த் தெழினு மதியோ டிரவி திசைகெடினும்
குன்றாத நின்புயக் குன்றமென் னேவிங்ஙன் குன்றுற்றதே.

(கு - உரை.) மன்று - சபை. வெற்ப: விளி. வாய்மை உரை - உண்மையைக் கூறுவாயாக. ஒன்றாதவரிடத்து - இணங்கத் தகாதவ

ரோடு. திசை கெடினும் - தெற்கு வடக்காகச் சென்றாலும். குன்றாத நின்புயக் குன்றம் - மெலியாத நின்னுடைய தோள்களாகிய மலை. என்னோ - என்னகாரணத்தாலோ. இங்ஙன் குன்றுற்றது - இவ்வண்ணம் மெலிந்தது. குன்றுற்றது என்னோ வென்க. இணங்கத் தகாதவரோடு இணங்கினால் தீய செயல்கள் உண்டாகும்; அதனால் உடல்மெலிவும் உண்டாகுமென்னும் நீதி இங்கு அறியற்பாலது.

இறுதியடி சொற்பின்வருநிலை.

## தலைவன் உற்றதுரைத்தல்.

46. விரித்துச் சொலற்கென்ற னான்முடி யாதன்ப மேற்பகையைச்
சிரித்துச் சிதைத்திட்ட கோடீச்சு ரேசர் சிலம்படியிற்
சரித்திடு மென்மனப் போதகம் போம்வழி தன்னினின்றோர்
வரிக்கண்மின் னாரங் குசத்தா லதனை மடக்கியதே.

(து - உரை.) மேல் - பண்டைக்காலத்தில்; ஆகாயத்திலென்றுமாம். பகையை - திரிபுரங்களை; ஆகுபெயர். சிலம்படியில் - மலைச்சாரலில். சரித்திடும் - சஞ்சரிக்கும். மனம் போதகம் போம் வழிதன்னில் - மனமாகிய யானை செல்லும் வழியில்; போதகம் - அறிவுமாம். ஈசருடைய சிலம்பை யணிந்த திருவடியில் தங்கிய என்மனம் என்றுமாம்; கோடீச். 56, 84. வரிக்கண்மின்னார் - வரிகள் பரந்த கண்களையும் மின்னலைப் போன்ற தோற்றத்தையுமுடையவராகிய ஒருவர்; எழுவாய். அங்குசத்தால் - அழகிய கொங்கைகளால், தோட்டியால். அதனை - அந்தப்போதகத்தை. மனப்போதகம் - இதயகமலம்.

மின்னார் அங்குசத்தால் அதனை மடக்கிய செய்தி என்னால் விரித்துச் சொல்லமுடியாதென்க. அங்குசம்: சிலேடை.

இச்செய்யுள் விற்பூட்டுப் பொருள்கோள்.

## கற்றறி பாங்கன் கழறல்.

(பாங்கன் இடித்துக் கூறுதல்.)

47. கடுவமர் கண்டத்தர் கோடீச்சு ரேசர்தண் கார்வரைமேற்
கொடுவடி வேல விருபால் வழக்குங் குறித்தெவர்க்கும்
படுவுற வோதிடு நீயின்ன தென்னட் பகுத்துரைக்கும்
நடுவறி யாவொரு பேதைகண் ணொன்னிங்கு நண்ணியதே.

(து - உரை.) கடு - விடம். இருபால் வழக்கும் - ஆண்பாலார் பெண்பாலாரென்கிற இருபாலாருடைய ஒழுக்கங்களையும்; வாதிப்பிரதிவாதிகளுடைய வழக்குக்களையென்றுமாம்; உலகவழக்கு செய்யுள்வழக்கு

என்பது மற்றொரு பொருள். படுவுற - மனத்திற் படும்படி. நடு - இடை, நடுவுநிலைமை. பேதை - ஒரு மடந்தை, கல்வியறிவில்லாதவன். நீ பேதைகண் நண்ணியது யாதுகாரணம்பற்றி?

தருமாசனத்திலிருந்து இருபாலார் வழக்கையும் ஆராய்ந்தறிந்து எவர்க்கும் மனத்திற்படும்படி விளங்கச் சொல்லும் அறிவுடையாயாகிய நீ நடுவுநிலைமையை யறியாத ஒரு மூடனிடத்தை யடைந்தது என்ன பயன் கருதி என்பது மற்றொரு பொருள்.

தலைவன் அரசனாதலின் இங்ஙனம் கூறினான்.

## தலைவன் கழற்றெதிர் மறுத்தல்.

(பாங்கன் இடித்துக் கூறியதைத் தலைவன்
மறுத்துச் சொல்லுதல்.)

48. கனவல் விடபத்தர் கோடீச் சுரமன்ன கன்னிநுதல்
இனவண் மணிக்குழை மாமுலை பார்வை யெனவுரைக்கும்
தனுவு மகரமுங் கும்பமு மீனமுஞ் சார்ந்தங்குநீ
முனமுற நோக்கிடி னன்பவிவ் வாறு மொழியலையே.

(கு - உரை.) இடபத்தர் - இடபவாகனத்தை உடையவர். கன்னி-தலைவியின். நுதல் - நெற்றி. குழை - காது. பார்வை - கண். தனு - வில். மகரம் - ஒருவகை மீன். கும்பம் - குடம். மீனம் - மீன். நெற்றி முதலியவற்றிற்குத் தனு முதலியவைகள் உவமைகள்; நிரனிறை.

தலைவியின் நெற்றி முதலியவற்றின் அழகை நீ பார்ப்பாயாயின் என்னை இவ்வாறு இகழ்ந்து சொல்லாயென்றபடி; "நடுக்கண் டனை யல்லை கொங்கைகண் டாயல்லை நண்பவென்றன், இடுக்கண் டனையிப் படியோ தவிர்ப்பது" புகலூரந்தாதி.

இதன்பால் கன்னியாராசியின் நுதல் முதலியனவாகத் தனு முதலிய ராசிகள் அமைந்து வியப்பைத் தருகின்றனவென்பது மற்றொரு பொருள்.

இதிற் கூறப்பட்ட ராசிகளின் அமைப்போடு பொருந்த, 'கனவல் விடபத்தர்' என்று ஓரிராசிப்பெயர் தொனிக்கக் கூறியதும் ஒரு நயம்.

## பாங்கன் தலைவனைப் பழித்தல்.

49. விரையார் கடுக்கையர் கோடீச் சுரவெற்ப மேவிடுமுன்
உரையார் கலைமதி யோர்மா தரைப்பணிக் கொல்கியதால்
திரையார் கலிசுற் றிடத்தே யினியொரு சிற்றெறும்பிற்
கிரையாய் விடுமக மேருவு நீடு மிமயமுமே.

(கு - உரை.) விரை - வாசனை. கடுக்கை - கொன்றை. கலைமதி - நூல்களையறிந்த புத்தி, கிரணங்களையுடைய சந்திரன். மாது அரைப் பணிக்கு; மா தரைப்பணிக்கு - பெரிய பூமியிலே உள்ள பாம்பிற்கு. ஒல்கியது - தளர்ந்தது. ஆர்கலி - கடல். வானிலுள்ள கலைமதி பூமியிலுள்ள பாம்பிற்கு ஒல்கினமையால் ஒரு சிற்றெறும்பிற்கும் மேரு முதலியவைகள் இரையாய்விடு மென்றான்.

## தலைவன் வேட்கை தாங்கற்கருமை சாற்றல்.

(தலைவன் : எழுவாய். வேட்கை - தலைவியின்பாலுள்ள விருப்பம்.)

50. தேன்வளர் கொன்றையர் கோடீச்சு ரேசர் சிலம்பினயற்
கான்வளர் மும்மத நால்வாய்க ளஞ்சக் கணைதொடுத்தேன்
வான்வளர் சிங்கம் வரினும் விடேன்மதி வாண்முகத்தோர்
மான்விழி நோக்குமுன் கைவில்லு மம்பும் வழுவிபவே.

(கு - உரை.) கான் - காடு. நால்வாய்கள் - யானைகள். அஞ்சக் கணைதொடுத்தேன் - பயப்படும்படி அம்பைத் தொடுத்தேன். கான்வளர் மும்மதம்; கான் - வாசனை; "மிஞிறூர்க்கும் கமழ்கடாத்து" (புறநா. 22 : 6.) வான்-பெருமை; ஆகாயமுமாம். சிங்கம் - சிங்கமென்னும் மிருகம்; சிங்கராசியுமாம். மதி வாள் முகத்து ஓர் மான் விழி - மதிபோன்ற ஒளிபொருந்திய முகத்தையுடைய ஒரு மடந்தையின் விழி; மான் : உவம ஆகுபெயர். முகத்திற்கு மதியும் விழிக்கு மானும் உவமை கூறியது மிகப் பொருத்தமுடைத்து.

யானையையும் சிங்கத்தையும் வெல்லும் ஆற்றலையுடைய என்கையிலுள்ள வில்லும் அம்புகளும் ஒரு மானின் விழி நோக்குமுன்னே வழுவிப்போயின; என் ஆற்றல் குலைந்தது என்றபடி.

மும்மத நால்வாய்களஞ்ச : எண்ணணி.

## பாங்கன் தன்மனத்து அழுங்கல்.

(அழுங்கல் - வருந்தல்.)

51. பூங்கயி லாயத்தர் கோடீச்சு ரேசர் பொதியவரைத்
தாங்கயி லோனுக்கு நாமீண் டிசைமதி தன்குரவற்
காங்கணை நூற்குப் பொருள்கூ றுதலொக்கு மன்றியுநோய்
நாங்களை யாதுபின் னுங்களை யேற்றுத னன்கலவே.

(கு - உரை.) பொதிய வரையில். தாங்கு அயிலோனுக்கு - வேலைத் தாங்கிய தலைவனுக்கு. இசைமதி - சொல்லும் புத்தியானது. தன் குர

வற்கு ஆங்கு அணை நூற்குப் பொருள்கூறுதல் ஒக்கும் - தன்னுடைய ஆசிரியனுக்கு அவனாற் பெற்ற நூற்பொருளை ஒரு மாணாக்கன் சொல்லுதல்போலாம்; மதி ஒக்குமென்க. நோய் - தலைவனுடைய நோயை. நாம் களையாது - நாம் நீக்காது. ஆம் - ஆகும். கலையேற்றுதல் - சோகத்தை உண்டாக்குதல்; கலை: "வேட்கையாற் கலையி னோடு கதுமெனச் சென்று" கந்த. ததீசி யுத்தரப். 55.

இதில் நாங்களை என்பது அடுக்கிவந்தது.

## தலைவனோடு அழுங்கல்.

(அழுங்கல் - பாங்கன் வருந்திக்கூறல்.)

52. மலையேறு கையரன் கோடீச் சுரவெற்ப வானுறுமுன்
கலையே றியமதி தாரணி யூடு கலந்திடொரு
தலையே றிருட்குத் தளர்ந்திடு மேல்வலி சார்த்துவரார்
அலையேழும் வெப்புறி னெப்புன லலதை யாற்றுவதே.

(து - உரை.) மலை - மேருமலையாகிய வில். வான் உறும் கலை ஏறிய உன்மதி - பெருமையுற்ற பலகலைகளையும் மிகப்பெற்றிருக்கின்ற உன்னுடைய புத்தியானது. தார் அணி ஊடு - மாலையின் வரிசையின் உள்ளே. கலந்திடு ஒரு தலை ஏறு இருட்கு - கூந்தலுக்கு. மதி இருட்குத் தளர்ந்திடுமேல். சார்த்துவர் - சாரச்செய்கிறவர்கள். ஆர் - ஒருவருமில்லை என்றபடி. அலை - கடல். அலை........ஆற்றுவதே: "கடல்வெதும்பின் வளாவும்நீர் இல்லதுபோலவும்" (இறை. சூ. 3, உரை); "கடல்வெதும் பின், தன்மேல் விளாவவுண் டோதரை மேலொரு தண்புனலே" தஞ்சை. 47.

வான்......தளர்ந்திடுமேல் - ஆகாயத்திலுள்ள மான்பொருந்திய இருளைப் போக்குதற்குரிய சந்திரன் உலகத்தில் ஓரிடத்திலுள்ள இருளுக்கு வலியற்றதெனின்; வான் - ஆகாயம், கலை - மான், மதி - திங்கள், தாரணி - உலகம், ஒருதலை - ஓரிடம்.

## எவ்விடத் தெவ்வியற் றென்றல்.

(நீ கண்ட உருவம் எவ்விடத்தில் உள்ளது, எவ்விலக்கணத்தை யுடையதென்று பாங்கன் தலைவனைக் கேட்டல்.)

53. மின்னுறு சூற்படைக் கோடீச் சுரநித்தர் வெற்பவந்தப்
பொன்னெழின் மான்கஞ்சப் பூவிடத் தோவிந்தப் பூவிடத்தோ
மன்னுறு நீள்விழி வாளியற் றோவடி வாளியற்றோ
இன்ன லுறேல்புக லின்னதென் றெவ்விடத் தெவ்வியற்றே.

(கு - உரை.) சூற்படை - சூலாயுதத்தை உடைய. பொன் எழில் மான் - திருமகள்போன்ற எழிலையுடைய பெண். கஞ்சப் பூ விடத்தோ - தாமரை மலரில் உள்ளவளோ; திருமகளோ என்றபடி. இந்தப்பூவிடத்தோ - இந்தப்பூமியின்கண் உள்ளவளோ; மானிடமகளோ. விழி - கண். வாளி அற்றோ - பாணத்தைப்போல்வதா. வடி வாள் இயற்றோ - கூரிய வாளின் இயலை உடையதோ; கண் அம்பைப்போல்வதா, வாளைப்போல்வதா? இன்னதென்று புகல். அற்றோ இயற்றோ வென்றான், மானென்பது சொல்லாலஃறிணை யாதலின்.

பூவிடத்தோ, வாளியற்றோ என்பன மடங்கிவந்திருத்தல் ஒரு நயம்.

## இவ்விடத்து இவ்வியற்றென்றல்.

(என்றல் - என்று தலைவன் கூறல்.)

54. சேவணக் கேதனர் கோடீச் சுரநம்பர் தென்பழனம்
காவண நள்ளா றிடமக் கமலைதன் கைவனசப்
பூவணஞ் சத்திமுத் தங்கண் முறுவல் புரியளகை
மாவணஞ் சாயலொண் மாயூர முந்தி வலஞ்சுழியே.

(கு-உரை.) தென்பழன் அம் கா-தென்னம்பழத்தையுடைய அழகிய சோலையின்; தென்பழன். "தெங்கின் பழம்" (சீவக. 31); "தென்னம் பழம்வீழ் சோணாடா" (முத்துக். பிள்ளைத். 75.) வண்ணம் நள்ளாறு இடம் - அழகிய நடுவழியே இடம். நம்பர்காவென்க. அக்கமலைதன் - அத்திருமகள்போன்ற தலைவியினது. கை வனசம் பூ வணம் - கைகள் தாமரைப் பூவின் அழகை உடையன. சத்தி - வேல்; முறுவல் - பல். சத்தியும் முத்தும் அவள் கண்ணும் முறுவலுமாம்; நிரனிறை. புரி அளகு ஐ மாவண்ணம் - முறுக்கிய கூந்தலின் அழகு வண்டின் நிறத்தையுடையது; "வண்டினமுந் தண்குழலை யொப்பாம்" (உவமான. 1.) அளகமென்பது அளகென விகாரமாயிற்று. சாயல் மாயூரம்; மாயூரம் - மயில். உந்தி - கொப்பூழ். வலஞ்சுழி - வலமாகச் சுற்றும் நீர்ச்சுழி.

இதில் பழனம், காவணம் (திருக்கோலக்கா) நள்ளாறு, கமலை (ஆரூர்), பூவணம் (திருப்பூவணம்), சத்திமுத்தம், அளகை (தஞ்சாவூர்), மாயூரம், வலஞ்சுழி என்னும் தலங்களின் பெயர்கள் தொனித்தல் காண்க.

பெருவுடையாருலா மங்கைப்பருவ வருணனையில், "சொற் செறிந்த வம்புலாஞ் சோலையன்ன கூந்தலாள்......கஞ்சனூ ரன்ன கதி நடையாள்" (151 - 4)என இங்ஙனமே தலப்பெயர்கள் தொனிக்கும்படி அவயவங்களைப் பாராட்டுவார் இந்நூலாசிரியர்.

"கொங்கை யேபரங் குன்றமும்" (திருவிளை. நகரப். 2.) என்னும் செய்யுளை இது நினைப்பிக்கின்றது.

## பாங்கன் இறைவனைத் தேற்றல்.

(தலைவனைப் பாங்கன் ஆற்றுவித்தல்.)

55. நாடாளு மன்னவ கூடார் புரத்தை நகைத்துவன்னிக்
காடாக் கியசிவன் கோடீச் சுரமன்ன காரிகையை
ஏடார் மலர்ப்பொழி லூடேகி நான்கண் டிவண்வருவன்
ஈடார் வரைப்புயம் வாடாது நின்றி டிமைப்பொழுதே.

(கு - உரை.) புரத்தை - திரிபுரங்களை, ஊரையென்பது மற்றொரு பொருள். வன்னி - நெருப்பு, ஒரு மரம். பகைவர் ஊரையழித்துக் காடாக்குதல் வீரரியல்பு. காரிகையைக் கண்டென்க. வருவன் - வருவேன். ஈடார் - பெருமை பொருந்திய. இமைப்பொழுது நின்றிடு.

இச்செய்யுளில் வழியெதுகை நான்கடியிலும் அமைந்துள்ளது.

## பாங்கன் குறிவழிச் சேறல்.

(தலைவன் குறித்த இடத்திற்குப் பாங்கன் செல்லுதல்.)

56. செந்நெறி சேர்த்தருள் கோடீச் சுரேசர் சிலம்படியை
உந்நெறி கூட்டுமின் வைகா விடமஃ தோங்கதனுக்
கந்நெறி யாமத் திருவே ரகத்தை யடையுநெறி
இந்நெறி யாகு மிதுவே யிறைவ னிசைத்திட்டதே.

(கு - உரை.) செந்நெறி - சன்மார்க்கம், திருச்சேறைக் கோயில்; "சேறையுட் செந்நெறிச் செல்வ னாரே" (தே. திருநா.) சிலம்படியை - மலையின் அடிவாரத்தை; சிலம்பணிந்த திருவடியை யென்பது மற்றொரு பொருள். உ நெறிகூட்டும் - அந்த வழி அடையச்செய்யும். மின் வைகா இடம் அஃது - தலைவி தங்காத இடம் அது. அதனுக்கு அ நெறி ஆம் - அந்த இடத்துக்கு அந்தவழி ஆகும்; அதனுக்கு: நெஞ்சறிசுட்டு. திரு ஏர் அகத்தை அடையும் நெறி - திருமகள்போன்ற தலைவியினது அழகிய இடத்தை அடையும் வழி. இசைத்திட்டது இது.

இதில் செந்நெறி (சேறைத்திருக்கோயில்), திருவைகா, திருவேரகம் என்னும் தலங்களின் பெயர்கள் தொனிக்கின்றன.

இச்செய்யுளிற்போலவே "அதுநம் மனையிது வேதிய ராவண மாவணமீ, துதுதண் கமலத் தடமிது காவிரி யொண்ணதியே" (333) என்பதிலும் மூன்று சுட்டுக்களையும் பின் அமைத்துள்ளார்.

## பாங்கன் இறைவியைக் காண்டல்,

(அங்ஙனம் சென்ற பாங்கன் தலைவியைக்காணுதல்.)

57. மெய்யாக நூலினர் கோடீச் சுரநித்தர் வெற்பினன்சொல்
ஐயா றதுதிங்க ளூர்திரு வாலம் பொழிலதுமேற்

கையாலொண் காந்தள் வரைமேவி யாங்குக் கலக்குறச்செய்
மையார் கயற்கண் விசயமங் கைத்திரு மற்றிவளே.

(கு - உரை.) ஆகம் நூலினர் - மார்பின்கண் பூணூலை உடையவர்; "இழைவளர் மார்பினர்", "இழைநோக்கு மார்பான்" (87, 168) என்பர் பின். வெற்பினன் சொல் - தலைவன் சொல்லிய. ஐ ஆறு அது - அழகிய வழி அது. திங்கள்ஊர் திரு ஆலம்பொழில் அது - சந்திரன் ஊர்ந்துசெல்கின்ற அழகிய ஆலமரச் சோலை அது. தன் கையைக்கண்டு தோற்றுக் காந்தள் மலையிலே சேர்ந்து கலக்கமடையும்படி செய்த மங்கை; கலக்குற - பொருந்த, கலக்கமுற; "தனக்குவமை யென்று ரைக்குந் தண்காந்தட் பூவைக், கனத்தகிரி வைத்தவெழிற் கையாள்" (பேரூவுடை. 187); "கந்தமலர்க் காந்தளினை முந்துமலை யேறவைத்த கையினாள்" (சா. துற.) செய் மங்கை யென்க. கண் விசயம் மங்கை - கண்ணால் தலைவனை வென்ற மங்கை; "ஆள்வழக் கொழிய நீண்ட வணிமலர்த் தடங்கண்" (சீவக. 461); "ஆள் வழக்கறுத்திடு நெடுங் கண், அம்பரத்தியர்" (திருநாகைக் காரோணப். அதிபத்த. 10.) "வேற் படையும் வாளுமே கண்ணா" நள.

இதில் ஐயாறு, திங்களூர், திருவாலம்பொழில், விசயமங்கை என்னும் தலங்களின்பெயர்கள் தொனிக்கின்றன.

## இகழ்ந்ததற்கிரங்கல்.

(தலைவியைக்கண்ட பாங்கன் முன்னம் தலைவனைத்தான் இகழ்ந்ததற்கு வருந்துதல்.)

58. போரண்டு சூலத்தர் கோடீச் சுரவெற்பிற் பொன்னிமருங்
கேரண்ட மாபுர மேன்மைகொ ளின்னம்ப ரின்னவற்றை
நேரண்ட நோக்கிடி னுருரு காரிது நெஞ்சினெண்ணா
தாரண்டு வேலற் பழித்தன நம்மறி வத்தனையே.

(கு - உரை.) போர் அண்டு. பொன்னி மருங்கு - திருமகள் போல் வாளாகிய தலைமகளது இடையும். ஏர் அண்டு அ மா புரம் - அழகு பொருந்திய அந்தத் திருமகள்போல்வாளுடைய உடம்பும். மேல் மை கொள் இன் அம்பர் - தம்மேல் மை எழுதப்பெற்ற இனிய அம்புகளைப் போன்ற கண்களும். அம்பர் - அம்பு; இறுதிப்போலி. இன்னவற்றை - ஆகிய இவற்றை. எண்ணாது - நாம் எண்ணாமல். ஆர் - கூர்மை. வேலற் பழித்தனம் - வேலனைப்பழித்தோம்.

மற்றொரு பொருள்: பொன்னி - காவிரி. ஏரண்டமாபுரம் - கொட்டையூர். மேன்மைகொள் இன்னம்பர் - சிறப்பைக்கொண்ட இன்னம்பர் என்னும் தலம்.

இதில் எரண்டமாபுரம், இன்னம்பரென்னும் தலப்பெயர்கள் தொனிக்கின்றன. இவை ஒன்றற்கொன்று அண்ணிதாக உள்ளன.

## பாங்கன் தலைவனை வியத்தல்.

(தலைவியின் அழகைக்கண்ட தலைவன் அதில் ஈடுபட்டு அங்கேயே இருந்து விடாமல் மனத்திட்பத்தோடு தன்னிடத்து வந்தமையைப் பாங்கன் வியந்து கூறல்.)

59. சூலாயு தத்தரன் கோடீச் சுரமன்ன தோகையிவள்
நூலா மிடையொடு சேலான நோக்கினை நோக்கினரி
மாலாகி நிற்பன் மலரோன் பிரம மருவிடுநம்
வேலா னிவண்விட் டவணுற்ற தாற்றிறன் மிக்கவனே.

(கு - உரை.) நோக்கினை - கண்களை. அரி - திருமால். மாலாகி நிற்பன் - மயக்கமுடையவனாகி நிற்பான். மலரோன் பிரமம் மருவிடும் - தாமரைப்பூவிலுள்ள பிரமதேவன் மயக்கத்தை அடைவான். இவண் விட்டு - இந்த இடத்தைவிட்டு. அவண் உற்றதால் - அந்த இடத்தை அடைந்தமையால். நம் வேலான் திறல்மிக்கவன். நம்வேலான்......... திறல் மிக்கவன்: "இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்துணை யும் பகர்ந்த, கவளக் களிற்றன்ன லேதிண்ணி யானிக் கடலிடத்தே" சிற். 33.

இதில் அரி மாலாகிநிற்பனென்றும் மலரவன் பிரமமருவிடுமென்றும் அவரவர்கள் பெயரைக்கொண்டே வேறு பொருள்படக் கூறியிருப்பது ஒரு நயம்.

## பாங்கன் தலைவியை வியத்தல்.

60. செக்கர்நன் மேனியர் கோடீச் சுரேசர் சிலம்பிலிவள்
மைக்கண் சிதறிய மால்விடந் தீர்த்திடும் வாயமிர்தம்
மிக்க தனப்பொற் குடநெடுங் காமமென் வேலையினின்
றக்கன வின்பக் கரையேற் றிடுநம் மரசனையே.

(கு - உரை.) வாய் அமிர்தம், இவள்கண் சிதறிய விடத்தைத் தீர்த்திடும்; "நயனார விந்தத்து நஞ்சுநும் வாயிதழ் நல்லமுதம், அயனார் படைத்தில ரேலடங் காதவ் வரனுக்குமே" (தஞ்சை. 135.) தனப்பொற் குடம் - தனமாகிய பொற்குடம்; காமமென்கின்ற கடலினின்றும் இன்பமாகிய வன்கரையில் எற்றிவிடும்; குடம் எற்றிவிடுமென்க. நீந்துவோர் குடத்தைக் கருவியாகக்கொள்வர்; "சீர்நாடு மாதர்தனக் குடந்தேடித் திரிவாற்கு, வார்நாடுந் தடைதீர்ந்த மலைநாடு வாய்த்ததால்" திருக்குற். மந்தமாருதச். 48.

## தலைவன்றனக்குத் தலைவிநிலை கூறல்.

(தலைவி தனியே நிற்றலைத் தலைவனுக்குப் பாங்கன் கூறல்.)

61. சுரும்புறு கொன்றையர் கோடீச் சுரேசர் சுடர்க்கிரிமேற்
கரும்புரு வச்சிலை தன்னொடு நீலக் கணையுங்கொடு
பொரும்படை மாரன் றுணைபோல நின்றதப் பூங்கொடிவல்
இரும்பன நெஞ்ச திருநறை யூரவ் விரும்பொழிற்கே.

(து - உரை.) இறைவனருளால் வண்டுமொய்த்தலின், சுரும்புறு கொன்றையரென்றார்; "சுரும்புறு கொன்றையன்" (சிறீ. 353.) சுடர்க்கிரி - அருணாசலம். கரும்புருவச்சிலை தன்னொடு - கரியபுருவமாகிய வில்லோடு; "கரும்புருவச் சிலைபோற்றி" (திருவிளை. கடவுள். 3); கரும்பாகிய அழகையுடைய வில்லோடு. நீலக்கணையும் - கருங்குவளை போன்ற கண்ணையும் (கணை - கண்ணை), கருங்குவளையாகிய அம்புகளையும்; "பொருகணை தொடுத்தான் சென்று புரஞ்சுடு கணையினானும், ஒருகணை விடுத்தான் மார னுடலெலாங் கொளுத்திற் றன்றே" (அருணாசல. திருவவதாரச். 58) என்பதிலும் கணையென்பது இரண்டு பொருள்பட வந்துளது. படை - சேனை, ஆயுதம். பூங்கொடி - தலைவி. தலைவனை முன்னர் வியந்ததற்கேற்ப, 'இரும்பனநெஞ்ச' என்றான். திருநறை ஊர் - அழகிய தேன் பரக்கின்ற; திருநறையூரென்பது ஒரு சிவத்தலம். பொழிற்கே - பொழிலில்.

ஒரு பூங்கொடியானது மாரனது துணைபோலக் கரும்பாகிய அழகிய சிலையோடும் கருங்குவளையாகிய கணையையுங்கொண்டு இப்பொழிற்கண் நின்றதென்பது மற்றொரு பொருள்.

## தலைவன் சேறல்.

(சேறல் - செல்லுதல்.)

62. படித்தலம் போற்றிடு கோடீச் சுரநம்பர் பைம்பொன்வெற்பில்
வடித்தடங் கண்ணி முலையங்கை யின்சொலின் வன்பகையென்
றடித்திடு மோமுன் பறித்திடு மோநின் றதட்டிடுமோ
தடித்துறு பந்துசெங் காந்தள்பைங் கிள்ளையைத் தண்பொழிற்கே.

(து - உரை.) வடி - மாவடுவின் பிளப்பு. கண்ணி: எழுவாய். நகில் அங்கை சொல் ஆகிய இவற்றின் பகையென்று கண்ணி பந்தடித்திடுமோ, காந்தள் பறித்திடுமோ, கிள்ளையை அதட்டிடுமோவென்க; நிரனிறை. பந்தை யடித்ததற்குக்கூறிய காரணத்தை, "தனது கொங்கைச், சுந்தரங்கொள் கந்துகத்தை யெடுத்தடித்து விளையாடத் தொடங்கினளே". (சா. தற.) எனப் பிறவிடத்தும் இவர் கூறியிருத்தல் காண்க.

## தலைவியைக் காண்டல்.

(தலைவன் தலைவியைக் காணுதல்.)

63. செந்நெல் விளைவயற் கோடீச் சுரநித்தர் திண்சிலம்பில்
மன்னவ பேரின்ப நீடமு தீவன்முன் வாசுகிநற்
பன்னகம் பூட்டித் தனமலை மேலெனப் பன்னுவள்போற்
பொன்னிற மால்வரை காட்டிநிற் கின்றனள் பொற்றொடியே.

(கு- உரை.) மன்னவ: விளி. பேரின்பம் நீடு அமுது ஈவன் - பேரின்பம் மிகுந்த அமுதத்தை யான் கொடுப்பேன். முன் வா. சுகி - சுகிப்பாயாக. இத் தனமலைமேல் நல் பல் நகம்பூட்டு. பொன் நிறம் மால் வரை - அழகிய மார்பின்கண் உள்ள மலைபோன்ற தனத்தை; பொன் நிறம் - பொன்னிறத்தையுடைய என்றுமாம். பொற்றொடி நிற்கின்றனள்.

மற்றொரு பொருள்: வாசுகி நற்பன்னகம் - வாசுகியாகிய நல்ல பாம்பு; தனமலை - மேருமலை; தனம் - பொன். தனமலைமேற் பன்னகம் பூட்டு.

## கலவியின் மகிழ்தல்.

64. சலங்காத்த வேணியர் கோடீச் சுரேசர் தடத்துரத்தில்
அலங்கா வெழுத்தசை சீர்மேவு பந்த மடிதொடைகொண்
டிலங்கா வளரு முறுப்பியல் பாவுற் றிடுமிளைய
நலங்கா முறுகா ரிகையின்ப மீங்கெய்தி நண்ணினமே.

(கு - உரை.) சலம் - கங்கையை. தடத்து - மலையில். உரத்தில் - மார்பில். அலங்கா - அசையாத. எழுத்து - தொய்யில். அசை - தங்கப் பெற்ற. சீர்மேவு - சிறப்புப்பொருந்திய. பந்து அம் - பந்தின் அழகை யும்; அடி தொடை கொண்டு - அடியையுடைய மாலையையும் பெற்று; தொனிப்பொருளை நோக்கித் தகரவொற்றுத் தொக்கது. இலங்கா வளரும் உறுப்பு - விளங்கி வளருகின்ற அவயவங்களை; என்றது தனங் களை, இயல்பா உற்றிடும் - இயற்கையாக அமையப்பெற்ற. நலம் காமுறு காரிகை - இவளைப் பெறவேண்டுமென்று அழகு விரும்பும் தலைவியினுடைய; நலம் - நற்குணமுமாம். இன்பம் - இன்பத்தை.

தொனிப்பொருள்: எழுத்து, அசை, சீர், பந்தம் (தளை), அடி, தொடை இவை பாவின் உறுப்பு. இவற்றைக்கொண்டு இலங்கி வளர் கின்ற உறுப்பியலையும்; பா - செய்யுளியலையும். நலம் - சுருங்கச்சொல்லல் முதலிய அழகுகள். உற்றிடும் காரிகை என்னும் நூல். காரிகையின்பம் - காரிகை என்னும் நூலின்பத்தை; "தேருந் தொறுமினி தாந்தமிழ்" தஞ்சை. 59.

முதலடியிற் சலங்காத்தவேணியரெனவெடுத்ததற்கேற்பக் குள மென்னும் பொருள் தொனிக்கும்படி, 'தடத்து' என்றார்.

## புகழ்தல்.

(தலைவன் தலைவியைப் புகழ்தல்.)

65. திங்கட் கொழுந்தணி கோடீச்சு ரேசர் சிலம்பிலிவள்
அங்கத்திற் காலழ கொத்திடுங் கஞ்ச மரையழகு
மங்குலைச் சார்ந்துறை மின்னொக்கு மற்றை வடிவுகளுக்
கிங்கெப் பொருளினுங் காணே முழுது மிமைவதுவே.

(கு - உரை.) திங்கட்கொழுந்து - பிறையை. அங்கத்தில் - உறுப்புக் களுள், தேகத்தில். காலழகு - பாதத்தின் அழகை, காற்பங்கு அழகை. கஞ்சம் - தாமரைமலர். அரை அழகு - இடையின் அழகை, பாதி அழகை. மங்குலை - மேகத்தை. மின் - மின்னல். இடைக்கு மின்னலை உவமை கூறுதல் மரபு; "மின்னும் பணியும் புரைமருங்குல்" சிற். 5.

கஞ்சம் காலழகுக்கே ஒப்பாகும், மின் அரை யழகுக்கே ஒப்பாகும்; மற்ற உறுப்புக்களின் முழு அழகுக்கும் ஒப்பாகும் பொருளைக் கண்டிலே மென்பது மற்றொரு பொருள்.

## பாங்கியோடு வருகெனப் பகர்தல்.

(இனி நீ வருங்கால் உயிர்த்தோழியோடு வருகவென்று தலைவன் தலைவிக்குக் கூறல்.)

66. படையுற்ற பூதத்தர் கோடீச்சு ரேசர் பனிவரைநூல்
இடையுற் றிடுநல் லனமேநின் பாங்கிக் கினியொளித்திந்
நடையுற் றிடுத லலனன் றவளொடு நாளைவந்திக்
கடையுற்றி டுன்னையன் னாடர நானெதிர் கைக்கொளவே.

(கு - உரை.) வரை - மலையில். நூல் இடை-நூல்போன்ற இடையை. இ நடை உற்றிடுதல் - களவொழுக்கத்தில் ஒழுகுதல். நலன் அன்று. இக்கடை - இவ்விடத்தை. அன்னாள் எனக்கு உன்னைத்தர; அன்னாள் - தோழி. கைக்கொள்ள உற்றிடு என்க.

மற்றொரு பொருள்: நடை - இடைகழி. கடை - வாசல். ஒன்றைக் கொடுப்பதற்கும் வாங்குவதற்கும் இடமாக வியாபாரம் செய்யும் கடை யென்னும் பொருளும் தொனித்தல் காண்க.

## பாங்கிற் கூட்டல்.

(பாங்கியர் கூட்டத்தில் தலைவியைத் தலைவன் செல்லச் சொல்லுதல்; பாங்கு - பாங்கியர் திரள்.)

67. எனைத்தேடி யாள்சிவன் கோடீச் சுரவெற்பி லெய்திநின்னைச்
சுனைத்தேடி யாங்குறுங் காமனைத் தேடிடுந் தோழிமுன்னீங்
குனைத்தேடி னேனென வொன்றோதி யன்னவளொ டொன்றிடுநீ
கனைத்தே டியையவண்டு காம்போதி பாடுங் கதுப்பணங்கே.

(கு - உரை.) எனைத்தேடியாள்சிவன் : "எளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந், தளியை யாவதுன் னருளின் வண்ணமே" (திருவிளை. கரிக்குருவி. 15.) நின்னை எய்தி. சுனைத்தேடி - சுனையில் தேடி. காமனைத் தேடிடும் - சோலையிலுள்ள கொடிவீட்டில் தேடுவாள். தேடிடும் தோழி - தோழி தேடுவாள். முன் - அவள் தேடுமுன்னமே. நீ ஒன்றிடு- நீ கலப்பாயாக. கனைத்து - முழங்கி. எடு இயை வண்டு - மலரிதழிற் பொருந்திய வண்டு. காம்போதி - ஓர் இராகம். வண்டு கனைத்துப்பாடும் கதுப்பென்க. "நாந்தேடு மாதர் நமைத்தேடு முன்னங்கு நண்ணுவமே" (147) என்பர்பின்.

---

## பாங்கி மதியுடன்பாடு.

[தலைவன் தலைவிகளுக்குள்ள நட்பை அறிந்து பாங்கி அதற்கு உடம்படுதல்.]

## பாங்கி ஐயமுற்றோர்தல்.

(தலைவியின் வேறுபாட்டைக்கண்டு சந்தேகங்கொண்டு பாங்கி ஆராய்தல்.)

68. கறையுறு கண்டத்தர் கோடீச் சுரநித்தர் கார்வரைமேல்
உறையுமிம் மாதந்த மாதவர் போன்முன் னுணவொழித்தாள்
மறைபுகல் வாளம் மனைவெறுத் தாளுடல் வாட்டமுற்றாள்
அறையு மிவையித னாற்றனவென் றறிந்திலமே.

(கு - உரை.) கறை - விடம். இ மாது - இப்பெண்ணானவள். மாதவர் போல் - முனிவர்களைப்போல். முன் - முதலில். மறை - இரகசியம், மந்திரம். அம்மனை - அம்மானை, அழகியவீடு. இவை - உணவொழித்தல் முதலிய இச்செயல்கள். இதனால் - இன்னகாரணத்தால். மாதவர்களுக்கு உணவொழித்தலும் மந்திரம் கூறுதலும் மனையை வெறுத்தலும் உடல்

வாடுதலும் இயல்பு; "ஊன்கெடு மார்பின், என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகற், பலவுடன் கழிந்த உண்டியர்" முருகு. 129-31.

உணவொழித்தலும் உடல்வாடுதலும் முறையே, "உண்டியிற் குறைத லுடம்புநனி சுருங்கல்" (தொல். மெய்ப். சூ. 22) என்னும் மெய்ப்பாடுகள்.

## ஐயந் தீர்தல்.

(சில குறிப்புக்களால் பாங்கி சந்தேகம் நீங்குதல்.)

69. அரிய மறைப்பொரு டன்னைமுன் னூல்வருக் காலடியில்
தெரிய வுணர்த்தரன் கோடீச் சுரமன்ன தேமொழியின்
சரியை கிரியைக ளையந் திரிபின்மை சார்ந்தினிது
விரியுறும் போதோ ரிறையோக ஞானம் விளக்கின்றவே.

(கு - உரை.) மறைப்பொருள் - வேதார்த்தம்; "அன்றாலின்கீழ்த், திருந்துமறைப் பொருணால்வர்க் கருள்செய் தானை" (திருநா. தே.) சரியை - ஒழுக்கம். கிரியை - தொழில். ஐயம் திரிபின்மை சார்ந்து - சந்தேக விபரீதமில்லாமல். ஓர் இறை - ஒரு தலைவனுடைய. யோக ஞானம் - சேர்க்கையுடையாளென்னும் அறிவை. சரியை கிரியைகள் விளக்கின்றன.

சரியை முதலிய நாற்பாதங்கள் இதில் முறையே தொனிக்கின்றன.

## பிறை தொழுகென்றல்.

(பிறையைக் கைகூப்பி வணங்குகவென்று பாங்கி தலைவிக்குக்கூறுதல்.)

70. அணிதாங்கு கோடீச்சு ரேசர்தங் கட்பொறி யாதலினல்
மணிதாங்கு வேலை மகிழ்வுற்ற தாலுயர் வானகத்திற்
கணிதாங் குடுக்களின் காதல னற்பிறை கந்தனைக்கும்
பணிதாழ் கருங்குழன் மாதே பணியிற் பலன்றருமே.

(கு - உரை.) சந்திரனுக்கும் முருகக்கடவுளுக்கும் சிலேடை.

கட்பொறி - கண்ணாகிய இந்திரியம், கண்ணிலுண்டாகிய தீப்பொறி; இறைவனுக்கு இடக்கண் சந்திரன். மணிதாங்கு வேலை - இரத்தினங்களைத் தாங்கிய கடலில்; கடலுக்கு இரத்தினாகரமென்று ஒருபெயருண்டு; மணியென்னும் உறுப்பைத் தாங்கிய வேற்படையை; "வேலின் கடைமணிபோற் றிண்ணியான்" (திரிகடுகம், 33.) கணி - கணித்தல். உடுக்களின் காதலன் - நட்சத்திரங்களின் தலைவன், கார்த்திகை நட்சத்திரமகளிரின் பிள்ளை; கார்த்திகேயன் என்னும் திருநாமம் இதனை விளக்கும். பணி தாழ் - ஆபரணங்கள் தங்கப்பெற்ற, பாம்பு

வணங்கும்; குழற் பின்னலுக்குப் பாம்பு உவமை கூறப்படும். பணியின்-வணங்கினால். தலைவி குறிஞ்சி நிலத்தினளாதலால் அத்திணையின் தெய்வமாகிய முருகக்கடவுளை உவமை கூறினள்.

ஈற்றடி மடக்கு.

சுனைவியந்துரைத்தல்.

(தலைவியின் வேறுபாடுகளைக் கண்ட தோழி இவ்வேறுபாட்டிற்குக் காரணம் யாதென்று கேட்டவிடத்து அவள் ஒரு சுனையாடி வந்தேனென்று கூறப் பாங்கி, 'சுனை இங்ஙனம் செய்ததோ?' என்று அச்சுனையை வியந்து கூறுதல்.)

71. தோடுறுங் காதினர் கோடைச் சுரநம்பர் தூய்வரைநீ
ஆடுறும் போதிற் பிறழும் பணிக ளவைதிருத்திக்
கோடுறு நெற்றித் திலகமுந் தீட்டிக் குறுவெயர்ந்
தேடுறுங் கோதைநின் கோதையிற் சூட்டிய தெச்சுனையே.

(கு - உரை.) பிறழும் பணிகள் - பிறழ்ந்து கிடக்கும் ஆபரணங்களை. கோடுறு - வளைந்த. தீட்டி - எழுதி. குறுவெயர் ஈந்து-குறிய வேர்வையை அளித்து. ஏடு - மலரிதழ். கோதை - பூமாலை, கூந்தல்.

ஈற்றடி மடக்கு.

சுனைநயப்புரைத்தல்.

(அச்சுனையினிடத்துத் தனக்குள்ள விருப்பத்தைப் பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்.)

72. நங்கந்த ரத்த ருமைக்கீந் திடுமத்தர் நஞ்சமரும்
வெங்கந் தரத்தர்தென் கோடைச் சுரநித்தர் வெற்பிடத்தில்
சங்கந் தருமுத்தந் தந்திடு மேலென் றனையுமளி
அங்கந் தருவ மிசைக்குஞ் சுனைக்கழைத் தேகணங்கே.

(கு - உரை.) நம் கந்தர் அத்தர் - நம்முடைய முருகக்கடவுளின் தந்தையார்; குறிஞ்சி நிலத்தினளாதலின் நங்கந்தரென்றாள். உமைக்கு ஈந்திடும் அத்தர்; அத்தம் - பாதி உடம்பு. நஞ்சு அமரும் வெ கந்தரத்தர்; கந்தரம் - கழுத்து. சங்கம் தருமுத்தம் - புணர்ச்சியால் தரப்பெற்ற வாய் முத்தங்களை; முத்தம் - குறுவெயர்வுமாம்; சங்கினாற் றரப்பட்ட முத்துக்களென்பது மற்றொருபொருள்; சங்கந்தருமுத்து: "சங்கந் தருமுத்தி யாம்பெற" (சிற். 85.) அளி - வண்டு. அம் கந்தருவம் இசைக்கும் சுனை - அழகிய பண்ணைப் பாடும் சுனை; அன்பையுடைய அழகிய கந்தருவ மணத்தைப் பொருந்தச்செய்கின்ற சுனையென்பது மற்றொரு பொருள்.

இச்செய்யுளில் திரியணி அமைந்துள்ளது.

### தகையணங்குறுத்தல்.

(தலைவியின் வேறுபாட்டைக் கண்ட பாங்கி அவளைத் தெய்வப்பெண்ணாகப் பாவித்துக் கூறுதல்.)

73. மருமல ரோன்பணி கோடீச்சு ரேசர் வரைவருநீ
திருமக ளோமதன் காதலி யோவெங்க டேமொழிதன்
உருவுளை யன்னள் புனலாடற் கேகின ளுற்றிடுஞ்சற்
றிருவிரு மேவி விளையாட லாமிங் கிருவிருமே.

(கு - உரை.) மரு-மணம். வரைவருநீ - மலையில் வந்த நீ; எழுவாய். மதன்காதலி - இரதி. ஓகாரங்கள் ஐயப்பொருளன. எங்கள் தேமொழி யென்றது தலைவியை. உரு உளை - உருவமுள்ளாய். உற்றிடும் - வந்து விடுவாள். சற்று இரு இரு - சிறிதுநேரம் இருப்பாயாக; அடுக்கு விரைவு பற்றிவந்தது. நீவிர் இருவிரும் விளையாடலாம்.

ஈற்றடி மடக்கு.

### நடுங்க நாட்டம்.

(தான் கூறிய மொழியால் தலைவி நடுங்காநிற்ப அதனைப் பாங்கி நாடுதல்.)

74. ஆரூர் மழுவினர் கோடீச் சுரவெற்பி லாரணங்கே
பாரூர் வதுவோ பறப்பது வோவெம் பகையிடத்தில்
போரூர்செங் கோடுறு வன்கொடுங் குன்றம் புரையுமொரு
காரூர்கைம் மாக்கொள வேலெறிந் தானொரு காவலனே.

(கு - உரை.) ஆர்-கூர்மை. பார் ஊர்வதுவோ - பூமியின்கட் செல்வதோ. பறப்பதுவோ - பறந்துசெல்லும் தன்மையை உடையதோ; என்றது யானையை. ஓகாரங்கள் வினாப்பொருளினும் ஐயப்பொருளினும் வந்தன. போரூர் செங்கோடு உறு - போரைச்செய்கின்ற செந்நிறமுடைய கொம்பை உடைய. கொடுங்குன்றம் புரையும் - கொடுமையாகிய மலையை ஒத்த. கை மா - யானை. கோடுறுகைம்மா; புரையும் கைம்மா. கைம்மாக்கொள்ள வேலெறிந்தான்-கைம்மாவை அகப்படுத்திக்கொள்ள அதன்மேல் ஒரு வேற்படையை எறிந்தனன்; யானையை அடக்குவதற்கு வேற்படையை எறிதல் மரபு; "கைவேல் களிற்றொடும் போக்கி" (குறள், 774.) என்பதனாலும் அறிக. தலைவனைக்குத்தி அந்த யானையின் கோடு சிவந்ததோ? வேலொன்றைக் குத்தி அது சிவந்ததோவெனத் தலைவிக்கு ஐயமுண்டாகும்படிச் செங்கோடென்பது அமைந்திருப்பதால் இத்துறை நடுங்க நாட்டமாயிற்று; "செங்கோட்டி யானைமுன் வேலெறிந் தாரொரு சேவகரே" சீகாழிக். 96.

இதில் ஆரூர், போரூர், செங்கோடு, கொடுங்குன்றமென்னும் தலப் பெயர்கள் தோற்றுகின்றன.

## தலைவன் பாங்கியை இரவு வலியுறுத்தல்.

(பாங்கியை இரத்தற்குத் தலைவன் துணிதல்.)

75. கருதடி யார்கட் குயர்வர நல்குங் கருணையினார்
பருவரை வில்லினர் கோடீச் சுரவெற்பிற் பாங்கியெனும்
திருவிங் கிருக்கின் றனளிவட் போற்றினச் செல்வநல்கும்
மருவினச் செல்வமுன் வேண்டின்ப மெய்தும் வழியிதுவே.

(கு - உரை.) வரை வில் - மேருமலையாகிய வில். பாங்கி என்னும் திரு - பாங்கி என்கின்ற திருமகள். இவட்போற்றின் - இவளைப் போற்றினால். அச்செல்வமென்றது தலைவியை; அ : நெஞ்சறிசுட்டு. பாங்கியைத் திருவென்றதற்கேற்பத்தலைவியைச் செல்வமென்றான். அச்செல்வம் மருவின் - அச்செல்வத்தை யாம் அடைந்தால். எய்தும்: முற்று. இது வழி - பாங்கியைச் சார்ந்து இரத்தலே தலைவியைப் பெறுதற்கு உபாயமாகும்.

கருது அடியார்கட்கு உயர்வரம் நல்கும் கருணையினாரது வெற்பிலுள்ளவளாதலின் பாங்கி யாம் விரும்பியதை அளிப்பாளென்றபடி.

## பாங்கியை ஊர் வினுதல்.

(அங்ஙனம் துணிந்த தலைவன், 'உம்முடைய ஊர் யாது?' என்று பாங்கியை வினுதல்.)

76. மதியிருக் கும்வடி வாள்போ லிருக்கும் வரிவிழியாய்
நதியிருக் குஞ்சடைக் கோடீச்சு ரேசர் நகத்துறுநின்
பதியிருக் குந்தலம் வாரோ புலியோ பகர்நியிங்குக்
கதியிருக் குந்தலந் தேடுடு வேன்சென்று கண்ணுறவே.

(கு - உரை.) வடிவாள் - கூரியவாள். மதியிருக்கும் வடிவாளென்றது இல்பொருளுவமை; மதியென்றது முகத்தை. நகத்து - மலையின் கண். பதி - ஊர். ஓகாரங்கள் ஐயப்பொருளன. கதியிருக்கும்தலம் - எனக்குப் புகலிடமாக இருக்கும் தலத்தை; கதி - அடைக்கலம், புகலிடம்; "கதியா வதுபிறிதி யாதொன்று மில்லை" (திருவிடை. மும்மணி. 6); "எனக்கி னிக்கதி யென்சொலாய்" (திவ். திருமாலை, 30.) கண்ணுறத் தேடுவேனென்க.

பாங்கிதலைவியென்னும் இருவரையும் நோக்கிக் கூறுதல் மரபாயினும், "ஒன்றித் தோன்றுந் தோழி" (தொல். அகத். சூ. 39), "ஒன்றுமிவட்கும்" (சிற். 288) என்பவற்றால் ஒற்றுமைபற்றிப் பாங்கியை

நோக்கித் தலைவன் கூறியதாகக் கூறினர்; கூறினும் தலைவியையும் சுட்டியதாகக் கொள்க; இது பின்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

## பெயர் வினாதல்.

(உம்முடைய பெயரென்னவென்று பாங்கியைத் தலைவன் கேட்டல்.)

77. கந்தனைத் தந்தவர் கோடீச் சுரவெற்பிற் கண்டவுனை
இந்திரை யென்றனன் யானென துள்ள மிரதியெனும்
அந்தரர் கோன்றுணை யென்றார் சிலரிதை யாய்ந்திடுவான்
வந்தன னின்பெய ரிங்கெனக் கோதுக வாணுதலே.

(கு - உரை.) கந்தனை - முருகக்கடவுளை. இந்திரை - திருமகள். என் உள்ளம் இரதி எனும் - என்னுடைய மனம் இரதிதேவியென்று தெரிவியாநிற்கும்; இரதி - மன்மதன் மனைவி, இரதிப்பாயாக. அந்தரர் கோன்துணை - இந்திராணி; துணை - மனைவி. பெயரை ஓதுக.

## மான் வினாதல்.

(தன் வேட்டையில் தப்பிய மான்வந்ததோவென்று தலைவன் கேட்டல்.)

78. படிபுகழ் சீரினர் கோடீச் சுரத்தெம் பரமர்வெற்பின்
முடிமிசை வேட்டத்தி னெய்திடு மென்கணை முன்னர்த்தப்பிப்
பிடியென வோர்மா னடந்தது நானும் பிடிபிடியென்
றடியுற வந்தனன் காணேன்கண் டாற்சொல் லணியிழையே.

(கு - உரை.) சீர் - செல்வம். வெற்பின் முடிமிசை - மலையின்மேலே. வேட்டத்தின் - வேட்டையாடுதற்கு. எய்திடும் - வந்த, பிரயோகித்த. கணைதப்பி - பாணத்தைத்தப்பி, கண்ணைத்தப்பி. பிடியென - பெண்யானையைப்போல; விரைந்து நடத்தல்பற்றிப் பிடி மானுக்கு உவமை. பிடிபிடியென்று - பிடிப்பாய் பிடிப்பாயென்று.

இதில் மூன்றாவதடி சொற்பின்வருநிலையணி.

## வழி வினாதல்.

(தலைவியின் ஊர்க்குச் செல்லும் வழியைத் தலைவன்கேட்டல்.)

79. பெருவா னவர்புகழ் கோடீச் சுரேசர் பிறங்கன்மின்னே
கருவாய் வனத்தைக் கடந்தெளி யேனுட் களிப்பினொடு
மருவாய் பொழில்சூழ் சிவபுரங் கூடும் வழியுனது
திருவாய் மலர்ந்திங் கிதுதா னெனவொன்று செப்புகவே.

(கு - உரை.) கருவாய் வனத்தை - இலவங்கமரக்காட்டை, பிறவிக் காட்டை. சிவபுரம் - மங்களத்தையுடைய ஊர்; என்றது தான் மணத்தற்குரிய தலைவியிருக்கும் ஊரென்று குறிப்பித்தபடி.

சிவலோகம் கருவாய்வனம், சிவபுரமென்பன இரண்டு தலங்கள்.

## மொழி வினுதல்.

(யான் வினவியவற்றிற்கு விடையளித்திடுகவென்று தலைவன் கேட்டல்.)

80. ஆலார் நிழலுறை கோடீச் சுரவள்ள லம்பொன்வெற்பின்
பாலா ரிடத்திற் சிலர்திரு வாய்மொழிப் பண்பறிந்தேன்
சேலாம் வரிவிழி யாயித் தலத்திற் செவியுணர
மாலா மெனக்குன் றிருவாய் மொழியொன்று வந்துரையே.

(கு - உரை.) ஆல் - ஆலமரம். வெற்பின்பாலார் இடத்தில் - வெற்பின்கண்ணுள்ள மக்களிடத்தில். திரு வாய் மொழி பண்பு - அழகிய வாயிற்றோன்றும் சொல்லின் குணங்களை. மாலாம் எனக்கு - மயக்கமுடைய எனக்கு; திருமாலாகிய எனக்கென்பது மற்றொரு பொருள். ஒன்று வந்து உரை - எனக்கு முன்னே வந்து ஒருமொழியை உரைப்பாயாக; ஒன்றை உவந்து உரையெனலுமாம். மாலுக்குத் திருவாய்மொழி கூறுதல் மரபென்பது ஈண்டு உணரற்பாலது.

## இவர்மனத்தெண்ணம் யாதெனத் தேர்தல்.

(இவர் கூறுவனவற்றுள் ஒன்றற்கு ஒன்று மாறுகவுள்ளது, ஆதலால் இவர் எண்ணம் யாதோவென்று பாங்கி ஆராய்தல்.)

81. வையுற்ற சூற்படைக் கோடீச் சுரேசர் வரையிலிவர்
மையுற்ற வேழம்பல் கேழலெய் தோமென வன்மைசொல்வார்
கையுற் றதுதழை வாயுற் றதுபொய் கருத்துற்றதூஉம்
மெய்யுற்ற தூஉமறி யேமெவ ரோவிந்த வித்தகரே.

(கு - உரை.) வை - கூர்மை. சூற்படை - சூலாயுதத்தையுடைய. மையுற்றவேழம் - கருமையையுடைய யானையை; மேகத்தை ஒத்த யானையெனலுமாம்; உற்ற: உவமவாசகம்; "தோளுற்றொரு தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்தவாறும்" (சீவக. 10.) பல்கேழல் - பல பன்றிகளை. வன்மை - பராக்கிரமம். கை - இவர்கையில். கருத்து உற்றதூஉம் - மனத்திலுள்ள எண்ணமும். மெய் - உடம்பு. வித்தகர் - திறமையையுடையவர்.

யானை முதலியவற்றை எய்தேமென்பர்; அதற்கேற்பக் கையிற் படைக்கலமில்லை. சொல்வதோ பொய். இவர் கருதியதை அறியோம்.

எண்ணந் தெளிதல்.

(மேற்கூறிய ஆராய்ச்சியால், தலைவியைப் பெறுதற்குத் தலைவன் எண்ணினனென்று பாங்கி துணிதல்.)

82. குழைகாட்டுங் காதினர் கோடீச்சு ரேசர் குவட்டிலிந்த [ர்
நுழைகாட் டிடையிவர் வில்லோடம் பின்றி நுழைந்துவந்தோ
மழைகாட் டியமத மாவந்த தோவெனு மாற்றம்பொய்கைத்
தழைகாட்டி நங்குல மானைக்கொண் டேகிடச் சார்ந்தனரே.

(கு - உரை.) குழை-குண்டலம். நுழைகாடு - நுழைந்து செல்லுதற்குரிய இளமரக்கா. மழைகாட்டிய மதமா - மழைபோன்ற மதநீரையுடைய யானை. நம் குலமானை - நம்முடைய தலைவியை.

மானைத் தழைகாட்டிப் பிடிப்பது வழக்கமென்பது இங்கே அறிதற்பாலது.

இருவரும் உளவழி ஒருமையிற் போதல்.

(இருவரும் - தலைவியும், பாங்கியும். ஒருமையில் - தனிமையாக; பாங்கனில்லாமல்.)

83. திறல்விடை யூர்தியர் கோடீச்சு ரேசர் திருவருளும்
உறுமுனர் நாஞ்செய் தவப்பேறும் போலிங் கொருமுகிலிற்
செறியிரு மின்போ லரசியும் பாங்கியுஞ் சேர்ந்துறைந்தார்
குறுகிவின் மாரன் கொடுங்கோ னடாத்துதல் கூறுவமே.

(கு - உரை.) திருவருளும் தவப்பேறும் முறையே தலைவிக்கும் பாங்கிக்கும் உவமை. உறு முனர் - அருளை அடைவதற்குமுன். தவத்தால் திருவருளை அடைதல்போலப் பாங்கியால் தலைவியை யடையலாமென்பது கருத்து. இருமின்போல் - இரண்டு மின்னல்களைப்போல். ஒரு முகிலிற் செறி இருமின்போல்: "ஒருகோட்டி னிற்கு மிருகனி போல வுயர்ந்தகொங்கை, யிருகோட் டிருவரு மிங்கிருந்தார்" (திருவாரூர்க் கோவை, 88.) கொடுங்கோல் - கொடுமையாகிய அம்பு, செங்கோலுக்கு மறுதலையாகிய கோல்; "மதன் கொடுங்கோல்" கோடீச். 260.

அரசியினிடத்திற் சிற்றரசனாகு கொடுங்கோன்மையை விண்ணப்பித்தல் மரபு.

## மனம் வினாதல்.

(என் மனம் உங்களிடம் வந்ததோவென்று தன்
விருப்பம் புலப்படும்படி தலைவன் கேட்டல்.)

84. திங்கட் கொழுந்தணி கோடீச்சு ரேசர் சிலம்படிக்கண்
தங்கிய வென்மன மாங்கொரு காலென் றனையறியா
தெங்குஞ் சரிக்கு முடன்மீண் டிடுமஞ்சி யிப்பொழுதீண்
டுங்கடம் பாலுற்ற தோமங்கை மீருண்மை யோதுமினே.

(கு - உரை.) திங்கட்கொழுந்து-பிறையை. சிலம்படிக்கண் தங்கிய-சிலம்பையணிந்த திருவடிக்கண்ணே நிலைபெற்ற. என்மனம்: எழுவாய். சரிக்கும் - சஞ்சரிக்கும். அஞ்சி உடன் மீண்டிடும். உற்றதோ; ஓ: வினா. என்மனம் உங்களிடத்தே தங்கியிருக்கின்றதென்பது கருத்து.

## ஒழிந்தது வினாதல்.

(முன்னம் தான் கேளாததொன்றைத்
தலைவன் கேட்டல்.)

85. மாலோர் புறங்கொண்ட கோடீச்சு ரேசர் வரையிடைநீர்
ஆலோல மென்னுங் குரலே வழிமறித் தன்னமன்னீர்
பாலோடுங் கிள்ளைக ளெல்லாம் வருவித்துப் பைந்தினையின்
மேலோங் கிடுகுர லெல்லா மினிது விருந்திடுமே.

(கு - உரை.) மால்-திருமாலை; "திருமாலோர் பாகத் தான்காண்", "திருமாலோர் பங்கத் தான்காண்" (தி௫நா. தே.) நீர் - நீங்கள். ஆலோலமென்பது கிளிமுதலியவற்றை ஓட்டுவதோர் சொல்; "மலரின் மின்னெனப் பணைமேலெயினர்த மகளிர், இலக நின்றுதே னிறைத் தவி ஞாலோல மெனலும், நிலவு செந்தினைக் கதிர்கொள நெடுஞ்சினை வேங்கை, குலவு பைங்கிளிக் குலமெதிர் கூவிடுங் குறிஞ்சி" (தி௫விடை. நாட்டு. 43); "பூவைகாள் செங்கட் புறவங்கா ளாலோலம், தூவிமா மஞ்ஞைகாள் சொற்கிளிகா ளாலோலம், கூவல்சேர் வுற்ற குயிலினங்களாலோலம், சேவல்கா ளாலோல மென்று டிருந்திழையாள்" (கந்த. வள்ளி. 54.) குரல் : எழுவாய். பால் ஓடும் கிள்ளைகள் எல்லாம் - பக்கத்தில் ஓடுகின்ற கிளிகளெல்லாவற்றையும். தினையின் குரல் எல்லாம் - தினையின் கதிர்களை எல்லாம்.

குரலால் இவர்களைத் தம் இனமென்பது கருதிக் கிளிகள் வந்தன வென்பது கருத்து.

குரலே குரலையெல்லாம் விருந்திடுமென்பது இதிலுள்ள நயம். பாலோடும் விருந்திடுமென வேறொரு பொருளும் தோற்றுகின்றது.

### பாங்கி எதிர்மொழி கொடுத்தல்.

(எதிர்மொழி - விடை.)

86. மலையாய வில்லினர் கோடீச்சு ரேசர் வரையிலுன்கைத்
தலையார் கணைக்கும் விழிக்கு மனத்திற்குந் தப்பியெங்கும்
நிலையாதிங் குற்ற கலைகண்டி லேமைய நீடுநின்போற்
கலையாய் வதற்குப் பொழுதுள தோபுனங் காப்பவர்க்கே.

(கு - உரை.) மலையாய வில்; மலையாய இல்லெனவுமாம்; இல்-வீடு. கைத்தலை - கையிடத்தில். இங்குற்ற கலை - இங்கே வந்த மானை. கலை ஆய்வதற்கு-மானை ஆராய்ந்து பார்த்தற்கு, நூலை ஆராய்ந்து பார்த்தற்கு.

### இறைவனை நகுதல்.

(பாங்கி தலைவனைப் பரிகாசம் செய்தல்.)

87. இழைவளர் மார்பினர் கோடீச்சு ரேச ரிமவரைமேல்
கழைமதன் போதுகொண் டெய்திட லோர்ந்திவர் கான்விலங்
தழையதி னெய்திட வெய்தின ரீண்டித் தழையதனுல் [கைத்
மழைமத வேழங் கயமா முழையு மறிதருமே.

(கு - உரை.) இழை - பூணூல்; ஆகுபெயர்; "இழைதழுவு வெண்ணூலு மேவுதிருமார்பி னீசன்" (தே.) கழை - கரும்புவில்லையுடைய. போதுகொண்டு - பூவைக்கொண்டு. இவர் - இத்தலைவர். தழையதின் எய்திட - தழைகளால் எய்வதற்கு. ஈண்டு எய்தினர். மன்மதன் பூவாலெய்வதை யறிந்து இவர் விலங்குகளைத் தழையாலெய்ய எய்தின ரென்பது ஒரு நயம். வேழம் கயமாம்; கயம் - க்ஷயம் (அழிவு); கயமென்னும் பெயரை யுடையதாம். உழை - மான். மறிதரும் - மடங்கும், குட்டியை ஈனும்; மறி - மான்குட்டி.

விலங்கைத் தழையதின் எய்திட எய்தினரென்பது முதலியவற்றுல் இறைவனை நகுதல் பெறப்பட்டது.

எய்திடவெய்தினரென்பது மடக்கு.

### பாங்கி மதியின் அவரவர் மனக்கருத்துணர்தல்.

(தலைவன் தலைவிகளின் எண்ணங்களைத் தன் ஆராய்ச்சியினுலே பாங்கி அறிந்துகொள்ளுதல்.)

88. நிறக்குந் திணைகொண்டு கோடீச் சுரநித்தர் நீள்வரைக்கண்
பறக்குஞ் சுகமிவள் பாரா ளிவன்சுகம் பார்க்குமிவன்
மறக்குஞ் சரத்தை மறந்தின்ன வள்விழி வன்சரத்தை
உறக்கண் ணுறுமிவர் வேட்டமுங் காப்பு முணர்வுற்றவே.

(கு - உரை.) கிறக்கும் - ஒளியைச்செய்கின்ற; "கிறக்கும் பதந் தொழு தூய்யவெண் ணீர்" (திருவேங்கடத். 28.) திணைகொண்டு பறக்கும் சுகத்தை இவள் பாராளாய், இவனாலடையும் இன்பத்தையே பார்ப்பாள்; சுகம் - கிளி, இன்பம்; "சுகமே சுகமேயிரும்" (அருணைக்கலம்பகம், 18) பறக்குஞ்சுகம்: வெளிப்படை. மறம் குஞ்சரத்தை - வீரத்தையுடைய யானையை. இவள் விழியாகிய வன்சரத்தை இவன் கண்ணுறுவான். ஒரு சரத்தை மறந்து ஒரு சரத்தை இவன் கண்ணுறுவானென்பது தொனி. இவரென்பது தலைவனையும் தலைவியையும். தலைவன் வேட்டமும் தலைவியின் காப்பும்: எழுவாய். உணர்வுற்ற - உண்மையல்லவென்று அறியப்பட்டன.

இடையிரண்டடிகள் மடக்கு.

---

## பாங்கியிற் கூட்டம்.

[பாங்கியால் தலைவியைத் தலைவன் அடைதல்.]

### தலைவன் உட்கோள் சாற்றுதல்.

(தன் உள்ளத்திற் கொண்ட காதலைத் தலைவன் பாங்கிக்குச் சொல்லுதல்.)

89. சிற்றே ரிடைபங்கர் கோடீச்சு ரேசர் திருவருண்முன்
பெற்றேன்சிந் தாமணி வேண்டினு நீவிர் பெறக்கொடுப்பேன்
பொற்றே ரினையச் சுறுத்தல்கு லீரிங்குப் போதநும்பாற்
குற்றேவல் செய்யும் விருப்பினுற் றேனென்னுட் கோளிதுவே.

(கு - உரை.) கோடீச்சுரேசர் திருவருளைப் பெற்றேனாதலின், சிந்தாமணியை நீர் விரும்பினும் கொடுப்பேன்; உம்மை: உயர்வுசிறப்பு. போத - மிக. உட்கோள் - எண்ணம். அச்சுறுத்து - அச்சம் உண்டாகச் செய்யும், அச்சைப்பொருந்தும்படி செய்யும்; அச்சம்: தொகுத்தல்; "தேரை யச்சுறுத் தல்குலாள்" திருவிடை. சோம. 2.

### பாங்கி குலமுறை கிளத்தல்.

(தலைவன் குலத்தின் மேம்பாட்டையும் தங்கள் குலத்தின் தாழ்வையும் பாங்கி தலைவற்குச் சொல்லுதல்).

90. காரூர் களத்தரன் கோடீச் சுரமெனக் கற்றவர்சொல்
பேரூ ருனதிடஞ் சீறா ரெமதிடம் பேருறநீ
பாரூர் முழுவதுங் காப்போனெங் காவலிப் பைம்புனநீ
கூரூர் படைமன்ன னுங்குற மாதர் குறித்தருளே.

(கு - உரை.) கார் - கருமை. களம் - கழுத்து. சீறூர் - சிறுகுடி. பேர் உற - புகழ் உண்டாக. பார் ஊர் - பூமியிலுள்ள ஊர்கள். நீ காப்போனென இயைக்க. நீ மன்னன், யாம் குறமாதர்.

## தலைவன் தலைவியை உயர்த்தல்.

(உயர்த்தல் - மேம்படுத்திச் சொல்லுதல்.)

91. நங்கேதந் தீர்த்தருள் கோடீச் சுரநம்பர் நாட்டினிடைச்
செங்கேழ்வண் டாமரை சேற்றெழுங் கள்ளியிற் சீர்கொளகில்
இங்கே யுதித்திடு மெங்கே யுதிக்கினென் னேதில்பொருள்
சங்கே யெனுங்கள வுங்கள்பைம் பொன்னுமத் தன்மையளே.

(கு - உரை.) கேதம்-துன்பம். தாமரை சேற்றின்கண் உண்டாகும்; "சேற்றுவளர் தாமரை" (புறநா. 27 : 1); இதனைப் பங்கசமென்னும் பெயராலறிக. கள்ளியில் அகில் உண்டாதல்: "கள்ளி வயிற்றி னகில் பிறக்கும்" (நான்மணிக். 4); "பெருங்கள்ளியின், றுய்பிளந் தூக்ககாரகில்களும்" (கம்ப. தாடகை. 8.) ஏது-குற்றம்; "ஒருபே ருணர்வுடனே யுண்ணிறையுந் தேய, வருமே துறவென்பால் வைத்த.....கண்" (தண்டி. சூ. 22, மேற்.); "ஏதிலாக் கற்ப மெண்ணில சென்றன" (கந்த. அவையடக்கம், 15); ஏதமென்பதன் சிதைவுமாம். ஏதில் பொருள் எங்கே உதிக்கின் என்னகுறைவையுடையது? களம் - கழுத்து. பைம்பொன் - தலைவி.

"சாற்றிடு நளினஞ் சேற்றிற் சனித்ததாற் குறைவே தேனும், ஏற்றதோ நலனும் பொற்பு மிசைந்திடு பொருள்க ளெங்குத், தோற்றிலென்" (திருவிடை. நந்தக. 8) என்பது இச்செய்யுளோடு ஒப்பிடற்குரியது.

## பாங்கி அறியாள்போன்று வினுதல்.

(தலைவன் விரும்பிய மங்கையை இன்னுளென்று
அறியாள்போன்று அவனை வினுதல்.)

92. நனையாடு தண்பொழிற் கோடீச் சுரநம்பர் நல்வரைமேற்
சுனையாடு நர்பலர் பந்தா டுநர்பலர் சூழ்ந்தெழிலம்
மனையாடு நர்பல ரின்னரு ளிங்ஙனம் வாள்விழிகொண்
டுனையாடு வித்தவ ளார்மன்ன வாவுண்மை யோதுகவே.

(கு - உரை.) நனை-அரும்பு, கள். எழில் அம்மனை - அழகிய அம்மானையை. இன்னருள் - இவர்களுள்ளே. உனை ஆடுவித்தவள் - உன்னைச் சலிப்பித்தவள்.

## தலைவன் இறைவிதன்மை இயம்பல்.

(இறைவிதன்மை - தலைவியின் சிறப்பிலக்கணத்தை.)

93. நாகமங் கத்திற் புனையும் புராணர் நவின்மறையார்
பாகமங் கைக்கருள் கோடீச் சுரத்தெம் பரமர்வெற்பில்
ஆகமம் பொன்னுருக் காவியங் கண்ணிடை யாய்மதனூல்
சோகமங் குற்றிட வென்னையிவ் வாறுசெய் தூமொழிக்கே.

(கு - உரை.) நாகத்தை. அங்கம் - உறுப்பு. புராணர் - பழையவர். நவில் மறையார் - வேதத்தை அருளிச்செய்தவர். பாகம் - இடப் பாகத்தை. ஆகம் அம் பொன் உரு - உடம்பு பொன்னிறமுடையது. காவி அம் கண்; காவி - கருங்குவளை. இடை ஆய் மதன் நூல் - இடை மெலிந்த மன்மதனையும் நூலையும் போல்வது.

தூமொழிக்கு ஆகம் பொன்னுரு, கண் காவி, இடை மதனும் நூலு மென முடிக்க. இதில் வேறுபொருள்பட ஆகமம், காவியம், மதனூ லென்னும் நூற்பெயர்கள் வந்திருத்தலும் இவற்றிற்கேற்பப் பாட் டுடைத் தலைவரைப் புராணர் மறையாரென்றதும் அறிதற்பாலன.

## பாங்கி தலைவியருமை சாற்றல்.

(நீ குறித்த மங்கை பெறுதற்கரியளென்பதைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல்.)

94. உன்னுமப் பொன்னிங் கெளிதி னுறுதைய வுன்றனக்குப்
பொன்னுமின் பந்தருந் தேரு முரம்பெறு போர்க்களிறும்
இன்னும் பிறவுமெங் கோடீச்சு ரேசரெழிற்பதத்திற்
பன்னுந் துதியும் பரிவுமுள் ளோர்க்குப் பலிப்பனவே.

(கு - உரை.) அப்பொன்னென்றது தலைவியை; அ: உயர்வு குறித்து நின்றது. உரம் - வலி, மார்பு. தேர், களிறு, பிறவென்றவை தலைவியின் அவயவங்கள். பரிவு - அன்பு. கோடீச்சுரேசரைத் துதித்தலும் அவர் பால் அன்பும் உடையோர்க்கே பொன்முதலியன எய்தல் கூடும். அவரு டைய திருவருளிருப்பின் இவளை எய்தலாமென்பது கருத்து.

## தலைவன் தலைவி இன்றியமையாமை இயம்பல்.

(தனக்குத் தலைவி இன்றியமையாதவளென்பதைத் தலைவன் சொல்லுதல்.)

95. முன்னரவ் வேதனுங் காணு முடியினர் முத்தநகை
மின்னமர் பாகத்தர் கோடீச் சுரமன்ன வின்னுதலாய்

கன்னற் சிறுவிலை தன்னான் மெலிந்திடக் காலத்துங்கள்
அன்னமில் லாவிடிற் சற்றுநில் லாதென்ற னாருயிரே.

(து - உரை.) வேதனும்; உம்மை: உயர்வு சிறப்பு. மின் - உமாதேவியார். கன்னல் சிறுவில் ஐ தன்னால் - கரும்பு வில்லையுடைய தலைவனாகிய மன்மதனால். உங்கள் அன்னம் இல்லாவிடின் - உங்களுடைய அன்னம் போல்வாளாகிய தலைவி எனக்குக் கிடையாவிடின்.

நாழிகைதோறும் பண்டம் குறைகின்ற இச்சிறுவிலைக்காலத்தில் உங்கள் அன்னம் கிடையாவிடின் எனக்கு உயிர் நில்லாதென்பது மற்றொரு பொருள். கன்னல் - நாழிகை. சிறுவிலைக்காலம் - கொடுக்கும் பொருள் பெரிதும் கொள்ளும்பொருள் சிறிதுமாகிய பஞ்சகாலம்.

### பாங்கி நின்குறை நீயே சென்று உரையென்றல்.

(நின்குறை - நின்காரியத்தை. நீயேசென்று
தலைவியிடம் சொல்லுகவென்று பாங்கி கூறுதல்;
குறை - காரியம்; பெரும்பாண். 443.)

96. மின்னுறு தண்மதிக் காந்தமென் கல்லக மேவுமெழில்
உன்னுறு வண்ண மதிமுகங் காணி னுருகுமன்றிப்
பொன்னுறு கொன்றையர் கோடீச்சு ரேசர் பொதியவெற்ப
என்னுரை யாலுரு காதேகி நீயே யிசைநினைவே.

(து - உரை.) மின் - தலைவியினது. மதிக்காந்தம் என்கல் அகம் - சந்திரகாந்தமென்னுங் கல்லைப்போன்ற என் மனம்; என் அகம்: வினைத்தொகை; கல்லகம் உன்மதிமுகங்காணின் உருகும்; மதியைக்கண்டாற் சந்திரகாந்தம் உருகுதல் இயல்பு. என் உரையால் - என்னுடைய சொற்களால், யான்தேய்த்தலால்; உரை - சொல், தேய்த்தல். தேய்த்தாற் கல் குறைதல் இயல்பு. நின்னினைவை நீயே சென்று இசைப்பாயாக.

### தலைவன் பாங்கியைப் பழித்தல்.

97. மட்டார் மலர்ப்பொழிற் கோடீச் சுரநித்தர் வண்சிலம்பிற்
பெட்டாற் கரையேற் றெனவிரந் தோரைப் பெருகுவெள்ள
நட்டாற் றிடைவிடு வாரின்மின் னேநினை நம்பெனைக்கை
விட்டாயுன் வஞ்சி யெனும்பேர்ப் பொருளை விளக்கினையே.

(து - உரை.) மட்டு - தேன். பெட்டால் - விரும்பினால். நடு ஆறு இடை - ஆற்றின் நடுவிடத்தில். விடுவாரின்......கைவிட்டாய் - விடுவாரைப்போல நின்னை நம்பிய என்னைக் கைவிட்டாய். வஞ்சி - வஞ்சத்தையுடையவள், வஞ்சிக்கொடிபோல்வாள்; என்னை வஞ்சித்தாயென்றபடி.

நம்பினவர்களை நட்டாற்றில் விடலாகாது என்னும் பழமொழி இதில் அமைந்துள்ளது; 104-ஆம் செய்யுள் இதனோடு ஒப்பிடற்பாலது.

## பாங்கி தலைவி பேதைமை ஊட்டல்.

(தலைவியின் அறியாமையை மனங்கொள்ளும்படி பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.)

98. தண்ணார் கடுக்கையர் கோடீச் சுரவெற்ப சாற்றுமெங்கள்
பெண்ணா ரமுதனை யாண்மிகப் பேதை பெரிதுகந்து
கண்ணாடி நீழ லொடுபேசு வாள்கையிற் பாவையையி [ரே.
துண்ணாத தென்னென்ப ளெண்ணாளுன் னுள்ளத் துறுதுய

(கு - உரை.) ஆரமுது - பெறுதற்கரிய அமுதத்தை. பேதை - அறியாமையையுடையவள். உகந்து - விரும்பி. ஆடிநீழலொடு - கண்ணாடியிற் காணப்படும் பிரதிபிம்பத்தோடு. பாவையை - மரப்பாவையை. உண்ணாதது என் - உண்ணாமைக்குக் காரணம் யாது? "நீடிமரப் பாவை விளையாட நீவருகென், றாடி நிழலை யழைத்திடுவாள் — கூடிமுலைப், பாலுண் கிலதெனது பாவைமருந் தூட்டுமென்று, சேலுண்க ணன்னையர்பாற் செப்புவாள்" (பேருவுடை. 109-10.) உன் துயரை எண்ணாள்.

## தலைவன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

(தலைவி முதிர்ந்த அறிவுடையாளென்பதைத் தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.)

99. செங்கையங் நாளினர் கோடீச்சு ரேசர் சிலம்பிடைத்தன்
அங்கயற் கண்கொண் டெனக்குமைக் காட்டி யனங்கனுக்கும்
இங்கய லின்னவன் போக விடேலென் றிசைத்ததிரு
மங்கையைப் பேதையென் றோதலெவ் வாறு மடந்தையரே.

(கு - உரை.) செங்கை அம் நாளினர்-திருவாதிரையாகிய அழகிய நட்சத்திரத்துக்கு உரியவர்; "செங்கையினான்" (பேருவுடை. 3); "செங்கை யாட்டினார்" (திருநாகைச். கைமிசப். 1.) தன்னென்றது தலைவியை. உமைக்காட்டியென்றது வாயில்பெற்று உய்ந்ததனை (35.) இத்தலைவனை வேறிடம் செல்லவிடாதே என்று மன்மதனுக்கும் இசைத்த திருமங்கை போல்வாளை; "வாள்விழியான் மதனுக்கென்னைக் காட்டுவாள்" (கா. துற.) இத்தகைய பேரறிவுவாய்ந்தவளை நீ பேதையென்றல் எங்ஙனம் பொருந்தும். மடந்தையரே: "ஈர்ங்குழற் பேதையரே" சிற். 56, பேர்.

இதில் மங்கை, பேதை, மடந்தையரென்னும் பருவப்பெயர்கள் வந்துள்ளன.

### பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக் கூறல்.

(முன்னமே தலைவனுக்குத் தலைவியால் அமைந்திருந்த நட்பை அவனுக்குப் பாங்கி கூறல்)

100. கொற்றவ முன்னிற் சமைவுற்ற வன்னத்தைக் கொண்டிடின்னும்
உற்றிட நானென்னை கோடீச் சுரவள்ள லோங்கருளால்
மற்றிரு வார மணிமுடி யாதி மருவுமின்பம்
பெற்றிருப் போர்கட்கு வேண்டிடு மோபின் பிறரருளே.

(கு - உரை.) முன்னின் - முன்போலவே. சமைவுற்ற அன்னத்தை - மனம்பொருந்திய தலைவியை. என்னை - எதன்பொருட்டு; என்றாற் பயனில்லையென்றபடி. மற்று : அசை. வார இரு மணிமுடி ஆதி - கச்சையுடைய இரண்டாகிய அழகிய கிரீடம்போன்ற தனம் முதலியவற்றை.

முன்னமே தலைவியால் மிக்க நட்புடைய உனக்கு என்போன்றவர்களுடைய உதவி வேண்டுவதில்லையென்பது கருத்து.

சமைந்த சோற்றை நீயே கொள்வாயாக. அழகிய ஆரம் மணிமுடி முதலியவற்றைப் பெற்று அரசச்செல்வம் வாய்ந்தவர்களுக்குப் பிறரருள் வேண்டுவதில்லையே என்பது வேறு பொருள்.

இது சிலேடையொடு பொருந்திய வேற்றுப்பொருள்வைப்பணி.

### தன்னிலை தலைவன் சாற்றல்.

101. காதார் கயற்கண்ணி கோடீச் சுரநம்பர் காசிநின்றிப்
போதா ரளகக் குமரியுற் றாடப் புகனெறிக்கண்
மீதாம் வடமலை யாதிக ளேனக்குற்று மேவினன்முன்
நீதானஞ் செய்திடி னன்படி வேனச்ச நெஞ்சிலற்றே.

(கு - உரை.) கண்ணி : விளி. இ போது ஆர் அளகம் குமரி உற்று ஆட - இந்தப் பூக்கள் நிரம்பிய கூந்தலையுடைய தலைவியை அடைந்து சேர்தற்கு. புகல் நெறிக்கண் - புகும் வழியின்கண். மீதாம் வடம் மலை ஆதிகள் - மேலே யுள்ளனவாகிய முத்துவடங்களையுடைய நகில் முதலிய உறுப்புக்களை. நீ தானம் செய்திடின் - நீ எனக்குக் கொடுத்தால்.

இப்போது அருமையாகிய நீரையுடைய குமரியாற்றை ஆட நினைந்து வரும் வழியின்கண் வேங்கடமலை முதலியவற்றைத் தரிசித்து இங்கு அடைந்தேன். நீ முன்னே ஸ்நானம்செய்தால் நான் பின்பு அச்சமற்றுப்படிவேன் என்பது மற்றொருபொருள். அளகம், குமரி, ஆட, தானமென்பவை சிலேடை. தானம் - ஸ்நானம்; "தானமறி யான்மூன்று

சந்தியறியான்" (திருக்குற்றலப். மந்தமாருதச். 123.) ஆற்றில் நீராடச் செல்வோர் அதனிலையைத் தெரிந்துகொள்ளுதற் பொருட்டுப் பழகிய ஒருவரை முந்தி ஸ்நானம் செய்வித்துப் பின்பு தாம் ஸ்நானம் செய்தல் வழக்கம்.

குமரியென்றதை இங்ஙனம் சிலேடைப்பொருளில், "திருநீர்க் குமரியாட..............முந்திகலி இன்றமுதா மூப்பொழியு மென்றான்" (சீவக. 2020), "மழவுறக் கங்கை யாடி வந்தனன் குமரி யாட" (திருவால. 23 : 19), "கன்னியைக் கண்ணுற் றாட வந்தன மென்றனன்" (வி - பா. அருச்சுனன்தீர்த்த. 22), "மூப்பகல..........குமரியெய்தி யினிதாட வேண்டி வருகின்றனன்" (கந்த. வள்ளி. 97), "குமரி யாடக் குறுகிய விசய னென்றான்" (கூர்ம. கண்ணன்மணம். 133), "திரைக்குமுடன் மூப்பிது சிதைந்திளமை சேரும், வரைக்குமரி யாட வென" (தணிகைப். களவு. 129) எனப் பெரியோர் அமைத்திருத்தல் காண்க.

பாங்கி உலகியல் உரைத்தல்.

(ஒருமங்கையை ஒருதலைவன் மணஞ்செய்துகொள்
ளுதல்தான் முறையென்று தலைவனுக்குப்
பாங்கி சொல்லுதல் ; உலகியல் -
ஆன்றோரொழுக்கம்.)

102. கார்கொண்ட வாணவ மாதிக ணீக்கிக் கலந்திடன்பர்க்
கேர்கொண்ட வின்பருள் கோடீச் சுரவள்ள லேமவெற்ப
வார்கொண்ட பூவை யுறுகன் னிகையை வரைவுபெற
நார்கொண் டிசைப்பது மாலைய தாமிந்த நன்னிலத்தே.

(கு - உரை.) கார்கொண்ட ஆணவம் : "காரிட்ட வாணவக் கருவறை" (தாயுமானவர்.) கலந்திடு அன்பர்க்கு. இன்பத்தை. ஏமவெற்பு - மேருமலை; அஃது ஒரு சிவதலம்; "ஏமவெற் பென்றுகயிலாயவெற் பென்றுமலை யாசலத் தென்றுமுறை வார்" (மதுரைக்கலம். 80.) வார்கொண்டபூவை - தாமரைப்பூவை ; வார் - நீர். கன்னிகையை - திருமகள்போன்ற தலைவியை. வரைவு - கலியாணம். நார் - அன்பு. இசைப்பது - பொருந்தச்செய்வது. மாலையதாம் - இயல்பாகும்.

உட்கொட்டையை நீக்கிப் பூவை நாராற்கட்டுவது மாலையாகுமென்பது மற்றொருபொருள். கன்னிகை - உட்கொட்டை. வரைவு - நீக்கம்.

கன்னிகை, வரைவு, நார், இசைப்பது, மாலையென்பன சிலேடை. கன்னிகை : "பின்னிய புதல்வ ராலும் பிறந்தமென் புதல்வி யாலும், துன்னிய மகிழ்ந ரூலுந் துலங்கிய சுபலன் பாவை, தன்னிகர் பரிதி யாலுஞ் சதவித ழாலுஞ் செம்பொற், கன்னிகை யாலுஞ் சோதி கலந்த

செங் கமலம் போன்றாள்" (வி - பா. சம்பவச். 81.) நார்: "பூவுண்டு நாரொன் றிலையான் ஜெருடுத்துப் புனைவதற்கே" மீனாட்சி. திருவிரட்டை.

நீ வரைகென்றல்.

(நீ தலைவியை மணந்துகொள்ளுகவென்று பாங்கி அவனுக்குச் சொல்லுதல்.)

103. வன்னிக்கு முன்னர் நுமரோ டெமரு மகிழ்வுபெற
மன்னித் தலம்புகழ் கோவே தரளமும் வச்சிரமும்
பொன்னித் திரையெறி கோடீச் சுரநம்பர் பொற்சிலம்பிற்
கன்னிப் பிடியை வரைந்தணைப் பாய்புயக் கம்பத்திலே.

(கு - உரை.) வன்னிக்கு - நெருப்பிற்கு. அச்கினியை வளர்த்து அதன் முன்னர் மணஞ்செய்து கொள்ளுதல் மரபு. கன்னிப்பிடியை - தலைவியை.

குதிரையைக் கட்டுவதன்முன் பிடியைக் கம்பத்திலணைப்பாயென்பது மற்றொரு பொருள். வன்னி - குதிரை; "மறைமரபு சாலவரும் வன்னியிவை பொன்னிச், துறைவனுள முஞ்சுடும்" (திருவிளை. நரிபரி. 52.) பிடி - பெண்யானை.

தலைமகன் மறுத்தல்.

104. ஆவா வெனக்கை பிசைந்தாற் றழுங்கு மவரையொரு
நாவாய்செய் தேறிக் கொடுகரை வாவெனு நண்பரொத்தாய்
தேவா திபர்பணி கோடீச்சு ரேசர் சிலம்பணங்கை
நீவா குடன்மணந் துன்மா லகற்றென்று நேரிழையே.

(கு - உரை.) ஆவா - ஐயோ; "ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா ரொருசாரார்" (யா - கா. மேற்.) நாவாய் - கப்பல். நண்பர்: எதிர் மறை யிலக்கணை; விரோதமுடையாரென்றபடி. வாகு - அழகு. மால் - காமமயக்கத்தை. என்று - என்று கூறி. என்று நண்பரொத்தாயென இயைக்க.

பாங்கி அச்சுறுத்தல்.

(அச்சுறுத்தல் - அச்சம் அடையும்படி செய்தல்; அச்சம்: விகாரம்.)

105. படமன்னு பூணினர் கோடீச் சுரவெற்பின் பாலெம்முன்னர்க்
கடன்மன்னு மாலிற் களித்துநில் லேலிது கண்டனரேல்
அடன்மன்னு மிக்குன்ற வாணர்க டாமையுற் றையவுனை
விடமென்ன வந்து வளைந்துகொள் வாரிந்த வேலையிலே.

(கு - உரை.) படம் மன்னு பூண் - நாகாபரணம். கடல் மன்னு மாலின் - கடலைப்போன்ற காமத்தால், கடலில் நிலை பெற்றுள்ள திருமாலைப்போல. இது - இங்ஙனம் இங்கே நீ நிற்றலை. அடல் - கொல்லுதல். ஐயுற்று-சந்தேகமுற்று ; ஐயம் : விகாரம். விடம்-விடமாட்டேம், விஷம் ; “ விடமென வெழுந்திசை வளவன்...விடுத்தனன் சரங்கள் ” (திருவிடை. வரகுண. 50.) வேலை - காலம், கடல். மால், விடம் வேலையென்பன சிலேடை. கடையும் பொழுது பாற்கடலின்கரையில் நின்ற திருமாலை விடம் வளைந்து துன்புறுத்தியதென்னும் செய்தி இதில் தோற்றுகின்றது; 4-ஆம் செய்யுளைப் பார்க்க.

## தலைவன் கையுறை புகழ்தல்.

(கையுறை - தான்கொணர்ந்த அப்பொருளை; இங்கே
இதற்குத் தலைவியின்கையில் சேர்த்தற்குரிய
தென்பது பொருள். உறை - உறுத்தல்,
சேர்த்தல்; உயர்ந்தார்பாற் சேர்க்கப்
படின் இது காணிக்கை
எனப்படும்.)

106. மெய்யேந்து மிம்மணி கோடீச் சுரநித்தர் வெற்புறைவீர்
மையேந் துவரி யொளிநீள் கயிலை வரணை கம்பை
ஐயேந் திவற்றி னிடைய திதன்பே ரறையுமுன்னர்க்
கையேந்து வானிந் திரன்கொணர்ந் தேனுங் கருக்கெளிதே.

(கு - உரை.) இம்மணி - இந்த இரத்தினம் ; எழுவாய். மை - கருமை, மேகம். உவரி - கடல். வரணை - ஒரு நதி ; “ இலகுறு வரணை ” (சர. தறு.) கம்பை - ஒரு நதி. ஐ - அழகு. இவற்றின் இடையது - உவரி முதலிய இடங்களில் உள்ளது, உவரிமுதலிய சொற்களின் இடையெழுத்தாலாகியது ; வயிரம். இடையது: சிலேடை. இம்மணி இடையது என இயைக்க. இதன்பேர் - வச்சிரம் ; ஓராயுதம் ; இந்திரனுக்கு வச்சிராயுதம் உரியது.

கடலிலும் மலையிலும் நதிகளிலும் மணிகள் உண்டாதல் இயல்பு.

## பாங்கி கையுறை மறுத்தல்.

107. மேலோர் புகழ்பரன் கோடீச் சுரவள்ளல் வெற்புறைவோம்
ஏலோம் பிறரிடை யாங்கொடுப் போமிவ் வெழின்மணித்தார்
வேலோ டுலவு மரசே யுனக்கா மிலைந்திடுநின்
பாலோர்க் களித்தி யுதவுனைப் பாடிய பாவலர்க்கே.

(கு - உரை.) யாம் கோடீச்சுர வள்ளலது வெற்பில் உறைவோமாகலின் பிறரை யிரவோம் ; பிறர்க்குக் கொடுப்போம். தார் - மாலை.

வேலோடு - வேற்படையோடு. தார் உனக்கு ஆகும். (ஆதலால்) மிலைந்திடு - அணிந்துகொள்வாயாக. அளித்தி - கொடுப்பாய். உனைப் பாடிய பாவலர்க்கு உதவு.

எம்முடைய மலைத்தலைவர் கோடீச்சுரரும் வள்ளலுமாக இருத்தலின் யாம் ஒன்றுலும் குறைவிலேம் என்றபடி.

வேல் அரசு என்னும் மரப்பெயர்கள் தொனிக்கின்றன.

ஆற்று நெஞ்சிேடு அவன் புலத்தல்.

(பாங்கி மறுத்தலைப் பொறுத நெஞ்சையுடையவனுகித் தலைவன் வெறுத்துக் கூறல்)

108\. மழைநிகர் கண்டத்தர் கோடீச் சுரேசர் வரையினெஞ்சே
உழைநிகர் நோக்கிய ரேலாது வாடென்கை யொண்டளிரைத்
தழையுறு முன்னர்க் குழையென மேலவர் சாற்றினரோ
குழைவுறு கின்ற திதுநீ குழைவதென் கூறுகவே.

(கு - உரை.) மழை - பெய்யும் மேகம். உழை - மான். ஏலாது - ஏற்றுக்கொள்ளப்படாமல். தழையுறும் முன்னர் - தழையாக ஆவதற்கு முன்னமே. குழை - தளிர், குழைவாய்; சிலேடை. மேல் - பண்டைக் காலத்தில். இது - இத்தளிர்; இது குழைவுறுகின்றது. என் - யாது காரணம்.

பாங்கி தலைவனை ஆற்றுவித்தகற்றல்.

(ஆற்றுவித்து - தலைவனது துயரத்தை ஆறச் செய்து.)

109\. ஒருவிடிப் போதிது காலமன் றெல்லை யுதயத்துவா
மருவிடுன் மாலையை மன்னவன் ளுடன் மனந்திருத்தி
நிருவிகற் பத்தினர் கோடீச்சு ரேசர் நெடுவரைமேல்
அருவியின் மாமுலை மீதுற வாக்குவ ளுமிதுவே.

(கு - உரை.) இப்போது ஒருவிடு - இப்போது நீங்கு. இதுகாலம் அன்று. எல்லை உதயத்து - சூரிய உதயகாலத்து. மருவிடு - வாசனையை வீசுகின்ற, பொருந்திய. மன்ன : விளி. அன்னுள் தன் மனத்தை. நிருவிகற்ப : மாதியர் தங்கிய. நெடுவரைமேலுள்ள அருவியைப்போல. உன் மாலையை மலைமேலுள்ள அருவியைப்போலத் தோன்றும் வண்ணம் நகில்மேலுறும்படி செய்வேன்; தனத்திற்கு மலையும் முத்தாரத்திற்கு அருவியும் உவமை; சிலப். 5 : 1 - 3; நைடதம், நாடு. 3.

இதில் முதலிரண்டடிகளில் உதயம், மாலை யென்னும் பொழுதின் பெயர்கள் வந்துள்ளன.

## கிழவோன் மடலே பொருளென மதித்தல்.

(பனைமடலாற் செய்யப்பட்ட குதிரையின் மேலேறி வீதியிற்செல்லுத லே தலைவியைப்பெறுதற்கு உரிய உபாயமென்று தலைவன் கருது தல்; மடல்: ஆகுபெயர். முற்பட்ட நட்புடைய தலைவியைப் பின்னர்ப் பெறுதற்கு இயலாவிடின் அவள் உருவத்தையும் தன் உருவத்தையும் இருவர் பெயரையும் ஒரு படத்தில் எழுதுவித்துப் பனைமடலாற் செய்த ஒரு குதிரையின்மேலேறிப் புனைவன புனைந்துகொண்டு தலைவன் வீதியில் ஊர்ந்துவருதல் ஒரு சாரார்கொள்கை யென்றும் அதனைக்கண்ட பெரியோர் உண்மையுணர்ந்து அவ்விருவருக்கும் மணஞ் செய்விப்பரென்றும் கூறுவர்.)

110. பூவேறி னானு மலையேறி னானுமுன் போற்றிசைப்பச்
சேவேறி வந்தருள் கோடீச்சு ரேசர் சிலம்பினிடை
நீவேறு கண்ணிக் கலையனெஞ் சேயிங்கு நீடுமடல்
மாவேறி மெள்ளப் பிடித்திடு வோமந்த வன்குயிலே.

(சூ - உரை.) பூவேறினான் - பிரமன். அலையேறினான் - திருமால். சே - இடபம். வேறுகண்ணி - வேறு நினைந்து. கலையல் - கலக்கமுறாதே. மடல் மா ஏறி - பனைமடலாற் செய்யப்பட்ட குதிரையின்மேல் ஏறி. குயிலென்றது தலைவியை.

நீ வேறு கண்ணிக்கு அலையல் எனப்பிரித்து, குயிலைப்பிடித்தற்கு வேறு கண்ணிக்கு அலையாதே என்பது மற்றொரு பொருள்; கண்ணி - பறவைகளைப் பிடித்தற்குரிய ஒருவகை வலை; "கண்ணி குத்தடா" (சா. குற.); "கண்ணிகொண்டு வாடாகுறவா" (குற்றலக்குறவஞ்சி.) மடல் மா- பூவையுடைய மாமரம்; மடல்: ஆகுபெயர். குயில் மாமரத்தில் இருப்ப தாதலின் மாவேறிக் குயிலைப் பிடிப்போமென்றான்.

## உலகின்மேல் வைத்துரைத்தல்.

(ஒருவன், முன்னட்புள்ள தலைவியைத் தான் பெறு விடின் மடன்மா ஊர்ந்துசென்று பெறு வது உலகவழக்கமென்று தலை வன் பாங்கிக்குக் கூறுதல்.)

111. கோவார் நுதலினர் கோடீச் சுரவெற்பிற் கூறெளிதின்
மேவா மகளிர்கண் மேவுறு வானெஞ்சின் மேவுற்றுளோர்
பாவா யவர்கட மாவணத் தூடு பனையையொரு
மாவாகச் செய்து நடத்துவ ரீது மனுமுறையே.

(து - உரை.) கோ - கண். கூறு - சொல்வாயாக. மகளிர்கண் - மகளிரது பார்வையை. மேவுறுவான் - அடைவதற்கு. பாவாய்: விளி; என்றது பாங்கியை. அவர்கள்தம் ஆவணத்தூடு - அம்மகளிர்கள் பயிலும் தெருவினிடையே. பனையை ஒரு மாவாகச் செய்து - பனைமடலை ஒரு குதிரையாகச்செய்து; பனை: ஆகுபெயர். மனுமுறை - நிலைபெற்ற முறை; மன்னும்: தொகுத்தல் விகாரம்; மனுதர்மநூலிற் சொல்லிய விதியென்பது மற்றொரு பொருள்.

பனைமரத்தை மாமரமாகச் செய்வேனென்பது இதில் தொனிக்கின்றது.

அதனைத் தன்மேல் வைத்துச் சாற்றல்.

(அம்மடலூர்தலைத் தான் செய்வதாகத் தலைவன் பாங்கிக்குச் சொல்லல்.)

112. விடமுறு கண்டத்தர் கோடீச் சுரமன்ன மின்னினையோர்
படமதி லீதென் னெழுத்தென் றெவரும் பகுத்துரைக்கத்
திடமுறத் தீட்டிக் கரங்கொடு நாளைத் தெரித்தபனை
மடன்மிசை நம்மூர்த் தெருமேல் வருவேன் மதிநுதலே.

(து - உரை.) மின்னினை - தலைவியின் உருவத்தை. படம் - வஸ்திரம்; அதில் எழுதப்படுவதாகலின் உருவம் படமென்று கூறப்படும். என் எழுத்தென்று - யான் எழுதியதென்று; என்னுடைய தலையெழுத்தென்றென்பது மற்றொரு பொருள். மின்னினைப் படமதில் தீட்டியென இயைக்க. மடல் - மடல் மா.

பாங்கி தலைமகள் அவயவத்தருமை சாற்றல்.

(தலைமகளுடைய அவயவங்கள் படத்தில் எழுதுதற்கு அரியன என்பதைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லல்.)

113. விழியுறு பாலத்தர் கோடீச் சுரமன்ன மின்றிருவாய்
மொழியுறு காஞ்சி திகழுறு சீரங்க முந்திவற்றை
எழிலுறு மன்ன வெழுதுவை யோவுய்த் தெழுதுவையேற்
கிழியெனக் கண்டோ ருரையா தெழுதக் கிழிதனையே.

(து - உரை.) பாலம் - நெற்றி. மின் திரு வாய்மொழி - தலைவியின் அழகிய சொற்கள். காஞ்சி திகழுறு சீர் அங்கம் - காஞ்சி யென்னும் மேகலை விளங்குகின்ற சிறப்புடைய உறுப்பு; இடை. முந்து - முதலில். இவற்றை - மொழியையும் இடையையும். மன்ன: விளி. கிழியெனக் கண்டோர் உரையாது - கண்டோர் கிழி என்னுமல் உயிருள்ள பொருளென்றே கூறும்படி; கிழித்துவிடு என்று சொல்லாதபடி என்பது மற்

ஒருரு பொருள். அக்கிழிதனை - நீ எழுதுவதாகக் கூறிய அந்தப் படத்தை.

திருவாய்மொழியைப் பெற்றனவாகிய காஞ்சி சீரங்கமென்னும் தலங்களின் பெயர்கள் இதில் தொனிக்கின்றன. "மந்தா கினியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ, கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன், சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும், நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே" (திருவெங்கைக். 107) என்பது இதனோடு ஒப்பிடற்பாலது.

## தலைமகன் தன்னைத் தானே புகழ்தல்.

114. வண்ணவெண் ணீற்றரன் கோடீச் சுரவெற்பின் மாதரையோர்
விண்ணுக் குருவிலை யென்பா ரதுவுண்டு மேலதன்கண்
நண்ணுஞ் சுனையுண் டதிலொரு தாளிரு நான்முகையுண்
டெண்ணிவை சொல்லன் றெழுதித் தருவனிங் கிவ்வண்ணமே.

(கு - உரை.) மாது அரை ஓர் விண்ணுக்கு - தலைவியினது இடையாகிய ஆகாயத்திற்கு. உரு - உருவம். பூமியிலுள்ளோர் ஆகாயத்துக்கு வடிவில்லை யென்பரென்பது மற்றொருபொருள். அது உண்டு - உருவம் உண்டு. அதன் கண் - அவ்விடையாகிய ஆகாயத்தினிடத்து. சுனை யென்றது உந்தியை. ஒரு தாளின் முகைத்த இரண்டு தாமரையரும்புகள் உண்டு; என்றது உந்தியின்மேலுள்ள உரோமாவலியின் மேலன வாகிய நகில்களை. சுனை முதலியவற்றைத் தாங்கியிருத்தலால் இடைக்கு உருவுண்டென்று கூறினன்; "ஏதா யினுஞ்சற்றங் கில்லா திராதந்த வேந்திழைக்கே" தனிப்.

## பாங்கி அருளியல் கிளத்தல்.

(மடலின்பொருட்டுப் பனையை நீ வெட்டினால் அதன்
மேலுள்ள பறவைகள் துன்புறும். அப்பறவைகளின்
முட்டைகள் உடையும். ஆதலால் அச்செயல்
அருளியல்புக்கு மாறென்று பாங்கி
தலைவனுக்குக் கூறல்.)

115. சூலா யுதத்தினர் கோடீச் சுரவெற்பிற் றோன்றிடுநீ
சேலாய கண்ணி பொருட்டினித் தாலஞ் சிதைக்கினிதன்
மேலாய வண்டம் பலபோம் பலவுயிர் வீதலுறும்
மாலாய வுன்னை யுருத்திர னென்பர் மற்றயனே.

(கு-உரை.) பொருட்டினி-பொருட்டு இனி; பொருட்டின் இ. தாலம்-பனைமரத்தை, உலகத்தை. சிதைக்கின் - வெட்டினால். அண்டம் -

முட்டை, பல உலகத்தைத் தன்பாற் கொண்ட கோளம். உயிர் - பறவைகளின் உயிர். மால் - மயக்கம், திருமால். உருத்திரன் - அழித்தற்றொழிலையுடைய மூர்த்தி. அயனே - ஐயனே (முதற்போலி), பிரமனே.

நீ உலகத்தைச் சிதைத்தாற் பல அண்டங்களும் சிதையும்; பல உயிர்களும் கெடுமென்பதும் காத்தற்றொழிலையுடைய உன்னை அழித்தற்றொழிலையுடையவனென்று உலகங்கூறுமென்பதும் அறிதற்பாலன. இறுதியடியில் மும்மூர்த்திகளின் பெயர்களும் வந்துள்ளன.

பாங்கி கொண்டு நிலை கூறல்.

(தலைவன் குறையை உட்கொண்டு தான் உதவிசெய்ய நிற்றலைப் பாங்கி அவனுக்குக் கூறல்; நிலை - உடம்பட்டு நிற்றல்.)

116. ஒத்தேநின் னல்லெல்லா மிசைப் பேனெவ் வுலகினுக்கும்
வித்தே யெனும்புகழ்க் கோடீச் சுரநித்தர் வெற்பின்மலர்க்
கொத்தே றியமுடிப் பொற்பே றிடுமென் கொடியிடைமே
வத்தேன் மறுத்திடி னீயம் மடலே றளியரசே.

(கு - உரை.) ஒத்து - மனம்பொருந்தி. மலர்க்கொத்தேறிய முடியையும் கொடிபோலும் இடையையுமுடைய அத்தேனென்றது தலைவியை. மடல் - பனைமடல் மா. அளியரசே - அன்பையுடைய அரசனே.

வண்டின் அரசே, முடியையுடைய பூங்கொடியினிடத்தே யுள்ள தேனடையில்லையாயின் அக்கொடியின்பாலுள்ள பூமடலின்கண் ஏறியுண்பாயென்பது மற்றொருபொருள். அளியரசு: "ஒண்டரங்க விசைபாடு மளியரசே" (தே.); "பசுந்தே னிருந்துண் கருந்தேனி னரசே" (அழகர்கலர்.) தலைவனுக்கு வண்டை உவமை கூறுதல் மரபு; "உதய குமரனெனுமொரு வண்டு" மணி. 18 : 60.

தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

(இளமைத்தன்மை - பேதைமை.)

117. மழுத்தடங் கையினர் கோடீச் சுரவெற்ப மற்றிவணீ
எழுத்திசை யாதுமுன் சொற்பொருள் கொள்ளா தியாப்பணியின்
விழுத்தக வோதி முடியாவிப் பேதைகண் மேவுதற்கென்
வழுத்துதி மேன்மைத் தனமிலைக் கூட மதித்திடினே.

(கு - உரை.) இவண் - இவ்விடத்தே. சொல் முன் எழுத்து இசையாது - இவளுடைய சொல்லானது முதலில் எழுத்துவடிவம் பெற்றதன்று; என்றது குதலையை. சொல்லை இடைநிலைத் தீவகமாக்கிப்

பொருள்கொள்ளாதென்பதனோடும் கூட்டுக. யாப்பு அணியின் ஓதி முடியா இப்பேதைகண் - கட்டுதலையுடைய ஆபரணங்களோடு சேர்த்துக் கூந்தல் முடிக்கப்படாத இப்பெண்ணினிடத்தே. மேவுதற்கு வழுத்துதி - அடைதற்கு நீ சொல்லுகின்றாய். என் - இதற்குக்காரணம் யாது? மேல்மை தனம் இல்லை - மேலே கரியநிறத்தையுடைய கொங்கைகளுமில்லை. நீ வழுத்துதியென இயையும்; வழுத்துதல் - சொல்லுதல்: "மாண்டகு கடல்கள் கண்டு வழுத்திமுன் றுதிக்கும்" (திருவால. 9 : 1); "வழுத்தீர் மதிச்செங்கண் மால்" அழகர்கலம். 77.

எழுத்திலக்கணம் படியாமலும், சொற்களின் பொருளைக் கொள்ளாமலும், யாப்பிலக்கணம், அணியிலக்கணங்களைப் படித்து முடியாமலும் இருக்கின்ற இப்பேதையிடத்தே என்பது மற்றொரு பொருள். மேன்மைத்தனம் - மேம்பாடு. இதில் எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களின் பெயர்களும் தொனித்தல் காண்க.

### தலைவன் தலைவி வருத்திய வண்ணம் உரைத்தல்.

(பார்வைமுதலியவற்றால் தன்னைத் தலைவி
வருத்திய வண்ணம் உரைத்தல்; இது
தலைவி மங்கைப்பருவமுடையா
ளென்று தெரிவித்தபடி.)

118. உம்பர்கள் போற்றிடுங் கோடீச்சு ரேசர்த மோங்கலில்வேள்
அம்பல ரான்மெலி வேனைத் தனவரும் பாலும்வலி
திம்பரலைத்திட்ட தாலவ் விளங்கொடி யேல்லையுறின்
வம்பு செயத்தக்க தேசிறி தேனும் வனமுலையே.

(கு - உரை.) அம்பு அலரால் - அம்பாகிய பூக்களால். தன அரும் பாலும் - தனமாகிய தாமரைமுகைகளாலும்; தன - தன்னுடைய என்றுமாம். வலிது - வலிதாக. இளங்கொடியென்றது தலைவியை. அலரால் மெலிவேனை உன்னாற் பேதையென்று கூறப்பட்ட அவ்விளங்கொடி அரும்பாலும் அலைத்திட்டது. எல்லையுறின் - சமயம் வந்தால். வம்பு - வாசனை, கச்சு, சண்டை. சிறிதேனும் - சிறிய வடிவத்தையுடையதாயினும். வனமுலை - அழகிய நகில், காட்டிலுள்ள முல்லைக்கொடி; "வனமுலை குலுங்கச் சென்றது" திருவிடை. நாட்டு. 20.

### பாங்கி தலைவி செவ்வியருமை செப்பல்.

(தலைவியைப் பார்த்தற்குரிய காலம் பெறு
தற்கரியதென்பதைப் பாங்கி
தலைவனுக்குக் கூறுதல்.)

119. வழங்கா ரணன்பரன் கோடீச் சுரமன்ன வஞ்சியென்னோ
கழங்கா டிலளொழிற் பந்தா டிலளக் கலியறியேன்

முழங்கார் கழன்மன்ன வாவுன் னகவலக் கண்மொழியத்
தொழுங்கால் விருத்த முறும்பத மன்றிது சொல்லுதற்கே.

(கு - உரை.) வழங்கு ஆரணன் - வேதத்தை அருளிச்செய்தவர்; வழங்குதல் - சொல்லுதல். வஞ்சி - வஞ்சிக்கொடி போல்வாள். கழங்கு - கழற்சிக்காயை. கலி - துன்பத்தை. உன் அக அலக்கண் - உன் மனத்திலுள்ள துன்பத்தை. விருத்தம்-விரோதம், பொருத்தமற்றது; "பொருத்தமொரு பத்துப் பொருந்துமுனைத் தானே, விருத்தமென்று சொல்லல் விதியோ" (தமிழ்விடு. 83.) பதம் அன்று - சமயம் அன்று; பதம் - சொல், இசைத்தமிழிலுள்ள ஒருவகை உருப்படி.

இச்செய்யுளில் வஞ்சி, கலி, அகவல், விருத்தம், பதமென்னும் செய்யுட்பெயர்கள் முறையே தோற்றுகின்றன.

தலைவன் தலைவி செவ்வியெளிமை செப்பல்.

(என்பெயரைக் கேட்குமுன்னமே தலைவி செவ்வி
எளியளென்பதைத் தலைவன் பாங்கிக்குக்
கூறுதல்; செவ்வி - சமயம்.)

120. பார்கேட்ட கீர்த்தியர் கோடீச்சு ரேசர் பனிவரையில்
நீர்கேட்ட வர்க்கருள் கார்தனை நோக்கி னெடிதுவக்கும்
ஏர்கேட்டு வாங்கிய வம்மயி லும்மயி லென்றனியற்
பேர்கேட்கு முன்ன ரனமே களித்திங்குன் பின்வருமே.

(கு - உரை.) கார்தனை - மேகத்தை. நெடிது - நெடுநேரம். அம்மயிலென்றது மலையிலுள்ள மயில்களை. உம்மயிலென்றது தலைவியை. அம்மயில் நீர் கேட்டவர்க்கருள் கார்தனை நோக்கினெடிதுவக்கும். உம்மயில் என்றன் இயற்பேர் கேட்கு முன்னர்க் களித்து உன் பின் வரும்.

பாங்கி என்னை மறைத்தபின் எளிதென நகுதல்.

(என்னை - தலைவிக்கு இன்றியமையாத என்னை; எளி
தென நகுதல் - தலைவியைப் பெறுதல் உமக்கு எளி
தென்று தலைவனைப் பரிகசித்தல்; எளி
தென்றது எளிதன்றென்றபடி;
இஃது எதிர்மறை யிலக்
கணையின்பாற் படும்.)

121. நெய்யுந் திரியுந் தகளியுந் தீயுமுன் னேர்ந்துதம்மிற்
செய்யுஞ் சுடராய்த் திகழ்வும்பின் றாண்ட லுருத்திறமும்
ஐயகண் டென்னையெண் ணுதவ லின்பத் தடைவெண்ணினுய்
வையம் புகழ்பரன் கோடீச் சுரவெற்பில் வாய்ப்பதுவே.

(கு - உரை.) தகளி - அகல்; "வையந் தகளியா" (முதல் திருவந்தாதி, 1); இது தாளியெனவும் வழங்கும். சுடராய் - தீபமாகி. தூண்டலுறுத் திறமும் - தூண்டுதலில்லாத நிலையையும். "சுடர்விளக் காயினும் நன்றாய் விளக்கிடத் தூண்டுகோ லொன்றுவேண்டும்" (அறப்பளீச்சுர சதகம், 36.) ஐய: விளி. எண்ணாது - நீ எண்ணாமல். அடைவு - அடைதலை. தூண்டலில்லாவிட்டால் விளக்கு அணைந்து விடுமென்பதைக் குறிப்பித்தபடி. பாங்கி தன்னைத் தூண்டுகோலாகக் கூறித் தான் இன்றியமையாமையைத் தெரிவித்தாள். வாய்ப்பதுவே - வாய்ப்பதன்று; ஏகாரம்: எதிர்மறை. யான் இல்லையாயின் இவ்வொழுக்கம் நடைபெறாதென்று பாங்கி நகையாடினாள்; "என்னைநீர் மறைத்தாலிங் கியல்வதன்றே" தஞ்சை. 112.

அந்நகை பொறுது அவன் புலம்பல்.

122. மங்கைநல் லாயெழிற் கோடீச் சுரநம்பர் மால்வரைமேல்
தங்குறு வேண்மல ராலெறிந் தானது தண்புனத்தோர்
பைங்கிளி மேற்பட் டுருவியென் னெஞ்சினும் பட்டலைத்த
திங்குனக் கோதின னீநகை யாலெறிந் தீர்ந்தனையே.

(கு - உரை.) வேள் - மன்மதன். மலரால் - மலரம்பினால். எறிந்தான் - எய்தான். பைங்கிளியென்றது தலைவியை. உருவி - ஊடுருவி. மன்மதனால் இருவருக்கும் இராகவேகம் உண்டானதைச் சொன்னபடி. மலரம்பு பைங்கிளிமேற் பட்டுருவி என்னெஞ்சினும் பட்டலைத்ததென்பது, "செருவார் தோளநின் சிந்தையு ளேனெனின், மருவார் வெஞ்சரமென்னையும் வௌவுமால், ஒருவே னுள்ளுளை யாயி னுய்தியால்" (கம்ப. அரசியற். 10) என்பதை நினைப்பிக்கின்றது. நகை - சிரிப்பு, அரும்பு. ஈர்ந்தனை - பிளந்தாய். வேள்மலரா லெறிந்தான்; நீ அரும்பாலெறிந்தாய் என்பது இதிலுள்ள நயம். இதுபோன்ற நயம், 118-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.

பாங்கி தலைவனைத் தேற்றல்.

123. மேலும்பர் போற்றரன் கோடீச் சுரவெற்பின் மேவுகைவிற்
காலுறு கற்கட கச்சிங்க மேயந்தக் கன்னியுன்றன்
பாலுறச் செய்வே னிராசிய மாகப் பருவரல்போக்
கேலும் வகைமுயன் றுன்முடி யாததெ னித்தலத்தே.

(கு - உரை.) மேல் - விண்ணுலகம். கையில் ஒளியை வீசுகின்ற மணிகளிழைத்த கடகத்தையுடைய சிங்கம் போல்வாய். அந்தக்கன்னி - தலைவி. இராசியம் - இரகசியம்; "செவிராசி யங்கடந்த சேறைக், கவிராசன்" (சேயூர் முருகனுலா, 152); "இராசிய மறைவே" (சூடா. 11: 7)

பருவரல் போக்கு - துன்பத்தை நீக்கு. 'முயன்றால் இத்தலத்து முடியாத தென்' என்பது, "ஊழையும் உப்பக்கம் காண்பர்" (குறள். 620) என்பதைத் தழுவியது.

இச்செய்யுளில் தனுராசி முதலியவற்றின் பெயர்களும் இராசியென்னும் பெயரும் தொனித்தல் காண்க. வில் - தனுராசி; கற்கடகம் - கடகராசி; சிங்கம் - சிங்கராசி; கன்னி - கன்யாராசி.

இதில் வேற்றுப்பொருள்வைப்பணி அமைந்துள்ளது.

## பாங்கி கையுறை ஏற்றல்.

(தலைவன் கொணர்ந்த கையுறையைப் பாங்கி ஏற்றுக்கொள்ளல்.)

124. நாதாந்த மேவரன் கோடீச் சுரவெற்பி னண்ணுமெங்கள்
போதார் குழலிக்குன் கையுறை யோதினன் போவிங்கென்ன
வாதாவென் றாளினிப் போதுமென் றேயிங்கு வந்தனன்யான்
நீதா வுலகுக்குத் தாதா வெனச்சொன் னெடுந்தகையே.

(கு - உரை.) குழலிக்கு - தலைவிக்கு. கையுறை - கையுறையை. போ இங்கு என்ன வாதா என்றாள் - நாண மிகுதியால் போவென்றும் இங்கே என்ன வாதமாவென்றும் சொன்னாள்; வாதா - வந்து தருவாயாக வென்பது மற்றொரு பொருள். போதும் - போவேம், அவள் உடம்பாட்டை யறிதற்கு இச்சொற்களே அமையும். நீதா - நீ கையுறையைத் தருவாயாக. தாதா - வள்ளல். நெடுந்தகையே தா.

ஈற்றடியில் வழியெதுகை அமைந்துள்ளது.

## தலைமகன் ஆற்றல்.

(ஆற்றல் - தலைமகன் தன் துயரைத் தணித்துக்கொள்ளல்.)

125. பொன்மாலை யன்புகழ் கோடீச் சுரநம்பர் போற்றிடுநம்
சொன்மாலை யன்புறக் கொள்ளுதல் போலிந்தத் தோகைமணி
வின்மாலை யன்னளுக் கேற்றனண் மீது மெலிவுதரு
வன்மாலை யன்னதை யாற்றிடு மாலையை மாற்றுவளே.

(கு - உரை.) பொன்மால் அயன்-திருமகளையுடைய திருமாலும் பிரமனும்; ஐயன்: போலி. சொன்மாலை - தோத்திரங்களை. நம்பர் கொள்ளுதல் போல். தோகை - தோழி. வில் - ஒளி. மணிமாலை - இரத்தின மாலையை. மீது - இனிமேல். வன்மாலை - வலிய மயக்கத்தையும். அன்னதை ஆற்றிடும் மாலையை - அம்மயக்கத்தை உண்டாக்கும் மாலைப்பொழுதையும்; "மாலை மலருமிந் நோய்" குறள்.

இச்செய்யுள் திரிபு. ஈற்றடி சொற்பின்வருநிலையணி.

பாங்கி இறைவிக்கு அவன்குறை உணர்த்தல்.

(அவன் குறை - தலைவன் குறையை.)

126. சித்திர பானு சுபானு மதியெனுஞ் சீர்நயனர்
சித்திர மாநகர்க் கோடீச் சுரவெற்பிற் றேர்ந்தயன்செய்
சித்திர மேயோர் சுகங்காண் கிலனுந் திகழொருவன்
சித்திர மாந்தழை கைவாட வாடித் திரிந்திடுமே.

(கு - உரை.) சித்திரபானு - அக்கினி. சுபானு - நல்ல சூரியன். மதி - சந்திரன். நயனர் - கண்களையுடையவர். "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவர்" (சிறு. 14.) சித்திரம் - அழகு. அயன்தேர்ந்து செய்த சித்திரம் போல்வாய். சுகம் - கிளி, இன்பம்; இது சிலேடை. சித்திரம் - சிறப்பு, அதிசயம். ஒருவன் திரிந்திடுவான்.

முதலடியில் சித்திரபானு சுபானுவென்னும் வருடப்பெயர்கள் தொனிக்கின்றன. இச்செய்யுள் யமகம்.

தலைவி அறியாள்போன்று குறியாள் கூறல்.

(தலைவனை முன்பு அறியாதவள்போன்று தலைவி, பாங்கி கூறியவற்றை உட்கொள்ளாதவளாகி அவளை நோக்கி வேறு ஒரு செய்தியைக் கூறுதல். இங்ஙனம் தலைவி கூறுவதற்குக் காரணம் அவளது நாணமே.)

127. மன்றிடை யாடல்செய் கோடீச்சு ரேசர் மனத்தருள்கொண்
டன்றறு பத்திர யோகிக் கறந்தவ மாமெனவும்
ஒன்றொரு கோடிய தாமித் தலத்தி லுறைந்திடுங்கே
என்றுரைத் தாரவ னவ்வா றிருந்தன னேந்திழையே.

(கு - உரை.) அறம் - புண்ணியம். இங்கே உறைந்திடு. பத்திர யோகியென்னும் முனிவருக்குக் கோடீச்சுரேசர் வெளிப்பட்டு இத்தலத்திற் செய்யப்படும் புண்ணியமும் தவமும் ஒன்று கோடியாமென்று கூறி இத்தலத்திலிருந்து தவம்புரிவாயாகவென்று கட்டளையிட்டருளினரென்பது புராணகதை.

பாங்கி இறையோற்கண்டமை பகர்தல்.

(தலைவனைத் தான் கண்டமையைப் பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்.)

128. சைவா கமஞ்சொன்ன கோடீச்சு ரேசர் தடத்துநம்பால்
அவ்வா ரணமுங் கலையு முரையுட னன்றுகந்து

செவ்வா வினையவ ரின்றேது கேட்குந் திறத்தினரோ
மைவாழ் பொழிலிடை வந்துநிற் கின்றனர் வாணுதலே.

(த - உரை.) தடத்து - மலையில். அவ்வாரணமும் - அந்த யானையையும். கலையும் - மானையும். உரை - சொல். உரையுடன் வாரணமும் கலையும் வினையவர். செவ்வா - நன்றாக. ஏது - எதனை. மை - மேகம். வினையவர் நிற்கின்றனர்.

மற்றொரு பொருள்: ஆரணம் - வேதம். கலை - சாஸ்திரங்கள். உரை - நூற்பொருள். ஆரணம் முதலியவற்றை உரையுடன் கேட்டவர் இன்று ஏது கேட்க விரும்பியோ இங்கே வந்து நிற்கின்றனர்.

ஆரணம் கலை என்பவற்றைப் பின்பு கூறியதற்கேற்ப, 'சைவாகமஞ் சொன்ன' என்னும் அடை முன்பு கொடுக்கப்பட்டது.

## தலைவி பாங்கியை மறைத்தல்.

129\. விழியுறு பாலத்தர் கோடீச் சுரநம்பர் வெற்பணங்கே
வழிநடப் போரவ் வழிகேட்பர் தாமங்கு வந்தவகை
மொழிவ ரிவைமற் றெனைக்குறித் தோவொன்று முன்னலைநீ
பழிதரு மோநங் குலத்தினுக் கீதென் பகர்ந்தனையே.

(த - உரை.) பாலம் - நெற்றி. தாம் மொழிவர். இவை - அவர் கூறுஞ்சொற்கள். குறித்தோ: ஓகாரம் எதிர்மறை. முன்னலை - கருதினையல்லை. ஈது பழிதரும்.

## பாங்கி என்னை மறைப்பது என்னெனத் தழாஅல்.

(தழாஅல் - தழுவுதல்.)

130\. ஏறூர் கொடியரன் கோடீச் சுரமன்ன வேந்திழைமெய்
வேறுவி யொன்று விருந்தே மிருவரு மேலதுவும்
மாறாக வெண்ணியின் றென்னோ புராண வசநம்விட்டுத்
தேறா மறைகூ றுதிநமக் கீது சிறந்ததன்றே.

(த - உரை.) ஏந்திழை: விளி. மெய்வேறு - உடம்புமட்டும் வேறு. மேல் - முன்பு. அதுவும்: உம்மை சிறப்பு. மாறாக - அத்தன்மையும் வேறுபட. புராண வசநம்விட்டு - பழைய சொற்களை விட்டு. தேறா - தெளியப்படாத. மறை - மறைக்குஞ்சொல்; எதிர்மறையாயுள்ளசொல்.

நமக்குரிய புராணத்தை விட்டு நம்மால் தேறப்படாத வேதோக்தத்தைக் கூறுகின்றாய்; இது தக்கதன்றென்பது மற்றொரு பொருள்.

### பாங்கி கையுறை புகழ்தல்.

(கையுறை - தலைவன் கொடுத்த கையுறையை.)

131. மறியுறு கையரன் கோடீச் சுரவெற்பின் மன்னர்தந்த
முறியிதுன் காதிற் கணிகுழை யாம்பின்னு மொய்குழற்கு
நறியது வாய்மே லலங்கலு மாங்கைக்கொ ணற்கிளையாம்
சிறிய மருங்கினுக் காடையு மாமிசைத் தேமொழியே.

(கு - உரை.) மறி - மான். முறி - தளிர். குழை - காதணி. பின்னும் - அன்றியும், பின்னப்படுகின்ற. அலங்கல் - மாலை. கிளை - கிள்ளை. மருங்கு - இடை. தழையைத்தொடுத்து ஆடையாக உடுப்பது பண்டைக் காலத்து வழக்கம். முறி : எழுவாய். தழையைக் காதிற் செருகுதலும், தொடுத்துக் கூந்தலில் அணிதலும், கையிற் கொள்ளுதலும், ஆடையாக அணிதலும் குறிஞ்சிநில மகளிர்க்கு இயல்பு.

### தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்.

(கிழவோன் - தலைவன்.
துயர்நிலை - தலைவியைப்பெறாது வருந்துதலை.)

132. மறவினை தீர்த்தருள் கோடீச்சு ரேசர் வரையில்வெயில்
உறவினை வுற்றிடு பேடையைத் தன்சிறை யூடணைத்த
புறவினை நோக்கி யகவினை தீர்ந்தப் புரவலர்நீள்
நறவினை மேவலர்க் கோதைநின் றார்சொன் னலிவடைந்தே.

(கு - உரை.) மறவினை - பாவமாகிய செயல்களை. உற - மிக. இனை வுற்றிடு - வருந்துகின்ற. புறவினை - ஆண்புறவை. அகவினைதீர்ந்து - நினைதலை ஒழிந்து. புறவினை, அகவினையென்பன சொன்முரண். கோதை: விளி. சொல் நலிவு அடைந்து - சொல் தடுமாறி. புரவலர் நோக்கித் தீர்ந்து அடைந்து நின்றாரென்க.

### பாங்கி மறுத்தற்கு அருமை கூறல்.

(மறுத்தற்கு அருமை - உடன்படாமலிருத்தல் அருமை
யென்பதைத் தலைவிக்குக் கூறுதல்.)

133. தையனல் லாய்சிவன் கோடீச் சுரவெற்பர் சார்ந்துதினம்
கொய்யுந் தழைதந்தக் காவு மெலிந்தது கொய்தவர்தம்
கையு மெலிந்த தவர்க்கிசை வாம்பதங் கட்டுரைத்தென்
பொய்யு மெலிந்தது நானு மெலிந்துன்கட் போந்தனனே.

(கு - உரை.) தையல் - இளமை; தையல்நாயகியென்னும் திருநாமத்தாலுணர்க. வெற்பர் - தலைவர். அக்காவென்றது தழைபறித்துக் கொணர்ந்த அந்தச்சோலையை. நானும் : உம்மை இறந்தது தழீஇயது.

"கையுந் தழையுமுன் காண்டொறுங் காண்டொறுங் கட்டுரைத்த, பொய்யுந் தொலைந்தன" (தஞ்சை. 124); "நந்தா வொளியர் திருவெங்கை நாட்டி னமக்களிப்பச், சந்தா டவியு ளிறைவர்கொய் யாப்பைந் தழையுமில்லை, முந்தா வவர்க்கெதிர் நானுரை யாப்பொய்ம் மொழியு மில்லை, வந்தா லினியெனக் கில்லைபொன் னேயொரு வார்த்தையுமே" (திருவெங்கைக். 127) என்பவற்றின்கருத்து இதில் ஒருவாறு அமைந்துள்ளது.

பாங்கி தலைவன்குறிப்பு வேருக நெறிப்படக்கூறல்

(குறிப்பு வேறென்றது மடலேறுதலை.)

134. செய்தந்த நாட்டத்தர் கோடீச் சுரத்தர் திண்சிலம்பிற்
காய்தந் திடும்பனை மீதேறி னல்ல கனிதருமென்
றாய்தந்த கோற்றொடி யாங்கிசைத் தாரன்ப ரன்னவர்தம்
வாய்தந்த சொல்லீ தறியே னவர்தம் மனக்கருத்தே.

(த - உரை.) சேய் - முருகக்கடவுளை. நாட்டம் - கண். கனி - பழம், கன்னி. காய்தந்திடும் பனைமடன்மாமீது ஏறினால் அது கன்னியைத்தந்திடும். காய்த்த பனையின்மீது ஏறினால் அம்மரம் பழத்தைத் தருமென்பது மற்றொரு பொருள். கருத்தை அறியேன்.

பாங்கி தலைவியை முனிதல்.

(முனிதல் - சினந்து கூறுதல்.)

135. மின்னேய செஞ்சடைக் கோடீச் சுரவள்ளல் வெற்புறுநம்
முன்னேயந் தன்னைக் குறித்துரைத் தேனிம் மொழியனமே
பின்னே யதுசென்ற தோர்ந்தில னீயென் பிழைபொறுத்தி
டுன்னேய மாதருக் கோதிடு நீடுன் னுளக்கருத்தே.

(த - உரை.) மின் ஏய - மின்னலை ஒத்த. நம் முன் நேயம் தன்னை - நம்முடைய பழைய நட்பை. அது - அந்நட்பு. இவரது நட்பு, 130-ஆம் செய்யுளால் விளங்கும். பிழை பொறுத்திடு. உளக்கருத்தை ஓதிடு.

தலைவி பாங்கியை முனிதல்.

136. அனத்துக் கிசைய நடக்குமின் னேயின் றளியனுன் றன்
மனத்துக் கிசைய நடந்திட வோவுண் மறுவறுநம்
இனத்துக் கிசைய நடந்திட வோசொல் லினத்துக்கெனக்
கனத்துக் கிசைகண்டர் கோடீச்சு ரேசர் கதிர்வரைக்கே.

(த - உரை.) அனத்துக்கு - அன்னப்பறவைக்கு. அளியன் - அளிக்கத்தக்கவளாகிய நான். நடந்திடவோ - நடக்கவோ. நம் இனத்துக்கு -

நம்மவர்க்கு. இனத்துக்கு—இன்னத்துக்கு - இதற்கு. இன்னதற்கு இசைய நடந்திடு எனச்சொல்லென ஒரு சொல் வருவிக்க. இனத்துக்கு இசைய நடக்கவேண்டுமென்பது குறிப்புப்பொருள். கனம் - மேகம். மூன்றுவதடி மடக்கு.

## தலைவி கையுறை ஏற்றல்.

(தலைவனது கையுறையைத் தலைவி ஏற்றுக்கொள்வது.)

137. ஓணத் தவன்போற் றவிட்டத்தன் கேட்டை யுறுனடியார்
காணத் தகுபரன் கோடீச் சுரமன்ன காரிகைநான்
நாணத் தகுவ தெனினு மறேனின்சொ னல்லதிது
பூணத் தகுவதென் றுய்தரு வாய்நின்கைப் பூந்தழையே.

(து - உரை.) ஓணத்தவன் - திருவோண நட்சத்திரத்திற்குரிய திருமால்; "மாயோன் மேய வோண நன்னாள்" (மதுரைக். 591.) போற்ற - போற்றுதலால். இட்டத்தன் - அவர்பால் இட்டத்தையுடையவர்; முகுந்தப்பிரியரென்பது சிவபெருமான் திருநாமங்களுளொன்று. கேட்டை - அழிவை.

இவ்வடியில் ஓணம், அவிட்டம், கேட்டையென்னும் நட்சத்திரங்களின் பெயர்கள் தொனிக்கின்றன. காரிகை : விளி. நின்சொல்லை மறேன்.

## தலைவி கையுறையேற்றமை பாங்கி தலைவற்கு உணர்த்தல்.

138. தன்னொத் திடுசிவன் கோடீச் சுரவெற்ப சார்ந்தளித்தேன்
முன்னொற்றி யூர்வரி நாட்டத்தி லோங்கு முதுகுன்றமாம்
என்னுந் தனத்தணைத் தொண்முல்லை வாய்முத்த மீந்தனள்பின்
மன்னத் தகைய மயிலையொப் பாளுன்றன் மாந்தழைக்கே.

(து - உரை.) தன்னொத்திடு சிவன்; "தன்னொடு தானுறழ் கோடீச் சுரேசன்" (266) என்பர் பின்; "தாமே தமக்கொப்பு மற்றில்லவர்" (திருச்சிற். 228.) தழையை அளித்தேன். ஊர்வரி நாட்டத்தில் முன் ஒற்றி - ஊர்ந்த வரிகளையுடைய கண்ணிடத்தே முன்பு அத்தழையை ஒற்றி. முதுகுன்றமாம் என்னும் - பழைய மலையை ஒத்தனவாகுமென்கின்ற. முல்லையரும்பு போன்ற பற்களையுடைய வாயால் முத்தமிட்டனள். மயிலை ஒப்பாள் - மயிலைப்போன்ற தலைவி.

இதில் ஒற்றியூர், முதுகுன்றம், முல்லைவாய்(திருமுல்லைவாயில்), மயிலை (மாயூரம், மயிலாப்பூர்) என்னுந் தலப்பெயர்கள் தோற்றுகின்றன. "முல்லைவா யுற்றதெனு மூரலாள்" பெருவுடை. 152.

## பாங்கி தலைமகற்குக் குறியிடங்கூறல்.

(குறியிடம் - தலைவன் தலைவியைக் காண்ப
தற்குக் குறித்த இடம்.)

139. ஆனியி லம்பலத் தாடிநல் லாவணி யார்கொடியான்
கானியல் கொன்றையன் கோடீச் சுரமன்ன கார்வரைக்கண்
வானியல் காவொன் றதிலே சுகமுன் மரூஉமதுவே
தேனியல் கோதை விளையா டிடமுந் திவாவதிலே.

(த - உரை.) ஆனி இல் - அழிவில்லாத; ஆனி = ஹானி. ஆடி - ஆடியவர். அம்பலத்தாடியென்பது ஒரு திருநாமம்; "கூளி நிரைக்க நின் றம்பலத் தாடி" (திருச்சிற். 151); ஆனி மாதத்தில் ஆடுபவரென் பதும் ஒருபொருள். ஆ அணி ஆர் கொடியான்; ஆ - இடபம். இவ் வடியில் ஆனி, ஆடி, ஆவணியென்னும் மாதப்பெயர்கள் தோன்றுதல் காண்க. கான் - மணம், முல்லைநிலம். கா ஒன்று உள்ளதென ஒருசொல் வருவிக்க. சுகம் - இன்பம், கிளி. மரூஉம் - மருவும். கோதை - தலைவி. திவாவதிற் கோதை விளையாடிடமும் அது; திவா - பகல். அதில் முந்தி வா என்பது மற்றொரு பொருள்.

## பாங்கி குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல்.

(சேறல் - செல்லுதல்.)

140. அலைகொளு மாவிநின் மெய்ம்மணங் கூடுற வாடிவெம்மூ
விலைகொளுஞ் சூலத்தர் கோடீச்சு ரேசரி மையமென்னும்
மலைகொள மென்சொற் பயிற்றிமற் றீண்டு வரவருதி
சிலைகொளும் வாளி நிகர்விழி வாணுதற் சிற்றிடையே.

(த - உரை.) அலைகொளும் ஆவி நின் மெய்ம்மணம் கூடுற ஆடி - அலைகளைக்கொண்ட வாவி உன்னுடைய உடலிலுள்ள வாசனையைப் பெறும்படி நீராடி; வருந்துகின்ற நின்உயிர்போன்ற தலைவர் நின்இன்பம் பெறக்கலந்தென்பது குறிப்புப்பொருள்; இவ்வாறே, "மணம்பெறு மாவியுற் றாடி" (147) என்பர் பின். மலைகொள மென்சொற் பயிற்றி - வரையெதிர் கூவி; வரையெதிர்கூவல் ஒரு விளையாட்டு; "ஆவியெங் கேயெனி லாவியெங் கேயெனும்" (அம்பிகாபதி கோவை.) ஈண்டுவர - இங்கே நான்வர. பயிற்றி வருதியென இயைக்க. வாளி - அம்பு. சிலை - வில். வாளி விழிக்கும், சிலை புருவத்துக்கும் உவமைகள்; "சிலைக் கீழ்க் கணையன்ன கண்ணீர்" சிற். 59.

இது பரியாயவணி; தண்டி. சூ. 70.

### குறியிடத்து உய்த்து நீங்கல்.

(உய்த்து - தலைவியை அனுப்பிவிட்டு. நீங்கல் - மலர் கொய்து வருவேனென்று சொல்லிப் பாங்கி நீங்குதல்.)

141. சேவலர் கேதனர் கோடீச் சுரவெற்பிற் சேரவுறு [சப்
காவலர் தம்மைநின் றங்குநின் கைக்கொள் கயத்தொண்கஞ்
பூவலர் நீல மெலாமங்கு நான்றனிப் போய்க்கொணர்கேன்
ஏவல ரின்றி மதனேங்கச் செய்குவ மேந்திழையே.

(கு - உரை.) சே அலர் கேதனர் - இடபம் விளங்குகின்ற கொடியையுடையார். கா அலர்தம்மை - சோலையிலுள்ள மலர்களை; தலைவரையென்பது குறிப்புப்பொருள். கயத்து - குளத்திலுள்ள. அலர் நீலம் எல்லாம் - மலர்கின்ற குவளைமலர்களெல்லாவற்றையும். ஏ அலர் - அம்பாகிய மலர்கள்.

சோலைமலரை நீ கொள்வாயாக; நீரிலுள்ள மலர்களை நான் பறித்துக்கொண்டு வருவேன். பாணங்களாகத் தொடுத்தெய்வதற்கு மலர்களின்றி மன்மதனை ஏங்கச் செய்வோமென்றபடி. ஏவலர் - ஏவலாட்களென்பது வேறு பொருள்.

நீலப்பூக்களைக் காக்கும் காவலாளர்களை நீ கைப்பற்றிக்கொள்; நான் தனியேபோய் நீலப்பூக்களைப் பறித்துக் கொண்டு வருவேனென்றும் ஒருபொருள் தோன்றுகின்றது.

இச்செய்யுளும் பரியாயவணி.

### இறையோன் குறியிடத்து எதிர்ப்படுதல்.

(எதிர்ப்படுதல் - தலைவியைச் சந்தித்தல்.)

142. திறமாரிவ் வேனிலிற் கோடீச்சு ரேசர் சிலம்பிலென்மேல்
மறமா றிகல்செய் மதன்றனை யோட்டி மருவெனக்குந்
திறமார் மணிமுடி வேய்ந்தர சீந்திட நீடுநினைந்
துறமாது நீயிவண் காலேவ வந்ததின் றோங்கருளே.

(கு - உரை.) என்மேல் இகல்செய் - என்னோடு போர்செய்கின்ற. மருவு எனக்கு. திறம் - மார்பு, ஒளி. மணிமுடியென்றது தனத்தை. அரசு - அரசிலை, அரசாட்சி. மாது: விளி. வேனிலிற் கால்நோவ வந்தது அருள்.

போர்செய்யும் மன்மதனாகிய பகையை ஓட்டி முடியை எனக்கு வேய்ந்து அரசாட்சியைக் கொடுத்தற்கு நினைந்து இங்கே நீ வந்தது அருளென்பது மற்றொருபொருள்.

### புணர்ச்சியின் மகிழ்தல்.

143. மீனந்த நோக்கிமுன் னுமெய் தகத்துயர் வெப்பகல
வானந்த மேவி மனவாச கத்து மதிப்பரிதாய்த்

தேனந்த மார்கொன்றைக் கோடீச்சு ரேசர் சிலம்படிசூழ்
ஆனந்த வெள்ளத் திருவோமுங் கைகலந் தாடுவமே.

(கு - உரை.) மீன் அந்தம் நோக்கி - மீனினது அழகையுடைய கண்ணையுடையாய்; மீனுக்கு அழிவுசெய்யும் கண்ணுமாம். அகத்துயர் வெப்பு - காம நோயாகிய வெப்பு; ஆதியாத்மிகம் முதலிய தாபத்திரயங்கள். வான் நந்த மேவி - சுவர்க்க இன்பமும் கீழ்ப்படப்பொருந்தி. மனவாசகத்து மதிப்பரிதாய் - மனத்தாலும் உரையாலும் அளவிடற்கு அரியதாய். கோடீச்சுரேசரது மலையின் அடிவாரத்தில் நாம் கருதி எய்திய ஆனந்த வெள்ளத்தில்; கோடீச்சுரேசரது சிலம்பணிந்த அடியைக்கருதுதலாலுண்டாகிய இன்பவெள்ளத்திலென்பது மற்றொரு பொருள். ஆடுவம்: சிலேடை. சிற்றின்பத்தையே பேரின்பமாகச் சொல்லியபடி.

## புகழ்தல்.

144. நதிவார் சடையரன் கோடீச் சுரவெற்பி னல்லதினம்
இதுவாகு நானிங் கணைந்துநின் பேரின்ப மெய்தலுற்றேன்
மதிவா ணுதலாய் பொருந்துமுன் னத்த மருவலன்றித்
திதிவார யோக கரணங்கள் மேலுந் திடமுற்றவே.

(கு - உரை.) வார்சடை - ஒழுகுகின்ற சடை; "பனிநீர்க்கங்கை, புடையூற்றுஞ் சடையானும்" (கம்ப. கையடை. 12.); வார் - நீட்சி எனலுமாம். நான் வந்து பேரின்பத்தை அடைந்தமையால் இன்று நல்ல தினம் ஆகும். உன் அத்தம் - உன் கையை; "கைகலந் தாடுவமே" (143) என்றார் முன்னும். திதி - நிலையுடைய. வாரம் - அன்பு பொருந்திய. யோக கரணங்கள் - புணர்ச்சிவகைகள்; யோகம் - சேர்தல்.

அத்தம் - ஒரு நட்சத்திரம். திதி வார நட்சத்திர யோக கரணங்களென்னும் ஐந்து அங்கங்களின் பெயர்களும் இதில் தொனிக்கின்றன. நல்லதினம் என்றதற்கேற்ப இவ்வாறு கூறப்பெற்றது.

## தலைவன் தலைவியை விடுத்தல்.

(விடுத்தல் -பாங்கியின்பால் அனுப்புதல்.)

145. வாங்கிய மேருவிற் கோடீச் சுரநித்தர் மால்வரைநின்
றீங்கிய லுற்றெனைக் காத்தனை மேலன மென்னநடந்
தாங்கியன் மஞ்ஞை யெனப்போ யுனைக்காத் தருகிருக்கும்
பாங்கியர் கூட்ட மெனுங்கூட் டிடையுறை பைங்கிளியே.

(கு - உரை.) வாங்கிய - வளைத்த. இயலுற்று - நடந்துவந்து. மேல் - இனிமேல். அனம் என்ன - அன்னப்பறவைபோல. மயிலும் நடைக்கு உவமை கூறப்படும்; "நன்மா மயிலின் மென்மெல வியலி" (மதுரைக்.

608); "மயிலெனப் பேர்ந்து" (சீறு. 224.) கிளியென்றதற்கேற்பப் பாங்கியர் கூட்டத்தைக் கூடாக உவமித்தார்.

கிளியே, அன்னமென நடந்து மயிலெனப்போய்க் கூட்டிடையுறை யென்க. பறவைகளின் பெயரை ஒருங்கு கூறியது ஒருநயம்.

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறை காட்டல்.

(கையுறை - தான்பறித்துவந்த பூக்களை.)

146. திசைகொண்ட வான்புகழ்க் கோடீச் சுரநித்தர் திண்சிலம்பில்
தொகைகொண்ட கஞ்சமெற் காணுமுன் கண்ணீர் சொரிகின்றவும்
பகைகொண் டிலவென மெய்வாடி நின்றவும் பற்றிலன்முன்
நகைகொண்டு நின்ற விவைகொண்டு வந்தன னன்னுதலே.

(கு - உரை) திசை - திசை, தொகை - கூட்டம். கஞ்சம் - தாமரை மலர். எற்காணும்முன் - சூரியனைக் கண்டவுடன் (எல் - சூரியன்), என்னைக் கண்டவுடன். கண்ணீர் - தேனாகிய நீர்; கண்ணிலிருந்து வரும் நீர். சொரிகின்றவாகிய கஞ்சங்களையும்; "வனசம்........மென்கணீர் ததும்பநிற் பதுவே" (திருவிடை. வரகுண. 82.) பகைகொண்டில என - நம் கண்களுக்குப் பகை கொண்டிலவென நாம் எண்ணுமாறு. மெய் வாடி நின்றவும் - குவிந்திருக்கும் நீலமலர்களையும். பற்றிலன் - கைக் கொள்ளவில்லை. கண்ணீர் சொரிகின்றவற்றையும் வாடியவற்றையும் பற்றுதல் மரபன்று; சகுனக்குறியென்பது ஈண்டு அறியற்பாலது. நகை - அரும்பு, பல், மகிழ்ச்சி. நகைகொண்டு நின்ற - பல்லினழகை அல்லது ஆபரணங்களைக் கவர்ந்துகொண்டு அஞ்சாது நின்ற வென்றுமாம்; நகை - ஆபரணம்; வழக்கு. இவையென்றது முல்லையரும்புகளை.

பகைவர்களில் அழுவாரையும் வாடுவாரையும் பற்றாமல், நம்முடைய பொருள்களைக் கவர்ந்தவர்களையே பற்றி வந்தேனென்னும் ஒருபொருள் தோற்றுகின்றது.

பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

(பாங்கு - பாங்கியர்திரளில்.)

147. நீந்தே மலர்ச்சடைக் கோடீச்சு ரேசர் சிலம்பினின்று
போந்தே மணம்பெறு மாவியுற் றூடியிப் போதுகொண்டாய்
ஏந்தே ரிளமுலை யாய்விளை யாடற் கினிப்பொழிற்கண்
நாந்தேடு மாதர் நமைத்தேடு முன்னங்கு நண்ணுவமே.

(கு - உரை.) சிலம்பின் இன்று போந்தே. மணம்பெறும் ஆவி - கலியாணத்தைப்பெற்ற உயிர் போன்ற தலைவரை; வாசனையைப்பெற்ற

குளத்திலே. ஆடி : சிலேடை. இப்போது - இப்பூக்களை ; என்றது தான் கையுறையாகக் கொணர்ந்தவற்றை. பொழிற்கண் (விளையாடற்கு) நாம் தேடுமோதர். இனி அங்கு நண்ணுவம்.

பாங்கி தலைவற்கு ஓம்படை சாற்றல்.

(தலைவியை எப்பொழுதும் பாதுகாக்கவேண்டு மென்று தலைவனுக்குப் பாங்கி சொல்லு தல் ; ஓம்படை - பாதுகாப்பு.)

148. சகத்திருத் தேரினர் கோடீச் சுரவெற்ப சாற்றுமெங்கள்
சுகத்தின் பொருட்டுற் றுழன்றதெண் ணேலச் சுகந்துயரம்
மிகத்தியங் காதெதிர் கண்டோர்க் கிவண்வைத்தெவ் வேலையுமுன்
அகத்திடப் பஞ்சரம் வைத்தினிக் காத்தி டருள்புரிந்தே.

(கு - உரை.) சகம் - பூமியாகிய. எங்கள் சுகமென்றது தலைவியை; சுகம் - கிளி. உழன்றது - நீ அலைந்ததை. அச்சுகம் - தலைவி. தியங்காது - வருந்தாதபடி. இவண் - இவ்விடத்தே. எவ்வேலையும் - எக்காலத்தும். அகத்திடப்பஞ்சரம் - மனமாகிய உறுதியையுடைய கூட்டின்கண் ; திடம் - த்ருடம். அருள் புரிந்து காத்திடு. எப்பொழுதும் மறவற்க வென்றபடி.

விருந்து விலக்கல்.

(செல்வேனென்ற தலைவனை நோக்கி, "விருந் துண்டு செல்க" என்று சொல்லிப் பாங்கி விலக்கல்.)

149. ஆறுறின் மேலுறை கோடீச் சுரநம்ப ரம்பொன்வெற்பின்
மாறு றுகள்பல வாறுமவ் வாறெல்லை வந்தொளிருங்
காறு றிருந்தின்னல் செந்தே னுடுநற் கனிதருவேன்
தேறு றுணர்மன்ன வாகொண் டுறங்குபின் சென்றருளே.

(கு - உரை.) ஆறுறின்மேல் - முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேலே ; "ஐயாறினொ டாறுக் கதீதன்" (சீகாழிக். 158.) மாறு ஆறுகள் பல - ஒன்றற்கொன்று மாறுகவுள்ள வழிகள் பல. ஆறும் அவ்வாறு - நதிகளும் அப்படியே. எல்லை வந்து ஒளிருங்காறு - சூரியன் உதிக்கும் வரையிலும். இருந்து இன்னல் ஆறு - இங்கே தங்கியிருந்து துன்பம் தணிவாயாக. தேறு ஆறு உணர்-தெளிந்த வழியை அறியும். கொண்டு - நாம் தரும் உணவுகளை உட்கொண்டு.

இச்செய்யுளில் 'ஆறு' என்பது எழு முறை வந்துள்ளது ; இது சொற்பின்வருநிலையணி.

## விருந்திறை விரும்பல்.

(விருந்தைத் தலைவன் விரும்புதல்.)

150. சமரவெஞ் சூலத்தர் கோடீச் சுரவெற்பிற் சாற்றுமன்போ
டமர ருணவிற் றினைமாவுந் தேனு மளிப்பிரெனிற்
கமலையன் னீரென் றவப்பலன் மேலிங்ஙன் கண்டலவோ
குமரக் கடவுள் குடிகொண் டனனிக் குறிஞ்சியிலே.

(சு - உரை.) சமரம் - போர். அமரர் உணவின் - அமுதத்தைப் போல. கமலை - திருமகள். அளித்தல் என்தவப்பயனாகும். மேல் - பண்டைக்காலத்தில். குறிஞ்சி - குறிஞ்சி நிலம். குறிஞ்சி நிலத்துக்குத் தெய்வம் குமரக்கடவுளென்பது இங்கே அறிதற்குரியது.

இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

---

## ஒருசார் பகற்குறி.

[பகற்குறியிடத்து ஒருவரை ஒருவர் எய்தாமல் தலைவனும் தலைவியும் வருந்துதல்.]

## கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்.

(அந்திப்பொழுதைக் கண்டு தலைவி ஆற்றாது வருந்துதல்.)

151. பொருந்திய மால்விடைக் கோடீச்சு ரேசர் புகழ்க்கிரிமேல்
அருந்திறல் வேள்விடு முல்லைமென் பூஞ்சர மாற்றலனாய்
வருந்திடு வேற்குரு நீடுமிச் செவ்வந்தி மாலையினைத்
திருந்திழை யீண்டு வரவிட்ட தார்பின்னுஞ் செப்புகவே.

(சு - உரை.) வேள் - மன்மதன். முல்லைமென் பூஞ்சரம் - முல்லைப் பூவாகிய பாணத்திற்கு. ஆற்றலனாய் - பொறேனாகி. உரு நீடும் - அச்சம் மிக்க. செவ்வந்தி மாலையினை - செம்மையாகிய அந்தி வானத்தையுடைய மாலைப்பொழுதை. திருந்திழை : விளி. பின்னும் வரவிட்டதெனக் கூட்டுக.

மற்றொருபொருள் : சரம் - மலராற்றொடுத்த ஒற்றைவடம்; “காவலர் தளமிணக்க மென்கிருய் சரந்தொடுக்க வேணுமோ” (அழகர்கலம். 25.) உரு நீடும்-உருவத்தாற் பெரிய. செவ்வந்தி - ஒருவகை மலர். மாலையென்பது பல சரங்களாலாகியது.சிறிய வடிவுள்ள முல்லையாலாகிய ஒரு சரத்திற்கே ஆற்றாத என்னை வருத்தும்பொருட்டு வடிவத்தாற்பெரிய

செவ்வந்தி மலர்களாலாகிய பெரிய மாலையை வரவிட்டவர் யாவரென்பது இதிலுள்ள நயம்.

### பாங்கி புலம்பல்.

152. சேவுற் றுகைப்பவர் கோடீச்சு ரேசர் சிலம்பின்மதன்
மாவுற்ற தன்னவன் றேருற்ற தாங்கவன் வண்கவிகை
மேவுற்ற தன்னோன் றனைவா விரைந்தெனை வெங்குயிலோ
கூவுற்ற தீண்டினி யென்படு மோதனிக் கோற்றொடியே.

(கு - உரை.) சே - இடபத்தை. மதன்மா - மன்மதனுடைய யானை; என்றது இருளை. அன்னவன் தேர் - தென்றல். அவன் கவிகை - சந்திரன்; கவிகை - குடை. குயில் மன்மதனுடைய காகளம்.

மன்மதனுடைய யானை முதலிய பகைப்பொருள் பலவற்றினிடையே இவள் தனியே எவ்வாறிருப்பாளென்று வருந்தியபடி.

### தலைவன்நீடத் தலைவி வருந்தல்.

(நீட - தாமதிக்க.)

153. கருமுத்த மாலயன் விண்ணோர் பணிந்து கலந்துவலம்
வருமுத்த மாலயர் கோடீச்சு ரேசர் வரையிலன்று
குருமுத்த மாலை பலகொடுத் தார்வந்து கூடியெனக்
கொருமுத்த மாலையிப் போதுதந் தாலுயி ருய்குவனே.

(கு - உரை.) கரு முத்த மால் - பிறவியினின்றும் விடுபட்ட திருமால்; அச்சுதனென்னும் பெயரை விளக்கியபடி. ஐயன் - அயன்; போலி. வலம் வரும் உத்தம ஆலயர். குரு - நிறம்பொருந்திய. ஒரு முத்தம் - ஒரு முத்தத்தை. மாலை இப்போது - மாலைக்காலமாகிய இப்பொழுதில்.

முன்பு பல முத்தமாலை தந்தவர் மாலையாகிய இப்பொழுது ஒரு முத்தம் தந்தால் உய்வேனென்பது நயம். இப்பாட்டுத் திரிபு.

### தலைவியைப் பாங்கி கழறல்.

(கழறல் - இடித்துரைத்தல்.)

154. வணந்தரு வெய்யோன் முதலவர் போய்ப்போய் வருதல்கண்டு
மணந்தவ ரீண்டுத் தணந்தன ரென்ன வருந்தலென்னீ
பணந்தரு பூணினர் கோடீச் சுரநித்தர் பைம்பொன்வெற்பில்
தணந்தவர் மீண்டு மணந்திடு வார்மென் றளிரியலே.

(கு - உரை.) வணம்=வண்ணம் - அழகு. வெய்யோன் - சூரியன். முதலவர்-சந்திரன்முதலிய கோள்களும் நாண்மீன்களும். போய்ப் போய்

வருதல் - அத்தமித்து உதித்தலை. மணந்தவர் - கலந்த தலைவர். தணந்தனர் - நீங்கினர். நீ வருந்தல் என். பணம் தரு பூண் - படத்தையுடைய பாம்பாகிய ஆபரணம்; பணம் - பொருளென்பது மற்றொரு பொருள்; "பணங்கொண்ட பூணினர்" (185) என்பர் பின்.

## தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்.

(பாங்கி முன்னே நிற்க அவள்மேலுள்ள வெறுப்பால்
அவளை நோக்கிக் கூறாமற் புறமாக மொழிந்து
அவளுக்கு அறிவுறுத்துதல்.)

155. அரியா ரணன்முன் னடிமுடி காண்டற் கரியவர்கா
விரியார் தடங்கரைக் கோடீச் சுரநித்தர் வெற்பிடத்தில்
தெரியாரு முற்றத் தெரிந்தாரு மோதிற் றெளிவரல்லாப்
பெரியார்க் குணர்த்தி னுரைத்தவை யாவும் பிழைபடுமே.

(கு - உரை.) அடி முடி: நிரனிறை. காவிரி ஆர் தடங்கரை - காவிரியின் ஆர்ந்த தடங்கரையில் உள்ள. அல்லாப் பெரியார் - இடைநின்ற ஐயவுணர்வினர்; பெரியாரென்பது இகழ்ச்சிக்குறிப்பு. அல்லாப் பெரியாரென்றது தோழியை நினைந்து.

## தலைவி பாங்கியோடு பகர்தல்.

156. நாணவொண் ணுகவிற் கோடீச்சு ரேசர் நளிர்வரைமேல்
காணவொண் ணுநல் லோர்தமைக் காணிற் கலந்திடன்பு
பூணவொண் ணுதன்பு பூண்டாற் பிரிவு பொருந்தவொண்ணு
தேணவொண் ணுதப் பிரிவுறி னுவிபின் னேந்திழையே.

(கு - உரை.) ஒள் நாக நாணவில் - ஒள்ளிய நாகமாகிய நாணையுடைய வில்; நாகத்தை நாணுகவுடையவில்லென்றுமாம்; மேரு. நாகம் - மலை, பாம்பு. நளிர் - குளிர்ச்சி. நல்லோர்தமைக் காணவொண்ணுது. கலந்திடு அன்பு. ஏண - நிலைபெற; ஆவி ஏண ஒண்ணுது.

"காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப், பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால், மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்று, ஊணிடு மொருதாய் நீத்த பார்ப்பென வுளங்கு லைந்தார்" (பிரபு. கோரக்கர். 4) என்னும் பாடல் இதனோடு ஒப்பிடற்பாலது.

## தலைவியைப் பாங்கி அச்சுறுத்தல்.

(அச்சுறுத்தல் - அச்சமுறச் செய்தல்.)

157. சேவை யுகைப்பவர் கோடீச்சு ரேசர் சிலம்பிலொரு
கோவை யகம்வைத் துலாப்புறங் காட்டுதி கூறிதனுட்
பாவை தினைக்குர லெல்லாஞ் சுகங்கொடு பாறினவால்
ஏவை நிகர்விழி யாயினிக் காப்புனக் கில்லிடமே.

(கு - உரை.) ஒரு கோவை - ஒப்பற்ற தலைவனை, அகம்வைத்து - உள்ளத்தில் வைத்து. உலாப்புறம் காட்டுதி - உலாவுதலை வெளியிற் காட்டுகிறாய்; வெளியில் உலாவுகின்றாயென்றபடி. கோவையென்னும் பிரபந்தத்தை உள்ளே வைத்துவிட்டு உலாப்புறமென்னும் நூலைக் காட்டுகிறாயென்பது மற்றொரு பொருள். கூறு இதனுள் பாவை - சொல்லப்படும் பரணில் உள்ள பாவையே; பாவை: விளி. தினைக்குரல் - தினைக்கதிர். சுகம் - கிளிகளானவை. பாறின - நீங்கின. ஏவை - அம்பை. காப்பு - இருக்கும் இடம். இங்ஙனமிருந்தால் உன்னை வீட்டிற்குக் கொண்டுபோய் வைத்துவிடுவார்களென்றபடி.

## நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

(நீங்கற்கு அருமை - தலைவனைப் பிரிதற்கு அருமையை.)

158. நல்லார் புகழ்சிவன் கோடீச் சுரவெற்பி னுன்முகனவ்
வில்லா ருடனமக் காவியொன் றாகமெய் வேறுசெய்தச்
சொல்லாரு மெய்களு மாண்பெண் ணெனச்செய்து தோற்றவருள்
கல்லாக நம்முண் மலராகச் செய்ததென் கற்பனையே.

(கு - உரை.) வில்லாருடன் - வில்லையுடைய தலைவருடன், ஆவி ஒன்றாகச்செய்து - தலைவனுக்கும் நமக்கும் உயிரொன்றாகச்செய்து. மெய்களை வேறாகச்செய்து. செய்ததென்பதனை மூன்றும் கூட்டுக. மெய்களும் - உடம்புகளையும். அவர் உள் - தலைவர் உள்ளத்தை. என் கற்பனை - என்ன சிருட்டி; "கற்பனை யத்தனை" புகலூரந்தாதி.

## தலைவிக்குஅவன்வரல் பாங்கி சாற்றல்.

(அவன்வரல் - தலைவன் வருதலை.)

159. தாதாடு கொன்றையர் கோடீச்சு ரேசர் சயிலமலர்க்
கோதாயுன் னன்பர்தந் தேரோதை கேளினிக் கூறுவதென்
போதா மதன்கணை யாருயி ராங்தென்றல் புத்தமுதின்
மீதா மதிக்கதி ருன்றனக் கோதிவ் வியனிலத்தே.

(கு - உரை.) தாது - மகரந்தம். மதன்கணை போது ஆம் - காமனுடைய அம்பு மலராக ஆய்விடும். தென்றல் உயிராம் - உன்னை வருத்திய தென்றல் வெறுங்காற்றாக ஆய்விடும். மதிக்கதிர் புது அமுதின் மீதாம் - இப்பொழுது விடம்போன்றிருக்கின்ற சந்திரனுடைய கிரணங்கள் புதிய அமுதத்தைக் காட்டிலும் மேலாகும். உன்றனக்கு ஆமென இயைக்க. உனக்குத் துன்பஞ்செய்தவை இன்பஞ் செய்வனவாமென்பது கருத்து.

பாங்கி தலைவற்குச் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

(சிறைப்புறம் - வேலிப்புறம். செறிப்பு - தலைவியை வீட்டின்கண் செறித்தலை. தலைவன் வேலிப்புறத்தே நிற்பத் தலைவியை இற்செறித்தலைக் கிளி முதலியவற்றிற்குக் கூறுவாள் போன்று அவனுக்கு அறிவித்தல்.)

160. தனத்தத்தை மானுக் குதவுகோ டீச்சுரத் தாணுவெற்பின்
இனத்தத்தை காளக் கணியார் மலர்வாயி னுலைமர்க்கித்
தினத்தத்தை யார்தினை கொய்கென வோதினர் சேர்ந்தவரிப்
புனத்தத்தை யாற்றுவர் யாம்போது நீர்சுகம் பூண்டிருமே.

(கு - உரை.) தன் அத்தத்தை - தன் திருமேனியிற் பாதியை; அத்தம் - பாதி. மானுக்கு - உமாதேவியாருக்கு. தத்தைகாள் - கிளிகளே. அக்கணியார் - அந்த வேங்கைமரம்; "கணிவாய் வேங்கை" (நற். 373); ஆர்: ஓரிடைச்சொல்; இழித்தற்பொருளில் வந்தது. மலர்வாயினால் - மலர்களின் முகமாக. இத்தினத்து. அத்தை ஆர் தினை - செம்மையைப் பொருந்திய தினைக்கதிர்களை. கணியார் மலர்வாயினாற் கொய்கென ஓதினர். வேங்கைமரம் பூக்கும்பருவத்துத் தினையைக்கொய்தல் குறிஞ்சி நிலமாக்கள் இயல்பு. கணியார் - சோதிடர், மலர்வாய் - மலர்ந்தவாய் என்பன வேறு பொருள். சேர்ந்து அவர். அவர் - எம்மினத்தார். புனத்து அத்தை ஆற்றுவர்; அத்தை - அதனை; என்றது தினையறுத்தலை. போதும் - செல்வேம். சுகம் பூண்டு - இன்பத்தைப்பொருந்தி; சுகமென்னும் பெயரைப் பூண்டென்பது வேறுபொருள்; "சுகமே சுகமேயிரும்" அருணைக்கலம். 18.

முன்னிலைப் புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

(தலைவன் முன்னே நிற்ப அவனை நோக்கிக் கூறாமல் வண்டைநோக்கிக் கூறுவாள் போன்று பாங்கி அறிவுறுத்தல்.)

161. சிறந்தார் புகழ்சிவன் கோடீச் சுரவெற்பர் சென்றங்கெம்மை
மறந்தாலு நீவிர் மறவா திருமின் மறக்கின்வரி

நிறந்தாங் கியவண்டு காளளி யாரெனு நீடுபெயர்
திறந்தா னுருதிங்கு நாங்கள்செல் வோந்தினை சென்மனைக்கே.

(கு - உரை.) அங்குச்சென்று. வரியையும் நிறத்தையும் தாங்கிய. அளியார் - அன்புடையார், வண்டுகள். திறம் உருது - வன்மையை அடையாது. மறக்கின் அளியாரென்னும் பெயர் திறமுருது. தான் : அசைநிலை. தினைசெல்மனைக்குச் செல்வேம். "தினைக்கதி ரோடில்லமெய்துதும்யாம்" (163) என்பர் பின்னும்.

பாங்கி முன்னின்று இற்செறிப்புணர்த்தல்.

(முன்னின்று - தலைவன்முன்னே நின்று. இற்செறிப்பு - செவிலி தலைவியை வீட்டிற்செறித்தலை.)

162. நிறந்தரு வேங்கைதென் கோடீச் சுரநிந்தர் நேரியின்வாய்
திறந்தது நோக்கி யெமரீங் கடைந்து தினைகொய்தெம்மை
மறந்தரு மிங்ஙன்வைக் கொண்ணு தெனக்கொண்டு மன்னவெங்கள்
அறந்தரு மில்லில்வைக் கின்றனர் போது மவர்வழியே.

(கு - உரை.) வேங்கை வாய்திறந்தது நோக்கி - வேங்கைமரம் மலர்ந்ததை அறிந்து. வேங்கை பூத்தால் தினைக்கதிரை அரியத்தொடங்கல் மலைநாட்டு வழக்கம். போதும் - போவேம்.

புலி வாய்திறந்ததைக்கண்டு எமர் அஞ்சி எங்களை இப்புனத்தில் இனி இங்கே வைத்தல் தகாதெனை வீட்டிற்கொண்டு வைக்க நினைந்தனரென்பது மற்றொரு பொருள்.

பாங்கி முன்னின்றுணர்த்தி ஓம்படை சாற்றல்.

(முன்னின்று - தலைவன் முன்நின்று. ஓம்படை சாற்றல் - பாது காக்க வேண்டுமென்று பாங்கி சொல்லுதல்.)

163. எங்கேத மன்ப ரிருக்கினு மாங்குற் றிசைக்குமவர்
வெங்கேதந் தீர்த்தருள் கோடீச்சு ரேசர் வியன்சிலம்ப
இங்கேதங் காமற் றினைக்கதி ரோடில்ல மெய்துதும்யாம்
அங்கே தமநிகர் கூந்தலைக் காக்க வணைந்தருளே.

(கு - உரை.) கேதம் - துன்பம். எங்கே.........ஈசர்: "எனைத்தேடியாள்சிவன்" என்பர் (67); "எங்கே போவே னாயிடினு மங்கேவந்து" (தே. சுந்தர.) தமம் நிகர் கூந்தலை - இருளையொத்த கூந்தலையுடைய தலைவியை. அங்கே அணைந்தருள், எங்கே தம் அன்பர் இருந்தாலும் அங்கே சென்று அருள்புரியும் கோடீச்சுரேசரது சிலம்பிலுள்ளாயாதலால் அவ்வாறே நாங்களுறையும் இடத்திற்கு நீயும் வந்தருளுக என்றபடி.

## தலைவன் தஞ்சம்பெறாது நெஞ்சோடு கிளத்தல்.

(தஞ்சம் - பற்றுக்கோட்டை.)

164. நீளா சுகச்செயுங் கோடீச் சுரநம்பர் நேரிநல்லார்
கேளா சுகவெள்ளத் துற்றழைத் தேகக் கிளர்மனைப்போய்
வாளா சுகமுற வைகுவ ராண்டிங்கு வந்தமர்செய்
வேளா சுகத்தைநெஞ் சேயினி யாவர் விலக்குவரே.

(கு - உரை.) நீள் ஆசுஉக - பெருகிய குற்றங்கள் கெடும்படி. நேரி - சோழநாட்டிலுள்ள ஒரு மலை; அஃது அகத்தியரால் அழுத்தப்பெற்ற தென்று சேவ்வந்திப் புராணம் கூறும். நல்லாரென்றது தலைவியை. கேள் - உறவினர். ஆ: இரக்கக்குறிப்பு. சுகவெள்ளத்து உற்று - கிளிக் கூட்டத்தின் இடையேவந்து; இங்கே கூறப்பட்ட கிளிகள் தினைக்கதிர் களைக் கவர வந்தவை. அழைத்து ஏக - தலைவியை அழைத்துக்கொண்டு போக. வாளா - சும்மா; தன்னை நினையாமையைக் குறிப்பித்தபடி. சுகமுற - இன்பம்பொருந்த. நல்லார் ஆண்டுவைகுவரென்க. அமர்செய் - பொருகின்ற. வேள் ஆசுகத்தை - மன்மதனுடைய அம்புகளை.

இச்செய்யுள் திரிபு.

---

## பகற்குறி இடையீடு.

[பகற்குறிக்கு இடையிற் சில தடைகள் நிகழ்தல்.]

## இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

(குறிவரல் - குறித்த இடத்தில் வருவதை.)

165. பொன்போலு மெய்யினர் கோடீச்சு ரேசர் புகழ்வரைக்கண்
முன்போ லடிக்கடி வாரல்வெற் பாவிம் முதிர்புனத்தில்
அன்போ டிளங்கன் றிடைப்புனிற் றாவென வன்னையொளிர்
மின்போ லுடங்கிடை தன்பால் வருமெந்த வேலையுமே.

(கு - உரை.) வாரல் - வருதலைத்தவிர்க. இளங்கன்றிடைப் புனிற்றா என - தன் இளங்கன்றின் அருகே ஈன்றணிமையையுடைய பசு அடிக் கடி வருதலைப் போல. நுடங்கிடைதன்பால் - தலைவியினிடத்தே. அன்னை வரும். எந்த வேலையும் - எப்பொழுதும்.

இளங்கன்றினிடம் அன்புடைய பிறர் அதற்கு உணவருத்தல் முதலி யன செய்யத் தொடரினும் அவரது அன்பையறியாத தன்மையையுடைய புனிற்றாவைப்போலத் தலைவிமாட்டுத் தலைவனுக்குள்ள அன்பை அன்னை அறியாளென்பது உவமையாற் போந்த பொருள்.

## இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

166. உலகந் தருசிவன் கோடீச் சுரமன்ன வொண்ணுதலுன்
திலகமுங் கூந்தலம் போதுமெய்ச் செவ்வியுஞ் சேரக்கண்டு
நலகங் கறுத்து நகைத்துயிர்த் தேகின னம்மனையின்
றிலகந் தருமிவ் விடமவ் விடமா மினிநமக்கே.

(து - உரை.) ஒண்ணுதல் : விளி. சேர - ஒருங்கு. கண்டது அன்னை. நல் அகம் கறுத்து ; அகம் - மனம் ; கறுத்து - கோபித்து. அன்னை கோபித்தற்குக் காரணம் திலகமுதலியன வேறுபட்டிருந்தமை. உயிர்த்து - பெருமூச்சு விட்டு. நம் அன்னை. அன்னை ஏகினள். இன்று இல்அகம் தரும் - ஆதலால் அவள் இன்றைக்கு நம்மை இற்செறிப்பாள். இவ்விடம் - தினைப்புனம். அவ்விடம் - வீடு.

## தலைவி ஆடிடம் நோக்கி அழிதல்.

(ஆடிடம் - விளையாடும் இடங்களை. அழிதல் - இரங்குதல்.)

167. மறக்கதிர்ச் சூலத்தர் கோடீச்சு ரேசர் வரைநெருநல்
திறக்கிள்ளை கள்புனம் வாரா தகற்றினஞ் சேரவின்று
நிறக்கிளர் பூஞ்சுனை தன்னோடிச் சோலை நிழலும்விட்டுப்
பறக்கின் றனஞ்சிறை கொண்டடங்கத் தீங்கு பலித்திட்டதே.

(து - உரை.) மறம் - வலி. நெருநல் - நேற்று. திறம் - வகை. சேர - ஒருங்கே ; சேர அகற்றினம். நிறச்சுனை யென்க. பறக்கின்றனம் - விரைந்து செல்கின்றேம். சிறை கொண்டு - காவல் கொள்ளப்பட்டு. பலித்திட்டது - விளைந்தது.

நேற்று ஓட்டிக் கிள்ளைகளைச் சிறைகொண்டு பறக்கச் செய்தோம் ; இன்று அப்பாவத்தின் பயனாக நாமே சிறைகொண்டு பறக்கின்றோம் என்பது மற்றொரு பொருள். சிறை - சிறகு, காவல் ; சிலேடை.

இச்செய்யுள், "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" என்னும் நூலின் பொருளைத் தழுவி வந்தது.

## பாங்கி ஆடிடம் விடுத்துக்கொண்டகறல்.

(விளையாடுமிடங்களை விட்டுத் தலைவியை நீக்கிக்
கொண்டு பாங்கி வீட்டுக்குச் செல்லுதல்.)

168. இழைநோக்கு மார்பரன் கோடீச் சுரவெற்பில் யாமிழைத்த
பிழைநோக் கிடாதெழிற் பைங்கிளி காளெம் பிரிவுவந்தும்
உழைநோக் கிறைக்கிசைத் தாரோதி யூர்வழி யூரவர்கண்
மழைநோக்கி யேகு மெனவுண்மை யோதி வரவிடுமே.

(கு - உரை.) இழை - பூணூல்; "முந்நூல்சேர் மார்பர்" (தே.); ஆபரணமுமாம். பிழையென்றது கல்லாலெறிந்ததனை; "கல்லாலெறிந்த பிழைக்குவழி காட்டா தொழிதல் கண்டாயே" (அருணைக் கலம். 19.) நோக்கிடாது - கருதாமல். பிரிவு - பிரிவை. வந்து உம் உழை நோக்கு. இறைக்கு - தலைவனுக்கு. பிரிவு இசைத்து. ஊர்வழி - ஊருக்குச்செல்லும் வழியில். ஊர் அவர் - மெல்லச்சென்ற பாங்கி தலைவியினது. ஏகும்: முன்னிலைப்பன்மை. இசைத்து ஓதி, உண்மைஓதி வரவிடுமென்க.

ஊரோதி யூர்வழி யூரவர்கணென்றது மடக்கு.

## இறைவன் குறிவயிற் சென்றிரங்கல்.

(குறிவயின் - குறித்த இடம்.)

169. குழையார் செவியினர் கோடீச்சு ரேசர் குவட்டிடையவ்
வுழையார் விழியரைக் காண்கில மூர்வழி யோர்ந்திலநந்
தழையார்வங் கொண்டங் ககன்று ரிருந்தனந் தம்மின்மன்னோர்
இழையா யிருந்தன மென்று லவருட னேகுவமே.

(கு - உரை.) குவடு - மலை. உழையார் - மானையொத்த. தலைவியைக்காணேம். ஊர்வழியை ஓர்ந்திலம்; ஓர்ந்திலம் - அறியேம். தழையார்வம் - தழைத்த ஆர்வத்தை; தழையையும் ஆர்வத்தையுமெனலுமாம். அகன்றுருடைய. இருந்தனம் தம்மில் - பெரிய தனங்களின்மீது. மன் ஓர் இழையாய் இருந்தனமேல்; இழை - ஆபரணம். இருந்தனம்: மடக்கு.

"வரித்தடங்கட் சிங்கிமணி மார்பிடத்திற்கொண்டுதினம், தரிக்குமொரு பூணுகிற் றனத்தைவிட்டுப் பிரியேனே" (சா. குற.); "அருங்கலக் கொடி யன்னவன்" (சீவக. 1372) என்பதும் அதன் உரையும் இங்கே அறிதற்பாலன.

## வறுங்கள நாடி மறுகல்.

(தலைவியில்லாத இடத்தைக்கண்டு தலைவன் வருந்துதல்.)

170. மந்தா கினிச்சடைக் கோடீச்சு ரேசர் வரைத்திருமான்
வந்தார்வத் தோடம் மனையாடு மோகை வளையொலிக்கப்
பந்தாடு மோசுகம் புள்ளினங் காளிந்தப் பைம்பொழிற்கண்
தந்தாளு மோவொரு காலமுன் போலத் தமியனையே.

(கு - உரை.) மந்தாகினி - கங்கை. திருமான் - தலைவி. வந்து அம் மனையை ஆடுவாளோ? முன்புபோலவே திருமான் வந்து ஒருகாலம் சுகம் தந்து தமியனை ஆளுமோ?

### வாழும் ஊர்நோக்கி மதிமயங்கல்.

(தலைவிவாழும் ஊரைநோக்கித் தலைவன்
மதிமயங்கிக் கூறுதல்.)

171. பெருவிண் ணவர்புகழ் கோடீச்சு ரேசர் பிறங்கலினம்
திருவின் புறமூ ரஃதது சீறா ரதிற்செறிவோர்
இருவின் மறவர் நளன்போல நாமுமவ் விந்திரன்பால்
ஒருவிஞ்சை பெற்றிடிற் போய்வர லாமந்த வூர்தனக்கே.

(கு - உரை.) பிறங்கலில் - மலையில். திரு - தலைவி. அது சிறிய ஊர். இருவில் - கரிய வில். விஞ்சை - பிறர் தம்மை அறியாதவாறு மறைத்துச் செல்லுதற்குரிய மந்திரம். மற்றவர் கண்டால் துன்புறுத்துவாராதலின் இங்ஙனம் கூறினன். தன்னைப் பிறர்காணாத மந்திரத்தை இந்திரன்பாற் பெற்று நளன் குண்டினபுரத்தில் தமயந்தியின்பாற்போய்வந்தமை இங்கே யறிதற்பாலது; நைடதம், நளன்றூதுப்படலம் பார்க்க.

---

## இரவுக்குறி.

### இறையோன் இருட்குறி வேண்டல்.

(இறையோன்-தலைவன்.)

172. வனந்தங்கு வார்சடைக் கோடீச்சு ரேசர் மணிவரைவண்
டினந்தங்கு கோதைநின் சீறா ரிடத்தின் றிரவுதனிற்
கனந்தங்கு காவின் முனைநா ளெனக்கிரு கைந்நிறையத்
தனந்தந் தவர்தம் மிடைவரு வேனின்னுந் தான்பெறவே.

(கு - உரை.) வனம் - நீர்; இங்கே கங்கை. வார்சடை - நீண்ட சடை. வரையில். கோதை - தோழி; அண்மை விளி. இன்று - இற்றை நாளின். கனம் - மேகம். முனைநாள் - முன்பு. தனம்-ஸ்தனம், பொருள் சிலேடை: இன்னும் பெறவருவேன். தான் : அசை.

### பாங்கி நெறியினது அருமைகூறல்.

(நெறியினதருமை - வழி வருதற்கு அரிதாயிருத்தலை.)

173. நெடுங்கயி லாயத்தர் கோடீச் சுரநித்தர் நேரியின்பாற்
கொடுங்குன்று நீடு வளராளைக் காவுங் குறிப்பின்மனம்
நடுங்கு மிகுபுனற் கொள்ளிட வாறுமிந் நள்ளிரவில்
அடுங்கதிர் வேல கடந்தீண் டணைத லருமையதே.

(கு - உரை.) கொடுங்குன்றும் - கொடுமையாகிய மலைகளையும். ஆனைக்காவும் - யானைகள் திரியும் காடுகளையும். குறிப்பின் - நினைக்கினும். மிகுபுனலைக்கொண்ட இடத்தையுடைய ஆறுகளையும். குன்றையும் காவையும் ஆற்றையும் கடந்து.

இதிற் கொடுங்குன்று ஆனைக்கா என்னும் தலப்பெயர்களும் கொள்ளிடமென்னும் ஆற்றின்பெயரும் தோன்றுகின்றன.

## தலைவன் நெறியினது எளிமை கூறல்.

174. ஒளியார்செம் மேனியர் கோடீச்சு ரேச ருயர்வரைமேல்
தெளியா ரமுதந் தருகா ரிகைமுகத் திங்களுரு
வெளியா யுறும்போ திருளெனக் கேதன்றி மேலுமந்தக்
களியார் மயின்முற் பணிதோன்ற லேது கனங்குழையே.

(கு - உரை.) தெளி - தெளிதல். ஆர் அமுதம் தருதிங்கள்; காரிகை முகத்திங்கள் - தலைவியின் முகமாகிய சந்திரன். உருவெளியாய் - உருவெளித்தோற்றமாகி. எனக்கு ஏது. மேலும் - பின்னும். மயில் - தலைவி. பணி - பாம்பு; மயிலைக் கண்டாற் பாம்பு அஞ்சுவது இயல்பு.

அமுதந்தரு காரிகை - அமுதசாகரனால் தரப்பட்ட காரிகையென்னும் நூலென்பது தொனி; அமுதசாகரனை அமுதமென்றது நாமைகதேசம்.

## பாங்கி அவனுட்டணியியல் வினுதல்.

(தலைவனது நாட்டிலுள்ள மகளிர் அணியும் ஆபரணங்களையும் அவர்கள் இயலையும் என்னவென்று பாங்கி தலைவனை வினுதல்.)

175. நீடும் புகழரன் கோடீச் சுரவெற்ப நேருனது
நாடுமந் நாட்டு நறுந்தற் பாவையர் நாளுமினி
தாடு மமுதத்தின் சீருந் தளைசெய் தணிதொடையும்
பாடுமப் பாவும் பயிலு மினமும் பணித்தருளே.

(கு - உரை.) வெற்ப: விளி. அமுதத்தின் சீரும் - நீரினது இயல்பும். தளைசெய்து - கட்டி. அணி தொடையும் - தரிக்கும் மாலைகளும். பாவும் - பாட்டும். இனமும் - மகளிராயமும். பணித்தருள் - சொல்வாயாக.

இதில் சீர், தளை, தொடை, பா, பாவினம் என்னும் யாப்புறுப்புக்களின் பெயர்களும் அணியென்னும் பெயரும் தொனிக்கின்றன. மேற்

செய்யுளிற் காரிகையென்னும் நூற்பெயரை அமைத்து அதிற் கூறப்படும் யாப்புறுப்புக்களை இதிற் கூறியிருத்தல் கருதற்பாலது.

தலைவன் அவள்நாட்டணியியல் வினுதல்.

176. என்னுட் டணிநோக் கிடநீ வருங்கா லியம்புவன்முன்
நின்னுட் டியலிசை நாடக மாடுதி நீயெனக்குப்
பொன்னுட் டினர்பணி கோடீச் சுரநம்பர் பொற்கிரிமேல்
வன்னுட் டியதன்ன கொங்கைமின் னேரிடை வாணுதலே.

(கு - உரை.) நோக்கிட நீ வருங்கால் என் நாட்டணி இயம்புவன். இயல் இசை - இயல்பைச் சொல்வாயாக; இசை - பாட்டுமாம். நாடு அகம் ஆடுதி - யாவரும் விரும்புகின்ற இடங்களைச் சொல். வல் - சூதாடு கருவி.

இதில் இயல் இசை நாடகமென்னும் முத்தமிழின் பெயர்களும், சொற்கிடக்கையால் நாடகமாடுதியென்பதும் தொனி.

தன்னுட்டணியியல் பாங்கி சாற்றல்.

(அணி இயல் - அணியையும் இயலையும்.)

177. மாதார மார்பங்கர் கோடீச்சு ரேசர் வரையிடமே
ஆதார மாக விருந்தாடு வார்மயி லாடுதுறை
காதாரம் பாமெனுங் கண்ணார் மகளிர்தென் காஞ்சியொடு
கேதாரம் பாடுவ ரெங்கள்பொன் னுட்டின்னுங் கேளரசே.

(கு - உரை.) தாரம் - மனைவி; உமாதேவியார். மயில் ஆடுதுறை ஆடுவார் - மயில்கள் ஆடுகின்ற இடங்களில் ஆடுவார். காதார் கண்ணார், அம்பாமென்னும் கண்ணரென்க. தென் - அழகு. காஞ்சி, கேதார மென்பன இரு பண்களின் பெயர்கள். இன்னும் கேள் - இன்னும் அப் பாட்டைக் கேட்பாயாக.

இதில் மயிலாடுதுறை (மாயூரம்), காஞ்சி, கேதாரமென்னும் தலப் பெயர்கள் தொனிக்கின்றன.

இச்செய்யுள் திரிபு.

பாங்கி இறைவிக்கு இறையோன் குறிப்பறிவுறுத்தல்.

(இறையோன் குறிப்பு - தலைவனுடைய
கருத்தை; கருத்து : இரவுக்குறி.)

178. வெவ்வாண் மழுப்படைக் கோடீச் சுரவள்ளல் வெற்பின்வரி
கவ்வாணம் பாடுங் குழலாய் மதியின் கலையமுதை

அவ்வா தரங்கொள் சகோரமுண் காலத் தரசருன்பாற்
செவ்வாய்க் கிழமை யமுதுக்குத் தாம்வரல் செப்பினரே.

(கு - உரை.) வரி - வண்டு. கவ்வாணம் - ஒருபண். சகோரம் - சகோரப்பறவை. சந்திரகிரணத்தைச் சகோரம் உண்ணுமென்பர். உண் காலத்து - இராக்காலத்தில். செவ்வாய்க்கிழமை அமுதுக்கு - செம்மையாகிய வாய்க்கு உரிய அமுதத்தை உண்ணுதற்கு; செவ்வாய்க்கிழமையில் விருந்துண்பதற்கென்பது மற்றொரு பொருள். அரசர் தாம் வருதலைச் செப்பினர்.

நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தல்.

(நேராது - உடன்படாமல்.)

179. தோட்டுவிற் காதரன் கோடீச் சுரவெற்பிற் றோன்றியசெங்
கோட்டுயர் வேழத் தெதிர்நமைக் காத்தவர் கூடிவரி
பாட்டுளர் கானத் திராவரச் செய்தனள் பம்பரத்தை
ஆட்டுவிக் குந்தனத் தாணெஞ்ச மேயின்ன தாய்ந்திலளே.

(கு - உரை.) தோடு - காதணி. வில் - ஒளி. செங்கோடு - செம்மை நிறத்தை உடைய கொம்பு. உயர் - எழுமுழம் உயர்ந்த. வேழத்து எதிர் - யானையின்முன்பு. காத்தவரென்றது, களிறுதரு புணர்ச்சியை நினைந்து. வரி - வண்டு. பாட்டு உளர் - இசைப்பாட்டை யாழ்வாசித்தாற் போன்று இசைக்கின்ற; உளர்தல் - யாழ்வாசித்தல். கானத்து - காட்டில். வரி - ஒருவகைப்பாட்டு. இன்னது ஆய்ந்திலள் - காட்டில் இரவில் வருதலாலுண்டாகும் துன்பத்தைத் தோழி அறிந்திலள்.

வரி, பாட்டு, கானம் என்னும் ஒருபொருட்பலசொல் ஒருங்கே வந்தது ஒரு நயம்; கானம் - சங்கீதம்.

பம்பரத்தை ஆட்டுவிக்குந் தனத்தாள்: "தங்கமுலை பம்பரத்தை யம்புவிமீ தாட்டிடும்" சா. குற.

தலைவி பாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

(நேர்ந்துரைத்தல் - உடன்பட்டு உரைத்தல்.)

180. முன்னு ணமக்குயி ராவியி லீந்த முதல்வர்வந்திங்
கென்னு ருயிர்காத் திடுதியென் றுலதற் கென்செயலாம்
வின்னுண் பணிகொண்ட கோடீச் சுரவள்ளல் வெற்பிடத்தில்
உன்னு வகத்திற் கிசைந்ததை நீயே யுரையணங்கே.

(கு - உரை.) உயிரை ஆவியில் ஈந்த; ஆவியில் - குளத்தில். இது புனற்றுபுணர்ச்சியை நினைந்து சொன்னது; உயிர் ஆவியென்னும் ஒரு பொருட் பலசொல் ஒன்றிவந்தமை ஒருநயம். பணி - பாம்பு. காண

கொண்ட - நாணியாகக்கொண்ட; நாணை ஆபரணமாகக்கொண்ட என்பதும் ஆம். உன் நா அகத்திற்கு - உனது நாவிற்கும் மனத்திற்கும்; உன்ஞ - உன்னியெனலுமாம்.

### நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தல்.

(நேர்ந்தமை - தலைவி உடன்பட்டமையை.
நெடுந்தகைக்கு - தலைவனுக்கு.)

181. திகையுல கும்புகழ்க் கோடீச் சுரநம்பர் திண்சிலம்பிற்
றகையுறு மாதுள மென்காய் தனைப்பகர் தந்திரத்தால்
நகையுறு வேல மெலக்கனி யாக்கின னன் பணிந்து
தொகையிது வாமேல் வகையும் விரியுந் தொடர்ந்துணரே.

(து - உரை.) திகை - திசை. தகை - அழகை. மாது உளம் என் காய் - தலைவியின் மனமென்கின்ற காயினை; அது கனியாமலிருந்ததென்றபடி; மென்காயுமாம். தந்திரத்தால் - உபாயத்தால். மெல - மெல்ல. கனியாக்கினன் - இரங்கும்படி செய்தேன். மாதுளங்காயைத் தந்திரத்தால் நீ மென்றுண்ணும்படி கனியாக்கினேன் என்பது மற்றொரு பொருள்; புகையூட்டி மாதுளங்கனியைக் கனியச்செய்தல் மரபு; "விரும்பிய கணவர்க் கண்டார் மெய்புள குற்ற வென்ன, அரும்புகண்டகத்த வாகு மாதுளை பருவத் தன்றித், தரும்புகை யிடையிற் றோன்றுங் கனிதம யந்தி கொங்கைக், குரும்பையை நிகர்ப்பப் பொன்னங் குடந்தவ முயல்வ போன்ற" (நைடதம், அன்னத்தைக்கண்ணுற்ற. 28.) இன்னோரன்ன உபாயங்கள்பல 'உத்பல பரிமளம்' என்னும் வடநூலிற் காணப்படுமென்பர். நான் பணிந்து கனியாக்கினேன். தொகை - தொகுப்புரை. வகையும் விரியும் உணர்.

இதில் தொகைவகை விரியென்னும் நூல்யாப்பின் பெயர்கள் தோன்றுகின்றன.

### குறியிடை நிறீஇத் தாய்துயில் அறிதல்.

(நிறீஇ - தலைவனை நிறுத்தி. தாய் துயிலறிதல் - தாயினது
துயிலைப் பாங்கி சோதித்து அறிதல்.)

182. இலங்கையிற் காவை யனுமா னலைத்த தெனத்திருக்கை
இலங்கையிற் சூலத்தர் கோடீச்சு ரேச ரிமயவெற்பி
னிலங்கையி னீள்விழி மானேநஞ் சோலையை யீடழித்த
திலங்கையிற் போகவுஞ் செய்திட்ட தானையொன் றின்றுவந்தே.

(து - உரை.) இலங்கையிற்காவை - இலங்கையிலுள்ள அசோகவனத்தை. திருக்கை - திருக்கையில். இலங்கு அயிற் சூலத்தர்; அயில் -

கூர்மை. வெற்பினில் அம் கையின் நீள்விழி ; "குடங்கை போலுண் கண்" (சீவக. 342.) ஈடு அழித்தது - பெருமையை அழித்தது. இல்லம் கையில் போகவும் செய்திட்டது - வீடு கைம்மரங்களினின்று நீங்கவுஞ் செய்திட்டது ; கை - வீட்டுறுப்பு; நிலை குலையச்செய்ததென்றபடி. அனுமான் அலைத்ததென ஆனை ஒன்று வந்து செய்திட்டது.

இச்செய்யுள் யமகம்.

## இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தல்.

(இறைவன் வரவு - தலைவன் வந்தமையை.)

183. முடிவனை கொன்றையர் கோடீச்சு ரேசர் முருகுவெற்பின்
அடிவள ரேனற் புனத்தே பகல்வந்த வம்மதமா
கொடிவளர் காவி னிடைவந்து தன்னொடு கூடவந்த
பிடிவர நோக்கிநிற் கின்றது வாணுதற் பெண்ணரசே.

(கு - உரை.) முருகு - மணம். அடி - மலையடிவாரம். ஏனற்புனத்து - தினைக்கொல்லையில். பகல்வந்த அம்மதமாவென்றது, பகற்குறிக்கண்வந்து போன தலைவனைக் குறிப்பித்தபடி. கூட : சிலேடை. பிடியென்றது தலைவியை.

இஃது ஒட்டணி.

## குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல்.

(சேறல் - செல்லுதல்.)

184. ஆடக வில்லினர் கோடீச்சு ரேச ரருண்மருவிச்
சூடகக் காந்தளஞ் செங்கைமின் னேமுகில் சூழ்பொழில்சூழ்
ஏடக மார்திருப் பூவணம் பார்த்திறை கூடலுங்கண்
டீடக மேவுதி வாராய் சிவநிசி யின்னதிலே.

(கு - உரை.) ஆடகவில் - மேருவில் ; ஆடகம் - ஒருவகைப்பொன். சூடகம் - வளையையுடைய. ஏடு அகம் ஆர் திரு பூ வண்ணம் பார்த்து - இதழ்கள் உள்ளே நிறைந்த அழகிய மலர்களின் அழகைப்பார்த்து. இறை கூடலும் கண்டு - தலைவன் சேர்தலையும்பெற்று. அகம் ஈடு மேவுதி - மனம் ஈடுபடுவாய். சிவநிசி இன்னதில் - மங்களகரமாகிய இந்த இரவில், சிவராத்திரியில்.

சிவராத்திரியில் திருவேடகம், திருப்பூவணம், கூடல் (மதுரை) என்னுந் தலங்களைத் தரிசித்துவாவென்பது வேறொரு பொருள். இம்மூன்று தலங்களையும் ஒரு சிவராத்திரியிலேயே தரிசிப்பவர்களும் உண்டு.

## குறியிடத்து உய்த்து நீங்கல்.

(தலைவியைக் குறியிடத்து நிறுத்திப் பூக்கொய்து வருவேனென்று சொல்லிப் பாங்கி பிரிதல்.)

185. பணங்கொண்ட பூணினர் கோடீச் சுரமன்ன பாவையிருள்
வணங்கொண்ட கோதைக் கணிசெய நான்மென் மலர்பறித்துக்
கணங்கொண் டணைவலிக் காவகத் தேநில் கருதிடுநின்
மணங்கொண் டுலாவுறு தென்றலுன் மேனி மருவுறவே.

(கு - உரை.) பணங்கொண்ட பூணினர்; "பணந்தரு பூணினர்" (154) என்றார் முன்னும். பாவை: விளி. இருளினது நிறத்தைக் கொண்ட கூந்தலுக்கு; வணம் - வண்ணம். அணிசெய - அலங்காரஞ் செய்ய. கணம் - கணப்பொழுதில். பறித்துக்கொண்டு அணைவல்; அணைவல் - வருவேன். இக்காவகத்தே நில். மணம் - வாசனை; கலியாணமென்பது குறிப்புப்பொருள். தென்றலென்றது, தலைவனைக் குறிப்பாற் சுட்டியபடி.

இஃது ஒட்டணி.

## தலைவன் எதிர்ப்படுதல்.

(தலைவன் தலைவியை எதிர்ப்படுதல்.)

186. ஊர்திற லேற்றினர் கோடீச் சுரவெற்பி லோதுவரி
நேர்திறம் பாடுமைக் கோதைநல் லாயிந் நிசியில்வெய்யோன்
சீர்திறம் பாத்தன் கரத்தா லடைத்திட்ட திண்மனையங்
கார்திறந் தார்வந்தெவ் வாறுவந் தாய்தனி யாருயிரே.

(கு - உரை.) ஊர் - ஊரும்; ஊர்தல் - ஏறுதல். வரி - வண்டு. நேர்திறம் - ஒருபண்; இது நோதிறமெனவும் வழங்கும். நிசியில் - இரவில். வெய்யோன் - சூரியன், கொடியவன். கரம் - கிரணம், கை. மனை - தாமரை, வீடு. வந்து ஆர் திறந்தார்; எவ்வாறு தனி வந்தாய்.

இது தலைவியைத் திருமகளாகக் கருதிச் சொல்லியபடி.

## தலைவி ஆற்றினது அருமைநினைந்து இரங்கல்.

(ஆற்றினது அருமை - வழி வருதற்கு அரியதாய் இருத்தலை.)

187. வில்லரி மேரு வெனமேல் வளைத்தவர் வில்வநறு
வல்லரி சூடிய கோடீச்சு ரேசர் வரைக்குறவர்
கொல்லரி குத்தெனச் சூழ்ந்திடுங் கானிடைக் கொற்றவநீ
அல்லரி வேழம் பிழைத்தீண் டணைந்த தருமையதே.

(கு - உரை.) அரி - பொன்; மேருவை வில்லெனக் கொண்ட. வல்லரி-தளிர். கொல் அரி குத்தென்பன வேட்டுவர் மொழிகள்; "வேட்டுவர் கூட்டந் தோறும், கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய வோசை" (பெரிய. கண்ணப்ப. 5.) அல் - இரவில். அரி வேழம் - சிங்கத்தையும் யானையையும். பிழைத்து - தப்பி.

## தலைவன் தேற்றல்.

(வழி வருதற்கு எளிதாய் இருந்ததென்று கூறித் தலைவன் தலைவியைத் தெளிவித்தல்.)

188. சினத்திரி சூலத்தர் கோடீச்சு ரேசர் திருப்பதமென்
மனத்துற லாலெதிர் தோன்று மடங்கன் மடங்கியது
வனத்திற் கரியுங் கரிந்தது தீங்கின்றி வந்தனன்யான்
இனத்திகழ் பொற்றொடிக் கையா யொளிமுன் னிருளில்லையே.

(கு - உரை.) மடங்கல் - சிங்கம். மடங்கியது - திரும்பிச் சென்றது. கரியும் - யானையும். கரிந்தது - இறந்தது. சிவபெருமான் சிங்கத்தையும் யானையையும் உரித்துப் போர்த்தவராதலின் அவர் திருவடி நினைவு, அவ்விரண்டால் எனக்குத் துன்பம் வராதபடி காத்தது. சிங்கத்தை உரித்தமை, "சிங்கத் துரிமூடுதிர்" (தே.) என்பதனால் விளங்கும். ஒளி - திருப்பதத்தின் ஒளி. ஒளிமுன் இருளில்லையே யென்பதனை எடுத்துக் காட்டுவமையாகக் கொள்ளலும் ஒன்று.

## புணர்தல்.

189. தெள்ளக் கலைச்சடைக் கோடீச்சு ரேசர் சிலம்பிடையென்
உள்ளக் கமலத் துறைதிரு வேயிவ் வுலகஞ்சுற்றும்
வெள்ளக் கடற்குக் கரையுண் டளவுண்டு மேவுமிந்தக்
கள்ளக் களிப்பெருங் காமக் கடற்கவை கண்டிலனே.

(கு - உரை.) தெள் அ கலை - தெளிந்த அழகிய பிறையை யணிந்த. உள்ளக்கமலத்துறைதிருவே: "எனையாளவந்த திருவே" (192) என்பர் பின். வெள்ளம் - நீர். அளவு - அகலம் ஆழம் முதலியன. கள்ளக் களிப்பெருங்காமம் - களவுப் புணர்ச்சி. காமக்கடல்: "கடலன்ன காம முழந்தும்" (குறள். 1137.) அவை - கரையும் அளவும்.
ஈற்றடி முற்றுமோனை.

## புகழ்தல்.

(தலைவியைப் புகழ்தல்.)

190. வெண்பொடி பூசத்த ராதிரை யார்மக மேலழித்தோர்
பெண்புண ரத்தத்தர் கோடீச் சுரத்திந்தப் பெண்ணிகர்யார்

எண்பயி ஞக மடந்தையர் தாழ்ந்தவ ரேத்திமையோர்
நண்புறு மாதர்க ளந்தரத் தோர்மண்ணி னண்ணிலரே.

(கு - உரை.) வெண்பொடி - திருநீறு. பூசு அத்தர் - பூசுகின்ற தலைவர். ஆ: வியப்பின்கட் குறிப்பிடைச்சொல். திரையார் - அலைகளையுடைய கங்கையை யணிந்தவர்; ஆதிரையார் - திருவாதிரை நாளுக்குரியவரெனலுமாம். மகம் - தக்கனது யாகத்தை. மேல் - முன்பு. பெண் - உமை. அத்தத்தர் - பாதி உடம்பை உடையவர்; அத்தம் - பாதி. யாரென்பது, இலரென்னும் பொருளில் வந்தது. நாகலோகம் பூமிக்குக் கீழே உள்ளதாதலின் நாகமடந்தையர் தாழ்ந்தவரென்றார்; தாழ்ந்தவரென்பதற்கு இழிந்தவரென்பது வேறு பொருள். அந்தரத்தோர் - ஆகாயத்திலுள்ளவர், பற்றுக்கோடற்றவர். மண்ணில் நண்ணிலர் - பூமியின்கண் வாராதவர்; தெய்வப்பெண்களின் கால்கள் பூமியிற் றோயாததுபற்றி இங்ஙனங் கூறினர்.

இது சிலேடையொடு கூடிய தற்குறிப்பேற்றம்.

இதில் பூசம், ஆதிரை, மகம், அத்தமென்னும் நட்சத்திரப் பெயர்கள் தொனிக்கின்றன.

## இறைவி இறைவனைக் குறிவரல் விலக்கல்.

(குறிவரல் - குறியிடத்து வருதலை. விலக்குதற்குக் காரணம் வழி, துன்பத்தைச்செய்யும் என்னும் கருத்தே.)

191. உள்ளன் புணர்ந்தருள் கோடீச்சு ரேசர்த மோங்கலன்ப
கள்ளம் பெரிது கராம்பெரி தாற்றிற் கவலைநெறி
வள்ளம்பு தூர்ப்பர் வனசரர் நீதனி வாரல்வரு
வெள்ளங் கிணற்றுப் புனல்கொண்டு போதலின் மேதினிக்கே.

(கு - உரை.) உள் அன்பை உணர்ந்தருள். கராம் கள்ளம் பெரிது; கராம் - முதலை. ஆற்றில் கவலைநெறி பெரிது; ஆறு - வழி; கவலை நெறி - கவர்த்தவழி. வள் அம்பு - கூரிய பாணங்களை. தூர்ப்பர் - மிக விடுவார். வனசரர் - வேடர். வாரல் - வருதலைத்தவிர்க. வரு வெள்ளம் - ஆற்று வெள்ளப் புனல். மேதினிக்கே இல் - பூமியில் இல்லை.

கிணற்றுத் தண்ணீரை வெள்ளங்கொண்டு போகாதென்பது ஒரு பழமொழி.

## தலைவன் தலைவியை இல்வயின் விடுத்தல்.

(இல்வயின் - வீட்டில்.)

192. எனையாள வந்த திருவே தனிநில்ல லேதில்வண்டார்
பனையார்கள் ஞண்டு களித்துத் திரியுமிப் பைம்பொழிற்கண்

வனையா றுறுசடைக் கோடீச் சுரவள்ளல் வண்சிலம்பில்
அனையாங்கு நின்றனைத் தேடுமுன் னேகி டலர்மனைக்கே.

(கு - உரை.) நில்லல் - நில்லாதே. ஏதில் வண்டர் - குற்றமில்லாத வண்டுகள், அயற்றன்மையையுடைய கீழ்மக்கள். பனையார் கள் - பனங்கள்ளை. கீழ்மக்கள் பனங்கள்ளையுண்டு களித்துத்திரியும் பொழிலென்பது மற்றொரு பொருள். ஆறு-கங்கை. அனை-தாய். ஏகிடு அலர்மனைக்கு; அலர்மனை - பரவிய வீடு, தாமரையாகிய வீடு. திருவேயென்றதற்கேற்ப அலர்மனையென்றான்.

## பாங்கி தலைவியை எய்திக் கையுறைகாட்டல்.

(கையுறை - தான்பறித்துக் கொணர்ந்த
மலர் முதலியன.)

193. சலந்தரற் காய்ந்தவர் கோடீச்சு ரேசர் தடஞ்சிலம்பில்
வலந்தரு வேல்விழி மானே தளவ மலர்கொணர்ந்தேன்
நலந்தரு மீதுன் னகையெழி லேக்குமுன் னாணமுற்று
மலர்ந்திடல் போலுள் ளுடைந்தாங்கு நின்றது வாய்திறந்தே.

(கு - உரை.) சலந்தரனை. வலம் - வெற்றியை. தளவமலர் - முல்லைப்பூவை. நகையெழில் - பற்களின் அழகை. நாணமுற்று - நாணமடைந்து. உள்ளுடைந்து - அகவிதழ்கள் மலர்ந்து, மனம் உடைந்து. வாய்திறந்து - மலர்ந்து, வாயைத்திறந்து.

இது சிலேடையொடு கூடிய தற்குறிப்பேற்றம்.

## பாங்கி தலைமகளை இற்கொண்டேகல்.

(இற்கொண்டு - வீட்டிற்கு அழைத்துக்கொண்டு.)

194. தாய்துயி னீங்கினென் றாயெங் கெனுமது தானுமன்றி
வாய்துணை வாரி யடைப்பினுங் கூவிட வாயிலைநம்
எய்துதி கொண்டருள் கோடீச்சு ரேச ரிமயவெற்பில்
ஆய்துடி நேரிடை யாயொல்லை வாபின் னகந்தனக்கே.

(கு - உரை.) தாய் - செவிலி. என்தாய் என்றது தலைவியை. வாய் - வாய்ந்த; வாயிலுமாம். துணைவாரி - இரட்டைக்கதவு. வாயிலை - வாய் இல்லை; களவிற்சென்று வந்தமையின் வாயில்லை யென்றாள். துடிநேர் - உடுக்கையையொத்த. பின் - என் பின்பு. அகம் தனக்கு - வீட்டுக்கு.

பாங்கி இறைவனை வரவுவிலக்கல்.

(வரவு - இரவில் வருதலை.)

195. மாயா விநோதர்தென் கோடீச்சு ரேசர் வரையிறைவ
சாயா வனமுங் கழிப்பாலை யுந்தள்ளிச் சாரினுமித்
தீயார் குறிஞ்சியிற் சாரவொண் ணாது தெரிக்குமிவை
ஆயா திரவில் வரினீ யெனக்கா மரும்பழியே.

(கு - உரை.) சாயாவனமும் - கெடாதகாடுகளையும். கழிப்பாலையும்- மிகுதியான பாலை நிலங்களையும். தள்ளி - கடந்து. தீயார் - கொடிய வேடர்கள் தங்கிய; தீ நெருப்புமாம். குறிஞ்சி - குறிஞ்சிநிலத்தில். நீவரின், அரும்பழி எனக்கு ஆகும்.

இதில், வனம், பாலை, குறிஞ்சியென்னும் திணைப்பெயர்கள் அமைந்துள்ளன; சாயாவனம் கழிப்பாலையென்னும் தலப்பெயர்களும் தொனிக்கின்றன.

தலைமகன் மயங்கல்.

(பாங்கி வரவு விலக்கியதை ஆற்றாத தலைமகன் வருந்திக் கூறல்.)

196. காவென் றுரைக்குமுன் வாவென் றழைத்துக் கதியருளும்
தேவென் றுரைசிவன் கோடீச் சுரவள்ளல் செஞ்சிலம்பிற்
போவென்ப தேபுக லின்னா ளொருபுயல் போற்றதன்மேற்
றாவெண் மதிக்கதி ரன்னாள் சுகநாஞ் சகோரமதே.

(கு - உரை.) தேவுஎன்று - தெய்வமென்று; தேவு - தெய்வத்திற்கு ஒருபெயர்; சீவக. 1. இன்னாள் - தோழி; துன்பத்தைச் செய்பவளென்பது மற்றொரு பொருள். அதன்மேல் - அந்தப் புயலின்மேல். தா வெண்மதி - தாவிய வெண்மதி; தாவு: தொகுத்தல்விகாரம். அன்னாளென்றது தலைவியை. சகோரப் பறவை சந்திரகிரணத்தை உண்பது.

சந்திரகிரணத்தைச் சகோரம் உண்ணாதபடி மேகம் மறைப்பது போலத் தலைவியின் இன்பத்தை யான் பெறாதவாறு தோழி தடைசெய்கின்றாளென்பது கருத்து; "கரும்புயல் மறைக்கு மதிக்கதிர் வேட்டல் கயிரவ மலர்பெறா ததுபோல்" (நைடதம், அன்னத்தைத்தூது விட்ட. 29) என்பது இவ்வுவமையை ஒருவாறு ஒத்துள்ளது.

வாவென்று அருளும் கோடீச்சுரவள்ளல் சிலம்பிற் போவென்று இவள் கூறுதல் மாறுபாடுடையதென்று ஒரு கருத்து இதில் தோற்றுகிறது.

இது முற்றுருவகம்.

### தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல்.

(தலைமகள்துயர் - தலைவன்வரும்வழி அவனுக்குத் துன்புறுத்துமேயென்று தலைவிகொண்ட துன்பத்தை.)

197. அரவிடை யீசர்தென் கோடீச் சுரவெற்ப வண்ணுறுமிவ்
விரவிடை விண்ணொலி கேளா மகிழ்மயி லென்னவெம்மான்
நிரலருங் கான்கடந் துன்னா ரணைந்தபின் னீகுறிக்கும்
இரலைதன் வாயொலி கேட்டபின் றான்களிப் பெய்துவதே.

(கு - உரை.) அரவு இடை ஈசர் - பாம்பைக் கச்சாகத் திருவரையிற்கட்டிய இறைவர். அண்ணுறும் - அணுகுகின்ற. விண் ஒலி - மேகத்தின் முழக்கத்தை. கேளா - கேட்டு. மான் - தலைவி. நிரல் - வரிசை. அருங்கான் - செல்லுதற்கு அரியகாடு. குறிக்கும் - ஊதுகின்ற. இரலை - ஊதுகொம்பு, ஆண்மான். எமது மான் களிப்பெய்துவது இரலையொலி கேட்டபின் தானென்றாள்; ஆண்மானொலிகேட்டால் பெண்மான் மகிழுமென்பது குறிப்பாற் போந்தபொருள். விண்ணொலிகேட்டு மகிழ்மயிலென்ன எம்மான் களிப்பெய்துவது, நீ ஊதும் இரலையொலி கேட்டபின்னே தான்.

### அவன் சேறல்.

(தலைவன் தன்னிடம் செல்லுதல்.)

198. பொன்னுறழ் மெய்யரன் கோடீச் சுரமன்ன பூங்கொடிதன்
உன்னு மிடையல்கு லானன நேரெமை யோதுகென
மின்னு மரவு மதியுமங் கங்கு வெளியுறவென்
முன்னுற வெய்தி நெறிகாட்ட நான்செல்வன் மொய்குழலே.

(கு - உரை.) உறழ் - ஒத்த, மாறுபடுகின்ற. இடை முதலியவற்றிற்கு ஒப்பாக எம்மைச் சொல்வாயாகவென்று மின்னும் அரவும் மதியும் என்முன் நெறிகாட்ட; நிரனிறை. அரவு தன்பாலுள்ள மணியினால் நெறிகாட்டும். நேர் - ஒப்பு.

---

## இரவுக்குறி இடையீடு.

[இரவுக்குறிக்கண் தடைகள் நிகழ்தல்.]

### இறைவிக்கு இகுளை இறைவரவுணர்த்தல்.

(இகுளை - தோழி. இறைவரவு - தலைவன் வந்தமையை.)

199. இலகம் புனைசடைக் கோடீச் சுரவள்ள லேமவெற்பிற்
கலகம் புரிவடி வேல்விழி யாய்நந்தங் காவினிடை

உலகம் புரக்குமுன் மேகம்வந் தெய்திய தோதனுறும்
நலகம் பலசெவி கேட்கலுற் றேனிங்கு நண்ணலுற்றே.

(கு - உரை.) இலகு அம் புனல்; அம் - நீர்; ஆகாச கங்கை. நந்தம் - நம்முடைய. உன் மேகமென்றது தலைவனை. கம்பலை - முழக்கத்தை. இச்செய்யுள் திரிபு.

தான் குறிமருண்டமை தலைவி அவட்கு உரைத்தல்.

(குறிமருண்டமை - மற்றொன்றைத் தலைவன்செய்த குறியாக மயங்கினமையை. அவட்கு - தோழிக்கு.)

200. வெள்ளங்கொள் வேணியர் கோடீச் சுரவன்பர் மேவுறச்செய்
கள்ளங்கொ ளோதை யெனவேற் றொலியினைக் காவடைந்தேன்
கிள்ளை யினங்கள் சுகமா யிருந்தன கேகயமென்
உள்ள மருளமுற் றோகைய தாயங் குறைவுற்றதே.

(கு - உரை.) கள்ளங்கொள் ஓதை - மறைவாகச்செய்த ஓசை. வேற்றொலியினை அன்பர்செய்த ஓசையென எண்ணி. கா - சோலையை. சுகமாய் - சந்தோஷமாய். கேகயம் - மயில். முற்று ஓகையதாய் - நிரம்பிய களிப்புடையதாய்; முன் தோகையதாய் - கருதுகின்ற தோகையையுடையதாய்.

கிள்ளையினம் சுகமாயிருந்தன; கேகயம் தோகையதா உற்றதென அதனதன் பரியாயநாமத்தைக் கொண்டே முடித்தது ஒருநயம்.

பாங்கி தலைவன் தீங்கெடுத்தியம்பல்.

(தீங்கு - பொல்லாங்கு; என்றது தலைவி அறிந்து கொள்ளாதபடி அவன் குறிப்புச் செய்ததை.)

201. கார்மே வியகண்டர் கோடீச் சுரவன்பர் காவினிடை
வார்மே வியகொங்கை நீபோ யடிக்கடி மாழ்கிவர
நீர்மே லெழுதிவைத் தேகின ராகு நினைகுறியை
ஆர்மே லறியவல் லாரவர் மாயமு மார்வமுமே.

(கு - உரை.) வார் - கச்சு. கொங்கை: விளி. மாழ்கிவர - மயங்கி மீண்டும் வரும் வண்ணம். நினைகுறியை நீர்மேல் எழுதிவைத்து ஏகினராகும்; குறி புலப்படவில்லை யென்றபடி. அவர்மாயத்தையும் ஆர்வத்தையும் அறிய வல்லார் யார்?

## தலைவன் புலந்து போதல்.

(புலந்து - வாடி.)

202. மின்செயுஞ் சூலத்தர் கோடீச் சுரநம்பர் வெற்பிலினி
என்செய்வ மென்ன விரங்குநெஞ் சேயிவ் விடையிரவில்
தென்செயம் போருகச் செந்தே னமக்குத் தெரிவுறுமோ
நின்செய்கை யானு மலைத்தே னலைத்தாய் நெடிதெனையே.

(கு - உரை.) மின் - மின்னுதலை. இடையிரவில் - நடுயாமத்தில். தென் - அழகு. அம்போருகம் - தாமரை. தேனென்றது தலைவியை. இரவில் தாமரை குவிந்திருக்குமாதலின், இங்ஙனங் கூறினன். தலைமகளைத் திருமகளாக நினைந்து அம்போருகச் செந்தேனென்றான். தெரிவுறுமோ; ஓ: எதிர்மறை. இங்ஙனம் மலைத்ததற்குக் காரணம் நின் செய்கையே. மலைத்தேன் - மயங்கினேன்.

அம்போருகத்தேன் மலைத்தேனென இருவகைத்தேனின் பெயர்கள் இதில் வந்துள்ளன.

## புலர்ந்தபின் தலைவி வறுங்களம் கண்டு இரங்கல்.

(புலர்ந்தபின் - பொழுது விடிந்தபின்பு. வறுங்களம் - தலைவனில்லாத இடம்.)

203. பொன்னாக மால்புகழ் கோடீச்சு ரேசர் புகார்த்துறைவாய்ப்
புன்னாக மேவிய புள்ளினங் காளன்பர் புல்லிரவின்
முன்னாக விங்குற் றனரே லெனக்கு மொழிமினன்றிப்
பின்னாக மேவி னவர்க்குரைப் பீரென் பெருந்துயரே.

(கு - உரை.) பொன் - திருமகள். ஆகம் - மார்பு. புகார் - காவிரிப் பூம்பட்டினம். புன்னாகம் - புன்னைமரத்தில். என் பெருந்துயரை உரைப்பீர்.

## தலைவி பாங்கிக்கு உரைத்தல்.

204. நெய்யார் மழுவினர் கோடீச் சுரவெற்பர் நென்னல்வரைப்
பொய்யா ரெனப்பொருண் மாறுகொண் டேனவர் போற்றிடுமின்
றுய்யான மெய்துவ னென்றுசொன் மாறுரைத் துற்றவப்பேர்
மெய்யா யுடன்படச் செய்துகொண் டார்மதி மெல்லியலே.

(கு - உரை.) நென்னல்வரை - நேற்றுவரையில். பொருண்மாறு - பொருள் வேறுபாடு; எதிர்மறை: பொய்க்கமாட்டாரென்பது. உய்யானம் - பூஞ்சோலை. சொன்மாறு - செயலுக்கு விரோதமான சொல்; சொன்னபடி செய்யவில்லையென்றபடி. உடன்பட - உடன்பாட்டுப் பொருள்பட; என்றது பொய்யையுடையவர் என்றவாறு.

பொருண்மாறு சொன்மாறு என்னும் இரண்டும் இதில் ஒருங்கே வந்துள்ளன; மாறு - முரண்.

## தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்.

(தலைமகள் - தலைவியின். அவலம் - துன்பத்தை.)

205. தகரக் குழல்பங்கர் கோடீச் சுரநம்பர் சையநெடுஞ்
சிகரத் துதித்த நதியின்பின் னேகிய தேமலரை
வகரமுன் மேவுங் குளத்திடை நோக்கினன் வண்பொழிற்கட்
பகரணி யார்முலை மாதே தவிர்நின் பருவரலே.

(து - உரை.) தகரம் - மயிர்ச்சாந்து. சையநெடுஞ்சிகரம் - சைய மலை. நதி - காவிரி; காவிரி யென்பதன் பின் ஏகிய தேமலர் காவி. இது, "நாடுமொ ராடவன் வந்தீறில் காவிரி நல்கினனுல்" (துறைசை. 319) என்பதனோடு ஒப்பிடற்பாலது; இஃது எழுத்துச் சுருக்கமென்னும் அணி. வகரம் முன்மேவும் குளம்=வகுளம் - மகிழமரம்; இஃது எழுத்து வருத்தனமென்னும் அணி. தலைவன் குறியிடத்து வந்து தலைவியைக் காணாமையால் தான் கொணர்ந்த நீலமலரை மகிழமரத்தில் வைத்துச் சென்றானென்பது இங்கே அறியற்பாலது. பகர் அணி ஆர் - புகழப்படும் ஆபரணங்களார்ந்த.

நதியின்பின் ஏகிய மலரைக் குளத்திடைக் கண்டேனென்பது இதிலுள்ள நயம்.

## இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

(குறிப்புத் தவறியதைத் தலைவன்மேலேற்றிப் பாங்கி கூறுதல்.)

206. தாரார் கடுக்கையர் கோடீச்சு ரேசர் தடஞ்சிலம்பிற்
கூரார் மணிவேற் கரத்தீர் நெருநற் குறியிடத்து
வாரா திருந்தீ ருமதூர்க்கு நாங்கள் வரக்குறித்தேம்
ஊரார் பெயருநும் பேரும்விள் ளாமையி னுற்றிலமே.

(து - உரை.) தாரார்கடுக்கை - மாலைபோலப் பூக்கின்ற சரக்கொன்றை; தார் - கொப்புமாம். மணி - வேலில் உள்ள ஒருறுப்பு; "வேலின் கடைமணிபோற் றிண்ணியான்" (திரிகடுகம், 33.) விள்ளாமையின் - சொல்லாமையால்.

## இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பேற்றல்.

207. என்னைமுன் னுண்டருள் கோடீச் சுரவள்ள லேமவெற்பில்
மின்னையன் னாள்வடி வென்றுங் குயிலிசை மேவுமென்சொற்

றன்னையன் னாண்மொழி யென்றுமற் றங்கங்குச் சார்ந்திட்டுங்கள்
பொன்னை யிரும்பொழிற் காண்கில னூர்சென்று போந்தனனே.

(கு - உரை.) என்னை முன் ஆண்டருள் - தனக்கு ஆட்படுந் தன்மை யுண்டாவதற்கு முன்னே என்னை அடிமைகொண்டருளிய; "என்னை முன்னா ளாழுடையான்" (சிற். 7, பேர்.) மின்னலைத் தலைவியின் உருவென்றும் குயிலோசையை அவளது மொழியென்றும் நினைந்து பலவிடத்துஞ் சென்று அலைந்து அவளைக் காணமலே பயனின்றி என் னூர் சென்றேன்.

ஏமவெற்பிலென்றதற்கேற்பப் பொன்னை யென்றார்.

## தலைவி குறிமருண்டமை பாங்கி தலைவற்கு உரைத்தல்.

(மருண்டமை - தலைவன்செய்த குறிப்பாக
வேறொன்றை நினைத்ததை.)

208. நீலுண்ட கண்டத்தர் கோடீச்சு ரேசர் நெடுஞ்சிலம்பின்
ஏலும் புளினஞ் சிலம்பினுந் தாரு விழைந்திடினும்
மேலுன் குறிவேற் றுமையறி யாள்சென்று மீண்டுபின்போய்க்
காலுஞ் சிவந்திட்ட தல்வழிக் காவல கன்னிகைக்கே.

(கு - உரை.) நீல் உண்ட - நீல நிறத்தைப் பெற்ற; "நீலுண் டுகிலிகை கடுப்ப" (நன். சூ. 155, மயிலை. மேற்.) புள் இனம் சிலம்பினும் - பறவைகள் ஒலித்தாலும். தாரு இழைந்திடினும் - மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்தாலும். வேற்றுமை - வேறுபாட்டை. அல்வழி - குறியல்லாத இடத்தில்; இருளிடத்திலென்றுமாம். கன்னிகைக்குக் காலுஞ் சிவந்திட்டது.

வேற்றுமை அல்வழி யென்பனவும் கால் கை என்பனவும் தொனித்தல் இதிலுள்ள நயம்.

## அவன்மொழிக்கொடுமை பாங்கி அவட்குரைத்தல்.

(மொழிக்கொடுமை - சொற்கொடுமையை; என்றது
தான்செய்த குறிப்பையறிந்து தலைவி
வரவில்லை யென்பதை.)

209. கங்கைச் சடையினர் கோடீச்சு ரேசர் கயிலையிலா
சங்கைக் கிடமிலென் சங்கேதந் தேருந் தகையற்றிந்த
மங்கைப் பருவ முதலாய துங்கண் மடவரற்கென்
றங்கைத் தலத்தொளிர் வேலர்சொன் னார்வந் தணியிழையே.

(கு - உரை.) ஆசங்கைக்கு - சந்தேகத்திற்கு. இடம் இல் என் சங்கேதம் - இடமில்லாத என்குறியை; "மறை நான்முகத்திற் சங்கேத மாம்

பெயர் வெங்கை புரேசர்" (வெங்கைக்கோவை, 64.) முதல் ஆயது - பருவங்களுள் முதலாவதாகிய பேதைப்பருவமாயிற்று. மங்கையாயினும் பேதைபோன்று அறியாதிருந்தாள் என்று வந்து சொன்னார்.

என்பிழைப்பன்றென்று இறைவி நோதல்.

(பிழைப்பு - தவறு.)

210. மறக்குஞ் சரமுரி கோடீச்சு ரேசர் வரையளிகள்
பறக்கு மிசையுஞ் சருகோ டலருதிர் பாட்டியலும்
உறக்குற் றிடாதிருந் தொண்பொழில் வாய்க்கேட் டுரைக்குமவர்
சிறக்குங் குறியென் றலைந்தே னிருளிடைத் தேமொழியே.

(கு - உரை.) மறக் குஞ்சரம் உரி - வீரத்தையுடைய யானையை உரித்த. வரையில். அளிகள்-வண்டுகள். பறக்கும் இசையும் - பறத்தலாலுண்டாகும் ஓசையையும். அலர் உதிர் பாட்டியலும் - பூக்கள் உதிர்தலாலுண்டாகிய ஓசையின் இயல்பையும்; பாடு - ஓசை; "பூவின் பாடுநனி கேட்டே" (குறுந். 138); நள்ளிரவில் நொச்சி முதலிய பூக்கள் உதிர்தல் உண்டு; "நொச்சிப் பூவுதிர் நள்ளிரு ணடுநாள்" (நற்.) உறக்கு உற்றிடாது - தூக்கம் பெறாமல்.

இதில் இசை, பாட்டியல் என்பன வேறு பொருளுடையன.

தாய் துஞ்சாமை.

(துஞ்சாமை - தூங்காதிருத்தல்; துஞ்சாமையைக் கூறுதல். பின்பும் இவ்வாறே கொள்க.)

211. வணங்கார் புரம்வென்ற கோடீச்சு ரேசரை வாழ்த்தியினி
திணங்காகு மிந்தப் பிறப்பிடை யேபண் ணிசைவரியின்
கணங்கா முறுகருங் கூந்தன்மின் னேயன்னை கண்ணிமையா
தணங்கா யினளிர வெல்லாந் தனியே னணங்குறவே.

(கு - உரை.) வணங்கார் - பகைவருடைய. இணங்கு ஆகும் இப் பிறப்பிடை - ஒத்ததாகிய இப்பிறப்பில்; "ஒக்கின்ற வாறணங் கேயிணங் காகும்" (சிற். 68.) பண்ணை இசைக்கின்ற வண்டின் கூட்டங்கள் விரும்பும் கூந்தல். அணங்கு - தெய்வமகள். தேவமகளிர் இமையாமலும் உறங்காமலும் இருப்பர்; இரவெல்லாம் தூங்காமையின் அன்னை அணங்காயினளென்றாள்; அணங்குற - வருந்த.

கோடீச்சுரரை வாழ்த்தி இப்பிறப்பிலேயே அன்னை அணங்காயினள்; இஃது இகழ்ச்சி.

இசைப்பாட்டின் பரியாயப்பெயர்களை வேறு பொருளமைய, 'பண்ணிசை வரி' என அமைத்தது ஒரு நயம். ஈற்றடியில் மடக்கணி அமைந்துளது.

நாய் துஞ்சாமை.

212. வீயுறங் கும்பொழிற் கோடீச் சுரநம் விமலர்வெற்பில்
பேயுறங் காதங் கதனுடன் றாய்துயில் பெற்றிடினும்
நாயுறங் காதன்ன தன்க ணுறங்கினு நாடுமதன்
வாயுறங் காதிவற் றண்ணலெவ் வாறு வருமிரவே.

(கு - உரை.) வீ - பறவைகள். அதனுடன் - அந்தப்பேயுடன். தாய் உறங்காளென்பதை வருவிக்க. அன்னதன் - அந்த நாயினது. இவற்று - இவற்றினிடையில், இரவில் அண்ணல் வருவது எவ்வாறு?

ஊர் துஞ்சாமை.

213. மருக்கொண்ட கொன்றையர் கோடீச்சு ரேசர் வரையிடத்தில்
குருக்கொண்ட வொண்டொடிப் பைங்கிளி யேயென் கொடுமையி
கருக்கொண்டு நீடு விழாவொடு கூத்துக் கதைகளென [ருட்
உருக்கொண்டு வந்திந்த வூருறங் காம லுஞற்றியதே.

(கு - உரை.) மரு - நறுமணம். குரு - நிறம். என் கொடுமை - என் பாவமானது. இருளாகிய கருவைக்கொண்டு. விழாவும் கூத்தும் கதைகளும் என்னத்தோன்றி உஞற்றியது. விழவு: "இனி ஊர்துஞ்சாமை யென்பது ஊர்கொண்ட பெருவிழாநாளாய்க் கண்பாடில்லையாமாகவும் இடையீடா மென்பது. அவை மதுரை ஆவணியவிட்டமே, உறையூர்ப் பங்குனியுத்தரமே, கருவூர் உள்ளிவிழாவேயென இவையும் இவைபோல்வன பிறவுமெல்லாம் அப்பெற்றியானபொழுது இடையீடா மென்பது" (இறை. சூ. 16, உரை.) கூத்து: "மலைவிதி சென்னிகைக் கொண்டார்மெய் யன்பின் வழிகழியா, நிலைவிதி யேத்தும் பிரம புரேசர் நிறைவிழவோ, கலைவிதி யாமவர் கூத்தோ நகர்கண் படாததற்கென், தலைவிதி யேயொரு பாழ்ங்கூத் துருக்கொடு சார்ந்ததுவே" (சீகாழிக். 250.) கதை வந்துழிக் காண்க.

காவலர் கடுகுதல்.

(ஊர்காவலர் விரைந்துசென்று ஊரைச்
சுற்றிக் காத்தல்.)

214. நாவலர் போற்றிடுங் கோடீச்சு ரேசர் நளிர்வரைக்கண்
ஏவல ரான்மதன் றுக்கமெய் வாடுநம் மேந்தலுக்கு
மேவல ராகித் துடியடித் தார்த்து விடிவளவும்
காவலர் சூழலின் வாரானிச் சூழலிற் காலனுமே.

(கு - உரை.) ஏவலரால் - பாணங்களாகிய மலரால், ஏவலாளர் களால். ஏந்தல் - தலைவன். மேவலர் - பகைவர். துடி - காவலர்பறை. சூழலின் - சுற்றி வருவதனால். இச்சூழலில் - இந்த இடத்தில். காலனும் வாரான்.

"கூடலன்னாள், வடிக்கண் ணிரண்டும் வளாநகர் காக்கும்வை வேலினைஞர், துடிக்கண் ணிரண்டுங்கங் குற்றலை யொன்றுந் துயின் றிலவே" துறை. சூ. 30, மேற்.

ஈற்றடியில் சூழல் மடக்கு.

## நிலவு வெளிப்பட வருந்தல்.

(நிலவு வெளிப்பட - நிலவு எறிக்க; "நீ துயிலெழினு நிலவுவெளிப் படினும்" குறிஞ்சி. 241.)

215. சுரும்பார் மலர்ச்சடைக் கோடீச்சு ரேசர் சுடர்க்கிரிமேல்
அரும்பா முலைக்கொடி யன்பரென் பால்வந் தகலளவும்
வரும்பாழ் மதியைப் புதைத்தாங்கு வைத்திட வல்லவரார்
கரும்பாந்த ளொன்றுள தந்தவெட் டுண்டதைக் கண்டிலனே.

(கு - உரை.) புதைத்து - மறைத்து. கரும்பாந்தள் ஒன்று உளது - அம்மதியை விழுங்குதற்குக் கரும்பாம்பொன்று உண்டு; கரும்பாம்பு - இராகு. வெட்டுண்டது : இராகு திருமாலின் சக்கரத்தால் வெட்டுண்ட தென்பது வரலாறு. வெட்டுண்டதென்பது உலகவழக்கான இகழ்ச்சி மொழி.

## கூகை குழறுதல்.

(கோட்டான் ஒலித்தல்.)

216. முரண்டரு வேலார்க் கியல்கவ் வரியின் மொழியவரும்
இரண்டுடன் முன்னதற் கஞ்சாறு டொன்ப திரைதல்வெண்ணெய்த்
திரண்டுறு வேலையிற் றாழிச் சிதைவொக்குஞ் செய்நகையால்
அரண்டுக ளாக்கிறை கோடீச் சுரமன்ன வாயிழையே.

(கு - உரை.) முரண் - போர். கவ்வரியில் - ககரவருக்கத்தில். இரண்டு : கா. முன்னது : க. இரண்டுடன் முன்னதற்கு - காகத்திற்கு. அஞ்சு - அஞ்சுகின்ற. ஆறு : கூ. ஒன்பது: கை. ஆறாறொன்பது: கூகை ; காகத்திற்கு அஞ்சுகின்ற கோட்டான்; "பகல்வெல்லுங் கூகை யைக் காக்கை" (குறள். 481.) இரைதல் - கத்துதல். வேலை - சமயம். அரண் - முப்புரத்தை.

இது, "பேரு முறந்தைக் குலோத்துங்க சோழன் பெருங்கிரிவாய், மாருவிக் கங்குலின் மங்கைநல் லாய்வருங் கவ்வரிக்கே, ஆரு மெழுத் தொன்ப தாமெழுத் தாம்பெய ரார்த்தெழுந்து, வீரும் பதினொ ரெழுத் தாம் பெயரை விலக்கியதே" (குலோத். கோவை, 242) என்பதைத் தழுவி வந்தது.

இரண்டாமடியில் அஞ்சென்னும் முதனிலைத்தனிவினை எண்ணுப் பெயராகத் தொனித்தல் காண்க.

## கோழி குரற்காட்டுதல்.

(கோழி கூவுதல்.)

217. வடியேர்கொள் வேலொடு சேய்போ லிறைவர் வருதல்கண்டு
கொடியேனிவ் வூரிடை யுள்ளேனென் கின்றது கோழியிந்தப்
படியே யெனக்கிக லாயிங் கிருவெனப் பன்னிச்செல்வார்
துடியே ரிடையவர் கோடைச் சுரநம்பர் தூய்வரைக்கே.

(கு - உரை.) வடி - கூர்மை. சேய் - முருகக்கடவுள். கொடியேன் - கொடியில் உள்ள யான்; கொடுமையையுடையேனென்பது தலைவி கருதிய பொருள். இந்தப்படியே இரு. செல்வார் - போவார். துடியேரிடை: விளி. அவர் - தலைவர். அவர் செல்வார்.

---

## வரைதல் வேட்கை.

### பாங்கி தலைவியைப் பருவரல் வினுதல்.

(பருவரல் - துன்பத்தை.)

218. மகஞ்செயு மோமப் புகைபோய் விசும்பின் மழைபெய்வித்துச்
சகஞ்சலி யாமற்செய் கோடைச் சுரவள்ளல் சாரலினுன்
அகஞ்சலிப் புற்றதென் ஞரென்ன வோதின ரன்னதைநின்
முகஞ்சிறி தோதிற்று நீசிறி தோது முகிழ்முலையே.

(கு - உரை.) மகம் - யாகம்; ஓமப்புகை மழைபெய்வித்தல்: "வேள்வி நற்பயன் வீழ்புன லாவது" (பெரிய. திருஞான. 823); "அங்கிவர் புகுந்த பின்ன ரங்கியின் புகையு மாறிப், பொங்கிய வோமத் தீயின் புகையினுன் முகிலுண் டாக" (வி. பா. அருச்சுனன்றவநிலை. 3.) அகம் - மனம். என் - யாது காரணம். அன்னதை - அகம் சலிப்புற்றதை; முகம் ஓதிற்று; "நெஞ்சங் கடுத்தது காட்டு முகம்", "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினும், காயினுந் தான்முந் துறும்" (குறள். 706 - 7); "உள்ளம் படர்ந்ததே கூறு முகம்" பழமொழி, 41.

### தலைவி அருமறை செவிலி அறிந்தமை கூறல்.

(அருமறை - பிறரால் அறிதற்கரிதாகிய இரகசியமாகிய களவொழுக்கத்தை; "மறையமை புணர்ச்சி" அகநா. 62.)

219. கயலையும் வேலையு நேர்விழி யாயன்னை காவுடனே
வயலையுஞ் சூழுநங் கோடீச் சுரநம்பர் மால்வரையென்
செயலையு நீர்கொண்ட சேலையு மாகந் திளைத்தெழுந்த
பயலையும் பார்த்தெவ னென்றுண் மிகவும் பயந்தனனே.

(கு - உரை.) வயலை - பசலைக்கொடி; "வயலைக் கொடியின் வாடிய மருங்குல்" (புறநா. 305.) நீர்கொண்ட சேல் - அழுவதனால் நீரைக் கொண்ட சேலைப்போன்றகண். பயலை - பசலை; இளைஞனை யென்பது வேறு பொருள். எவன் - யாதுகாரணம், யார். பயலை, எவன், பயந்தனன் : சிலேடை.

### தலைவி தலைவன் வருந்தொழிற்கு அருமை சாற்றல்.

(தலைவன் வருதற்கரிதாயிருத்தலைப் பாங்கிக்குச் சொல்லுதல்.)

220. கொங்கலர் கோதைநங் கோடீச்சு ரேசர் குவட்டினிடைத்
திங்களொ ரம்புலி கோழியொர் வாரணஞ் சேண்பொழிலில்
தங்குங் குடிஞையோர் கோட்டா னிசைந்திடுஞ் சாரிவற்றை
எங்குக் கடந்தன்ப ரெவ்வா றணுகுவ ரிவ்விடத்தே.

(கு - உரை.) கொங்கு - தேன், வாசனை. அம்புலி - அழகியபுலி. வாரணம் - யானை. கோட்டான் - கொம்பையுடைய இடபம்.

இச்செய்யுளில் சந்திரன் முதலியவற்றின் பரியாய நாமங்களை, வருத்தும் செயலையுடைய விலங்குகளென்று பொருள்பட அமைத்திருத்தல் ஒருநயம். "நெல்லே விளையும் வயற்சண்பை யார்வரை நீள்புலியோர், புல்லேவல் யாளி யறுகே புகர்முகப் பூட்கைகொடும், பல்லேயுடைக்களி றோராம்ப லேயஞ்சிப் பாறுவலோ" (சீகாழி. 207) என்பது இதனோடு ஒருவாறு ஒப்பிடற்பாலது.

### தலைவி தலைமகன் ஊர்க்குச்செல்ல ஒருப்படுதல்.

(செல்ல ஒருப்படுதல் - போதற்குத் துணிதல்.)

221. மேலூர் மதிச்சடைக் கோடீச் சுரவள்ளல் வெற்பரென்றன்
மாலூர் மனத்தினைக் கொண்டகன் றூரதை வாங்கிவரக்
காலூர் தருகின் றதுசொல்லு வோமெனிற் கண்ணுதல்வாழ்
நாலூரென் னூரென் றணங்கே யவர்முன் னவின்றனரே.

(கு - உரை.) மேல் - ஆகாயத்தில். மால் ஊர் - மயக்கம் பரந்த. கால் ஊர்தருகின்றது - கால் தானே வலிந்துசெல்ல முயல்கின்றது. நாலூர் - ஒருதலம்; நான்கு ஊர்கள் என்பது மற்றொருபொருள். நான்கு ஊரென்றமையின் இன்ன ஊரென்று துணிவு பிறவாமையாற் செல்ல இயலவில்லை யென்றனள்; "பன்னிரண்டு, பேரூரென் றூரெங்கு நாந்தேடிச் செல்வது பெண்ணணங்கே" (சீகாழிக். 258), "பேரூர் வழியேநாம் பின்றொடர்வோ மென்றாலும், ஓரூரென் றூனிலையே யொன்பதூ ரென்றூனே" (கூளப்பநாய்க்கன்காதல், 316) என்பன இதனோடு ஒப்பு நோக்கற்பாலன.

## பாங்கி இறைவனைப் பழித்தல்.

222. சீரலர் செங்கையிற் சென்னியுந் தாண்மேற் றெரிக்குமெழில்
ஓரலர்க் கண்ணுங்கொள் கோடீச் சுரவள்ள லோங்கலிறும்
வாரலர்க் கோதை வளவரென் றெண்ணிய மன்னரிங்குச்
சேரல ரானதிற் கைதவ ராவர் தெளிவுறினே.

(கு - உரை.) சென்னி - பிரமதேவர்தலை. கண் - திருமாலின்கண். கையிற் சென்னியும், காலின்மேற் கண்ணுமுடையாரென்று முரண்பாட்டைப் புலப்படுத்தி நிற்பது ஒருநயம். வளவர் - செல்வத்தையுடையவர். சேரலரானதில் - சேராதவரானமையால். கைதவர் - வஞ்சனை யுடையார்.

இச்செய்யுளில் முறையே சோழர், சேரர், பாண்டியரென்னும் முடிமன்னர் மூவர் பெயர்களும் தொனிக்கின்றன.

## இறைவனைத் தலைவி இயற்பட மொழிதல்.

(தலைவன் நற்குணமுடையானென்பது விளங்கப்
பாங்கிக்குத் தலைவி சொல்லுதல்.)

223 தாயா யுலகிற்குத் தந்தையு மாயருள் சங்கரர்செவ்
வாயார் மறையினர் கோடீச் சுரமன்ன மாதிறைவர்
தீயாரென் றோதிட லோரா தவரல்லர் தெண்மதியார்
ஆயா திருப்ப தெளியேன் றுயரென் னருவினையே.

(கு - உரை.) தாயா............சங்கரர்: "அப்பனீ யம்மைநீ", "ஈன்றாரு மாயெனக் கெந்தையுமாய்" (திருநா. தே.); "அம்மையே யப்பா" (திருவா.) செவ்வாயார் மறையினர் - செம்மையாகிய வாயில் ஆர்ந்த வேதத்தையுடையவர்; "நன்றாய்ந்த நீணிமிர்சடை, முதுமுதல்வன் வாய்போகா, தொன்றுபுரிந்த வீரிரண்டி, னாறுணர்ந்த வொருமுது நூல்" (புறநா. 166.) தீயாரென்று - தீமையையுடையாரென்று. ஓதி

டல் - சொல்லாதே ; அல் : எதிர்மறை, “மகனெனல்” (குறள். 196) என்ற விடத்துப்போல. ஓராதவர் அல்லர் - ஆராய்ச்சியில்லாதவர் அல்லர். தெள் மதியார் - தெளிந்த அறிவையுடையவர்.

இதில் மூன்றாவதடியில் தீயார், ஆதவர், மதியாரென முச்சுடர்களின் பெயர்களும் தொனிக்கின்றன.

## தலைவி கனவுநலிபு உரைத்தல்.

(தலைவனைக்காணுங்கனவு தன்னைநலிகின்றதென்பதைத் தலைவி கூறுதல் ; நலிபு - நலிதல்.)

224. பெண்ணுறு பாகத்தர் கோடீச் சுரவெற்பர் பேசிரவில்
நண்ணி யுரம்பெறு தாளங்கைக் கொண்டு நகைமுகமுற்
றுண்ணயப் பெய்துற வாடிட வாவென வோதினர்நான்
கண்ணை விழித்தங் கெழுந்தே னவர்தமைக் கண்டிலனே.

(கு - உரை.) பேசு இரவில். உரம்பெறுதாளம் - மார்பிற்பெற்ற தாளம்போன்ற தனங்களை; உரம் - வலியுமாம். நயப்பு - விருப்பம். எய்துற - அடைய. ஆடிட - சேர.

தாளத்தைக்கையில் வைத்துக்கொண்டு நகைத்த முகத்தையுடையராய்க் கூத்தாட வாவென்று அழைத்தாரென்பது மற்றொரு பொருள். ஆட்டுவிப்பானாகிய நட்டுவன் தாளங் கொண்டு ஆடுமகளை அழைப்பது இயல்பு. உரம், ஆடிட : சிலேடை.

## தலைவி கவினழிபு உரைத்தல்.

(கவின் அழிபு - அழகு அழிதலை.)

225. நங்காய்நங் காவல ரூரிலி லாத்திற நன்கறிந்து [லாம்
கொங்காளும் வேடன் படைதனி யேன்பொற் குவைகளெல்
இங்கா வலினுற்றுச் சூறையிட் டோடிற் றிமயமங்கை
பங்காள ரங்கணர் கோடீச்சு ரேசர் பனிவரைக்கே.

(கு - உரை.) காவலர் - தலைவர், காப்பவர். ஊரில் இல்லாத்திறம் - ஊரிலில்லாததை ; ஊரு - தொடையுமாம். கொங்காளும் வேள் தன் படை - மணத்தைக்கொண்ட மலராகிய மன்மதன் ஆயுதங்கள் ; கொங்குநாட்டையாளும் சிற்றரசனொருவனது சேனையென்பது மற்றொரு பொருள். வேடன்படை - வேடனொருவனுக்கு உரிய படையுமாம். பொற்குவைகளெல்லாம் - பொன்போன்ற மாமைநிறத்தை, பொற்குவியல்களை. சூறையிட்டு - கொள்ளையிட்டு, படை ஓடிற்று.

கொங்குநாட்டில் சுந்தரமூர்த்திநாயனார் பொருளை வேடர் படை கொள்ளையடித்துச்சென்ற செய்தியை இது நினைப்பிக்கின்றது.

## தன்துயர் தலைவற்குணர்த்தல் வேண்டல்.

(தலைவனுக்குத் தனது துயரத்தைத் தெரிவிக்கவேண்டு மென்பதைத் தலைவி விரும்புதல்.)

226. அங்காவி யங்கண்ணி கோடீச் சுரவள்ள லன்பர்முன்போய்
எங்கா ரிகைபொன் னிறமேற்று மாலா யினளெனவே
அங்காத ரத்தி னுரைத்தோ ரெனக்கென்ற ஞருயிரீந்
திங்காய் தனக்கொரு பெண்ணீந் துயர்புக ழேற்பவரே.

(கு - உரை.) அம் காவி அம்கண்ணி : விளி ; காவி - கருங்குவளை. அன்பர்முன் - தலைவர்முன். பொன் நிறம் ஏற்று மாலாயினள் - பசலை நிறத்தைப்பெற்றுக் காமமயக்கமுடையளானள் ; திருமகளை மார்பில் வைத்துத் திருமாலாஞளென்பது மற்றொருபொருள் ; நிறம் - மார்பு. அங்கு - தலைவனிடத்து. ஆதரத்தின் - அன்பினல். உரைத்தோர் : எழுவாய் ; உரைத்தோர் ஈந்து ஈந்து ஏற்பவராவரென்க.

இதிற் காவியம், காரிகை யென்னும் இலக்கிய இலக்கண நூற்பெயர்கள் காணப்படுகின்றன.

## நின்குறை நீயேசென்று உரையென்றல்.

(என்றல் - என்று பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்.)

227. விரையே யிதழியு மத்தமுஞ் சூடுறு வேணியினர்
பரையே யிடத்தினர் கோடீச்சு ரேசர் பனிவரைமேல் [கென்
வரையே யெனுங்கொங்கை மின்னேசொன் மூல மறந்தவர்க்
உரையேறு மோநின் குறையாவு நீயே யுரையெதிர்ந்தே.

(கு - உரை.) விரை ஏய் இதழியும் - மணம்பொருந்திய கொன்றை மலரும். மத்தம் - ஊமத்தைமலர். பரை - உமாதேவியார். சொல்மூலம் மறந்தவர் - சொற்காரணத்தை மறந்தவர் ; என்றது அன்பைச்சுட்டியது ; சொல் - சூளுறவுமாம். என் உரை - யான் தூதுசென்று உரைக்கும் மொழி. ஏறுமோ - ஏருது. எதிர்ந்து - எதிர்ப்பட்டு. எதிர்ந்து நின்குறை யாவும் நீயே உரை.

ஒருநூலின் மூலபாடத்தையே மறந்துவிட்டவர்கட்கு அந் நூலுரை தெளியப்படுமோவென்பது மற்றொருபொருள். மூலம் - மூல பாடம். சொல் - சொல்வாயாக வெனவும் கொள்ளலாம்.

### அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.

(பலர்கூறும் பழிமொழியையறிந்து தான்கொண்டுள்ள அச்சத்தைத் தலைவி கூறுதல்.)

228. சிவன்றாத னாகிப் பரவைதன் பாலன்பிற் சென்றுவந்த
பவன்றாய சோதிதென் கோடீச் சுரவெற்பிற் பைங்கழைவில்
லவன்றாற் றலரினுக் கச்சமின் றன்னா னனிகமின்னார்
இவண்டூற் றலரினுக் கஞ்சின னாறில னேழையனே.

(கு - உரை.) தூதனாகி - சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் தூதராகி. பவனென்பது இறைவன் திருநாமங்களுள் ஒன்று. பைங்கழை வில்லவன் - மன்மதன்; கழை - கரும்பு. தூற்று அலரினுக்கு - தூவுகின்ற மலரம்புகளுக்கு. அன்னான் அனிகமின்னார் தூற்று அலரினுக்கு - அவனது படையாகிய பெண்கள் தூற்றும் பழிமொழிக்கு. ஆறிலன் - அச்சம் தீர்ந்தேனில்லை. மன்மதன் தூற்றும் அலர்களுக்கு நான் அஞ்சவில்லை ; அவன் படைகள்தூற்றும் அலர்களுக்கே அஞ்சினேன் ; அலர் : சிலேடை.
அஞ்சு ஆறு ஏழென்னும் எண்கள் ஈற்றடியில் தொனிக்கின்றன.

### ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி.

(தலைவன்வரும் வழியின் அருமையையறிந்து தான் அடைந்த அச்சத்தைத் தலைவிசொல்லுதல்.)

229. தன்னே ரிலாவரன் கோடீச் சுரவெற்பர் சாருநம்பால்
கன்னேர் மனங்கொண் டிருப்பது நோக்கியுங் காதலுற்ற
என்னேழை நெஞ்சீண் டொருகால் வரிற்கா னிடையவர்தம்
முன்னே யெழுந்தீக் கரக்கா யுருகிடு மொய்குழலே.

(கு - உரை.) கல்நேர்மனம் - கல்லை ஒக்கும் நெஞ்சத்தை. ஏழை என் நெஞ்சு - அறியாமையையுடைய என்நெஞ்சம். ஒருகால் வரின் - தலைவர் ஒருமுறை வருவாராயின். அவர்தம் முன்னே எழும் - அவருக்கு முன்னரெழுந்து செல்லும். தீக்கு - நெருப்பிற்கு. என் நெஞ்சு தீக்கு அரக்குப்போல உருகாநிற்கும். நோக்கியும் உருகாநிற்கும் ; உம்மை: எதிர்மறை. கானிடைவரின், அல்லது கானிடைத் தீயெனவியைக்க.

### காமமிக்க கழிபடர்கிளவி.

(கழிபடர் - மிக்க நினைவாலுண்டாகிய துன்பம். கிளவி - தலைவியின் சொற்கள்.)

230. நறியமென் கொன்றையர் கோடீச் சுரநம்பர் நாகையிற்சங்
கெறிபெரு வெங்கட லேயெனை நீயிரைந் திங்கடலே

வெறிமடி மேவிலை யேயன்ப ரீங்கின்று மேவிலையே
மறிதரு மாமைக் கணமே சொரியுமென் மைக்கணமே.

(கு - உரை.) நாகையில் - திருநாகைக்காரோணத்தில். சங்கை எறிகின்ற கடலே. இரைந்து இங்கு அடல்; அடல் - வருத்தாதே. மணத்தையும் மடிந்திருத்தலையும் மேவிய இலையே. மேவிலை - மேவவில்லை; விகாரம். மா மைக்கணமே - பெரிய மேகக்கூட்டங்களே. என் மைக்கண் அம் சொரியும் - மையெழுதிய என் விழிகள் நீரைச்சொரியும்; அம் - நீர்.

நெய்தற்றிணைக்குரிய செய்யுளாதலின் நாகையைக்கூறினர். இது மடக்கணி.

## தன்னுட் கையாறெய்திடு கிளவி.

(கையாறு - செயலறுதல்.)

231. நீறணி மேனியர் கோடீச் சுரநம்பர் நேசர்முன்பொய்
கூறல்கை தாயின்று வம்புற் றலைவாய் குருகிழந்து
வீறளி யார்க ளிரங்கக்கண் ணீர்சிந்தி மெய்பசந்திவ் [மே.
வாறடைந் தென்னையொத் தாய்பிரிந் தார்கொ லுன் னன்பரு

(கு - உரை.) நம்பர் நேசரென்றது தன்னை. கூறல் - கூறுதே. நம்பர்முன் பொய்கூறினை; அதுபோல நம்பர் நேசர்முன் கூறுதேயென்று முன்னறிவித்தபடி. கைதாய் - தாழையே. வம்புற்று அலைவாய் - மணத்தைப்பெற்று அசைவாய், வம்புத்தன்மைபெற்று வருந்துகின்றாய். குருகு இழந்து - பறவைகளை இழந்து, வளைகளை இழந்து. அளியார்கள் இரங்க - வண்டுகள் ஒலிப்ப, அன்புடையார் வருந்த. கண்ணீர்சிந்தி - தேனாகிய நீரைச் சொரிந்து (கள் நீர்), கண்ணிலிருந்து நீரைச் சொரிந்து. மெய் பசந்து - உருவம் பசுமையுற்று, உடலிற் பசலைபெற்று.

இப்பாட்டிற் சிலேடைப்பொருளால் தலைவி தனது நிலையையும் குறிப்பித்தாள்.

## தலைமகள் நெறி விலக்குவித்தல்.

(முற்கூறியவழியில் வாராதவண்ணம் தலைவனை விலக்கும்படி பாங்கியிடம் தலைவி கூறுதல்.)

232. அரவக் கதிர்ச்சடைக் கோடீச்சு ரேச ரணிவரைவாழ்
அரவச் சிலம்படி யாயன்ப ரெய்தி னணைந்திரப்போர்
இரவகற் றும்புக ழோயகத் தேபொன்னை யீட்டிவைத் திங்
கிரவதின் மேவிற் பழிப்பாம் வரல்வனத் தென்றுரையே.

(கு - உரை.) அரவக்கதிர்ச்சடை - பாம்பையணிந்த ஒளியையுடைய சடை; கதிர் - சந்திரனுமாம். அரவச்சிலம்பு - ஒலியையுடைய சிலம்பை

யணிந்த இரவுஅகற்றும் புகழோய் - இரத்தலை நீக்கும் புகழையுடையாய்; "பிறர்க்கொன், நீவார்மே னிற்கும் புகழ்" (குறள். 232) ஆதலின் இவ்வாறு கூறினாள். தலைவன்பால் இரந்தவர் பின்னர் யாரிடத்திலும் இரவாதபடி கொடைபெறுவரென்பது குறிக்கப்பட்டது; "இல னென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" (குறள்.) அகத்தே பொன்னை ஈட்டி வைத்து - உள்ளத்தில் தலைவியைச் சேர்த்துவைத்து, வீட்டிற் பொன்னைச் சேகரித்துவைத்து. இரவதின் மேவின் - இராப்பொழுது வந்தால், இரத்தற்றொழிலை விரும்பினால்.

பிறருக்குக் கொடுத்து இரவைநீக்குபவனாகிய நீ வீட்டிற் பொன்னை வைத்துக்கொண்டு இரப்பது நன்றன்று என்பது மற்றொருபொருள்.

## தலைவி குறி விலக்குவித்தல்.

(குறியிடத்து வாராதபடி தலைவனை விலக்கும்வண்ணம்
பாங்கிக்குத் தலைவி சொல்லுதல்.)

233. மின்போலுஞ் சூலத்தர் கோடீச் சுரவெற்பின் வேந்துவரின்
பொன்போன் மறுதா ளிடைக்கதிர் தோன்றின பூம்புனத்தின்
முன்போற் சுகங்கொளும் போற்றிடப் போமென முந்தனையின்
றன்போ டுரைத்தாள் வருவோம் வரலிங்கென் றங்குரையே.

(கு - உரை.) வேந்து வரின் - தலைவர்வந்தால். மறுதாளிடை - அறுக்கப்பட்ட எஞ்சிய தினைத்தாளிடத்தே. பொன்போற்கதிர் - தினைக் கதிர். பொன்போல் தினைக்கதிர் மறுதாளில் தோன்றின. சுகம்கொளும்- கிளிகள் அக்கதிர்களை உண்டுவிடும்; இன்ப மடைவீராகவென்பது வேறு பொருள். போற்றிட - காக்க. முந்து அன்னை. வருவோம் - தினைப் புனத்திற்கு வருவோம். இங்குவரல் - ஆதலால் இம்மனைக்கண் வருதலை யொழிவீராக.

## வெறி விலக்குவித்தல்.

(வெறியாடுதலை விலக்கென்று தோழிக்குத் தலைவி கூறுதல்;
வெறியாட்டாவது தலைவியின் மயக்க உணர்ச்சியைக்
கண்டு அவளைப் பேய்தீண்டியதென நினைத்துத்
தமர் வேலனைக்கொண்டு முருகவேளை வழி
பட்டுப் பலியிடுவித்தல். இதில் ஆடு
வெட்டுதல் முதலியன நடை
பெறுமென்பர்.)

234. மறிகொண்ட கையரன் கோடீச் சுரமன்ன வாணுதலாய்
நெறிகொண்ட மன்னர் தமைத்தொட்டு நானிங்கு நீடுகவின்

முறிகொண்ட தோர்ந்திலள் பேய்தொட்ட தென்றெனை மூண்ட
வெறிகொண் டனளதை யோர்மருந் தீந்து விலக்குகவே. [ஞர்பின்

(கு - உரை.) மறி - மான்குட்டி. தொட்டு - தீண்டி. கவின் முறி கொண்டது - அழகு சிதைவுற்றதனை ; முறி - முறிதல். என்னைப் பேய் தொட்டதென்று. அஞர் மூண்டு - துன்பங்கொண்டு. வெறிகொண்டனள் - வெறியாடுதலை மேற்கொண்டாள், பைத்தியம் கொண்டாள். மருந்து - பரிகாரம், ஔடதம்.

கவின்முறிகொண்டதென்பதற்கு அழகிய தழையை வாங்கியதென் பதும், (தலைவனைத்தொட்டு) அடிமையோலை கொண்டதென்பதும் வேறு பொருள்கள் ; முறி - அடிமை ஓலை.

## பிறர் விலக்குவித்தல்.

(தன்னை மணஞ்செய்தற்பொருட்டுத் தமர்பால் வரும்
பிறரை உண்மைகூறி விலக்கும்படி தலைவி
பாங்கிக்குக் கூறல்.)

235. சேய்தந்த கண்ணினர் கோடீச் சுரமன்ன சேயிழைநம்
தாய்தந் தையர்மணங் கொண்டெய் தளியார் தமக்கங்கென்ன
வாய்தந் திடுவர்கொ லோவனை யாரென் மனக்கருத்தை
ஆய்தந் திடுதற் கிமையோ ரலர்நீ யறிவித்திடே.

(கு - உரை.) சேய் - முருகக்கடவுள் ; "சேய்தந்த நாட்டத்தர்" (134) என்றார் முன்னும். மணம் கொண்டு எய்து அளியார் தமக்கு - மணஞ்செய்தலை மேற்கொண்டுவரும் அன்புடைய அயலார்க்கு. வாய்தந் திடுவர் கொல்லோ - உறுதிமொழிவார்களோ. என் உள்ளக்கருத்தை ஆராய்ந்தறிவதற்கு அவர்கள் தேவரல்லர் ; ஆதலால் அவர்களுக்கு என்கருத்தை அறிவித்திடு. தேவர்கள் முக்கால உணர்ச்சியுடையா ரென்பது ஈண்டறிதற்பாலது.

மணங்கொண்டெய்தளியாரென்பதற்கு மணத்தைக் கொண்டு வரும் வண்டென்னும் ஒருபொருள் தோன்றுதல் காண்க.

## குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

(தலைமகனது வரைவை எற்றுக்கொள்ளும்படி குரவர்க்குச்
சொல்லென்று தலைவி பாங்கிக்குச் சொல்லுதல் ;
வரைவு - கலியாணம். குரவர் - தாய், தந்தை,
தமையன்மார் முதலியோர்.)

236. ஆலைக் குளிர்வயற் கோடீச் சுரநம்ப ரம்பொன்வெற்பிற்
சோலைக் குயின்மொழி யாயன்பர் மன்றலந் தூதுவரின்

மாலைக் குழலனை யாதிய ராங்கு மறுதிவரே
பாலைக் குரியமரென் றேறுதிடென் முல்லை படர்ந்திடவே.

(கு - உரை.) ஆலை - கரும்பையுடைய. மன்றலந்தூாது - மணப் பொருட்டாகத் தலைவன் அனுப்பவருந்தூாது. அன்னை ஆதியர். மறுது - மறுக்காதபடி. பாலைக்கு - இளையவளாகிய தலைவிக்கு. முல்லை - கற்பு; படர்ந்திட - பரவ. முல்லைக்கொடி படர்க்திடவென்பது ஒரு நயம்.

இதில், பாலை முல்லையென்னுந் திணைப்பெயர்களும் முறையே மரம் கொடியென்னும் பெயர்களும் தொனிக்கின்றன.

---

## வரைவு கடாதல்.

[தலைவியை மணஞ்செய்துகொள்ளும்படி
தலைவனைப் பாங்கி வற்புறுத்துதல்.]

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

(தலைவியின் வேறுபாட்டிற்குக் காரணம் என்னவென்று
கேட்ட செவிலித்தாய்க்குத் தான் வேறு காரணங்
காட்டிக் கூறியதைத் தலைவிக்குப்
பாங்கி கூறுதல்.)

237. நன்னித் திலநகை வாட்டங்கண் டாங்கெனை நண்ணிடனை
கன்னிக் கடுத்ததென் னென்றுள் பெருந்தகைக் காவலநான்
அன்ன துலாம்புகழ்ச் சிங்கமுன் கண்ணுற்ற தாகுமென்றேன்
உன்னற் கரியவர் கோடீச்சு ரேச ருயர்வரைக்கே.

(கு - உரை.) நித்தில நகை - முத்தைப்போன்ற பற்களையுடைய தலைவியினது. நண்ணிடு அனை - வந்த தாயானவள். கன்னிக்கு அடுத்தது என் - தலைவிக்கு உண்டான வேறுபாடு யாது. அன்னது - அந்த வேறுபாட்டுக்குக் காரணம். உலாம்புகழ்ச்சிங்கம் முன் கண்ணுற்றது - திரிகின்ற புகழையுடைய சிங்கமொன்றைப் பார்த்தமையே; சிங்கமென்றது தலைவனை. சிங்கத்தைக்கண்டு அஞ்சியதால் உண்டாகியதென்பது பொய்க்காரணம்.

கன்னியாராசிக்கு அடுத்தது என்னென்றபொழுது அவை துலாமும் சிங்கமுமென்றேனென்பது மற்றொருபொருள். கன்னியாராசி துலாராசிக்கும் சிங்கராசிக்கும் இடையே இருத்தல் கருதற்குரியது.

இஃது இலேச வணி.

## அலர் அறிவுறுத்தல்.

(பலர்கூறும் பழிமொழியைத் தலைவனுக்குப்
பாங்கி தெரிவித்தல்.)

238. அடியார்க் கெளியவர் கோடீச்சு ரேச ரணிவரையின்
முடியார் மலர்க்கொம்பர் மேலுற்றி டுன்னளி முன்னலுறு
கடியாரிவ் வூரி லெமையறி யாமற் கணியுறுபூங்
கொடியா ரிடந்தொறும் போயல ருண்டது கொற்றவனே.

(கு - உரை.) முடி ஆர் மலர்க்கொம்பர் மேல் உற்றிடு உன் அளி - முடியிலுள்ள மலரையுடைய பூங்கொம்புபோன்ற தலைவியின்பால் அமைந்த உன் அன்பானது. கடி-காவல். கணியுறு பூங்கொடியாரிடம் - நினைத்தலுற்ற பெண்களிடம். அலருண்டது - பழிச்சொல்லை யடைந்தது. அளி அலருண்டது.

பூங்கொம்பிலுள்ள வண்டு அரும்புகளையுடைய கொடிகளிடம் சென்று மலரையுண்டதென்பது மற்றொருபொருள் ; கணி - கண்ணி - அரும்பு ; மாலையுமாம். அளி - வண்டு. கணியுறு பூங்கொடி - வேங்கை மரத்தின்மேற் படர்ந்த ஒரு பூங்கொடி என்றலுமாம்.

## தாய் அறிவுறுத்தல்.

(களவொழுக்கத்தைத் தாய் அறிந்தனளென்பதைத்
தலைவனுக்குப் பாங்கி அறிவுறுத்தல்.)

239. தவளப்பொன் னீற்றரன் கோடீச் சுரவெற்ப தையலின்வாய்ப்
பவளம் விளர்ப்புறச் சேப்புற நீலமென் பார்வைகண்மெய்
துவளத் திகழூற் றதுகண் டனைசினந் தோன்றநின்றாள்
அவளக் களவறிந் தாளங்கு நீவந் தகன்றபின்னே.

(கு - உரை.) தவளம் - வெண்மை. பொன் - அழகு. தவளப்பொன் - வெள்ளியுமாம். வாய்ப்பவளம் விளர்ப்புற - வாயாகிய பவளம் வெண்மையை அடைய. நீலமென் பார்வைகள் சேப்புற - நீலமலர்கள்போன்ற கண்கள் செம்மையை அடைய. அனை - அன்னை ; எழுவாய். அவள் அக் களவு அறிந்தாள். அன்னை நின்றாள். நீ அகன்றபின் அக்களவை அறிந்தாள்

இதில் பவளம், நீலமென்னும் மணிகளின்பெயர்கள் தொனிக்கின்றன. பொன், விளர்ப்பு, சேப்பு, நீலமென்னும் நிறப்பெயர்கள் தோன்றுகின்றன.

## வெறி அச்சுறுத்தல்.

(வெறியாடுவித்தலைக் கூறித் தலைவனுக்கு அச்சத்தை உண்டாக்குதல்.)

240. பெருமை யுறுபுகழ்க் கோடீச்சு ரேசர் பிறங்கலன்ப
அருமை யுறத்தனிப் போற்றி வளர்த்திட்ட வன்னையின்று
கருமை யுறுங்கண்ணி ணுண்மெலி வுற்றது கண்டுடனே
ஒருமைகொண் டுற்ற திரண்டுபங் காக்கிட வுன்னினளே.

(கு - உரை.) பிறங்கல் - மலை. கருமையுறும் - கரிய மையை அணிந்த. ஒருமை கொண்டு - ஓராட்டைக்கொண்டு. இரண்டு பங்காக்கிட - அதனை இரண்டு துண்டங்களாக்கிட; வெட்ட என்றபடி.

ஈற்றடி எண்ணணி.

## பிறர்வரைவு உணர்த்தல்.

(தலைவியை அயலார் மணஞ்செய்துகொள்ள முயலு கின்றார்களென்பதைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல்.)

241. நின்னூர் தனக்கன்று நீபோன பின்பு நெடுவளத்தின்
மன்னூர முத்தமிழ்க் கோடீச் சுரநம்பர் மால்வரைமேல்
பொன்னூர் வரைதனிற் கொண்டெமர் பாலிப் புலவரெலாம்
நன்னூ லிடையெழிற் காரிகை கேட்க நணுகினரே.

(கு - உரை.) வளத்தின் மன் ஊர - வளத்தினாலே நிலைபெற்ற ஊர; விளி. பொன் - பொன்னை. ஊர்வரைதனில் - யானையின்மேல்; ஊர் வரை: பிசியுவமை. புலவர் - மணம்பேசுதற்கு உரியவர்களாலே அனுப் பப்பட்ட அறிவுடைய பெரியோர்கள். நல்ல நூல்போன்ற இடையை யுடைய அழகுபொருந்திய பெண்ணாகிய தலைவியை மணங்கேட்பதற்கு. ஒருபெண்ணை மணம்பேசுதற்குக் கல்வியறிவுடைய பெரியோர்களை அனுப்புதல் முறை; இது பண்டைச் சரித்திரங்களாலும் விளங்கும்; "கற்றார் மற்றுங் கட்டுரை வல்லார் கவியென்னும், நற்றேர் மேலார் நால் வரை விட்டாற் கவர்சென்றார், சுற்றார் வல்விற் சூடுறு செம்பொற் கழ லாய்கன், பொற்றார் மார்பீர் போதுமி னென்றாங் கெதிர்கொண்டான்" (சீவக. 1054) என்ற செய்யுளும் இங்கே அறிதற்குரியது.

புலவரெல்லாம் நன்னூல்கேட்டு வருவதற்கிடையிலே காரிகையென் னும் நூலைப் பாடங்கேட்க எமர்பால் வந்தாரென்பது வேறொருபொருள்.

நன்னூல், காரிகையென்னும் தமிழிலக்கண நூல்களின் பெயர்களை அமைத்ததனோடு இயைபுற முத்தமிழ்க்கோடீச்சுரநம்பரென்றார்.

## வரைவெதிர்வுரைத்தல்.

(நீ மணஞ்செய்தற்குவரின் எம்மவர் ஏற்றுக்கொள்வா
ரென்று பாங்கி தலைவனுக்கு உரைத்தல்;
எதிர்வு - ஏற்றுக்கோடல்.)

242. எட்டார் வடிவத்தர் கோடீச்சு ரேச ரெழில்வரையிற்
கட்டா ரணியு மெமருனைக் காணிற் களிப்பினொடு
நட்டார்க ளாவ ரதன்பின்னர் நீயென் னவின்றிடினும்
தட்டாரப் பெண்ணைத் தருவா ருனக்குத் தராதிபனே.

(கு - உரை.) எட்டார்வடிவம் - அட்டமூர்த்தம்; கோடீச். 275; "அட்ட மூர்த்தியண் ணமலை கைதொழ", "பாரு நீரொடு பல்கதி ரிரவி யும் பனிமதி யாகாசம், ஒரும் வாயுவு மொண்கனல் வேள்வியிற் றலைவனு மாய்நின்றார்", "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகி" (தே.) கள்தார் - தேனையுடைய மாலையை. நட்டார்கள் - நண் பினர். நீ என் நவின்றிடினும் - நீ எதைச்சொன்னாலும். தட்டார் - மறுக் கமாட்டார். அப்பெண்ணைத்தருவர் - அவளை உனக்கு மணஞ்செய்து கொடுப்பர்.

அரசனாகிய உனக்குத் தட்டாரச்சாதிப்பெண்ணைத் தருவாரென் பது வேறொருபொருள்; "சாலியப் பெண்ணெனக் கூறுகின் றார்மலர்த் தாழ்குழலே' (384) எனப்பின்னும் இவ்வாறே சாதிப்பெயர் தோற் றும்படி கூறுவர்

## வரையுநாள் உணர்த்தல்.

(மணஞ்செய்துகொள்வதற்குரிய காலம்
இஃதென்பதைப் பாங்கி தலைவனுக்குரைத்தல்.)

243. கணியார் மணமலர் மாலைதந் தார்தண் கதிரவனல்
அணியார் தருகலை யாவுங்கொண் டூற் றனனரவப்
பணியார் சடையெழிற் கோடீச்சு ரேசர் பனிவரைக்கண்
மணியார்செவ் வேலவ மன்றல்செய் கால மருவிதுவே.

(கு - உரை.) கணியார் மணமலர் மாலைதந்தார்-வேங்கைமரம் மணம் பொருந்திய பூக்களின் வரிசையைக் கொடுத்தது. கணியார்; ஆர்: இடைச்சொல்; கணியார் என்பதற்கேற்பத் தந்தார் என்றார். தண்கதி ரவன் - சந்திரன். கலை - கிரணம். ஊர் உற்றனன் - பரிவேடங்கொண் டான். வேங்கைமரம் பூப்பதும் சந்திரன் ஊர்கொள்ளுவதுமாகிய காலம் மணத்திற்குரிய காலமென்பது குறிஞ்சிநிலமக்களுடைய கோட்பாடு

"வேங்கையு மொள்ளிணர் விரிந்தன, நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே" (அகநா. 2.) சோதிடர் மலராலாகிய மாலையைத் தந்தார்; சந்திரன் அழகுநிரம்பிய மணத்திற்குரிய ஆடைவகைகள் எல்லாவற்றை யுங் கொண்டு இவ்வூருக்கு வந்தான் என்பது தொனிப்பொருள். அரவப் பணி - பாம்பாகிய ஆபரணம். மன்றல் - கலியாணம்.

ஒருவர் மாலைதந்தார்; மற்றொருவர் ஆடைகள் தந்தார்; இனி மணஞ் செய்யத் தடையின்றென்பது கருத்து.

## பாங்கி தலைமகளறிவு அறிவுறுத்தல்.

(தலைமகளுடைய மூதறிவைப் பாங்கி
தலைவனுக்கு அறிவித்தல்.)

244. பூமகள் வாழ்ந்திடு கோடீச் சுரநம்பர் பொன்மலையெம்
கோமக ணீதி நெறியெம்ம னோர்க்குக் குறித்துரைக்கும்
நாமக ளாயின ளிப்போதப் போதுறு நாமகளும்
காமகள் வார்மலர்த் தாரண்ண லேயுட் களிப்புறவே.

(து - உரை.) பூமகள் - திருமகள். எம் கோமகள் - தலைவி. நீதி நெறியை. உரைக்கும் நாமகள் - உரைக்கின்ற நாவையுடைய பெண். அப் போது உறு நாமகளும் - அந்தத் தாமரையிலுள்ள கலைமகளும். காம - மன்மதனைப்போன்றவனே. கள் - தேன். எம் கோமகள் நாமக ளும் களிப்புற உரைக்கும் நாவையுடைய மகளாயினள் என்க.

போது நாமகளென்பன பின்வரு நிலையணி. இச்செய்யுளில் பூமகள், பொன்மலையெங்கோமகள் (பார்வதி), நாமகளென முத்தேவியர் பெயர் களும் ஒருவாறு அமைந்துள்ளன. துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதியென இம் மூவரையும் பாராட்டுவர்.

## குறி பெயர்த்திடுதல்.

(குறியிடத்தை மாற்றுதல்.)

245. வேதாக மம்புகல் கோடீச் சுரநம்பர் வெற்பிலெங்கள்
மாதாமுன் னீயிங்கு மாதா தரங்கொண்டு வந்ததனைக்
காதா லறிந்தனள் கண்ணா லறியக் கருதுகின்றாள்
நாதா வினிவே றிடம்பார்த்து மின்னொடு நண்ணுகவே.

(து - உரை.) மாதா - தாய். மாது ஆதரம் கொண்டு - தலைவியின் பால் அன்புகொண்டு. நீ முன் வந்ததனை. காதால் அறிந்தனள் - கேட் டாள்.

இரண்டாமடியில் மாதா என்பது மடக்கு.

### பகல்வருவானை இரவுவருகென்றல்.

(வருக என்றல்.)

246. பகலூ டிரவழைத் திட்டோன் பரவும் பரமர்திருப்
புகலூ ருறைபவர் கோடீச் சுரமன்ன பொன்னிடத்தில்
விகலூர் தனிற்பந் தடக்கஞ் செயலுக் கிராச்சிறந்த
தகலூர வெல்வரிற் கண்கட்டு வித்தை யறிந்தணையே.

(கு - உரை.) பகலூடு இரவு அழைத்திட்டோன் - திருமால். இ இகல் ஊர்தனில்; இகல் - வலி; பகையுமாம். பந்தென்றது தனத்தை. பந்தடக்கம் செய்தல் செப்பிடு வித்தையில் ஒன்று. அகல் ஊர - அகன்ற ஊரையுடையாய். எல்வரின் - பகலில்வந்தால். கண்கட்டுவித்தை - பிறர் கண்ணை மறைக்கும் வித்தையை; "கண்கட்டு வித்தையுங் காட்டித் தருகிறேன்" சா. தூற.

பகற்குறிபெயர்த்து இரவுக்குறி கூறுதற்கேற்பப் பகலூடிரவழைத் திட்டோன் பரவும் பரமரென்றார்.

இரவில் யாவரும் பந்தைஅடக்கம் செய்யலாம். பகலிற் செய்யக் கண்கட்டுவித்தை வேண்டுமென்பது வேறொரு பொருள்.

### இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

247. புகலோ டரிக்கண் வரையர மாதர் பொருந்துநெறி
அகலோ திராவரல் கோடீச் சுரநம்ப ரம்பொன்வெற்பில்
இகலோங்கு வேல வெழிற்றே சினைநீ யினிப்பகல்வா
பகலோ னிரவில் வருவதின் றேயிந்தப் பாரிடத்தே.

(கு - உரை.) புகல் - சொல்லப்படுகின்ற. வரையரமாதர் - மலைகளில் வாழும் தெய்வமாதர். அகல் - நீங்குவாயாக; வாராதேயென்றபடி. தேசினை - ஒளியை உடையாய்; சூரியனாக உள்ளாயென்பது மற்றொரு பொருள். பகலோன் - சூரியன்.

### பகலினும் இரவினும் பயின்றுவருகென்றல்.

248. மையுறு கண்டர்தென் கோடீச் சுரமின்னின் வாயமுது
கையுறு வேல் விருபோதும் வந்து கலந்தருந்து
செய்ய கதிர்மதி வார மிராப்பக றீயதென்பர்
வெய்ய பசியுடை யோர்க்கொரு போதும் விலக்கிலையே.

(கு - உரை.) வாயமுதை. செய்யகதிர் - சூரியன். மதி - சந்திரன். ஞாயிற்றுக்கிழமை இரவும் திங்கட்கிழமை பகலும் விருந்துண்ணலாகாதென்பர்; நிரனிறை.

இது வேற்றுப்பொருள்வைப்பணி.

## பகலினும் இரவினும் அகலிவணென்றல்.

(இவண் அகல் - இவ்விடத்தினின்றும் நீங்குவாயாக.)

249. அரும்பே யலர்ந்திடுங் காய்தரும் வேங்கை யடவியினீ
வரும்பே ரிரவிற் பழுக்கும் பழிச்சொல் வரிற்பகலில்
கரும்பேய்ந் திடுவயற் கோடீச் சுரநங் கருத்தர்வெற்பில்
சுரும்பே றியதொடை யாயினி யானென் சொலத்தக்கதே.

(கு - உரை.) அரும்பேய் அலர்ந்திடும் - வெல்லுதற்கரிய பேய்கள் பரவியிருக்கும். காய்தரும் வேங்கை - புலி சினந்து துன்புறுத்தும். இரவில் இவை நிகழும். பகலில்வரின் பழிச்சொல் பழுக்கும்; பழுக்கும் - மிகும். யான் என் சொலத்தக்கதென்றது வருதலொழிய வேண்டுமென்பதை நீயே அறிந்து கொள்கவென்று குறிப்பித்தபடி.

வேங்கைமரம் அரும்புகளை அலரச்செய்யும், காயையுந் தருமென்பது மற்றொருபொருள். அலர்தரும், காய்தருமென்பவற்றோடியையப் பழுக்குமென்றார்.

## உரவோன் நாடும் ஊரும் முதலிய கூறல்.

(நீ இங்ஙனம் வரையாது வந்து ஒழுகுவது உன்னுடைய
நாடு ஊர் குலமென்பவற்றின் பெருமைக்குத் தகா
தென்று பாங்கி தலைவனுக்குக் கூறல்;
உரவோன் - தலைவன்.)

250. இளவெண் மதிபுனை கோடீச்சு ரேச ரிமயவெற்ப
தளர்மின் னிடையிடை நீவரை யாதுறல் சால்பலநின்
வளர்பொன்னி நாட்டிற்கு நல்லூர்க்கு நின்மங் கலக்குடிக்கும்
கிளர்நலஞ் சாதிக்குஞ் சாதிக்கும் வாய்மைக்குங் கீர்த்திக்குமே.

(கு - உரை.) தளர் மின்னிடையிடை - தளர்ந்த மின்னல்போன்ற இடையையுடைய தலைவியினிடத்தே. வரையாது - மணஞ்செய்து கொள்ளாமல். பொன்னிநாடு - சோழநாடு. நல் ஊர்க்கும் - நல்ல ஊருக்கும். மங்கலக்குடிக்கும் - நன்மைபொருந்திய குலத்திற்கும். நலம் சாதிக்கும் சாதிக்கும் - நலத்தை உறுதிப்படுத்துவதாகிய சாதிக்கும். இது நின் பொன்னிநாடு முதலியவற்றிற்கு அமைந்தது அன்று.

இதில் இடையிடை, சாதிக்குஞ் சாதிக்கும் என்பன மடக்கு.

இதில் நல்லூர், மங்கலக்குடியென்னும் தலங்களின் பெயர்கள் தொனிக்கின்றன.

### ஆறுபார்த்துற்ற அச்சங்கூறல்.

(வரும் வழியின் துன்பத்தை நினைந்து தலைவி அஞ்சுதலைப் பாங்கி தலைவனுக்குக் கூறல்.)

251. சுராசுரர் போற்றரன் கோடிச் சுரவெற்பர் துன்னிரவில்
அராவுறு கான்வரி னஞ்சுவ ரேநின் றராவெனுநீள்
கராமலை யும்மலை யாறெளி தோசங் கராவெனுமித்
தராதலங் காக்குமன் னவுனக் கோகை தருங்கிள்ளையே.

(கு - உரை.) அரா உறு கான் - பாம்புகள் மிக்க காடு. நின்று - திகைத்து; நின்று அஞ்சுவரே. அரா - அரனே; இங்கே இரக்கக் குறிப்பு. கரா மலையும் அலை ஆறு; கரா - முதலை. எளிதோ - கடத்தற் கெளிதோ. சங்கராவென்பதும் இரக்கக்குறிப்பு; "கராமடியச்சக் ...... ...சங் கரா" (தனிப்.) கிள்ளை - தலைவி. இனி அராவென்பதும் சங்கரா வென்பதும் இயல்பாதலின், துன்பத்தால் அவற்றைக்கூறும் தலைவியைக் கிள்ளையென்றார். துன்பமுற்றோர் அரா சங்கராவென்னும் திருநாமங் களைச் சொல்லுதலியல்பு; "வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால் மற்று நானறி யேன்மறு மாற்றம்" தே. சுந்த.

அராவென்பதும் கராவென்பதும் மடக்கு.

### ஆற்றாத்தன்மை ஆற்றக்கூறல்.

(தலைவியின் பொறுக்கமுடியாத தன்மையைத் தலைவனுக்குப் பாங்கி மிகக் கூறல்.)

252. செய்வண் டுலவுறு கோடிச் சுரநம்பர் தென்வரைவேள்
எய்வண்டு கொண்டுமின் கைவண்டு சோரு மிருங்கட்கடல்
பெய்வண் டுளிகள் கொடுவண் பயோதரம் பெய்யநிற்கும்
மொய்வண் டுறுதொடை யாரு ரதுவெனு மூன்னரசே.

(கு - உரை.) செய் - வயல்களில். வண்டு உலவுறு - சங்குகள் உலவு கின்ற. தென்வரை - பொதியின்மலை; "தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்" (பு - வெ. சிறப்புப்); "தெரிமாண் டமிழ்மும்மைத் தென் னம் பொருப்பன்" (குறள், 23. மேற்.); "தென்னாக வண்டமிழ்" (தஞ்சை. 245.) வேள் - மன்மதன். எய்வண்டு : வண்டு - அம்பு. மின் - தலைவி. கைவண்டு - கையிலுள்ள வளைகள். கட்கடல் - கண்ணாகியகடல். வண்துளிகள் - வளவிய நீர்த்துளிகள். பயோதரம் - கொங்கை. வண்டு - வண்டுகள். தொடையார் - தலைவருடைய. மூன் - கருதுவாயாக. அரசே - தலைவா.

வண்டென்னும்சொல் பலவிடத்து வந்தமையின் இது சொற்பின் வருநிலையென்னும் அணி.

கட்கடலின் துளியைத் தான்கொண்டு மேகம் பெய்யகிற்குமென்பது மற்றொருபொருள்; கட்கடல் ஏழுகடலுள் ஒன்று. பயோதரம் - மேகம்.
இச்செய்யுள் திரிபு.

## காவன்மிகவுரைத்தல்.

(காவல்மிகவு : மிகவு - மிகுதியை.)

253. மின்னை நிகர்சடைக் கோடீச் சுரவள்ளல் வெற்பவிங்கு
முன்னையி னன்று வரவரக் காவன் முதிர்வடைந்த
தன்னை சிறிது மிமையாதெப் போது மருகுறுமெம்
பொன்னைக் களவிற் கவரவொண் ணாதினிப் புத்திக்குமே.

(து - உரை.) முன்னையின் அன்று - முன்போலல்லாமல்; அன்று: அன்றியென்பதன் திரிபு. உறும் - உறுவாள். அன்னை உறும். பொன்னை - தலைவியை. களவில் - களவுப்புணர்ச்சியால். புத்திக்குமே - புத்தியாலும்.
எம் பொன் களவிற் கவரப்படுவதன்றென்பது மற்றொருபொருள்.

## காமமிகவுரைத்தல்.

(காமமிகவு - தலைவியின் காமமிகுதியை.)

254. பொன்னக ரீதிமை யாரிதில் வாழ்குநர் போற்றுமதன்
என்ன வொளிர்மன்ன நீகற்ப தாரு விலகிடெங்கள்
அன்னமுன் மீது படர்காம வல்லி யணியடைந்தாள்
பன்னுமிப் போதெழிற் கோடீச்சு ரேசர் பனிவரைக்கே.

(து - உரை.) பொன்நகர் ஈது - இந்நகர் அமராவதி. இமையார் - தேவர்கள். மதன் என்ன - மன்மதனென்று சொல்லும்படி. கற்பதாரு - கற்பகவிருட்சம். இலகிடு எங்கள் அன்னம் - தலைவி. காமவல்லி - கற்பகத்தின்மீது படருங்கொடி; "மகிழுமக் கற்ப கத்தில் வளர்கொடி காம வல்லி" (சூடாமணி நிகண்டு.) அணி = அண்ணி - அணுகி. இப்போது அடைந்தாள். இந்நகர் சுவர்க்கம்; இதிலுள்ளார் தேவர்; நீ கற்பகதரு; தலைவி காமவல்லி; அவள் உன்னை அண்ணி அடைந்தாள்.
இது முற்றுருவகம்.

## கனவுநலிவுரைத்தல்.

(கனவு நலிவு - கனா வருத்துதலை.)

255. நெய்யார் மழுவரன் கோடீச் சுரமன்ன நேரிழையாள்
ஐயா நெருநற் கனவிடை நீவந் ததுவுமவள்

கையா மலரைப் பிடித்தது மீது கலந்திடருள்
செய்யா தகன்றதுஞ் சொல்லிநைந் தாளிதென் சித்திரமே.

(கு - உரை.) ஐயா : விளி. மீது - பின்பு. கலந்திடு அருள் செய்யாது - கலந்திடுதலாகிய கருணையை நீ செய்யாமல்; நீ சேராமலென்றபடி. இது என் சித்திரம் - இஃது என்ன வியப்பு.

## கவினழிவுரைத்தல்.

(கவினழிவு - தலைவியின் அழகு அழிதலை.)

256. காரில குங்கண்டர் கோடீச் சுரமன்ன காரிகைமெய்
பீரில குற்ற தகலா வெழிலும் பெரிதகன்ற
தாரில குஞ்சுடர் வேலோய் நிலத்திடை யங்கங்குழு
மேரில ராயிடிற் சீருள ராவர்கொ லேழையரே.

(கு - உரை.) கார் - கருமை; மேகத்தைப்போல என்றுமாம்; "காரென்ன வாருங் கறைமிடற் றம்பலவன்" (சிற். 56.) பீர் - பசலை; இது பிரிவாலுண்டாகும் வேற்றுநிறம். எழில் - மாமைநிறம். ஆர் - கூர்மை. நிலத்திடை - உலகத்தில். அங்கம் குழுமு - உறுப்புக்களிற்கூடியிருக்கின்ற. ஏர் - அழகு; 'வனப்பென்பது பெரும்பான்மையும் பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோரழகு' (தொல். செய். சூ. 236, பேர்.) என்பர். ஆதலால், அங்கம் குழுமு ஏரென்றார். ஏழையர் - மங்கையர். பெண்களுக்கு அவயவங்கள்தோறும் உள்ள அழகில்லாவிடிற் சிறப்பில்லையென்றபடி.

பூமியில் அங்கங்கே உழுதற்குரிய ஏரில்லையாயின் ஏழைக்குடிகளுக்குச் சிறப்பில்லையென்பது மற்றொருபொருள்; "சீரைத் தேடின் ஏரைத் தேடு" (கொன்றைவேந்தன்) என்பது இங்கே கருதற்பாலது.

---

## ஒருவழித் தணத்தல்.

[ஒருவாறு பிரிதல்.]

### தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல்.

(தலைவன் தன்னூருக்குச் செல்லுதலைப்
பாங்கிக்குக் கூறல்.)

257. சீதள நீர்ச்சடைக் கோடீச் சுரநம்பர் தின்சிலம்பில்
மாதள வன்ன நகையா ளிடையென் மனமிருக்கத்
தாதள வும்பொழி லெம்மூர்க் ககன்றுன் றடங்கயற்கண்
காதள வோடித் திரும்புமுன் மீள்குவன் காரிகையே.

(கு - உரை.) சீதளம் - குளிர்ச்சி. தளவு அன்ன - முல்லையரும்பை ஒத்த. விரைவில் வருவேனென்றபடி.

பாங்கி தலைவனைச் செலவு விலக்கல்.

(செலவு - செல்லுதலை.)

258. மகமேரு வில்லினர் கோடீச்சு ரேசர் வரையிறைவ
சுகமே நடந்தி டுனக்குமுன் னுங்க டுலங்குமுன்னூர்
அகமே பிறந்திடு வோமுணர்ந் தாங்கெ னணங்குமுலை
முகமே லழுந்த வெளிதின் மகிழ்ந்து முயங்குகவே.

(கு - உரை.) சுகமே - சந்தோஷமாக. உனக்குமுன் - நீ உன்னூரடைவதற்குமுன். நாங்கள் துலங்கும். அகம் - இடம். உணர்ந்து - நாங்கள் பிறந்ததை நீ உணர்ந்து.

நீ பிரியின் உடனே இறந்துபடுவோம் எனக் குறிப்பித்தபடி. இது வாழ்த்து விலக்கென்னும் அணி; "செல்லு நெறியனைத்துஞ் சேம நெறியாக, மல்க நிதியம் வளஞ்சுரக்க - வெல்லும், அடற்றேர் விடலை யகன்றுறைவ தியாங்கவ், விடத்தே பிறக்க வியாம்" (தண்டி. மேற்.) என்னும் செய்யுளை இஃது அடியொற்றி வந்தது.

தலைவன் நீங்கல் வேண்டல்.

259. சித்த ரெனக்கூ டலில்வினை யாடிய சித்தர்பர
முத்தரம் பொன்மதிற் கோடீச் சுரமன்ன மொய்குழலாய்
அத்தல மேகுங் குறையொன் றுளனீ யருள்வைத்திங்கோர்
உத்தரம் போவெனிற் றக்கணம் போதுவ னூரடைந்தே.

(கு - உரை.) சித்தர் - எல்லாம் வல்ல சித்தர். கூடல் - மதுரை. சித்தர் - அறிவாம் உருவமுடையார். அத்தலமென்றது தன் ஊரினை. ஏகும் குறை - போதற்குக் காரணமாகிய காரியம். ஓர் உத்தரம் போ எனில் - போவென்று விடைகொடுத்தால். தக்கணம்=தத் க்ஷணம் - அப்பொழுதே. போதுவன் - மீண்டுவருவேன். வருவானோ வாரானோவென ஐயுறுவார்க்கு மீண்டுவருதலை உறுதிப்படுத்தவேண்டிப் போதுவனென்பதை முன்னர்க்கூறினான்; "தீண்டு வந்தெனத் தேனின் மிழற்றினாள்" (சீவக. 1509) என்பதும், 'தீண்டுவந்தென்றாள், கண்டேன் சீதையை யென்றாற்போல' என்னும் அதனுரையும் இங்கே அறிதற்குரியன.

இதில் உத்தரம் தக்கணம் என்னும் திசைப்பெயர்கள் முரண் தொடைபட அமைந்துள்ளன.

16

### பாங்கி விடுத்தல்.

260. வதனமொ ரைந்துடைக் கோடீச்சு ரேசர் வரையுறநீர்
பதமுன் பெயர்க்கும் பதந்தனி லோபிற் பதந்தனிலோ
மதன்கொடுங் கோல்கொடு செங்கோற் கடவுள் வரும்வருமுன்
கதழ்வின் வருவீ ரெனிலேக லாகுமெங் காவலரே.

(கு - உரை.) பதம் - அடி, காலம். மதன் கொடுங்கோல்கொடு - மன்மதனுடைய வளைந்த பாணங்களைக் காரணமாகக்கொண்டு. செங்கோற் கடவுள் வரும் - யமன் இவளுயிரைக் கவர வருவான். கதழ்வின் - விரைவாக.

பதம் என்பதன் மடக்கும் கொடுங்கோல் செங்கோலென்னும் முரணும் இதில் அமைந்துள்ளன.

### பாங்கி தலைவிக்குத் தலைவன் செலவுணர்த்தல்.

261. வனக்கொன்றை சூடரன் கோடீச் சுரமன்ன வாணுதலாள்
தனக்கிங்கு நம்பிரி வாற்று தொருகணந் தானுமென
எனக்குத் தெரியுந் தெரியு மெனக்கென வென்மனந்தேர்
உனக்குத் தெரியுமன் றேயென்றவ் வூர்க்கவ ருற்றனரே.

(கு - உரை.) வனம் - முல்லைநிலம்; அழகுமாம். கணம் - க்ஷணம். ஒருகணந்தானும் பிரிவு ஆற்றுதென. என்மனந்தேர் உனக்கு எனக்குத் தெரியுமெனத் தெரியும். அவ்வூர்க்கென்றது தலைவனது ஊரை.

### தலைவி நெஞ்சோடு புலத்தல்.

(புலத்தல் - நொந்துகூறல்.)

262. நாளான வைகளிற் கோடீச்சு ரேசர் நகத்திறைபொய்ச்
சூளார் மனத்தோ டறவாய்ப் பிரிந்துழித் துன்பமதில்
நீளாது கல்லா யிருக்கக்கல் லாது நினைவழிந்து
வாளா வெனைநீ வருத்தலென் னிங்கு மடநெஞ்சமே.

(கு - உரை.) நாளானவைகளிற் பிரிந்துழி - வாழ்நாளிற் பிரிந்த காலங்களில். நகம் - மலை. சூள் - துணிவுரை. வாளா - வீணாக, வாளைப் போன்று.

கல்லாயிருக்கக் கல்லாதென்றது தலைவன் நெஞ்சம் கல்லாயிருக்கின்றதென்பதை நினைந்து கூறியபடி.

மூன்றுமடி மடக்கு.

சென்றோன் நீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

(நீடலின் - தாமதித்தலால். இது தலைவிகூற்று.)

263. புலமெய்த் தவர்புகழ் கோடீச்சு ரேசர் புகலியின்பாற்
குலவுப் படுகரை யேகண்டி லாய்கொலென் கொண்கரையே
நிலவுற் றிடுதிரை யேயறி யேன்சற்று நித்திரையே
சலமுற் றிடுசங்க மேயுறு மோவன்பர் தஞ்சங்கமே.

(து - உரை.) புலம் - மெய்ஞ்ஞானத்தையுடைய. புகலி - சீகாழி. குலவு உப்பு அடுகரையே - விளங்குகின்ற உப்பு அடுத்த கரையே; கடற் கரையே; உப்பு - கடலுமாம். என் கொண்கரைக் கண்டிலாய் கொல்; கொண்கர் - தலைவர். நிலவுற்றிடு திரையே - விளங்குகின்ற அலைகளே. நித்திரையைச் சற்றும் அறியேன்; "இனிய பனித்திரையே யினியிலை நித்திரையே" (அருணைக். 74.) சலம் - நீர். அன்பர்தம் சங்கம் - தலைவருடைய சேர்க்கையானது.

இதில் மடக்கென்னும் அணி அமைந்துள்ளது.

பாங்கி இறைவியை ஆற்றுவித்தல்.

264. கிளர்புகழ் வேந்தர் வருகின் றனருன்றன் கேதமெலாம்
தளர்வுறச் செய்திடு நீதள ரேன்மின் றளரிடையாய்
வளர்பிறை நாளும் வளரா திருக்க வளர்சடைமேற்
களவெம் பணியுய்த்த கோடீச் சுரவள்ளல் கார்வரைக்கே.

(து - உரை.) கேதம் - துன்பம். கள்ள வெம்பணி; பணி - பாம்பு. வளர்பிறைநாளும் வளராதிருக்க.........பணியுய்த்த: "அன்றி விடவரவை யஞ்சியோ...... ..சென்னி, வளராவா றென்னோ மதி" தண்டி. மேற்.

இறைவன் பாம்புகளை அணிந்தமைக்கு வேறொருகாரணம் கற்பித்துக் கூறியதனால் இது தற்குறிப்பேற்றவணி.

தலைவிக்கு இறையோன் வந்தமையுணர்த்தல்.

(தலைவன் வந்ததைத் தலைவிக்குப் பாங்கி அறிவித்தல்.)

265. பேரா யிரத்தரன் கோடீச் சுரவெற்பிற் பேரெழில்கொள்
ஆரா ரயின்மன்ன ராராநின் னெஞ்சகத் தார்வமதைத்
தேரா தவரல்லர் தேரா தவன்கடற் சென்றனன்மேல்
வாராரென் றேங்கிடல் வாரா ரிளமுலை வந்தனரே.

(து - உரை.) ஆர் ஆர் அயில் - கூர்மைபொருந்திய வேலையுடைய. ஆரா - தணியாத. தேராதவர் அல்லர் - நினையாதவர் அல்லர்; தேர்வா

றென்றபடி. தேர் ஆதவன் - தேரையுடைய சூரியன். கடல் - மேல்கடல். மேல் - பின்பு. வாரார் என்று - வரமாட்டாரென நினைந்து. வார் ஆர்-கச்சுப்பொருந்திய.

இச்செய்யுளில் மடக்கணி அமைந்துள்ளது.

## பாங்கி தலைவனோடு நொந்து வினாதல்.

266. தன்னொடு தானுறழ் கோடீச்சு ரேசன் றனதருளால்
மின்னொடு நானும் பிழைத்திருக் கின்றனன் வேலவநீ
என்னொடு கூறிய காலமெல் லாஞ்சென்ற தெவ்விடத்தோ
உன்னொடு கூடி யிருந்ததன் றேயங்க னுன்னெஞ்சமே.

(கு - உரை.) மின்னொடு - தலைவியோடு. சென்றது எவ்விடத்தோ - போனது எந்த இடத்திற்கோ. நெஞ்சினைத் தலைவியின்பால் வைத்தற்குரியவனாதலின், 'உன் நெஞ்சமும் உன்னொடு கூடியிருந்ததன்றே' என்றாள்; எம்மை நினையாதிருந்தாயென்று குறிப்பித்தவாறு.

## தலைவன் பாங்கியோடு நொந்து வினாதல்.

267. கூற்றினை வாட்டிய கோடீச்சு ரேசர் குவட்டிளமான்
தோற்றிய மார னலரு மிவ்வூரினர் தூற்றலரும்
சாற்றிடு திங்கள்வந் தீயும்வெந் தீயுந் தனியிருந்திங்
காற்றிய தெப்படி யெப்படி யாற்றுவித் தாயணங்கே.

(கு - உரை.) குவட்டு - மலையில். மானென்றது தலைவியை. மாரன் அலரும் - மன்மதன் எய்யும் மலரம்புகளையும். தூற்று அலரும் - பலரறியச்சொல்லும் பழிச்சொல்லையும். திங்கள் வந்து ஈயும் வெ தீயும். அலரையும் அலரையும் தீயையும் மான் தனித்திருந்து ஆற்றியது எப்படி.

இதில் அலரென்பதும் தீயென்பதும் மடங்கிவந்தன.

## பாங்கி ஆற்றுவித்திருந்த அருமை கூறல்.

(தலைவியின் துன்பத்தைத் தணியச் செய்துகொண்டிருந்த அருமையைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.)

268. கருந்தாழ் குழலியெங் கோடீச்சு ரேசர் கருந்தடத்தில்
வருந்தாம லின்று வருந்தாம மார்பன் வருந்தலென்றும்
இருந்தார்ப் பொழிற்புள் ளிருந்தா லுமுன்னா ரெதிர்தெரித்தும்
பொருந்தார்ப் பொருந்தனி வேலகிற் போற்றியும் போற்றினனே.

(கு - உரை.) கருங்குழலி, தாழ்குழலி. கருந்தடத்தில் - பெரிய மலையில். வருந்தாமல் - நீ வருந்ாதபடி. தாமமார்பன் வரும் - தலைவன்

வருவான்; தாமம் - மாலை. வருந்தல் என்றும் - வருந்தாதேயென்று சொல்லியும். இருந்தார்ப்பொழில் - பெரிய மலர்களையுடைய சோலைகளில். இருந்து ஆலும் - தங்கி ஆரவாரிக்கும். பொருந்தார்ப்பொரும் - பகைவரோடு போர்செய்யும். போற்றியும் - புகழ்ந்தும்.

இது மடக்கணி.

---

## வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்.

[மணம்செய்து கொள்ளுதற்கு இடையே பொருளீட்டுதற்குத் தலைவன் பிரிதல்; வைத்து: சொன்னடை. இடைவைத்து - இடையீடாக நீக்கிவைத்தென்பர்; தொல். களவு. சூ. 21, ந.]

### என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல்.

(ஏந்திழைக்கு - தலைவிக்கு. உணர்த்தென்று தலைவன் சொல்லுதல்.)

269. நரைவிடைப் பாகர்தென் கோடீச் சுரமன்ன நன்னுதலாய்
வரைவிடை வைத்துப் பொருட்கேகு வேன்மென் மனமுருகிக்
கரைவிடை நூலன்ன கன்னியுற் றாலென் கதழ்வனையாட்
குரைவிடை தந்திடு வந்திடு வேனிதி யுன்னிடத்தே.

(து - உரை.) நரைவிடை - வெள்ளை இடபம். நூல் அன்ன இடை கன்னி கரைவு உற்றால் - நூல்போன்ற இடையையுடைய தலைவி வருந்தினால். கதழ்வு - விரைந்துவருதலை. உரை - உரைப்பாயாக. வந்து நிதியை உன்னிடத்தே இடுவேன்.

இச்செய்யுள் திரிபு.

### நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றல்.

(நின்பொருட்பிரிவை நீ தலைவிக்கு உரையென்று பாங்கி தலைவனுக்கு உரைத்தல்.)

270. ஏடவிழ் தாமரைக் கண்ணனுங் கண்ணனு மின்னமுற்றுந்
தேடமுன் னின்றவர் கோடீச்சு ரேசர் சிலம்பிறைவ
நாடக் கநக சபைக்கே கிடினீ நறுநுதலைக்
கூட வழைத்தே கலையேனு மேகலைக் கூறவட்கே.

(து - உரை.) ஏடு - மலரிதழ். தாமரைக் கண்ணன் - தாமரை மலரிலிருக்கும் பிரமதேவன்; "ஆற்றுங்காற் கஞ்சத் தவர்தா மரைக்கண்ணர்" (அருணைக்கலம். 79.) கண்ணனும் - திருமாலும். நாடு அ கநகசபை - நீ

தேடிச்செல்கின்ற அந்தப்பொற்றிரட்கு ; சிதம்பரத்திற்கென்பது மற்றொரு பொருள். ஏகலையேனும் - போவாயல்லையானாலும். அவட்கு ஏகலைக் கூறு

முதலடியிலும் ஈற்றடியிலும் மடக்குவந்தது.

நீடேனென்றவன் நீங்கல்.

(நீடேன் - தாமதியேன்.)

271. கனமுறுங் கண்டர்தென் கோடீச் சுரவெற்பிற் காரிகையென்
மனமுறு முற்சந் தனமுறு மச்சந் தனமனுமுன்
தனமுறு மத்தந் தனமுறி னத்தந் தனவிடையாள்
இனமுறு முத்தந் தனவிலைக் காமிங்ங னெய்துவனே.

(து - உரை.) கனம் உறும் - மேகத்தையொத்த. காரிகை : விளி. மனம் உறும் முன் சந்து அனம் உறும் - என்மனம் உம்பால் அடைதற்கு முன் விரைவில் என்வருகையைக் குறித்து யான் அனுப்பும் தூதாகிய அன்னப்பறவை வரும்; சந்து - தூது. அ சந்து அனம் மன்னு முன் - அந்தத் தூதாகிய அன்னம் வரும் முன்னர். தனம் உறும் - யான் கொண்டுவரும் பொருள்வரும். அத்தம் தனம் உறின் - கையிற் பொருளைப் பெற்றால். அ தந்து அன இடையாள் இனம் உறும் - அந்த நூல் போன்ற இடையையுடைய தலைவியின் சுற்றத்தார் மனம் பொருந்தி வருவார். முத்தம் - யான்கொணரும் முத்துக்கள். இங்ஙன் - இவ்வாறு பல பொருள்களையும் முன்னர் வரவிட்டு.

இது மடக்கணி.

பாங்கி பொருட்பிரிவு தலைவிக்கு உணர்த்தல்.

(பொருட்பிரிவு - பொருளுக்காகத் தலைவன் பிரிதலை.)

272. இருகோ டிவையென் முலைவிலைக் காக விறைவர்முதல்
வருகோ டினம்பணி கோடீச் சுரநம்பர் மால்வரையின்
அருகோடி யுச்சியி லாவது மாலையி லாவதிங்ஙன்
ஒருகோடி பொன்கொண் டணைகுவன் கோடியென் றுற்றனரே.

(து - உரை.) இவை இருகோடு என் - இவை இரண்டு யானைக் கொம்புகள் என்று சொல்லப்படும் ; கோடு - மலைச்சிகரமுமாம். முதல் வருகோள் - முதற்கோள் ; சூரியன். வரையின் அருகு ஓடி ; ஓடி - பொருள் தேட விரைந்துசென்று. உச்சி - நடுப்பகல். கோடி என்று - கொள்வாயாக வென்று கூறி.

ஈற்றடியிற் கோடி யென்பது மடக்கு.

இச்செய்யுள் திரிபு.

## தலைவி இரங்கல்.

273. மின்னன வேணியர் கோடீச்சு ரேசர் வியன்சிலம்பில்
மன்னவ ரென்றனைப் பித்தளை யென்று வரைந்துதனிப்
பொன்னினுக் கேகின ரென்னுயிர் வேளம்பிற் போனபின்வந்
தன்னதை யார்க்களித் தாருடன் வாழ்வரிங் கன்புடனே.

(கு - உரை.) மின் அன்ன வேணியர். பித்து அளை என்று - என் பிரிவினால் பித்தினைப் பொருந்துவாயாக வென்று. வரைந்து - நீக்கி. தனி ஏகினர்; தனிப்பொன் - ஒப்பற்ற பொன் எனலுமாம். வேள் அம்பின் - மன்மதனுடைய அம்பினால். உயிர் போனபின். அன்னதை - அப் பொன்னை. ஆர்க்கு அளித்து இங்கு ஆருடன் வாழ்வர்.

என்னைப் பித்தளையென்று நீக்கிவிட்டுப் பொன்னைத் தேடிச் சென்றாரென்பது மற்றொருபொருள்; பித்தளை - ஒருலோகம்.

## பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

(கொடுஞ்சொற் சொல்லல் - இடித்துரைத்தல்.)

274. கண்டார் கலுழ்தற்குக் காரணந் தேர்ந்திடக் கண்கலக்கம்
கொண்டா யிதுவென்ன கோடீச்சு ரேசர் குவட்டிறைவர்
வண்டார் குழலி யெனக்கோ பிறர்க்கோ வரையுனக்கோ
மண்டா ரழற்சுரஞ் சென்றார் பொருட்கு வகுத்துரையே.

(கு - உரை.) கண்கலக்கம்கொண்டாய் - கண்கள் கலங்குதலைக் கொண்டாய்; கண்களிற் கல அளவாகிய நீரைக்கொண்டாயெனலுமாம்; "மன்ற கலங்கல னேதூணி கட்புனல் வாரவிடா" (திருமூலர். அந். 28.) இறைவர் - தலைவர். வரை உனக்கோ - மணம்செய்து கொள்ளற்குரிய உன்பொருட்டாகவோ. நின்னை வரைதற் பொருட்டாகவே பொன் கொணரச் சென்றார்; ஆதலின் கலுழ்தலையொழியென்றபடி.

## தலைவி கொடுஞ்சொற் சொல்லல்.

275. பாருயி ராம்புன றீவளி வானம் பரிதிமதி
ஆருயி ராம்பரன் கோடீச் சுரவணங் கேயெளியேற்
கீருயி ரோருயி ரீருயி ராய தெனைப்பிரிவுற்
றோருயிர் நீயென் றிருந்தன ணீயதை யோர்கிலையே.

(கு - உரை.) பார் - பூமி. உயிராம்புனல் - உயிராகியநீர்; "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே" (புறநா. 186); "மாந்தர்க் கெல்லாம் நீருயிர்" (சீவக. 2908.) வளி - காற்று. பார் முதல் உயிர் வரையிற்

கூறியது இறைவன் அட்டமூர்த்தங்களை. ஈருயிர் - இரண்டு உயிர் உண்டு. ஓருயிர் எனைப்பிரிவுற்று ஈர் உயிராயது - அவற்றுள் ஓருயிர் என்னைப்பிரிந்து ஈரப்பட்ட உயிராயிற்று ; இது தலைவன் பிரிந்தமையைக் குறித்து நின்றது ; ஈர்தல் - பிளத்தல். நீ ஓர் உயிர் - நீ மற்ற ஓர் உயிர்.

வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.

(வலித்தல் - வற்புறுத்திக் கூறுதல்.)

276. மலைகண்ட வில்லினர் கோடீச் சுரநித்தர் மால்வரைமேற்
கொலைகண்ட வேற்கண்ணி கான்வெயி லாற்றுயர் கூர்பிணையின்
நிலைகண் டுருகி யருகினின் றேதன் னிழலுதவும்
கலைகண் டிடிற்பொருட் கேகுவ ரோகலை கண்டவரே.

(கு - உரை.) கான் - பாலைநிலம். பிணையின் - பெண்மானினது. நிலை - வருத்தம். கலை - ஆண்மானை. கலைகண்டவர் - கல்வித்துறை போகியவர்.

இதில் ஈற்றடியில் மடக்குவந்துள்ளது.

பருவங்கண்டு தலைவி புலம்பல்.

(பருவம் - மீண்டு வருவதாகத் தலைவன் குறிப்பிட்ட கார்காலத்தை.)

277. சேரா ரெனக்கறுத் தார்த்தம்பு கொண்டு சிலைவளைத்துக்
காரா னதுவந் தெதிர்ந்ததன் னூர்வரக் கண்டிலன்யான்
தேரார் கொலோவிதை யாங்கித் திசைதேர் திரும்பிலையோ
தாரார் கடுக்கையர் கோடீச்சு ரேசர் தடங்கிரிக்கே.

(கு - உரை.) சேராரென - பகைவரைப்போல. கறுத்து - கருமை நிறம் பெற்று, கோபித்து. ஆர்த்து - ஆரவாரித்து. அம்புகொண்டு - நீரை உட்கொண்டு, அம்புகளைக்கொண்டு. சிலைவளைத்து - இந்திரவில்லை வளைத்து, வில்லைவளைத்து. கார் - மேகம். எதிர்ந்தது - எதிரேதோற்றியது, எதிர்த்தது. அன்னூர் - தலைவர். இதைத் தேரார்கொலோ. அவரது தேர் இத்திசை திரும்பிலையோ ; திரும்பவில்லையோ வென்பது விகாரம்.

இகுளை வம்பென்றல்.

(இகுளை - தோழி. வம்பு - காலமல்லாத காலத்து முந்திப்பெய்யும் மழை.)

278. கயிலாய நாதர்தென் கோடீச் சுரத்துன் கருங்குழலின்
இயலான தற்கஞ்சி யோடிய காரிவ் விடைத்தனிநீ

பயில்வாய்ந்து சற்றுப் பயங்காட்ட வந்தது பார்த்ததையிம்
மயிலாடு கின்றது கார்கால மன்றிது வம்பணங்கே.

(கு - உரை.) கருங்குழலின் இயலானதற்கு - கரிய குழலின் அழகிற்கு. இவ்விடை - இச்சமயத்தில். பயில்வு ஆய்ந்து - நீ பயிலுதலை நினைந்து. பயம் காட்ட - நீரைக்காட்ட, அச்சுறுத்த; சிலேடை; "பயங்காட்டி லைஞ்சு மேதனி யேநின்ற பைங்கொடியே" (அருணைக் கலம். 48.) அதைப் பார்த்து. வம்பு - காலமல்லாத காலத்துப் பெய்யும் மழை; "வம்பார் குன்றம்" தே. திருஞா.

தலைவி மறுத்தல்.

(தோழி கூறியதைத் தலைவி மறுத்துக் கூறுதல்.)

279. நகைமுலை காரன்றி தோமப் புகையெனி னன்கிசைத்தாய்
புகைதனைக் கண்டு மயிலாடு மோகொன்றை பூத்திடுமோ
தகைதரு கோப முறுமோ வதுவிற் றரித்திடுமோ
திகையணி யாடையர் கோடீச் சுரத்துத் திகைத்தனையே.

(கு - உரை.) நகை - முத்துவடம் (சீவக. 412); அரும்புமாம்; முலைநகையென மாறி முல்லை யரும்பு போன்ற நகையையுடையாயெனலுமாம்; முலை : விகாரம். இது காரன்று. எனின் - என்று நீ கூறுவாயேல். நன்கிசைத்தாய் : குறிப்பு. தகைதரு கோபம் - தகுதியையுடைய இந்திரகோபப் பூச்சிகள்; தடைசெய்யும் சினமென்பது மற்றொருபொருள். அது - அந்தப் புகை. வில் - வில்லை. திகையணியாடையர் - திசைகளாகிய அழகிய ஆடையை உடையவர்; திகம்பரர். திகைத்தனை - மயங்கினாய். இதில் ஈற்றடியில் திகை மடக்கு.

அவர் தூதாகி வந்தது இப்போழுதேனத் துணைவி கூறல்.

(மேகம் தலைவருடைய தூதாகி வந்தது இக்காலத்திலென்று தலைவிக்குப் பாங்கி கூறல்; தூதுக்கு உரிய பொருள்களுள் மேகமும் ஒன்றென்பது இங்கே உணரற்பாலது.)

280. தந்தே ரிடையன்பர் தந்தே ரிடையுறத் தாமிவர்ந்து
வந்தே னுனக்குமுன் னுமின் னார்க்கென் வரவுணர்த்து
முந்தேகி யென்றுநம் பால்விடுத் தாரிம் முகிலைநையேல்
பந்தேற்ற கையுமை பங்கர்கோ டீச்சுரப் பைந்தடத்தே.

(கு - உரை.) தந்து ஏர் இடை - நூல்போன்ற இடையை உடையாய். அன்பர் தம் தேர் இடை உற - தலைவர் தமது தேரில் வர. 'வந்தேன்' என்பது முதலியன தலைவன் மேகத்தை நோக்கிக் கூறியவற்றைத் தோழி கொண்டு கூறியவை. நானும் வந்தேன். மின்னார்க்கு-தலை

விக்கு. மூந்து எகி உணர்த்து. இவர்ந்து முகிலை விடுத்தார். பங்தேற்ற கை உமை: இத்தலத்திலெழுந்தருளியுள்ள அம்பிகையின் திருநாமம்; 'கந்துகக் கிரீடாம்பிகை' என வடமொழியில் வழங்கும். தடம் - மலை. முதலடி மடக்கு.

தலைமகள் ஆற்றல்.

281. ஊரும் விடையரன் கோடீச் சுரமெனு மூருறையும்
ஓருயி ரீருடற் கெவ்வா றலையுமொவ் வோரரையாய்ச்
சாருமென் றுனுங் குறைபடு மேயெனுஞ் சால்புணர்ந்து
தேருடன் மீண்டுமுற் றூதும்விட் டாரவர் தேர்ந்தவரே.

(கு - உரை.) ஓர் உயிர் ஈருடற்கு எவ்வாறலையுமென்றது தனக்கும் தலைவனுக்கும் ஒருயிரென்பதைப் புலப்படுத்தியது; "ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க், கீருயி ரென்ப விடைதெரியார்-போரில், விட னேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கும், உடனே யுலந்த துயிர்" (பு. வெ. 262.) ஒருடலுக்கு அரை உயிராக அமையுமென்றாலும் குற்றம் வருமே. முன் - தாம் வருவதற்கு முன். தூதென்றது மேகத்தை.

அவன் அவட்புலம்பல்.

(தான் பிரிந்து சென்ற அவ்விடத்தில் தலைவியின் பிரிவாற்றாமல் தலைவன் புலம்பல்.)

282. கூட விழைத்ததிற் கண்ணீர் சொரிந்து குறிப்பொருநாள்
நீடல்கண் டேங்கி வரிக்குறி பார்த்தின்று நெஞ்சுருகி
வாடலுற் றாங்குநந் தேர்வர வேக்கி மயங்கிடுமே
ஆடல் புரிசிவன் கோடீச் சுரத்துநம் மாருயிரே.

(கு - உரை.) கூடல் - கூடற்சுழியை. குறிப்பு - தலைவன் இன்ன நாளில் வருவேனென்று குறித்துச் சென்ற காலம். நீடல் - நீட்டித்தலை. வரிக்குறி - வரியாகிய குறிப்பு; என்றது தலைவன் வருங்காலத்தைக் கணக்கிடச் சுவரில் விரலால் இட்ட கீற்றுக்களை; "ஆய்மடத் தகுவி, சேணுறை புலம்பி னாண்முறை யிழைத்த, திண்சுவர் நோக்கி" (அகநா. 289); "வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற, நாளொற்றித் தேய்ந்த விரல்" (குறள். 1261.) ஆங்கு - அவ்விடத்தில். ஆருயிர் மயங்கிடும்.

பாகனொடு சொல்லல்.

(மீண்டு தேரூர்ந்து வரும் தலைவன் பாகனுக்குக் கூறுதல்.)

283. விடையூரு மத்தர்தென் கோடீச்சு ரத்தர்தம் வெற்பிலிவ்வான்
கடையூருங் கொண்டல் சொரிநீரு மின்னதைக் கண்டமின்கண்

மடையூரு நீரும் பெருவெள்ள மாகி வழியதனில்
இடையூற தாமுன் வலவா செலுத்தி டிரதத்தையே.

(து - உரை.) வான்கடை - வானில்; கடை: ஏழாம் வேற்றுமை யுருபு. இன்னதை - இம்மேகத்தை. மின் கண் மடை - தலைவியின் கண்ணாகிய மடையில். வலவா - தேர்ப்பாகனே. இரதத்தைச் செலுத்திடு.

கொண்டல் சொரிநீருமென்றதற்கேற்பத் தலைவியை மின்னென்றார்.

மேகத்தோடு சொல்லல்.

284. இல்லென் றவர்க்கருள் கோடீச் சுரநம்ப ரேமவெற்பிற்
செல்லென் றுனையறிந் தோர்சொல்ல நீமுன்னர்ச் செல்லுகின்றாய்
நில்லென்று நான்சொல்லி னிற்பைகொல் லோசென்று நேர்முகிலே
வல்லென்ற கொங்கை வருந்தா துரைநான் வருந்திறனே.

(து - உரை.) இல்லென்றவர்க்கு - யாதொன்றும் இல்லையென்று இரந்தவர்க்கு; இல்லென்றவர்க்கருளென்ற விசேடணம் கோடீச்சுரரென்பதற்கு இயைய அமைந்துள்ளது. ஏமவெற்பு - இன்பந்தருமலை; மேருவுமாம். செல் - மேகம்; செல்வாயாக வென்பது மற்றொருபொருள். வல் - சூதாடு கருவி. வருந்திறனை உரை.

பாங்கி வலம்புரிகேட்டு அவன் வரவறிவுறுத்தல்.

(தன்வரவைத் தலைவிக்கு அறிவுறுத்தற்குத்
தலைவனூதிய சங்கமுழக்கத்தைப் பாங்கி
கேட்டு அவன்வரவைத் தலைவிக்கு
அறிவுறுத்தல்.)

285. கைச்சங்கம் போயிற் றெனமெலி யேலிங்ஙன் காவலர்தம்
மெய்ச்சங்க நல்கிட மேவுகின் றாரென மேன்மதுரை
அச்சங்கத் தேதமி ழாய்ந்தகோ டீச்சுரத் தாதிவெற்பில்
இச்சங்கம் வந்துன் களத்துற வேற்ப விசைக்கின்றதே.

(து - உரை.) கைச்சங்கம் போயிற்று - கைவளை கழன்றது. இங்ஙன் - இவ்விடத்தில். மெய்ச்சங்கம் - மெய்யுறு புணர்ச்சி. காவலர் மேவுகின்றார். மேல் - பண்டைக்காலத்தில். மதுரையச்சங்கத்தே தமிழாய்ந்தவர்: "மதுரைத் தொகையாக்கினன்", "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி" (தே.); "சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியனூற் சங்கத்துள், அன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்", "சங்கப் புலவர் திருமுகந்தந் தலைமேற் கொண்டு" (பெரிய. திருநா. 403; சேரமான்

பெருமாள். 29.) களத்து உறவு எற்ப - கழுத்தின் உறவைப்பொருந்த. இசைக்கின்றது - சப்திக்கின்றது.

இது சொற்பின்வருநிலையணி.

### தலைவி வலம்புரி வாழ்த்தல்.

(தலைவன் ஊதிய சங்கத்தைத் தலைவி வாழ்த்துதல்.)

286. தொண்டா னவர்க்கருள் கோடீச் சுரநம்பர் தூய்வரைச்செல்
ஒண்டார் புனையன்பர் திண்டேர் வரவெனக் கோதியெனைத்
தண்டா தலைக்குந் துயர்ச்சங்க மாற்றிய சங்கமினி
வண்டா மரைக்கண்ணர் கைச்சங்க மாகி வயங்குகவே.

(கு - உரை.) தூய்வரை - தூய்மையையுடைய மலை; தூயெனவும் முதனிலையுண்டு. செல் அன்பர் - பொருட்குச் சென்ற அன்பர். வரவு - வருதலை. தண்டாது - நீங்காமல். துயர்ச்சங்கம் - துன்பத்தொகுதியை. வண்டாமரைக்கண்ணர் - திருமாலினது. கைச்சங்கம் - பாஞ்சசன்னியம்.

இது சொற்பின் வருநிலையணி.

### பாங்கி நினைத்தமை வினாதல்.

(தலைவன் வந்தவிடத்து, பிரிந்த காலத்து நீர் தலைவியை நினைத்ததுண்டோவெனப் பாங்கி அவனை வினவுதல்.)

287. நடத்தொழி றில்லைப் பொதுவிற்செய் தாண்மலர் நாளுமென்னெஞ்
சிடத்துறச் செய்பரன் கோடீச் சுரவெற்பி வின்புறநல்
வடத்திரு மார்பவெப் போதேனு மாங்குன் மலரகப்பூந்
தடத்தெங்க ளன்ன மணைந்ததுண் டோவுண்மை சாற்றுகவே.

(கு - உரை.) நடத்தொழில் - பரமானந்த தாண்டவத்தை. தில்லைப் பொதுவில் - தில்லைச் சிற்றம்பலத்தில். செய் தாள் மலரை. நெஞ்சிடத்து உற. வடத்திருமார்ப - முத்துமாலைகளை யணிந்த மார்பையுடையாய். மலரகம் - இதயகமலமாகிய; பூந்தடம் - பொலிவுபெற்ற இடம்; மலர் பூத்த குளமென்பது மற்றொருபொருள். அன்னம் - தலைவி. அன்னம் பூந்தடத்து அணைதல் இயல்பு; "மருதிடத் திறையோன் மனத்தடத் துலவு மடப்பெடை யன்னமே" திருவிடை. வரகுண. 56.

### தலைவன் நினைத்தமை செப்பல்.

(தலைவியை நினைத்ததைத் தலைவன் கூறுதல்.)

288. எனைத்தன் னடிமை யெனத்தடுத் தாண்டரு ளீசர்வரி
சுனைத்துல வும்பொழிற் கோடீச் சுரமின் கருதுமென்னெஞ்

சினைத்தன் றனத்தொரு வார்கொண் டிறுக்கிமற் றிங்குவைத்தால்
நினைத்திடற் கங்கென்ன செய்வே னினைத்தில னேரிழையே.

(கு - உரை.) வரி கனைத்து - வண்டுகள் ஆரவாரித்து. மின்-தலைவி. தன் தனத்து ஒரு வார்கொண்டு - தன்னுடைய தனங்களில் ஒரு கயிறு கொண்டு. நெஞ்சம் உங்கள்பால் இருந்தமையின் அங்கே நினைக்க நெஞ்சில்லை யென்றவாறு; எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தேனென்பது கருத்து; "மறந்தா னினைத்தலு முண்டுபொன் னேயுங்கள் வஞ்சியையே" வேங்கைக். 282.

## பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்தமை கூறல்.

(பாங்கி கூறல்.)

289. மின்னன வேணியர் கோடீச்சு ரேசர்தம் மெய்ம்மையருள்
என்னனு பானத்தி லுன்புகழ் மாத்திரை யின்னள்செவி
மன்ன வுரைத்துட் கொளச்செய்து மன்னவ மன்மதன்செய்
இன்ன லிறுவித் திருந்தன னித்திற மிந்நகரே.

(கு - உரை.) அருள் என் அனுபானத்தில் - அருளென்று கூறப்படும் அனுபானத்தில்; அனுபானம் மருந்தைக் கலந்து கொடுத்தற்குரியது. உன்புகழ் மாத்திரை -உன் கீர்த்தியைமட்டும், உன்புகழாகிய மாத்திரையை. உரைத்து - சொல்லி, தேய்த்து; மாத்திரையைத் தேய்த்துக் கொடுத்தல் இயல்பு. உட்கொள - மனம் உணர, உண்ண. மன்மதன் செய் இன்னல் - விரகதாபம். இறுவித்து - முடியச்செய்து. இந்நகரில்.

புகழை மாத்திரையாக உருவகஞ் செய்ததற்கு இயைய உரைத்தென்றும் உட்கொளவென்றும் சிலேடையால் நயம்பட உரைத்தார்.

இதில் ஈற்றடி முற்றுமோனை.

---

# வரைவு மலிவு.

[கல்யாணத்தைப்பற்றிய செய்திகளின் மிகுதி.]

## தலைவன் முலைவிலை விடுத்தமை பாங்கி தலைவிக்கு உணர்த்தல்.

(தலைவன் பரிசம் விடுத்தமையைத் தலைவிக்குப் பாங்கி அறிவித்தல்.)

290. தந்தன நேரிடை பாகர்தென் கோடீச் சரத்தடத்துத்
தந்தன மெல்லையிங் கில்லா தனநின் றனவிலையாத்

தந்தன ரன்பர்மற் றிந்நா ளினிநீ தவிர்த்திடுவி
தந்தன நீடுய ரெல்லா மணம்பெறு தாழ்குழலே.

(கு - உரை.) தந்து அன நேர் இடை - நூலைப்போன்ற நுண்ணிய இடையையுடைய உமாதேவியார்; நேர்மை - நுண்மை. தடத்து - மலையில். தம் தனம் - தமது பொருள்களில். எல்லையில்லாதனவாகிய தம் தனங்களை இந்நாள் நின் தனவிலையாக அன்பர் தந்தனர். விதந்தன நீள் துயர் - எடுத்துச்சொல்லப்பட்டனவாகிய பெரிய துயரங்களை. துயர் தவிர்த்திடு. மணம்பெறு - கலியாணத்தைப் பெறுவாயாக; மணம்பெறு குழலெனக் குழலுக்கு அடையாக்கினும் அமையும்.

இச்செய்யுள் யமகம்.

தலைவி நற்றாயுள்ளமகிழ்ச்சி யுள்ளல்.

(நற்றாயின் உள்ளமகிழ்ச்சியைத் தலைவி நினைத்தல்.)

291. வேலையன் றாதைதென் கோடிச் சுரவெற்பின் மேவுமன்னை
ஆலைவில் வேளனை யாருக்கு நங்கையி னாலையுறும்
மாலை புனைந்திடும் போதுமன் னார்கிளை மாலையினம்
காலையங் கைப்பற்று காலையு முள்ளங் களித்திடுமே.

(கு - உரை.) வேல் ஐயன் - முருகக்கடவுளுடைய. ஆலைவில் - கரும்பு வில்லையுடைய. அனையார் - தலைவர். நம் கையினால் ஐ உறும்; ஐ - அழகு. ஐயுறுமாலை புனைந்திடும்போதும் - அழகிய பூமாலையை அணியுங்காலத்தும். அன்னார் - தலைவர். கிளை மாலையில் - சுற்றத்தார் வரிசைக்கு நடுவே. நம் காலை அங்கை பற்று காலையும் - நம்முடைய காலை அம்மியில் வைத்தற்காக அழகிய கையினாற்பிடிக்கும் பொழுதும். அன்னார் பற்றுகாலையும் அன்னை களித்திடும்.

இதில் முதலடியொழிந்த ஏனைய மூன்றடிகளிலும் மடக்கு வந்துள்ளது.

பாங்கி தமர் வரைவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

(தலைவன் வரைதலைத் தமர் ஏற்றுக்கொண்டமையைப்
பாங்கி தலைவிக்கு உணர்த்துதல்.)

292. வேழத் துரிபுனை கோடீச்சு ரேசர் விரும்புமெழிற்
சோழநன் னாட்டன்பர் முன்னோர்நல் வேலையிற் றுன்னியுயர்
ஈழமு நீடு கலிங்கமு மன்றற் கியந்துவைப்ப
யாழன சொல்விதந் தார்நம ரேற்றன ரின்புறவே.

(கு - உரை.) முன் ஓர் நல் வேலையில் துன்னி - முன்பு ஒரு நல்ல வேளையில் வந்து. ஈழமும் - பொன்னையும். கலிங்கமும் - ஆடைகளையும்.

மன்றற்கு - மணத்திற்காக. இயம் துவைப்ப - வாத்தியங்கள் முழக்க. அன்பர் துன்னித் தந்தார். நமர் இன்புற ஏற்றனர்.

இதில் ஈழம் கலிங்கமென்னும் நாட்டின் பெயர்கள் தொனிக்கின்றன. அவற்றிற்கியையச் சோழநன்னாட்டன்ப ரென்றார்.

தலைவி உவகை ஆற்றாது உளத்தோடு கிளத்தல்.

(உவகை ஆற்றாது - உவகையை அடக்க இயலாமல்.)

293. அனமே வுறுவயற் கோடீச் சுரநம்ப ரம்பொன்வெற்பில்
மனமே வருந்த லிறைவர்வந் தார்நன் மணஞ்செயவித்
தினமே யடைக்கு மலர்தூற் றிடுமூர்ச் சிறுமியர்வாய்
சினமே வியமதன் றேரோ டலைவன் றெருவெங்குமே.

(து - உரை.) அன்னம் மேவுறு வயல். வருந்தல் - வருந்தாதே. மணஞ்செய இறைவர் வந்தார். இத்தினமே - இன்றே. அலர் தூற்றிடும்- பழிச்சொல்லைப் பலரறியக் கூறுகின்ற. சிறுமியர் வாய் அடைக்கும். தேரோடு அலைவன்; தேரென்றது தென்றலை; தென்றற்காற்று, சலித்துக் கொண்டிருப்பதாதலின் இங்ஙனங் கூறினார்.

'தேரோடு நின்று தெருவோ டலைகிறான்' என்னும் உலக வழக்கை ஈற்றடி உட்கொண்டுள்ளது.

பாங்கி தலைவனை வாழ்த்தல்.

294. இன்னா ளுடைய மதுபார்த் தயருநம் மின்னலுமேல்
மன்னாது வந்திங் கொருமாத் திரைதனின் மாற்றிறையிம்
மின்னாள்கைப் பற்றியவ் வள்ளியுஞ் சேயுமுன் மேவலெனப்
பன்னாளும் வாழ்கதென் கோடீச்சு ரேசர் பனிவரைக்கே.

(து - உரை.) இன்னாள் - இந்தத் தலைவியினது. நம் இன்னலும் - நம்முடைய துன்பத்தையும். மாத்திரை - கணப்பொழுது. மாற்று இறை - நீக்கிய தலைவர். சேய்-முருகக்கடவுள். துயரும் இன்னலுமாகிய நோயை ஒரு மாத்திரையால் மாற்றிறையெனவும் ஒருபொருள் தோன்றிற்று.

மணம்பொருட்டாக அணங்கைப் பராநிலைகாட்டல்.

(கலியாணத்தின் பொருட்டுத் துர்க்காதேவியைத் தலைவி வழிபடும் நிலையைத் தலைவனுக்குத் தோழி காட்டுதல்; கண்ணனைத் தனக்குத் தலைவனாகச் செய்தருளென்று உருக்குமணி துர்க்கா தேவியை வழிபட்டாளென்று பாகவதத்திற் கூறப்படுதல் ஈண்டு அறியற்பாலது.)

295. முன்பார் சிவன்றிருக் கோடீச் சுரவெற்ப முத்தநகைப்
பொன்பா விழையுன் மணம்பொருட் டாகப் புகழணங்கை
அன்பான் மலர்தூஉய்ப் பலியோச்சிப் போற்றி யருகினின்று
தென்பா லெழுங்கோ கிலமொழி கேட்குந் திறத்தினையே.

(து - உரை.) முத்தநகை-முத்துப்போன்ற பற்களையுடைய. பொன் பாவு இழை - பொன்பரவிய ஆபரணம். நகையையும் இழையையும் உடைய தலைவி. அணங்கை - துர்க்காதேவியை. பலி ஓச்சி - நிவேதனம் கொடுத்து. கோகிலமொழி - பல்லியின் சொல்லை.

திறத்தினை முன்பார் என்க. இது பூட்டுவிற் பொருள்கோள். இது முடியாததுபோல் முடிந்துநிற்றலால் அகப்பாட்டுவண்ணம்.

அது கண்டோன் மகிழ்தல்.

(அதனைக்கண்ட தலைவன் மகிழ்ச்சியடைதல்.)

296. வின்னு ணரவினர் கோடீச் சுரநம்பர் வெற்பிடத்தில்
இன்னுண் மணம்பெற நாம்வேண்ட வேண்டு மிலங்குமிந்நாள்
மன்னுவல் கொண்டெதிர் நின்றலர் தூஉய்நம் மணம்பொருட்டிப்
பொன்னு ரணங்கைப் பராவனம் மேலவர் புண்ணியமே.

(து - உரை.) இன்னுள் - இத்தலைவியினது. நாம் வேண்ட வேண்டும் - நாமன்றோ வேண்டிக்கொள்ள வேண்டும்; தலைவி பெறுதற்கரியளென் பதை நினைந்து இவ்வாறு கூறுகின்றான். இலங்கும் இ நாள் - விளங்கு கின்ற இன்றைத்தினம். பராவல் - வழிபடுதல்.

இரண்டாமடியில் இன்னுளென்பது மடக்கிவந்தது.

---

## அறத்தொடு நிற்றல்.

[அறத்தொடுநிற்றல் - உண்மை கூறுதல்; உண்மை கூறுதலே அறமாதலின் இஃது இப்பெயர் பெற்றது. 'அறமென்பது தக்கது; தக்கதனைச்சொல்லிநிற்றல்...... ..அல்ல தூஉம் பெண்டிர்க்கு அறமென்பது கற்பு; கற் பின்றலை நிற்றலென்பதுமாம்' என்பர் இறையனாரகப் பொருளுரையாசிரியர்.]

கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.

(தலைவியைஆற்றிச் செயலற்ற தோழி அவள்கண்ணீரைத் துடைத்தல்; கை - செயல்.)

297. அருங்கயி லாயத்தர் கோடீச் சுரமன்ன வாயிழைநின்
இருங்கத லிப்புற நின்றிடு காந்த ளெழின்மலரின்

மருங்குறு செய்ய கமலத் தலர்ந்த மலர்க்குவளை
கருங்குளிர் முத்தந் தருந்திற னென்னது கட்டுரையே.

(து-உரை.) பெரிய வாழைத்தண்டைப் போன்ற துடையின் அருகில் இருக்கும் காந்தள் மலரைப்போன்ற கைகளில் உள்ள செந்தாமரையைப் போன்ற முகத்தில் மலர்ந்த குவளைமலரைப்போன்ற கண்கள் கரிய முத்துக்களைப்போன்ற நீர்த்துளிகளைத்தரும் இயல்பிற்குக்காரணம் யாது?

இது, தலைவி தன் முகத்தைக் கையாற்றாங்கி அழுவதைக்கண்ட தோழி கூறுவது. இயல்பாகக் கைகள் துடையினருகே தொங்கவிடப் படுவனவாதலின், ‘இருங்கதலிப்புறம் நின்றிடு காந்தள்’ என்றாள்.

“கொங்கு விம்மு கோதை யோடு கோதை தாழ வாண்முகம், பங்க யத்தை மற்றொர் பங்க யத்து வைத்த பான்மைபோல், அங்கை சேர்த்தி மைக்க ணீல வாலி சிந்த வைகிய, மங்கை மென்மு லைத்த டத்து மாரன் வாளி யேவினன்” (நைடதம், கைக்கிளைப். 1), “உன தம்புயத்தின், நீலஞ் சிறுமுத் துதிரப்பதென் னோசொன் னெடுந்தகையே” (வெங் கைக். 291), “நீலத்தின் முத்தம் பிறப்பதற் கேதுவென் னீயுரையே” (சீகாழிக். 345) என்பவை இதனோடொப்பிடற்பாலன.

தலைவி கலுழ்தற்காரணம் கூறல்.

(தான் கலங்கியழுதற்குக்காரணத்தைத்
தலைவி பாங்கிக்குக் கூறுதல்.)

298. தார்வார் தருசடைக் கோடீச் சுரநம்பர் தாரவெற்பைச்
சேர்வாரத் தென்றனைச் சேர்வார மன்னர் சிறிதுநன்மை
ஆர்வார் தரமுன் றனக்கிழைத் தாரென்றன் னுரைக்கண்டு
நீர்வாரு மென்றிட நீர்தனை யேவு நெடுவிழியே.

(து - உரை.) தாரவெற்பைச் சேர் வாரத்து - வெள்ளி மலையைச் சேர்ந்த அடிவாரத்தில்; தாரம் - வெள்ளி. என்றனைச்சேர் வாரமன்னர் - என்னைச் சேர்கின்ற அன்புடைய தலைவர். நன்மை - நல்ல மையை, உதவியை. ஆர்வு ஆர்தர - நிறைய; ஆர்வு ஆர்வமென்பதன் விகாரமுமாம். இழைத்தார் - தீட்டினார், செய்தார். நீர் வாருமென்றிட - நீர் வருவீராக வென்று குறிப்பிடற்கு.

முன்னொருநாள் கண்ணிற்கு மைதீட்டிய தலைவர் வாராமைகண்டு அவர் வரவெதிர்நோக்கிக் கண்ணீர் வார்கின்றன என்பது செம்பொருள். முன்போருபகாரம் செய்தவருக்கு நல்வரவுகூற நீரை யேவுகின்றது என்பது மற்றொரு பொருள்.

இதில் நான்கடியிலும் மடக்கு அமைந்துள்ளது.

### தெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமை கூறல்.

(தலைவன் தெளியச்செய்யத் தான் அதனை மெய்யென்று துணிந்தமையைத் தலைவி பாங்கிக்குக் கூறுதல்.)

299. வெஞ்சமர்ச் சூற்படைக் கோடீச் சுரவள்ளல் வெற்பரினி
அஞ்ச லுனைப்பிரி யேனெனத் தேவின்முன் ஞங்குரைத்தல்
வஞ்சக மென்ப தறியே னிதுவரை மற்றதனை
அஞ்சனம் பார்த்தகண் ணெஞ்சிற்கு மோதி யழுகின்றதே.

(கு - உரை.) சூற்படை - சூலமாகிய படை. தேவின்முன் - தெய்வத்தின்முன்பு. உரைத்தல் - சூளுரைத்தது. இதுவரை அறியேன். அதனை - அவ்வுரையின் தன்மையை. அஞ்சனம் பார்த்த கண் - மையிட்டுப்பார்த்த கண்; புலப்படாத பொருள்களை அஞ்சனமிட்டுப் பார்த்தல் மரபு.

### தலைவி தலைவன் இகந்தமை இயம்பல்.

(இகந்தமை - பிரிந்தமையை.)

300. வேதாந்த மேவிய கோடீச் சுரநித்தர் வெற்பரெனக்
காதார மானவ ராதார மென்ப தகங்குறியார்
தாதார் பொழிலிடைத் தாம்புணர் ஞான்றங்குத் தாழ்ந்திருந்த
போதா கரிசொல்லப் போதா வெனநகர்ப் போயினரே.

(கு - உரை.) ஆதாரம் - பற்றுக்கோடு. ஆதாரமென்பது; ஆ: இரக்கக்குறிப்பு; தாரமென்பது - மனைவியென்பதை. தாழ்ந்திருந்த - தங்கியிருந்த. போதா - ஒருவகை நாரை. கரிசொல்லப்போதா - சாட்சி சொல்லவாரா; "போதா வவைக்கறிவு போதா வெனிற்பரிவர் போதா மலர்த்துளவு போதாவே" அழகர்கலம். 75.
இதில் 2, 4-ஆம் அடிகளில் மடக்கு அமைந்துள்ளது.

### அதுகேட்ட பாங்கி இயற்பழித்தல்.

(தலைவன் குணங்களைப் பாங்கி பழித்தல்.)

301. நல்லார் தொழுந்திருக் கோடீச் சுரத்துறை நம்பர்வெற்பில்
வல்லார் முலையந்த வல்லாளர்க் குன்றன் மனமருவு
வில்லா ரழன்முன் மெழுகொத் துருகி மெலிதனுறும்
கல்லார் மனமெனக் கல்லா யிருக்குமக் காவலர்க்கே.

(கு - உரை.) வல்லார்முலை: விளி. அந்த வல்லாளருக்கு - அந்த நெஞ்ச வன்மையையுடைய தலைவர்பொருட்டு; இரக்கமற்றவரை

வல்லாளரென்பது வழக்கு. வில் - ஒளி. மனம் மெலிதல் உறும். கல்லார் - கல்வி பயிலாதார். கல்லாயிருக்கும் - கற்போன்ற வன்மையையுடையதாயிருக்கும். அக்காவலர்க்கு மனம் கல்லாயிருக்குமென்க.

இரண்டு நான்காவது அடிகளில் மடக்கு வந்துள்ளது.

### தலைவி இயற்பட மொழிதல்.

(தலைவன் நற்குணமுடையவனென்பது
தோன்றத் தலைவி கூறுதல்.)

302. வள்ளம் புலிபுனை கோடீச்சு ரேசர் வரைத்தண்பொன்னி
வெள்ளஞ் சிலதினந் தாழினு மாங்குடன் மேவிப்பைங்கூழ்
உள்ளங் குளிர்ந்திடப் பாய்வது போலன்ப ரொண்டொடிநான்
கொள்ளஞர் நீக்கிப் புரப்பான் கருதிக் குறுகுவரே.

(கு - உரை.) வள் அம்புலி-வண்மையையுடைய பிறையை; தேவர்க்கு அமுதங்கொடுத்தலினாலும் திருமுடிமேலிருத்தலினாலும் வள்ளம்புலியென்றார்; வள் - கூர்மையுமாம். தாழினும் - தாமதித்தாலும். உடன் - உடனே. பைங்கூழ் - பசிய பயிர்களினது; "கால மோர்ந் துதவுங் காவிரி நதியும்" (சா. தற.) என்பர். ஒண்டொடி: விளி. அஞர் - துன்பத்தை. குறுகுவர் - அடைவர். பொன்னி பாய்வதுபோல அன்பர் குறுகுவர்.

"அடும்பமர் நெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப, வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன், கொடிய னாயினு மாக, அவனே தோழி யென் னுயிர்கா வலனே" (தொல். களவு. சூ. 20, ந. மேற்.) என்பது இங்குக் கருதத்தக்கது. துறைசைக்கோவை, 312-ஆம் செய்யுளைப்பார்க்க.

### தெய்வம் பொறைகொளச் செல்குவமென்றல்.

(தலைவன் குறித்துச் சத்தியஞ்செய்து தவறியதைப் பொறுக்கும்படி
தெய்வத்தைப் பிரார்த்தித்தற்குச் செல்வோ
மென்று தலைவி பாங்கிக்குக் கூறல்.)

303. சொரிவள் ளருளரன் கோடீச் சுரவெற்பர் சூளுரைத்துப்
பிரிவெண் ணினரென் றவர்பால் வெகுளேல் பிரிந்திடினும்
பரிவதெம் பாலுள ரென்னே ரகத்துப் பரம்பொருளே
விரிவடி வேலவென் றேத்துவம் வாசென்று மெல்லியலே.

(கு - உரை.) வள் அருள் - வண்மையாகிய அருளை. பிரிவு எண்ணினர் - பிரிதலை நினைந்தார். பரிவது - இரங்குதலை. அவர் பிரிந்திடினும் எம்பாற் பரிவது உளர். ஏரகம் - சுவாமிமலையின் பெயராகவும் வழங்கும்.

முருகக்கடவுளைக் குறித்துச் சூளுறுதல் இயல்பு; "பிறங்குமலை, மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழு, தேமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி" குறிஞ்சிப். 208 - 10.

தலைவி இல்வயிற்செறித்தமை இயம்பல்.

(புறத்தே போகாதபடி வீட்டின்கண் தன்னைத் தாய் அடக்கி வைத்தமையைத் தலைவி பாங்கிக்குக் கூறுதல்.)

304. விடவா ளரவணி கோடைச் சுரவள்ளல் வெற்பிலிவ்வூர்
மடவார்க ளேற்று மலரையு மென்றுயர் மாலையும்பார்த்
தடல்வாள் விழிசிவந் திம்மனை நீங்கலென் றம்மனைவன்
றடவார் முலைத்தைய லாய்முன் புறவெனைச் சாற்றினளே.

(கு - உரை.) வாள் - ஒளி. அலர் - பழிமொழி; மலரென்பது மற்றொருபொருள். துயர்மாலை - துன்பத்தின் இயல்பு; மாலை - வரிசையுமாம். அம்மனை - தாய்; "அம்மனை யாயவர் தம்மனை யானவள்" (மீனாட்சி. பிள்ளைத். அம்மானைப். 9.) முன்புஉற - தன் முன்னே இருக்குமாறு.

இதில் மலர், மாலையென்பன தொனி. இம்மனை அம்மனையென்பன முரண்.

செவிலி கனையிருள் அவன்வரக் கண்டமை கூறல்.

(கனையிருள் - மிக்க இருளில். செவிலிகண்டமையைத் தலைவிக்குப் பாங்கி கூறல்.)

305. மாலொரு பாகர்தென் கோடைச் சுரந்தனை வாழ்த்திறைவர்
வேலொடு நென்ன விரவிற் குறியுற்று மீண்டுசெலுங்
காலொரு கள்வனிங் கேகனுற் றானென்று கைந்நெரித்தாள்
பாலொடு தேனன்ன சொல்லா யனைநான் பயந்தனனே.

(கு - உரை.) இறைவர் - தலைவர். வேலொடு - வேற்படையைக் கொண்டு; "வேலொடு நின்றான்" (குறள். 552), "வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்" (சீவக. 320) என்புழிப்போல ஒடு கொண்டென்னும் பொருளில் வந்தது. குறி - குறியிடம். அனை - செவிலித்தாய்; அனை கைந்நெரித்தாள்.

எறிவளை வேற்றுமைக்கு ஏது வினுதல்.

(எறிவளை - அறுக்கப்பட்ட வளையலையுடைய தலைவியின்; அன்மொழித் தொகை; "எறிவளைக ளார்ப்ப" (சிலப். 7 : 12.) ஏது - காரணத்தை.)

306. நெய்திகழ் சூலத்தர் கோடைச் சுரம்வாழ் நிருத்தர்வெற்பில்
பொய்திகழ் நேரிடை யாய்புன நீத்திங்குப் போந்தபின்மின்

மெய்குழை யுற்றதெ னைம்பால் சரிகொண்டு மென்கைவெறி
தெய்திடக் கங்கணங் கண்கொண்ட தென்னீ தெனக்குரையே.

(து - உரை.) நேர் - நுண்மை. மின் - தலைவியின். குழையுற்றது என் - வாடியது என்னகாரணத்தால். ஐம்பால் சரிகொண்டு - கூந்தல் சரிதலைக்கொண்டு. கை வெறிது எய்திட - கைகள் ஒன்றுமில்லாமையை யடைய; வளைகளை நீங்க. கம் கணம் - நீர்த்தொகுதியை.

உடம்பு குழையையும், கூந்தல் சரியையும், கண்கள் கங்கணத்தையும் கொண்டதற்குக் காரணம் யாதென்பது வேறுபொருள். குழை - காதணி. சரி - கைவளை. கங்கணம் - கைக்காப்பு.

காதிற்குரிய குழை மெய்யிலும், முழங்கைக்கு மேலே யிருத்தற்குரிய சரி கூந்தலிலும் முன்கைக்குரிய கங்கணம் கண்களிலும் உற்றன வெனப் பொருந்தாப்பொருளைக் காட்டிய இது தொடர்பின்மையணி.

## பாங்கி வெறிவிலக்கல்.

(பாங்கி வெறியாடுதலை விலக்குதல்.)

307. தோட்டுக் குளிர்பொழிற் கோடீச் சுரத்துறை சோதிவரை
வேட்டுக் குறவர்கள் பல்லோர்மு னென்னை வெகுளலன்னே
காட்டுக்குள் வாழிவ் வணங்கையுங் கேளொரு காலத்துமிவ்
வாட்டுக்கும் பாட்டுக்கும் போகாது மங்கை யருந்துயரே.

(து - உரை.) தோடு - பூவிதழ். வேட்டு - விரும்பி; வேட்டுவச்சாதியுமாம். அன்னே - தாயே; அன்னே என்னை வெகுளல். இவ்வணங்கென்றது அங்கே பரவப்படுந் தெய்வத்தை. இ ஆட்டுக்கும்-இந்த ஆட்டினாலும், இந்தக் கூத்தினாலும்; ஆடு பலியிடுதற்காக அங்கேகொணர்ந்து நிறுத்தப் பட்டது. பாட்டு - வேலன் பாடும் இசைப்பாட்டு. ஆடல் பாடலென்பது ஒருவழக்கு. அருந்துயர் போகாது.

## வெறிவிலக்கியவழிச் செவிலி வினாதல்.

(பாங்கியை வினவுதல்.)

308. காதார் குழையரன் கோடீச் சுரவள்ளல் காதலனை
வேதாவை வெஞ்சிறை வைத்தோனை நாங்கண் மிகப்பணிந்து
போதார் குழலி துயர்தீர்க்கும் போதிங்குப் போந்தணங்கே
நீதான் றடுத்ததென் னீதாமென் றோது நெறியிதற்கே.

(து - உரை.) காதலனை - திருமகனாகிய முருகக்கடவுளை. குழலி - தலைவியது. தடுத்தது என். ஈது ஆம் என்று - இதுதான் காரணமென்று.

நாங்கள் முருகனைக் குறித்து வெறியெடுக்கும்போது நீ தடுத்தற்குக் காரணம் யாது?

இதில் ஈற்றடி மடக்கு.

பூத்தரு புணர்ச்சியால் அறத்தோடு நிற்றல்.

(தன்னுடைய இளம்பருவத்தில் தாமரைப்பூவைத் தன்
கையிற் படும்படி தலைவன் தந்தமையால் அது
தொடங்கித் தலைவனை நினைந்து தலைவி
வருந்தாநின்றாள் என்பதன் வழியா
கப் பாங்கி செவிலிக்கு
உண்மை கூறுதல்.)

309. நின்னடி நோக்கிப் பயமுற்று நீடுகண் ணீருடனே
பன்னுமிப் போதங் கிருந்த திதனைக்கண் பார்த்திடெனக்
கன்னலஞ் சொல்லிகைத் தந்தா னொருவன்முன் கார்ப்புனத்தொன்
றின்ன தறிகுவன் கோடீச்சு ரேச ரிமயத்திலே.

(கு - உரை.) அடி - பாதத்தை. பயமுற்று - (அப்பாதங்களின் அழகைக்கண்டு) அச்சமுற்று, நீரிலிருந்து. கண்ணீருடனே - தேனொகிய நீருடன், கண்ணிலிருந்து வரும் ஜலத்துடனே. இப்போது - இந்தமலர், இப்பொழுது. கன்னலம் சொல்லி - தலைவியினது; கன்னல் - கரும்பு. முன் கார்ப்புனத்தில் தந்தான். ஒன்று இன்னது - இந்த ஒரு செய்தியை. ஓராடவன் இவள்கையில் ஒரு தாமரைமலரை யளித்தான்.

புனறரு புணர்ச்சியால் அறத்தோடு நிற்றல்.

(காவிரிச்சுழியில் இவள் அகப்பட்டு வருந்தாநிற்க
அதைக்கண்ட ஒருதிண்ணியன் அச்சுழியினின்
றும் இவளை எடுத்துக் கரையிற் சேர்த்த
மையால் இவள் அவனுக்கே உரிய
ளாயினள் என்றதன் வாயிலாக
உண்மை கூறல்.)

310. மன்றினு ளாடல்செய் கோடீச் சுரநம்பர் மால்வரைப்பால்
அன்றொரு நாளணங் கன்னொ ரொடும்விளை யாடிடுங்கால்
மன்றற் குழலம் முனிபோலப் பொன்னி வலஞ்சுழிவாய்ச்
சென்றிடல் பார்த்துற் றெடுத்தளித் தானொரு திண்ணியனே.

(கு - உரை.) மன்றல் குழல் - மணம்பொருந்திய கூந்தலையுடைய தலைவி; எழுவாய். முனி - ஏரண்ட முனிவர். பொன்னி வலஞ்சுழி வாய் - காவிரியில் வலமாகச் சுழிக்கின்ற சுழியில், காவிரிக் கரையில்.

உள்ள திருவலஞ்சுழி யென்னும் தலத்தில். தலைவி சுழிவாய்ச் சென்று அழுந்துதலைப்பார்த்து ஒரு திண்ணியன் வந்தெடுத்தான்.

இதிலே கூறப்பட்ட வரலாறு: திருவலஞ்சுழியென்னும் தலத்திற் காவிரியாறு பாதலத்திழிந்துசென்று பின் நெடுஞ்சேய்மையிற்புறப்பட்ட காலத்து ஒரு சோழவரசன் அதனை முன்னை நிலையில் வரப்பண்ண முயன்று கவன்று, ஓரரசனையேனும் முனிவனையேனும் அச்சுழியினிழியச் செய்யின் அது நிற்குமெனவறிந்து அதற்குரியார் யாரெனத் தேர்கையில் ஏரண்ட முனிவர் இச்செய்தியை யறிந்து தாமே வலிந்துவந்து இழிந்து காவிரி பண்டை நிலையிற் படர வாக்கினரென்ப; "இதமகித வார்த்தை யெவர்க்கேனு மேலாம், இதமெனவே கூறலித மன்றே - இதமுரைத்த, வாக்கினலேரண்ட மாமுனியும் சோழனொடு, தேக்குநீர் வீழ்ந்தொழிந் தான் சேர்ந்து" (நீதிவெண்பா, 67.) இவ்வரலாறு பிருகதீசுவரமான்மிய மென்னும் வடமொழி நூலிற் காணப்படுகிறது.

### களிறுதரு புணர்ச்சியால் அறத்தோடு நிற்றல்.

(தன்பால்வந்த யானையைக்கண்டு அஞ்சித் தலைவி ஓடியபோது ஒருவன் அக்களிற்றை வேலா லெறிந்தானென்பதன் வாயிலாக உண்மை கூறல்.)

311. அங்கைக் கனலரன் கோடீச் சுரவெற்பி லஞ்சிமுன்செல்
வெங்கைக் களிறொன்று மெல்லிய லாடனி மேவல்கண்டு
கொங்கைக் களிற்றொடு போர்க்குறல் பார்த்ததிற் கூடொருவன்
செங்கைக் கதிர்வே லெறிந்தவட் காத்தனன் சேயெனவே.

(கு - உரை.) வெ கை - கொடிய துதிக்கையை உடைய. தனி மேவல் - தனியே யிருத்தலை. கொங்கைக் களிற்றொடு - கொங்கைகளாகிய யானைகளோடு. போர்க்கு - போர்செய்வதற்கு. பார்த்ததின் - பார்த்ததனால். கூடு ஒருவன்-அப்பொழுது அங்கே வந்த ஒப்பற்ற ஓராடவன்; பார்த்து அதில் கூடு ஒருவனென்பது: குறிப்புப்பொருள். சேய் என - முருகக்கடவுளைப் போன்று.

### தலைவி வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியை வினாதல்.

(நற்றாய் - தலைவியைப்பெற்ற தாய்.)

312. பொன்னகங் கோட்டரன் கோடீச் சுரமன்ன பூங்கொடிமெய்
நென்னலுக் கின்று மெலிந்த தவிர்ந்தது நீள்பசலை
துன்னருங் கைவளை காணேன் விழிப்புனல் சோர்வுகண்டேன்
இன்னளிவ் வின்னலிங் கெய்வதற் கேதெது வின்னகையே.

(கு - உரை.) பொன்னகம் கோட்டு - மேருமலையை வளைத்த. னென்னலுக்கு - நேற்றையிலும். மெய்மெலிந்தது. பசலைஅவிர்ந்தது - பசலைநிறம் படர்ந்தது. சோர்வு - சோர்ந்து விழுதலை. இன்னள் - இத் தலைவி. எய்வதற்கு - பொருந்துவதற்கு. ஏது ஏது - காரணம் யாது.

இன்னள் இன்னல் என்பது மடக்கு. ஏது ஏது என்றது இதிலுள்ள நயம்.

ஈற்றடி முற்றுமோனை.

## செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல்.

313\. சினங்காலு மேற்றரன் கோடீச் சுரமன்ன சேயிழையாய்
புனங்காவல் செய்திடும் போதொரு நாளங்குப் போந்தெனது
மனங்காண்கி லேனதைக் காட்டுதி யென்றொரு மானவனின்
அனங்கா முறுநடை யாண்மனங் கைக்கொண் டகன்றனனே.

(கு - உரை.) ஏற்று அரன் - இடபத்தையுடைய அரன். ஒரு மானவன் - ஒரு மனிதன்; ஒரு பெருமையையுடையவனெனலுமாம்.

என்மனம் காணேன் என்று வந்தவன் இவள் மனத்தைக்கொண்டு சென்றான்; இதனால் தலைவி தலைவனது நினைவாகவேயிருக்கிறாளென் பதைக் குறிப்பித்தனள்.

## நற்றாய் தமருக்கு அறத்தொடு நிற்றல்.

(தமருக்கு - உறவினருக்கு.)

314\. மருத்தண் கடுக்கையர் கோடீச் சுரவெற்பில் வாழ்குவிர்நம்
முருத்தன மூரன் முதுக்குறைந் தாளினி முன்னுமவள்
கருத்துக் கிசைந்த கருத்தற்கு நல்குமின் கந்தனுக்குத்
திருத்தகு வள்ளியை முன்னீந் துவந்த திறமெனவே.

(கு - உரை.) மரு - மணம். வாழ்குவிர் - வாழ்பவர்களே. முருந்து அன்ன மூரல் - மயிலிறகின் அடிக்குருத்தைப்போன்ற பற்களையுடைய தலைவி; முருத்து : விகாரம். முதுக்குறைந்தாள் - பேரறிவுற்றனள்; பருவமடைந்தாளென்றபடி. கருத்தற்கு - தலைவனுக்கு. நல்குமின் - மணஞ்செய்து கொடுப்பீர்களாக. முன் ஈந்து உவந்த திறம் எனவே நல்குமின்.

இதில் இரண்டாமடியில், 'கருத்துக்கிசைந்த கருத்தற்கு' என்பது மடக்கு.

## உடன் போக்கு.

[தமரைப்பிரிந்து தலைவி தலைவனுடன் செல்லுதல்.]

### பாங்கி தலைவற்கு உடன்போக் குணர்த்தல்.

(எம்மவர் இவளை நீ வரைதற்குடன்படார்; ஆத
லால் இவளை உடன்கொண்டு செல்க
வெனப் பாங்கி தலைவனுக்கு
அறிவித்தல்.)

315. வின்மதி சூடரன் கோடீச் சுரவெற்பின் மேவரசே
வன்மத யானை பலதந்தி யாயினும் வண்குறவர்
மென்மட மானை யெளிதினல் காரிருள் வேலைமெள்ள
நின்மதில் சூழூர்க் குடன்கொண்டு செல்கென் னினைவிதுவே.

(கு - உரை.) வில்மதி - வில்லைப்போன்ற பிறையை; வில் - ஒளியு
மாம். வன்மதயானை - வலிய மதம்பொருந்திய யானைகள். பலதந்தியாயி
னும் - பலவற்றைக் கொடுத்தாயானுலும். இருள்வேலை - இராப்பொழு
தில். செல்க என் நினைவு இது. செல்கென்: விகாரம்.

நீ யானைகள் பலவற்றைக் கொடுத்தாயாயினும் இந்த மானைக் குறவர்
நல்கார்.

யானை தந்தி யானுலும் என்பது ஒரு நயம்; தந்தி - யானை.

### தலைவன் உடன்போக்கு மறுத்தல்.

(தலைவியின் மென்மைத்தன்மை கூறி அவளை
உடன்கொண்டு செல்லுதலைத் தலைவன்
மறுத்துக் கூறுதல்.)

316. ஏயுஞ் சுடர்க்கண்ணர் கோடீச் சுரமின் னிடைகடத்திற்
பேயுஞ் சுழல்கட் புலியு முலாமதன் பேருரைத்தால்
வாயுஞ் சுடுமெண் மனமுஞ் சுடுமிக மற்றதனில்
ஆயுஞ் சுடர்த்தொடி யன்னமுன் னெவ்வா றடிவைப்பதே.

(கு - உரை.) சுடர்க்கண்ணர் - சுடர்களாகிய கண்களையுடையவர்.
மின் இடை - மின்னலைப்போன்ற இடையை உடைய தலைவி. கடத்தில் -
பாலை வனத்தில். உலாம்=உலாவும் - திரியும். அதன்பேர் - அந்தப்
பாலையின் பெயரை. எண் மனமும் சுடும் - நினைக்கின்ற நெஞ்சமும்
கொதிக்கும்; "கருதின்வே முள்ளமும்" (கம்ப. தாடகைவதைப். 5.)
மற்று அதனில். அன்னம் - தலைவி.

மருதநிலத்திற்குரியதாதலின், அன்னம் பாலையில் அடிவைப்பது
எவ்வாறென்பது ஒரு நயம்.

## பாங்கி போக்கு உடன்படுத்தல்.

(அங்ஙனம் போதற்குப் பாங்கி தலைவனை உடன்
படச்செய்தல் ; போக்கு - போதல்.)

317. மாலையன் போற்றிடு கோடீச் சுரநித்தர் மால்வரைக்கண்
ஆலை யநங்கனைப் பாயுன் னுடனடந் தாலனைய
பாலையிற் கள்ளியங் காடும்வெங் காலும் படர்தழலும்
சோலையுந் தென்றலும் வாவியும் போலுந் துடியிடைக்கே.

(கு - உரை.) மாலையன் - மாலும் அயனும் ; ஐயன் : போலி. ஆலை அநங்கன் - கரும்பு வில்லையுடைய மன்மதனை. அனைய - நீ கூறிய அத் தன்மையை யுடைய. வெங்காலும் - வெம்மையையுடைய காற்றும். தழலும் - தீயும்.

காடு சோலையையும் காற்று தென்றலையும் தழல் வாவியையும் போலுமென நிரல் நிறையாகக் கொள்க.

## தலைமகன் போக்கு உடன்படுதல்.

318. கருந்திருக் கண்டர்தென் கோடீச் சுரமன்ன கன்னிதனிப்
பருந்து பறக்கு நிழலூடு செல்லும் பருந்தழற்கான்
வருந்திற மில்லள் வருந்திடு மென்றென் மனந்தடுத்தும்
பொருந்தின னின்சொற் றடுக்காது நான்கொடு போவதற்கே.

(கு - உரை.) தனிப்பறக்கும் பருந்து நிழலூடு செல்லும் - வழிப் போவார் வெயில் வெம்மையைப் போக்கிக்கொள்ளப் பிறிதொரு நிழலை யும் காணாது அங்கே பறக்கும் ஒற்றைப்பருந்தின் நிழலிற் போதற்கிட மான. பரு தழற்கான் - மிக்க வெம்மையையுடைய பாலையில். பொருந் தினன் - உடன்பட்டேன். நின்சொல்லை மறுமற் போவதற்கு உடன்பட் டேன்.

இதில் இடை இரண்டடிகளில் மடக்கு வந்துள்ளது.

## பாங்கி தலைவிக்கு உடன்போக்குணர்த்தல்.

319. உன்னிட மேவரன் கோடீச் சுரவெற்ப ருங்கள்கன்னி
பன்னிடு வேளைப் பணிவதல் லாலந்தப் பாலையுறு
கன்னியைக் கண்டு பணிந்தில ளேயெனக் கட்டுரைத்தார்
முன்னிய தோர்ந்திலன் பின்னிய நாண்மலர் மொய்குழலே.

(கு - உரை.) உன் இடம் மேவு அரன் - நினைப்பவர்தம்மிடத்திற் சென்று அருள் செய்யும் சிவபிரான் ; "நினைப்ப வர்மனங் கோயிலாக்

கொண்டவன்" (தே.) வேளை - முருகக்கடவுளை. பாலையுறு கன்னியை - பாலை நிலத்துக்குத் தெய்வமாகப் பொருந்திய துர்க்கையை. உங்கள் கன்னி பாலையுறுகன்னியைப் பணிந்திலளே. பணிந்திலளே யென்றது பணியவேண்டுமென்னுங் குறிப்பைப் புலப்படுத்தியது. முன்னியது - நினைத்ததை; உடன்போக்கை. பின்னிய குழல்.

ஈற்றடியிற் சொல்முரண் வந்துள்ளது.

## தலைவி நாணழிவிரங்கல்.

(அங்ஙனம் உடன்சென்றால் தன்னுடைய நாணம்
அழிந்துவிடுமே யென்று தலைவி இரங்கல்;
நாணழிவு - நாணழிதலுக்கு.)

320. கனத்தினை நேர்கண்டர் கோடீச் சுரவெற்பின் கண்ணுறுமென்
தனத்துடன் றோன்றியென் கண்மணி போலத் தணத்தலின்றி
மனத்துணை யாகி யிருந்திடு நாண்முன் மதிநுதலாய்
வனத்திடைச் சென்றது நானேகு வேனிறை வன்பினென்றே.

(கு - உரை.) கனத்தினை நேர் - மேகத்தை யொத்த. வெற்பின்கண் - மலையில். தணத்தல் - நீங்குதல். நாண் - நாணம். முன் - எனக்குமுன்பே. இறைவன்பின் ஏகுவேனென்று நாண் சென்றது.

## கற்பின் மேம்பாடு பாங்கி கூறல்.

(நாணினுங் கற்புச் சிறந்ததென்பதைப் பாங்கி தலை
விக்குக் கூறல்; மேம்பாடு - உயர்வு.)

321. தேனாட்டு கொன்றையர் கோடீச் சுரநித்தர் தென்சிலம்பின்
பானாட் டினைவிட்டுப் பானாட்டு மென்மொழிப் பாவைவெம்முட்
கானாட்டுங் கானுன் செலவோர் பெரிதன்று கற்புடையோர்
வானாட் டினுஞ்செல்வ ரித்தேயம் விட்டு மகிழ்நர்பின்னே.

(கு - உரை.) தென்சிலம்பின் பால் நாட்டினை விட்டு - அழகிய மலைப்பக்கத்திலுள்ள நாட்டினை விட்டு. பால் நாட்டும் மென்மொழிப் பாவை - பாலென்று யாவரும் வற்புறுத்திக்கூறும் சொல்லையுடைய தலைவியே. வெ முள் கால் நாட்டும் கான் - வெம்மையையுடைய முட்களைக் காலில் தைக்கச்செய்யும் பாலை நிலத்தில். உன்செலவு - உன்னுடைய செல்லுதல். கற்புடையோர் வானாட்டினுஞ் செல்வரென்றது, கற்புடைய பெண்டிர் தலைவன் இறந்தவழித் துயர் பொறாது தாமும் உயிர் நீத்தலை நினைந்து. இச்செய்தியைக்கூறும் புறப்பொருட்டுறைக்கு மூதானந்த மென்று பெயர்; " ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க், கிருயி ரென்ப

ரிடைதெரியார் - போரில், விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி
னுட்கும், உடனே யுலந்த துயிர்" பு. வெ. 262.

### தலைவி ஒருப்பட்டெழுதல்.

(தலைவனுடன் செல்லுதற்குத் தலைவி
உடன்பட்டெழுதல்.)

322. வன்னெஞ் சிடத்தகல் கோடீச்சு ரேசர் மணிவரைக்கண்
மின்னெஞ் சுறுமிடை யாய்நீ யெழுதுயர் வேலைவிட்டென்
றன்னெஞ்சங் காவலர் தந்நெஞ்சங் கூடியிங் கோதிடுங்கால்
என்னெஞ்சு மாறு சொலுமோ வதுவு மிசைக்கின்றதே.

(கு - உரை.) வன்னெஞ்சிடத்து அகல் - இரக்கமில்லாத மனத்தினையுடையாரைவிட்டு நீங்கும். மின் எஞ்சுறும் இடையாய் - மின்னல் குறைவையடைதற்குக் காரணமாகிய இடையையுடையாய். துயர்வேலை விட்டு எழு என்று - நீ துயரமாகிய கடலை விட்டு நீங்கி யெழுவாயென்று. மாறு சொலுமோ - விரோதத்தைக் கூறுமோ. அதுவும் - என்னுடைய நெஞ்சமும். இசைக்கின்றது - எழுவென்று சொல்லுகின்றது; உடம்படச் செய்கின்றதென்பது மற்றொரு பொருள்.

### சுரத்தியல்புரைத்துழிச் சொல்லல்.

(சுரத்தின் இயல்பைப் பாங்கி உரைத்தவிடத்துத் தான் அதற்கு
அஞ்சாமல் சுரஞ்செல்லத் துணிந்திருத்தலை
அவளுக்குத் தலைவி கூறுதல்.)

323. நீங்கா வலர்மழை தன்னொடு தாய்சின நீள்கடலிற்
பாங்கா முழுகிய வெம்மையைப் பாலைப் படுதழற்கண்
போங்கா லகற்றிநங் கோடீச்சு ரேசர் புகழ்வரைக்கண்
ஆங்கா தரவுற் றிருப்பேன்பின் னீயு மணையணங்கே.

(கு - உரை.) அலர்மழை - பழிச்சொற்களாகிய மழை. தாய்சினநீள் கடலில் - அன்னையினது கோபமாகிய பெரியகடலில். வெம்மையை அகற்றி. ஆங்கு ஆதரவுற்று; ஆதரவு - அன்பு.

மழையிலும் கடலிலும் முழுகி அடைந்த வெம்மையைத்தழலிற் சென்று அகற்றுவேனென்றது ஒருநயம்.

### கையடை கொடுத்தல்.

(தலைமகனிடம் தலைமகளை அடைக்கலமாகக் கொடுத்தல்;
கம்பராமாயணத்தில் ஒருசிற்றுறுப்பின் பெயர்
கையடைப்படலமென்றிருத்தல் இங்கே
அறியற்பாலது.)

324. பம்பா லடியுறை கோடீச் சுரவள்ளல் பைம்பொன்வெற்ப
கொம்பா மருங்குலுக் காவிபு நானுங் கொழுநனுநீ
நம்பா வருமின் னவடனைக் காத்தியிந் நாளினின்னாள்
ஐம்பா லொருபா லுருவான போதினு மன்புவைத்தே.

(கு - உரை.) பம்பு ஆல் அடி - பரவிய கல்லாலமரத்தின் அடியில். கொம்பாம் மருங்குலுக்கு - பூங்கொம்பு போன்ற இடையையுடைய தலைவிக்கு. நம்பா வரும் - நம்பி உன்னைத் தொடர்ந்து வருகின்ற. இன்னவடனை - இவளை. காத்தி - காப்பாயாக. இந்நாளின் - இன்று போல. இன்னாள் ஐம்பால் ஒரு பால் உருவான போதினும் - இவளுடைய (கரிய) கூந்தல் பால்போன்ற வெண்மை நிறத்தை அடைந்தகாலத்தும். அன்பு வைத்துக் காத்தி.

இதில் இந்நாள் இன்னாளென்னுமடக்கும் ஐம்பால் ஒருபாலென்னும் மூரணும் வந்தன.

பாங்கி வைகிருள் விடுத்தல்.

(வைகிருள் - தங்கிய இருளில். பாங்கி நடுயாமத்தில் தலைவியைத் தலைவனுடன் விடுத்தல்.)

325. சொன்னாடு பூவையை யீவோர்கை யிந்தன்னை துன்பகற்றி
முன்னா ரழலி னலர்தூற்றும் வாய்களை மூடியுங்கள்
பின்னா வடியைப் பிடியா வருவேன் பிடிநடைமுன்
கொன்னார் கணிச்சியர் கோடீச் சுரந்தனைக் கூடுகவே.

(கு - உரை.) பூவையை - இவள் வளர்த்த நாகணவாய்ப்புள்ளை. அழலின் அலர்தூற்றும் வாய்களை - நெருப்பைப்போன்ற பழிமொழிகளைக் கூறுவோர் வாய்களை. பின்னா - பின்னாக. அடியைப்பிடியா - உன் அடிச் சுவட்டைப் பற்றி. பிடிநடை : விளி. கொன் - அச்சம், பெருமை. கூடுக - நீவிர் முன்பு சென்று அடைவீர்களாக.

இதில் மூன்றும் அடியிற் பிடியென்பது மடக்கு.

தலைவன் சுரத்து உய்த்தல்.

(தலைவன் தலைவியைப் பாலை நிலத்து மெல்லக்கொண்டேகல்.)

326. வெண்டிரு நீற்றரன் கோடீச் சுரவெற்பில் வெவ்வெயின்முன்
வண்டுகில் சென்னியிற் சேர்நுத லார்வெயர் மாற்றிடுகொன்
மண்டழற் கல்லி னிடருது மெல்லென வாகிழன்மேற்
கண்டுழி வைகுவங் கண்டதைப் போலுங் கனிமொழியே.

(து - உரை.) வன் துகில் - வளவிய ஆடையை. சென்னியில் சேர் - தலையிற் சேர்த்திக்கொள் ; தலையை மூடிக்கொள்வாயாக. வெயர் - வேர்வையை. மாற்றிடு - துடைப்பாயாக. மண்டு அழல் கல்லில் கால் இடருது வா. மேல் - இனிப்போம் வழியில். நிழல் கண்ட உழி வைகுவம் - நிழலைக் கண்ட இடத்தில் தங்குவேம். கண்டதை - கற்கண்டை. கனிமொழியென்பது இடுகுறிப்பெயர் மாத்திரையாய் நின்றது ; கனிந்த மொழியென்பதும் ஒன்று.

சேர், மாற்றிடு, வாவென்க. இதன் ஈற்றடி மடக்கு.

தலைமகன் பொழில்கண்டு வியத்தல்.

(பொழில்கண்டு - சோலையைக்கண்டு ; வியத்தல் - ஆச்சரிய முறுதல். சுரத்திற் பொழில் காணப்படுதல் அருமையின் தலைவன் வியந்தான் ; "நிழலி னீளிடைத் தனிமரம் போல" (புறநா. 119) ; 'அருஞ்சுரத்தின் மரம்போல' சீவக. 4, ந.)

327. இருக்கோ லிடும்புகழ்க் கோடீச் சுரவிறை யின்னருளாற்
பெருக்கோகை மேவக் கழிப்பாலைப் பாங்கர்ப் பெருமணஞ்சார்
திருக்கோலக் காவெதிர் கண்டே மிதில்வைகிச் சென்றிடுமென்
றுருக்கோ கிலமுன் னழைக்கின் றதுநமை யொண்டொடியே.

(து - உரை.) இருக்கு - வேதம். ஓலிடும் - முழங்கும். பெருக்கு ஓகை - மிக்க களிப்பை. கழி பாலைப் பாங்கர் - மிகுதியான பாலைநிலத்தின் அருகில். பெருமணம்சார் - பெரியவாசனைபொருந்திய. திரு கோலம் கா - அழகிய காட்சியை உடைய சோலையை. உரு - அழகு. கோகிலம் - குயில். குயில் கூவுதலை அழைப்பதாகக்கூறுதல் மரபு ; "வீக்குநன் மிளிர்பொற் பூணீர் விரைவுடன் வம்மி னென்று, கூக்குரல் விளிப்ப போலுங் கோகிலக் குரலுங் கேட்டார்" (வி - பா. திரௌபதி. 14) ; "மாங்குயிற் கிளவி தன்னுல் வருகென முகமன் கூறி" நைடதம், அன்னத்தைக் கண்ணுற்ற. 26.

இதில், கழிப்பாலை, பெருமணம், திருக்கோலக்காவென்னும் தலங்களின் பெயர்கள் தொனிக்கின்றன ; பெருமணம் - பெருமண நல்லூர்.

அசைவறிந் திருத்தல்.

(அசைவு - தலைவியின் இளைப்பை.)

328. கொடியிடை யேற்றரன் கோடீச் சுரநேர் கொடியிடைநின்
அடிமலர் சேர்ந்தது மெய்யோ துவண்ட தணிநுதல்வேர்

வடிதரு கின்ற நுதன்மணற் சூடழன் மண்டியதிக்
கடிமலர்க் காவி லுறைவோந் துயரங் கடியளவே.

(கு - உரை.) கொடி - துவசம். எறு - இடபம். கொடியிடை - கொடிபோலும் இடையையுடையாய்; விளி. சேந்தது - சிவந்தது. நுதல் வேர் வடிகின்றது - நெற்றியில் வேர்வை ஒழுகுகின்றது. மணல் சூடு அழல் மண்டியது - மணலின் வெப்பம் மிக்கது. கடிமலர்-நறுமணத்தை யுடைய பூ. கடி அளவு - நீக்கும் வரையில்.

இதன் முதலடியிலும் ஈற்றடியிலும் மடக்கு வந்துள்ளது.

### உவந்தலர்சூட்டி உண்மகிழ்ந் துரைத்தல்.

(அலர்சூட்டி - மலர்களைப்பறித்துச்சூட்டி.)

329. சிவந்தபொன் மெய்யரன் கோடீச் சுரமன்ன சேயிழைநான்
அவந்தரு பாலைத் துயர்தீர்ந் திடநின் னடிபிடித்திட்
டுவந்தலர் சூட்டிய வோதியைப் பார்த்தென்க ணோதிடுமால்
நிவந்திடுங் கோர்பொழில் பூத்தது பாரென்றென் னெஞ்சினுக்கே.

(கு - உரை.) சேயிழை - செம்மையாகிய ஆபரணத்தை யுடையாய். அவம் - துயரத்தை. பாலைத்துயர் - பாலை நிலத்தாலுண்டாகும் துன்பம். நான் சூட்டிய. ஓதி - கூந்தல். கண் - விழிகள்; எழுவாய். நிவந்திடு - மிக வளர்ந்தோங்கிய. பொழில் - சோலை. என்கண் நெஞ்சினுக்குப் பொழில் பூத்தது பாரென்று ஓதிடும். தலைவியின் மலர்சூட்டிய கூந்தலுக்குப் பொழில் உவமை; "காவணக் கூந்தலார்" (திருவிடை. உரோமசச். 78); "சாதி, விளையு மதுச்செருந்தி மிக்கமல ரெல்லாம், அளக மலர்க் காவி னலர" சோக்க. உலா, 320 - 21.

### கண்டோர் அயிர்த்தல்.

(சுரத்திடை அவ்விருவரையுங் கண்டோர் இவர் தேவரோ மானிடரோவென்று சந்தேகித்தல்.)

330. வருவார் பரன்றிருக் கோடீச் சுரந்தனில் வாழ்பவரோ
மருவார் தருவிண் ணுலகின ரோவிஞ்சை வல்லவரோ
உருவார் மதனு மிரதியு மோவொன்று மோர்ந்திலமால்
வெருவார் சுரத்துற வேதோ நிமித்தமிம் மேலவர்க்கே.

(கு - உரை.) வருவார் - வருபவர்களாகிய இவ்விருவர். மரு ஆர் தரு - மணம் நிறைந்த கற்பகதருவினையுடைய. விஞ்சை வல்லவரோ - வித்தியாதரர்களோ; விஞ்சை - மாலிகாஞ்சன மென்னும் வித்தை. உரு வார் மதனும் - வடிவங்கொண்ட மன்மதனும்; இல்பொருளுவமை.

வெருவு ஆர் - கண்டோர் அஞ்சுதற்கு உரிய; வெருவாராயென்பதும் பொருந்தும். சுரத்து உற நிமித்தம் ஏதோ - பாலை நிலத்தில் வருதற்குக்காரணம் யாதோ? இம்மேலவர்க்கு - மேன்மையையுடையவர்களாகிய இவர்களுக்கு.

கண்டோர் காதலின் விலக்கல்.

(பொழுதுபோயிற்று; நீங்கள் இனிப்போதற்கு இவ்வழி உரியதன்றென்று கண்டோர் கூறி அவர்களை அன்புடன் விலக்குதல்.)

331. மலைவில் லரன்றிருக் கோடீச் சுரந்தனை வாழ்த்தலர்போல்
அலைநீப் பவன்மேல் கடலாழ்ந் தனனூ ரருகினியீண்
டிலைமற் றிவணு மெலிந்தா ளிரவெம் மிலைமருவிக்
கலையி னுரியிற் றுயின்றெழுந் தேகைய காலையிலே.

(து - உரை.) மலை வில் அரன் - மேருமலையை வில்லாக உடைய சிவபெருமான்; மலைவு இல் அரன் என்று பிரித்துப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். வாழ்த்தலர்போல் - துதி செய்யாதவர் கீழ்ப்படுதலைப்போல. அல்லை நீப்பவன் - இருளைப்போக்கும் சூரியன். இனி ஈண்டு அருகு ஊர் இல்லை. இரவு எம் இல்லை மருவி. கலையின் உரியில் துயின்று - மான்றோலிற் படுத்துறங்கி; "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். 89); "சீறூர் மரையத ளிற்றங்கு கங்குற் சிறு துயிலே" (சிற். 398.) காலையிலே எழுந்து ஏகு ஐய.

இதில் இரண்டாம் அடியில் அலையை (கடலை) நீப்பவன் கடலில் விழுந்தானென்னும் பொருள் தோன்றலாகிய நயமும், மூன்றுமடியில் மடக்கும், நான்காமடியில் கலை காலையென்னும் நயமும் அமைந்துள்ளமை காண்க. அலை - கடல்; ஆகுபெயர்.

கண்டோர் தம் பதியணிமை சாற்றல்.

(ஊர் அருகிலுள்ளதென்பதை அவர்களுக்குக் கண்டோர் கூறல்.)

332. குன்றிது தன்னைக் கடந்துசென் றுலெதிர் கோபுரமும்
மின்றிகழ் மெல்லிடை யார்விளையாடுபொன் மேடைகளும்
துன்றிணர்ச் சோலையு மாகிவில் வேலவ தோன்றுந்தில்லை
மன்றினு ளாடல்செய் கோடீச னேரண்ட மாபுரமே.

(து - உரை.) குன்றிது தன்னை - இக்குன்றினை. எதிர் - எதிரில். "மாநகர்க்குக் கோபுரமும்" என்றமையின் இங்கே கோபுரத்தை முன்

கூறினர். பொன்மேடைகள் - அழகிய தெற்றிகள். துன்று இணர் - நெருங்கிய பூங்கொத்துக்களை யுடைய. எரண்டபுரம் - கோடீச்சுரம்; எரண்டமாபுரம் தோன்றும்; எரண்டம் - கொட்டைச் செடி; இத்தலத்திற்குரியது கொட்டைச்செடியாதலால் எரண்டபுரமெனப் பெயர்பெற்றது.

தலைவன் தன்பதி அடைந்தமை சாற்றல்.

(சாற்றல் - தலைவிக்குத் தலைவன் சொல்லுதல்.)

333. இதுதான் சிவன்றிருக் கோடீச் சுரமிதி வீதரன்றேர்
விதுவைக் குறைபடச் செய்முகத் தாய்துகின் மென்கொடிநீ
டதுநம் மனையிது வேதிய ராவண மாவணமீ
துது தண் கமலத் தடமிது காவிரி யொண்ணதியே.

(கு - உரை.) விதுவைக் குறைபடச்செய் - சந்திரனை அழகினுற்ருேற்றுக் கலைகுறையுமாறு செய்கின்ற. துகில் மென்கொடி - துவசம். நீடு அது - நீண்டிருக்கின்ற அந்த மனை. இது வேதியர் ஆவணம் - இஃது அந்தணரது வீதி. ஈது ஆவணம் - இது கடைவீதி. உது - இடையே உள்ள அது. கமலத்தடம் - தாமரைத்தடாகம்; கோடிதீர்த்தம்; "செய்குன் றுவையிவை சீர்மலர் வாவி விசும்பியங்கி, நைகின்ற திங்களெய்ப் பாறும் பொழிலவை ஞாங்கரெங்கும், பொய்குன்ற வேதிய ரோதிட முந்திட மிந்திடமும், எய்குன்ற வார்சிலை யம்பல வற்கிட மேந்திழையே" (சிற். 223) என்ற செய்யுளில் இதனிற்போல மூவகைச் சுட்டும் வந்தமை காண்க.

---

கற்பொடு புணர்ந்த கவ்வை.

[கற்பு - தலைவனுடன் சென்றசெயல்; கவ்வை - பலரறிசொல். தலைவி தலைவனுடன் சென்றதைப் பலரும் அறிதல்.]

செவிலி பாங்கியை வினுதல்.

(என்மகள் எங்கே போயினளென்று செவிலி பாங்கியைக் கேட்டல்.)

334. சாற்று யெனக்குண்மை யெங்கேகி னாள்வஞ்சி தண்சுனைக்கோ
மேற்று துகுமலர்ப் பைம்பொழிற் கோவிங்கு மென்கிளிகூஉய்த்
தோற்று குலமுற வாரழைத் தேகினர் தூயவிடை
ஏற்றார் கொடியரன் கோடீச் சுரமன்ன வேந்திழையே.

(கு - உரை.) உண்மைசாற்ருய் - உண்மையைச்சொல். வஞ்சி - தலைவி. ஓ : விளு. தாது - பூந்தாது. கிளி - தலைவிவளர்த்த கிளி. கூய் - கூவி. ஆகுலம் உற - துயரம் மிக. விடையேற்ருர் கொடி அரன் - இடபத்தை ஏற்றிய ஆர்ந்த கொடியையுடைய அரன்; விடையேறு : ஒரு பொருட் பன்மொழியுமாம்.

### பாங்கி செவிலிக்குணர்த்தல்.

(நம்மவர் மணத்திற்கு உடம்படாமையால் நின்மகள் தன்
னுடைய விருப்பத்தின்படியே தலைவனுடன்
போயினுளென்று செவிலித்தாய்க்குப்
பாங்கி கூறுதல்.)

335. மருத வனத்துறை கோடீச் சுரநம்பர் மால்வரையாம்
பருவண் குறிஞ்சியி னெய்தலுற் ருதியிற் பாங்கினுடன்
ஒருதண் மலர்முல்லை மாலைதங் தான்ற னுடனடந்தாள்
கருதுநின் பாலை கலங்கவிழ்த் தாரிற் கலங்கனையே.

(கு - உரை.) மருதவனத்து - திருவிடை மருதூரில். வரையாம் பருவண் குறிஞ்சியின் எய்தல் உற்று - மலையாகிய பெரிய வளவிய குறிஞ்சி நிலத்தையடைந்து. ஆதியில் - முன்பு. பாங்கினுடன் - அழகோடு. மலர் : முதலுக்கேற்ற அடை ; முல்லைமலர்மாலையுமாம். பாலை - பாலப்பருவத்தையுடைய மகள். நின்பாலை மாலைதந்தானுடன் நடந்தாள். கலங்கவிழ்த்தாரின் - கப்பலைக்கவிழ்த்த நாய்கர் போல; "கலங்கவிழ்த்த நாய்கன் போல்" (யா - வி. மேற். "மணிகிளர்") கலங்கு அன்னையே.

இதில் முறையே மருதம் குறிஞ்சி நெய்தல் முல்லை பாலை யென்னும் ஐந்திணைப் பெயர்களும் தொனித்தல் ஒருநயம்.

### செவிலி தேற்றுவோர்க்கு எதிரழிந்து மொழிதல்.

(தன்னைத் தேற்றுவோரை நோக்கிச் செவிலி வருந்திக் கூறுதல்.)

336. நெருங்கிதழ்க் கொன்றையர் கோடீச் சுரநம்பர் நேரியினன்
மருங்குவைத் தான்மருங் கென்றுர மேறி வளர்ந்தமயில்
சுரங்கொண் டிடமருந் தீந்தெதிர் பண்டிதஞ் சொன்னவரைக்
கருங்குழ லீரிங் கறியே னளியேன் கலங்கினனே.

(கு - உரை.) நான் மருங்குவைத்தால் - நான் பக்கத்திலே வைத்தேனெனின். மருங்கு என்று - இடையில் ஏறுவேன் என்று கூறி. உரம் ஏறி - மார்பில் ஏறி; வலிமை பொருந்தி என்பது மற்றொரு பொருள். மயில் - தலைவி. சுரம் கொண்டிட - பாலைநிலத்திற்போதலைக்

கைக்கொள்ளுமாறு. மருந்து ஈந்து - மருந்தைக் கொடுத்து. எதிர்தல் - தோற்றுதல். பண்டு - முன்பு. இதம் சொன்னவரை - விருப்பமான சொற்களைக் கூறினவரை; பாலை நிலத்திற்போக்கினவரை யென்றபடி, சொன்னவரை யறியேன்.

சுரம் கொள்ள அதைத் தீர்த்தற்கு மருந்தையும் கொடுத்து வைத்தியம் சொன்னவரை யென்பது மற்றொரு பொருள். பண்டிதம் - வைத்தியம்; வழக்கு.

## செவிலி தன்னறிவின்மைதன்னை நோந்துரைத்தல்.

(தலைவனுடன் போதலைத் தலைவி எனக்குக் குறிப்பால் அறிவித்தும் அதனை நான் அறிந்துகொண்டேனில்லையே யென்று செவிலி தன் அறியாமை காரணமாக நொந்துரைத்தல்).

337. ஓங்கரு ளீசர்தென் கோடீச் சுரவெற் புறையுமலர்த்
தேங்கமழ் கோதையி ரென்சொல்லு வேன்றளிர்ச் சிறடிமுன்
வேங்கட நல்ல தலங்கொலென் றுண்மிக்க மேன்மைத்தென்றேன்
ஆங்கவ ளன்னமுய்த் தோர்ந்திலன் சென்று ளருஞ்சுரமே.

(கு - உரை.) கோதையிர்: விளி. சிறடி - சிறிய அடியையுடைய தலைவி. முன் - நேற்றைத்தினம். வேங்கடம் - வேகின்ற காடு, வேங்கட மலை; சிலேடை. செவிலி நினைந்தது வேங்கடமலையை; தலைவி நினைந்தது வேகின்ற பாலையை; "காராமே லெழுபுயல் காளத்தி நாதன் கனக வெற்பில், இராமே சுரத்தினுக் கேகுவ னென்றனை ளேழைபுத்தி, வராமே சுயபுத்தி வந்ததென் றேகனி வாய்மலர்ந்தேன்,.........சொன்னதுதை யறிந்திலனே" (தனிப்.) என்னும் செய்யுள் இங்கே அறியற்பாலது. உய்த்து ஓர்ந்திலன் - நுணுகி ஆராய்ந்தேனில்லை.

## செவிலி தெய்வம் வாழ்த்தல்.

(தலைவியை விரைவில் வரச்செய்யவேண்டுமென்று செவிலி முருகக்கடவுளைத் துதித்தல்.)

338. அன்னேர் மிடற்றினர் கோடீச்சு ரேச ரருண்மதலாய்
தென்னே ரகமன்ன கன்னே ரகங்கொடு சென்றவள்வந்
தென்னே ரகமுறச் செய்தனை யேலுன் னெதிர்நிற்கவோர்
மன்னேர் மயில்விடுத் தெந்நே ரமுமுனை வாழ்த்துவமே.

(கு - உரை.) அல்நேர் - இருளை ஒத்த. மதலாய் - குமாரனே. தென் ஏரகமன்ன: விளி; ஏரகம் - ஒரு தலம். கல் நேர் அகம் கொடு - கல்லைப்

போன்ற நெஞ்சைக்கொண்டு. என் ஏர் அகம் உற - எனது அழகிய வீட்டையடையும் வண்ணம். சென்றவள் உற. ஏர் மன் மயில்; ஏர் - அழகு.

குறிஞ்சிநில மக்கள் தம் வேண்டுகோள் நிறைவுறுதற்கும் நிறைவுற்றமைக்கும் முருகவேளுக்கு மயிலை விடுதல் மரபு; "இளையபிள்ளையா ரேறித் திரிந்திட, வண்ணமயிலொன்று விடுவோமென" (சம. சூற.); "வாரணச் சேவ லோடு வரிமயிற் குலங்கள் விட்டு" பெரிய. கண்ணப்ப. 11.

இதில் ஏரகமென்பது சொற்பின் வருநிலையணி. இரண்டாமடியிலும் ஈற்றடியிலும் வழியெதுகை வந்துள்ளது.

செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல்.

(தன்கற்பின் மிகுதிதோன்றத் தலைவி தலைவ
னொருவனுடன் சென்றனளென்பதை
நற்றாய்க்குச் செவிலி அறிவித்தல்.)

339. வேலைநஞ் சுண்டவர் கோடீச் சுரமன்ன மெல்லியலாய்
காலையிற் சார்ந்திதை யுச்சியிற் சூடெனக் கையிலொரு
மாலைதந் தாளொரு மாலையொப் பானதை வாங்கிநந்தம்
பாலையப் பாலை யிடத்தாங் கவன்பின் படர்ந்தனளே.

(கு - உரை.) வேலை - கடல். காலையிற் சார்ந்து - காலைப்பொழுதில் வந்து. உச்சியில் - தலையில். மாலை - பூமாலையை. மாலை ஒப்பான் - திருமாலைப்போல்வான். ஒப்பான் தந்தான். நந்தம் பாலை - தலைவி; பாலை - பாலப்பருவமுடையாள்; "கருதுநின் பாலை" (335) என்றார் முன்னும். அப்பாலையிடத்து - அந்தப் பாலை நிலத்தில். படர்ந்தனள் - சென்றாள்.

இதில் காலை உச்சி மாலையென்னும் மூன்று சிறுபொழுதின் பெயர் களுந் தொனிக்கின்றன; "காலைமென் போதை யுச்சியிற் கொள்வாங் கடுந்துயர் மாலைதீர்ந் திடவே" (திருவிடை. கடவுள். 8.) மூன்றாமடியில் மாலையென்பதும் ஈற்றடியிற் பாலை யென்பதும் மடங்கி வந்தன.

நற்றாய் பாங்கியோடு புலம்பல்.

(பாங்கியொடு - உயிர்த்தோழியோடு.)

340. புகழிற் பெரிதுறு கோடீச்சு ரேசர் பொருப்பிடத்து
நிகழிங் கொருவன்றன் மாலையுற் றாளிவ ணீடெனவே
திகழிக் குறிப்புமுன் னீயுரைத் தான்மணஞ் செய்தவற்கே
மகளிய னேக்கி விடுவேன் கெடுத்தாய் மடமகளே.

(கு - உரை.) நிகழ் ஒருவன். மாலை - மயக்கத்தை. நீடு - நெடுங் காலம். நீ இக்குறிப்பு உரைத்தால்; குறிப்பு - தலைவன் தலைவியரிடையே உள்ள அன்பின் திறத்தை. மணம் செய்து - கல்யாணம் செய்து. அவற்கே விடுவேன் - அவனுக்கே கொடுப்பேன். மடமகளே - மடமையை உடைய பெண்ணே.

இதில், பூமாலையையுற்றாளென்றால் அதற்கு நறுமணமூட்ட முயல்வே னென்பது மற்றொருபொருள்.

### நற்றாய் பாங்கியரோடு புலம்பல்.

(பாங்கியர் - மற்றத் தோழிமார்கள்.)

341. தாரிருந் தார்சடைக் கோடீச்சு ரேசர் தடஞ்சிலம்பில்
வாரிருந் தாரம் புனைமுலை யீரந்த மன்னிருந்தென்
ஆரிருந் தாலென் னிளமா னடைந்த வருஞ்சுரத்தில்
நீரிருந் தாலிங்கிவ் வாறலை யாதென்ற னெஞ்சகமே.

(கு - உரை.) தார் இருந்து ஆர் சடை. வார் இருந்து -கச்சு இருப்ப. ஆரம் புனை - முத்துமாலையை அணிந்த. அந்த மன் - அந்தத் தலைவன். இருந்து என் - இருத்தலாற் பயன்யாது. ஆர் - யார். இளமான் - தலைவி. நீர் இருந்தால் - நீங்கள் இருந்தால். நெஞ்சகம் அலையாது.

சுரத்தில் நீர் (புனல்) இருந்தால் மான் அலையாதென்பது மற்றொரு பொருள்; "நீர்வந்தா லாசை நெருப்பவியுங் காணுமே" (அருணைக் கலம். 63) என்றவிடத்தும் நீரென்னும் சொல் முன்னிலைப் பெயரையும் புனலையும் குறித்தல் காண்க.

இதில் முதலடியில் தாரிருந்தார் என்னும் மடக்கும், ஈற்றடியில் நீர் ஆறென்னும் பெயர்களின் தொனியும் அமைந்துள்ளன.

### அயலாரோடு நற்றாய் புலம்பல்.

342. விண்பெற்ற கீர்த்தியர் கோடீச் சுரநித்தர் வெற்புறுமென்
பண்பெற்ற சொல்லி யெனைவிட்டுப் போற்றிய பாவியைவிட்
டெண்பெற்ற வன்பி னடந்தாண் மகிழ்நன்பி னேந்திழையீர்
பெண்பெற்ற போதே தணியாத் துயரமும் பெற்றனமே.

(கு - உரை.) பண்பெற்ற சொல்லி-பண்ணின் இனிமையைப்பெற்ற சொல்லையுடையவள். போற்றிய பாவியை யென்றது செவிலியை. எண்- எண்ணம். பெற்ற அன்பின் நடந்தாள். மகிழ்நன் பின் - தலைவன் பின்னே. மகிழ்நன் பின் அன்பின் நடந்தாள். பெண்பெற்றபோதே...... பெற்றனமே: "பெண்பெறுகை தனைப்போலப் பெரியதுயர் தானு முண்டோ பேசுங் காலே" உத்தர. இராவணன் பிறப்பு. 61.

## பயிலிடத்தோடு புலம்பல்.

(பயிலிடம் - தலைவி விளையாடும் இடங்கள்.)

343. கிளையா டகவில்லர் கோடீச்சு ரேசர் கிரிதனில்வர்
திளையாடு பூம்பொழி லேபுன லேமல ரீர்ஞ்சுனையே
வளையாடு கையின ளும்மொடெப் போது வருவலென்றுள்
விளையாடத் தேடுமப் பேதையர்க் கோத விளம்பிடுமே.

(து - உரை.) கிளை - கிளைத்த. ஆடக வில்லர் - பொன்மலையாகிய வில்லையுடையவர் ; ஆடகம்-பொன்; ஆகுபெயர். இளையாடு - தலைக்காவல் பொருந்திய ; காவற் காடென்று யாவரும் சொல்லுமெனலுமாம். ஈர்ஞ் சுனை - குளிர்ச்சியையுடைய பொய்கை. வருவல் - வருவேன். அப்பேதை யர்க்கு ஒத - அந்தப் பாக்கியர்களுக்கு நான் சொல்வதற்காக. விளம் பிடும் - நீவிர் எனக்குச் சொல்வீராக.

## நிமித்தம் போற்றல்.

(என்மகள் மீண்டுவரும்படி நீ கரைவாயாயின் உனக்குச்
சிறந்த உணவை யளிப்பேனென்று கூறி
நற்றாய் காக்கைக் குறிபார்த்தல் ;
நிமித்தம் - சகுனம்.)

344. மின்னார் சடையண்ணல் கோடீச் சுரமன்ன மெல்லியலை
உன்னா வெளியேன் கரையாம லீகரை வுற்றுதவிற்
பொன்னார் கலந்தனிற் பாயச வூனுமென் போனகமும்
மன்னா தரவொ டுனக்களிப் பேன்கொம்பில் வாழ்கொடியே.

(து - உரை.) மின்னார்சடை - மின்னலைப்போன்ற சடை. உன்னா - நினைந்து. கரையாமல் - மனம் உருகாமல். கரைவுற்று : காக்கை யொலித் தலைக் கரைதலென்பது மரபு ; "காக்கை கரவா கரைந்துண்ணும்" (குறள். 527) ; காக்கை கரைந்தாற் புதியவர் வருவா ரென்பது ஒரு கொள்கை ; "விருந்துவரக் கரைந்த காக்கை" (குறுந். 210); "உத்த மனைவரக், கரையாய் காக்கைப் பிள்ளாய்" (பெரிய திருமொழி, 10. 10 : 2.) பொன்னார் கலந்தனில் - பொற்பாத்திரத்தில். பாயசவூனும் - பாய் கின்ற ஆட்டின் இறைச்சியையும் ; பாயசத்தோடு கூடிய ஊனையுமென் பது மற்றொரு பொருள். மென்போனகமும் - மென்மையையுடைய சோற்றையும். மன் ஆதரவொடு - நிலைபெற்ற அன்புடன். கொம்பில் வாழ்கொடியே - மரக்கிளையில் வாழும் காக்கையே ; கொள் கொம்பிற் படரும் பூங்கொடியே யென்பது மற்றொரு பொருள் ; "கொம்பரிற் படரிளங் கொடியே" திருவிடை. வரகுண. 56.

எளியேன் கரையாமல் கரைவுற்றென்பது சொல் முரண்.

### சுரந்தணிவித்தல்.

(பாலைநிலத்தை மருதநிலமாகச் செய்யவேண்டு
மென்று சூரியனை நற்றாய் வேண்டுதல் ;
சுரம் - பாலைநிலம்.)

345. மேலை யுறுவெங் கதிரே யெவருக்கு மித்திரனே
மாலை யிடங்கொண்ட கோடீச்சு ரேசர் வரைதனில்விற்
கோலை நிகர்தருங் கண்மலர் வஞ்சிக் கொடிபடர்ந்த
பாலையை நீடு மருதமென் றோதிடப் பண்ணுகவே.

(து - உரை.) மேலை - வானில் ; ஐ : சாரியை. கதிரே - சூரியனே. மித்திரனே - நண்பனே ; மித்திரனென்பது சூரியன் பெயர்களுள் ஒன்று ; "மித்திர னொடுநோ னில்லா வேலை" (திருவிளை., வரகுண. 17.) மாலை இடம் கொண்ட - திருமாலை இடபாகத்தே கொண்ட. விற் கோலை நிகர்தரும் - வில்லிலுள்ள அம்பினை ஒக்கும் ; வில் புருவத் திற்கு ஒப்பு. கண்மலர் - கண்ணாகிய மலரையுடைய ; தேனோடுபொருந் திய மலரென்பது மற்றொருபொருள் : கள் - தேன். வஞ்சிக்கொடி - வஞ்சிக்கொடிபோன்ற தலைவி. படர்ந்த - சென்ற ; பரவி வளர்ந்த வென்பது மற்றொரு பொருள். பாலையை - பாலை நிலத்தை. மருதம் என்று ஓதிட - மருத நிலமென்று சொல்லும்படி ; குளிரச் செய்வா யென்பது கருத்து.

வஞ்சிக்கொடி படர்ந்த பாலைமரத்தை மருதமரமாகப் பண்ணுக வென்பது மற்றொருபொருள்.

சூரியன் பாலைநிலத் தெய்வமாதலாலும் அவனே வெம்மைக்குக் காரணனாதலாலும் இவ்வாறு வேண்டினாள்.

### மேன்மைத் தன்மைக்கிரங்கல்.

(மலரை மிதிப்பினும் பொறாத என் மகளுடைய
அடிகள் பாலைநிலத்தின் வெம்மையை
எவ்வாறு பொறுக்குமோவென்று
நற்றாய் இரங்குதல்.)

346. ஆய்ந்தார் புகழ்ந்திடுங் கோடீச்சு ரேச ரணிவரைமேல்
வாய்ந்தா ரமுதொத் திருந்திடு பேதை மலர்மிதிக்கின்
ஏய்ந்தா குலமுறு மெவ்வாறுற் றாள்கட லேழும் பொங்கிப்
பாய்ந்தாலும் வெம்மை தணியாத செந்தழற் பாலையிலே.

(து - உரை.) வாய்ந்த ஆரமுதை. பேதை - தலைவி. ஆகுலம் உறும்- துன்பத்தை யடைவாள். மலர்.........உறும் : "அனிச்சமு மன்னத்தின்

றாவியு மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்'' (குறள். 1120); மலரினும் மெல்லிய ளென்றபடி. பாலையில் எவ்வாறு உற்றாள்.

இளமைத் தன்மைக் கிரங்கல்.

347. சோதி முழுமுதல் கோடீச் சுரவிளந் தோகையுன்றன்
ஓதி முடிப்பவ ராரங் கனமெடுத் தூட்டுவரார்
தாதி முதலோ ரிலரேயென் செய்தி தழற்சுரத்தில்
ஆதி முடியிலிவ் வாறே வெழுதின னாரணனே.

(கு - உரை.) இளந்தோகை : விளி. ஓதி முடிப்பவர் - கூந்தலை முடித்து விடுபவர். அங்கு அனம் எடுத்து ஊட்டுவர் ஆர் - அந்தப்பாலையிற் சோற்றையெடுத்து உண்பிப்பவர் யார். என்செய்தி - என் செய்வாய்; அறியாமையால் என்ன காரியஞ்செய்தா யெனலுமாம். ஆதி - முன்காலத்தில். முடியில் - தலையில். ஆரணன் - பிரமன். ஆரணன் இவ் வாறே எழுதினன்.

இதில் ஈற்றடியில் ஆதி முடியென்பது முரண்.

அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்.

(தலைவிக்கு இயல்பாகவுள்ள அச்சத்தன்மையைக்
குறித்து அச்சமுற்று நற்றாய் இரங்கல்.)

348. சொல்லுஞ் சுருதியர் கோடீச்சு ரேசர் துணைமலர்த்தாள்
அல்லும் பகலுங் கருதா தவர்செல் லருஞ்சுரத்திற்
கொல்லுங் கரியுந் தழலும்வந் தையோ குறுகவெதிர்
புல்லும் பொழுதென்னென் றஞ்சுறுமோநந்தம் பொன்னுளமே.

(கு - உரை.) சொல்லுஞ் சுருதியர் - வேதத்தைச் சொல்லுபவர். அல்லும் பகலும் - இரவிலும் பகலிலும். தாளைக் கருதாதவர் செல்லுதற்குரிய சுரம். கொல்லும் கரியும் - கொல்லுகின்ற யானையும். தழலும் - வெம்மையும். வந்து ஐயோ. குறுக - நெருங்க. எதிர் புல்லும் பொழுது - எதிரே பொருந்தும் பொழுது. என் என்று அஞ்சுறுமோ - என்ன வென்று நினைந்து பயப்படுமோ. பொன் உளம்-பொன்போல்வாளாகிய தலைவியினது மனம்.

கொல்லனும் கரியும் நெருப்பும் ஒன்று சேரின் தங்கத்தின் உள்ளம் எவ்வாறு அஞ்சுமோ வென்பது மற்றொருபொருள்; கொல் - கொல்லன்.

## கண்டோரிரக்கம்.

(அந்நிகழ்ச்சியைக் கண்ட அயலார் இரங்குதல்.)

349. செழுவான் பணிசிவன் கோடீச் சுரத்தின் றிசைகுறித்துத்
தொழுவாள் வளர்த்தவ ளீன்றுளிப் பாவி துடிக்குமெதிர்
அழுவாள்வண் பாங்கி புலம்புவர் தாதிய ராங்கயர்ந்து
விழுவார்கள் பாங்கியர் சென்றதின் னூர்கடம் மெல்லுயிரே.

(து - உரை.) செழுவான் - வளமையையுடைய தேவலோகத்தினர். வளர்த்தவள் திசைகுறித்துத் தொழுவாள்; வளர்த்தவள் - செவிலித் தாய்; இது பிரார்த்தனே. ஈன்றுள் இ பாவி - பெற்றவளாகிய இந்தப் பாவி. வண்பாங்கி யென்றது உயிர்த்தோழியை. தாதியர் புலம்புவர் தாதியர் - ஏவல் செய்வோர் இக் காரணங்களால் இன்னூர் மெல்லுயிர் சென்றது ; மெல்லுயிரென்றது தலைவியை.

## செவிலி ஆற்றுத் தாயைத் தேற்றல்.

(தலைமகளின் பிரிவாற்றுமல் வருந்தும் நற்றுயைச் செவிலி தேற்றுதல்.)

350. பங்கே ருகத்திரு வன்னுள் பொருட்டுப் பருவரலுற்
றிங்கே வருந்திடல் கோடீச்சு ரேசர்த மின்னருளால்
எங்கே யிருக்கினு மின்னே கொணர்வ லிமைப்பொழுதில்
அங்கே ழணிபொற் றொடியா ளொடுமற் றவனையுமே.

(து - உரை.) பருவரல் - துன்பம். இன்னே கொணர்வல் - இப் பொழுதே அழைத்து வருவேன் ; மின்னேயென விளித்ததுமாம். அம் கேழ் அணி பொன் தொடியாளொடும் - அழகிய நிறத்தையுடைய பொற் றொடியை யணிந்த தலைவியோடும். அவனையும் - தலைவனையும்.

## ஆற்றிடை முக்கோற்பகவரை வினுதல்.

(முக்கோற்பகவரை - எதிரேவரும் மூன்றுகோலை யுடைய அந்தணரை ; தொல். மரபு. சூ. 70. வினுதல் - கேட்டல்.)

351. பகையாறு வென்றைந் தடக்கியொண் ணுன்மறை பாடிமுக்கோல்
வகையாக் கரங்கொண் டிருநெறி யோர்தனி வந்தெதிர்ந்த
தகையார் முனிவிர்முன் கோடீச்சு ரேசர் தடங்கிரிவாய்த்
திகையார் மனத்தெங்கண் மானெரு காளைபின் சென்றதுண்டே.

(து - உரை.) பகை ஆறு - காமம் முதலியன. ஐந்து அடக்கி - ஐம் புலன்களை அடக்கி. முக்கோலைக் கரங்கொண்டு. இருநெறி - பெரிய

வழியில். தகை - தகுதி. திகையார் மனத்து - திகைத்தல் பொருந்திய மனத்தையுடைய. காளைபின் - தலைவன்பின்; காளை - பதினாறு பிராயத்தானுக்குரிய பெயர்; (பன்னிரு. 231; தக்க. 5, உரை.) பாலை நிலத்தலைவனுக்கும் காளையென்பது பெயராக அகப்பொருள் இலக்கணநூலில் வழங்குகின்றது. உண்டே; ஏ: வினா.

மான் காளைபின் சென்றதென்பது ஒருநயம்; காளை - விடை. இதில் முதல் இரண்டடிகளில் எண்ணணி அமைந்துள்ளது.

"ஒருவெண் குடையிரு நீழன்முக் கோல்கொண் டொழுக்கத்தினால், அருவெங் களரியைந் தாறுசெல் வீரு ளீரெழுபார், மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையென் வஞ்சியன்னாள், பொருவெஞ் சுடரிலை வேலொரு காளைபின் போயினளே" (தஞ்சை. 341) என்பதில் ஒன்று முதல் எட்டுவரையிலுள்ள எண்கள் தோன்றுதல் காண்க.

## மிக்கோர் ஏதுக்காட்டல்.

(மிக்கோர் - முற்கூறிய பெரியோர். ஏதுக்காட்டல்-
தலைவி ஒருவனுக்கு உரியளாதல் உலக
வியல்பெனக் காரணங்
காட்டிக் கூறுதல்.)

352. நனையீன்ற கொன்றையர் கோடீச் சுரவெற்பி னையன்மின்னே
தனையீன் றவளை விடுத்தணி வாரிடஞ் சார்ந்திடுமுத்
தனையீன் றவளில்லி னீயுமுற் றாயிலை யுன்மகளும்
அனையா ளொருவன்பின் சென்றா லுலகியல் பாமிதுவே.

(து - உரை.) நனை - தேன். நையல் - வருந்தாதே. தன்னை ஈன்றவளை விடுத்து - தன்னைப்பெற்ற சங்கினை நீங்கி; தன்னைப் பெற்றவளாகிய தாயை நீங்கியென்பது மற்றொருபொருள். முத்து சார்ந்திடும். உனை ஈன்றவள் இல்லில் - உன் தாய்வீட்டில். அனையாள் - உன்னை நீங்கற்குரிய அத்தன்மையை யுடையள். இது உலகியல்பாம் - பெண் பிறந்தவீட்டை விட்டுத் தலைவன் வீட்டிற்குச் செல்லுதல் உலக இயல்பு.

## எயிற்றியோடு புலம்பல்.

(எயிற்றி - மறத்தி; இவள் பாலை நிலப்பெண்.)

353. கோளா டரவணி கோடீச்சு ரேசர் குவட்டின்மத
வேளா சுகவிழி வேடர்மின் னேயொன்று விள்ளலின்றி
வாளா விருந்ததிப் பாரா வதமென் மகளொருத்தன்
நீளா நிழல்வரக் கண்டனை யோவிங்கு நின்றனையே.

(கு - உரை.) கோள் - கொலை. மதவேள் ஆசுகவிழி - மன்மத னுடைய அம்புபோன்ற கண்ணை யுடைய. வேடர்மின்னே - வேட்டுவப் பெண்ணே. விள்ளல் இன்றி - சொல்லாமல். பாராவதம் - புறவு ; இது பாலை நிலத்திற்குரியது. பாராவதம் வாளாவிருந்தது. நீளா நிழல் - குறு கிய நிழலில் ; "நிழறேய்ந் துலறிய... .....காடு" (அகநா. 1:11 - 9) ; "நிழலும், அடியகத் தொளிக்கு மாரழற் கானத்து" (திருவாரூர் மும். 13) ; "முருகு நாறுபொன் னிதழியார் முண்டகப் பதத்தின், ஒருவு மாருயிர் பருவத்தின் மீளவுற் றிடல்போற், பருதி வானவ னுச்சமாம் பதத்துமென் மலர்ப்பூந், தருவி னீங்கிய நிழலெலாந் தருவடி யடைந்த" காஞ்சிப். பன்னிரு. 340.

குரவோடு புலம்பல்.

(குரவொடு - குராமரத்தோடு ; இம்மரம் பாலைநிலத்திற்குரியது.)

354. விடத்தே சமர்கண்டர் கோடீச் சுரநம்பர் வெற்புறுமென்
மடத்தே மொழியொரு காளைபின் னுமுன்னர் வந்ததுண்டோ
கடத்தே மலர்க்குர வேநகைக் கின்றனை கள்ளமுன்றன்
இடத்தே யிருக்கின் றதுமெலிந் தேன்புக லென்றனக்கே.

(கு - உரை.) விடத்தேசு - நஞ்சின் ஒளி. காளைபின்னு - தலைவன பின்னுக. முன்னர் - உனது முன்பு. உண்டோ ; ஓ : வினு. கடத்தே மலர்க்குரவே - பாலையிலுள்ள தேன் நிறைந்த மலரை யுடைய குரா மரமே. நகைக்கின்றனை - அரும்புகின்றாய் ; சிரிக்கின்றாயென்பது மற் றொருபொருள். கள்ளம் - தேனுகிய நீர், வஞ்சகம்.

இதில் பின்னு முன்னரென முரணும், சிரிக்கின்றாய் வஞ்சகம் உன் பால் இருக்கின்றதென மற்றொரு பொருளும் அமைந்துள்ளன.

சுவடு கண்டிரங்கல்.

(தலைவன் தலைவியாகிய இருவருடைய அடிச்சுவடு களையுங்கண்டு செவிலி இரங்கிக் கூறுநிற்றல்.)

355. கண்டே மிருவ ரடியுமிங் காண்டன்ன காளைபுயம்
கொண்டே நடந்தனன் போலுமுட் காகநங் கோற்றொடியைப்
பண்டே மொழிபங்கர் கோடீச் சுரநித்தர் பைம்பொன்வெற்பில்
உண்டேயிவ் வாறு சுமந்தே கிடுசில வும்பருமே.

(கு - உரை.) இங்கு இருவர் அடியும் கண்டேம் - இவ்விடத்தில் தலை வன் தலைவி யென்னும் இரண்டுபேருடைய அடிச்சுவட்டையும் கண்டேம். ஆண்டு - அவ்விடத்தில். புயம் கொண்டே - தலைவியைத் தன் தோளிற்

சுமந்துகொண்டு. முட்காக - முள்ளை மிதியாமல் இருப்பதற்காக. முட்காக நடந்தனன்போலும்; இரண்டே அடிச்சுவடுகளைப் பார்த்தமையின் இவ்வாறு கூறினள்; "நாலடி வள்ளுவ ராமெயிப் பாலை நடந்தபெருங், காலடி மேலடி மானடியே" (தனிப்.) கோற்றொடியை - தலைவியை. பண்டேமொழி - பண்போன்ற இனிமைவாய்ந்த மொழியை யுடைய உமாதேவியார். சில உம்பரும் உண்டு; சில உம்பரென்றது நாவிற் கலைமகளைச் சுமக்கும் பிரமனையும் மார்பில் திருமகளைச் சுமக்கும் திருமாலையும்; கண்ணபிரான் ஓராய்மகளைத் தோளிற் சுமந்துசென்ற செய்தியும் இங்கே அறிதற்குரியது; பாகவதம், 10 : 12 : 68. சிவபெருமானும் சுமப்பதைப் பண்டேமொழி பங்கரென்பதனால் உடம்பொடு புணர்த்தித் தெரிவித்தனர்.

### கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல்.

(காதலன் காதலிகளாக வருபவர்களைக்கண்டு உங்களைப்போலவே இந்தவழியே செல்லும் என் மகளையும் அவள் தலைவனையும் கண்டீரோவென்று செவிலி கேட்டல்.)

356. மதனு மிரதியும் போல்வரு வீரொரு வார்த்தை தந்தென்
விதனங் களைந்திடு மும்மையொப் பாரொரு வித்தகனும்
இதநங் கையுமிந் நெறியே யுமக்கெதி ரேகினரோ
வதனமொ ரைந்துடைக் கோடீச் சுரேசர் வரையருகே.

(கு - உரை.) விதனம் களைந்திடும் - துயரை நீக்குங்கள். இத நங்கையும் - இன்பத்தையுடைய பெண்ணும். உம்மை ஒப்பாராகிய வித்தகனும் நங்கையும். இ நெறியே - இந்த வழியிலே. வதனம் ஓர் ஐந்துடைய - ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதமென்னும் ஐந்து திருமுகங்களையுடைய.

### அவர் புலம்பல் தேற்றல்.

(அவர்களைக் கண்டோம்; அவ்விருவரும் இதற்குள் கோடீச்சுரத்தை அடைவார்களென்று சொல்லி வருத்தத்தை ஆற்றுவித்தல்.)

357. அன்னையொப் பாயெதிர் நான்கண்ட காளையு மவ்விடத்திப்
பொன்னையொப் பாள்கண்ட மெல்லிய லாளுமிப் போதுசென்று
தன்னையொப் பாம்புகழ்ப் பொன்னியின் பாங்கர்ச் சடாடவிவிண்
மின்னையொப் பார்மகிழ் கோடீச் சுரநகர் மேவுவரே.

(கு - உரை.) அவ்விடத்து - அந்த இடத்தில். இப்பொன்னை ஒப்பாள் - இத் திருமகளை ஒப்பாகியவளும்; 'இப்பொன்' என்றது தன் காதலியை. மெல்லியலாள் - தலைவி. தன் காதலியையன்றிப் பிறமகளைப் பாராத அறநெறி யுடையவனாதலின், 'இப்பொன்னையொப்பாள்கண்ட மெல்லியலாள்' என்றான். பொன்னி - காவிரியாறு. சடாடவி விண் மின்னையொப்பார் மகிழ் - வானத்திலுள்ள மின்னலைப்போன்ற சடையாகிய காட்டையுடைய சிவபெருமான் விரும்பி உறைகின்ற; மின்னையொக்கும் சடாடவியாரென விகுதிபிரித்துக் கூட்டுக. இப்போது சென்று நகரை மேவுவர்.

"வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாம், தண்சுட ரன்னாளைத் தான்" (திணைமாலை. 89) என்பது இங்கே அறிதற்குரியது.

செவிலி புதல்வியைக் காணாது கவலை கூர்தல்.

(கவலைகூர்தல் - கவலை மிகுதல்.)

358. வன்னாக வில்லரன் கோடீச் சுரந்தனை வாழ்த்தினர்தம்
துன்னா ரொளிசுரத் தெங்கணுங் காண்கிலன் றோகையையென்
பொன்னா டிரும்பின ளோவெனுந் தாய்க்கென் புகல்வனினி
அன்னா ளுயிர்தரி யாடரி யாதென்ற னாவியுமே.

(கு - உரை.) வல் நாகவில் - வலிய மலையாகிய வில்லையுடைய; மலையாகிய இருப்பிடத்தை யுடையவெனவுமாம்; இல் - வீடு. வாழ்த்தினர் தம் துன்னார் ஒளி சுரத்து - துதித்தவர்களுடைய பகைவர் ஒளிக்கின்ற பாலைவனத்தில். எங்கணும் - எவ்விடத்திலும். தோகையைக் காண்கிலன். என் பொன்னாள் - என் பொன்னனைய மகள். திரும்பினளோ - மீண்டாளோ. எனும் - என்று கேட்கும். தாய்க்கு-நற்றாய்க்கு. அன்னாள்- அந்த நற்றாய். என்றன் ஆவியும் தரியாது.

இதில் வன்னாகவில்லென்பதில் நாகமென்பதும், பொன்னாடிரும்பினளோ வென்பதிற் பொன் இரும்பு என்பனவுமாகிய உலோகங்களின் பெயர்கள் தொனிக்கின்றன.

---

மீட்சி.

[தலைவியுடன் தலைவன் மீளுதல்.]

தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குரைத்தல்.

(தலைவி தலைவனுடன் அவனூர் சென்றாளென்பதைச் செவிலி நற்றாய்க்குரைத்தல்.)

359. நிலையா கியசெல்வ மின்னே வருந்தியு நேரிழையைத்
தொலையாத வெஞ்சுரங் கானகஞ் சோலைக டுன்னியொவ்வோர்

இலையாகத் தேடினன் காணே னவளந்த வேந்தனுடன்
சிலையான வெற்பினர் கோடீச் சுரநகர் சென்றிடுமே.

(கு - உரை.) நிலையாகிய செல்வமின்னே - நிலையான செல்வத்தை யுடைய மின்போல்வாய்; மின்னேயென்றது நற்றாயை. நேரிழையை - தலைவியை. தொலையாத வெஞ்சுரம்-கடத்தற்கரிய பாலைநிலம்; "தொலையாத கானங் கடந்த வந்நாள்" (திருவரங்கக். 16); நீங்காத வெம்மையை யுடைய பாலை நிலமெனலுமாம். கானகம் - காடுகள்; என்றது முல்லை நிலங்களை; "கானக நாடன்" (பாக. 10. 1: 54.) சோலைகள் மருத நிலத்தைச் சார்ந்தவை. துன்னி - அடைந்து. ஒவ்வோரிலையாகத் தேடின னென்றது நன்கு துருவிஆராய்ந்ததைப் புலப்படுத்தியபடி; இஃது 'இலைப்புரை கிளைத்தல்' என்னும் பழமொழியின் கருத்து. சிலையான வெற்பினர் - வில்லாகிய மலையையுடையார்; சிலை வெற்பென்னும் ஒரு பொருட் பன்மொழிகளை ஒருங்கமைத்திருப்பது ஒருநயம். அவள் சென்றிடும்.

தலைவன் தம்மூர் சார்ந்தமை சாற்றல்.

360. தேன்வந்த கொன்றையர் கோடீச்சு ரேசர் செழுஞ்சிலம்பில்
மான்வந்த தன்னமின் னேயுன்றன் மீதொரு மால்களிறு
தான்வந் தெதிருற்ற தவ்விட மீங்கிது தண்புனமே
நான்வந் துனைக்கண்ட காவின்ன தன்னது நம்பதியே.

(கு - உரை.) ஒருமால் களிறுதான் வந்தெதிருற்றதென்றது களிறு தரு புணர்ச்சியை நினைவுறுத்தியபடி. இது புனம். இன்னது கா; கா - சோலை. நம்பதியென்றது தனதூரை; தலைவியையும் உளப்படுத்தி இவ்வாறு கூறினன்.

தலைவி முன்செல்வோர்தம்மோடு தான்வரல்
பாங்கியர்க்கு உணர்த்தி விடுத்தல்.

361. முற்று முலைபங்கர் கோடீச் சுரத்தெனை முன்னியிளங்
கற்று வெனநையும் பாங்கியர் பான்மறை கற்றறிந்த
நற்று மரைத்தொடை யீருள்ள நாண்முற்று நன்குவிற்று
விற்றும வேந்த லொடுநான் வரன்முன் விளம்பிடுமே.

(கு - உரை.) எனை முன்னி - என்னை நினைந்து. இளங்கற்றுவென நையும் - இளைய கன்றையுடைய தாய்ப்பசுவைப்போல மனம் கரையும்; "கற்றுவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா.) மறை- வேதம். தாமரைத் தொடையீர்: தாமரைமாலை அந்தணர்க்குரியது; "கஞ்சமலர்த் தாரினர்க்கு" (சா. தூற.); "வனசத்தாரான்", "வனசத்

தொடையினோர்" (திருவிடை. வசு. 6, அஞ்சத். 26); "வண்கமலத்தார் மிகுத்த வரைமார்பன்" (தே.) உள்ள நாண் முற்றும் நன்குவிற்று - என்பால் இருந்த நாணம் முழுவதையும் நீக்கிவிட்டு. விற்றும எந்தலொடு - ஒளிபொருந்திய மாலையையணிந்த தலைவனோடு. முன் - நான்வந்து சேருதற்கு முன்னரே. பாங்கியர்பால் வரலை விளம்பிடும்.

முன்சென்றோர் பாங்கியர்க்குணர்த்தல்.

362. பரந்தீண் டழன்மின் பறிகொடுத் தோமென்று பாவையுற்ற
சுரந்தீர்ந்தன் றொனொடும் பால்வினை யாடற்குத் துன்னினண்முப்
புரந்தீ யுறப்புரி கோடீச்சு ரேசர் புகழ்வரைமேல்
அரந்தீண்டு வாளன்ன கண்ணீர்முன் சிற்றி லைமைத்திடுமே.

(கு - உரை.) பரந்து - பரவி. அழன்மின் - அழாதீர். பறிகொடுத்தோம் என்று - தலைவியை இழந்துவிட்டோமென்று. என்று அழன்மின். பாவை உற்ற சுரம் தீர்ந்து - தலைவி தான் அடைந்த பாலையை நீங்கி; சுரநோய் தீர்ந்தென்பது வேறொருபொருள். அன்றொனொடு - அத்தலைவனோடும். உம்பால் துன்னினள். அரம் தீண்டு வாள் - வாளரத்தால் அராவப்பெற்ற வாட்படையை. முன் - அவள் வருவதற்கு முன்.

பாங்கியர் கேட்டு நற்றாய்க்கு உணர்த்தல்.

363. நொந்தாரம் போல்விழி நீர்சொரி யேலொரு நோவுமின்றிச்
சந்தா ரிளமுலை கோடீச்சு ரேசர் தமதருளால்
வந்தா ளிறைவ னொடுமீண் டெனச்சிலர் வந்துமொழி
தந்தாரன் னேயின்று தான்பயந் தாயந்தத் தையலையே.

(கு - உரை.) ஆரம்போல் - முத்துக்களைப்போல. விழிநீர் - கண்ணீரை. சொரியேல் - சொரியாதே. சந்து - சந்தனம். இறைவனொடு மீண்டுவந்தாள்; (ஆதலால்) அந்தத் தையலை இன்றுதான் பயந்தாய்.

நற்றாய் தலைமகன் உளங்கோள் வேலனை வினாதல்.

('தலைவன் தலைமகளைத் தன்னூருக்கு அழைத்துச் செல்வானோ? அல்லது எம்மனைக்கே அழைத்து வருவானோ?' என்று வேலனை நற்றாய் கேட்டல். வேலன் வெறியாட்டாளனென்றும் வழங்கப்படுவான்; வேலைச் கையில் வைத்துக்கொண்டிருத்தலின் இப்பெயர் பெற்றான். இக்காலத்து இவன் பூசாரியென்று வழங்கப்படுவான்.)

364. நாலா ரணன்பணி கோடீச்சு ரேசர்தந் நாட்டினுறு
வேலா வுனையொன்று கேட்கலுற் றேன்சுர மீண்டுவரும்

கோலா கலன்மின்னை யென்மனைக் கேயுறக் கூட்டிடுமோ
பாலா கியதன் மனையுய்க்கு மோவெண்ணிப் பார்த்துரையே.

(கு - உரை.) நாலாரணன் - பிரமதேவன். வேலா - படிமத்தானே. கோலாகலன் - களிப்பையுடைய தலைவன். மின்னை - தலைவியை. கூட்டிடுமோ - அழைத்து வருவானோ. பாலாகிய - பக்கத்திலே உள்ள. தன் மனை உய்க்குமோ - தன் இல்லினை அடைவிப்பானோ. வேலா உரை.

---

## தன்மனை வரைதல்.

[தலைவன் தலைவியைத் தன்வீட்டில் மணஞ்செய்து கொள்ளுதல்.]

### நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினாதல்.

(தன்மனையில் தலைவிக்கு மணஞ்செய்ய வேண்டு
மென்னும் விருப்பத்தால் நற்றாய்
செவிலியை வினாதல்.)

365. பொன்மலர்ச் செஞ்சடைக் கோடீச்சு ரேசனைப் போற்றிறைவன்
தன்மனைப் பான்மின்னைக் கொண்டே கினுமவன் றாயொடுநாம்
உன்மனைப் பான்முற் சிலசடங் காற்றிமெல் லோதிதனக்
கென்மனைப் பான்மணஞ் செய்திடச் செய்கென் றியம்புவமே.

(கு - உரை.) பொன்மலர் - பொன்னைப்போன்ற கொன்றைமலரை அணிந்த. இறைவன் - தலைவன். மின்னை - தலைவியை. முன் சில சடங்கு ஆற்றி - முன்பாகச் செய்யவேண்டிய சில சடங்குகளைச் செய்து; அவை சிலம்புகழி நோன்பு முதலியன. மெல் ஓதி தனக்கு - தலைவிக்கு. செய்க என்று. அவன் தாயொடு இயம்புவம். தன்னோடொத்த பருவமும் தன்மையும் உடையாளாதலின் தலைவன் தாயோடு இயம்புவமென்றாள்; "நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும், எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச், சொல்லி னெவனோ மற்றே வென்வேற், மையற விளங்கிய கழலடிப், பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே" ஐங். 399.

### செவிலிக்கு இகுளை வரைந்தமை உணர்த்தல்.

(தன்மனையில் தலைவன் மணஞ்செய்துகொண்டதைத்
தோழி செவிலிக்கு அறிவுறுத்தல்)

366. தகரத் தனிவரி யாறைந் தினர்வந்து சாற்றினர்தந்
நகரத்தி லேதந் தமர்சூழ மன்ற னவின்றனராம்
பகரத் தலைவர்நம் மொண்ணுத லாட்கியல் பாங்கினொடு
மகரத் தடங்குழைக் கோடீச்சு ரேசர் வரையனையே.

(கு - உரை.) தகரத் தனிவரி - தகரவருக்கம்; ஆறு ஐந்தினர்; ஆறு: ஆ, ஐந்து: து; தலைவன் மணங்குறித்துத் தூதாக வந்தவர். தம் நகரத்திலே. மன்றல் நவின்றனராம் - மணம் செய்து கொண்டனராம். பகர் அத்தலைவர். அத்தலைவர் மன்றல் நவின்றனராம். நம் ஒண்ணுத லாட்கு இயல் பாங்கினொடு - நம் தலைவிக்குப் பொருந்திய முறையில். பாங்கினொடு மன்றல் நவின்றனராம். மகரத்தடங்குழை - சுறுவடிவாகச் செய்த காதணி. அனையே - அன்னையே.

இதில், தகரம் நகரம் பகரம் மகரமென்று இவ்விரண்டாய்த் தொடர்ந்த இனவெழுத்துக்களின் பெயர்கள் சாரியையுடன் அடிகளின் முதலில் அமைந்திருப்பது அறியற்பாலது. நகாரங்களுளொன்றைத் தந் நகரம் என வழங்கும் வழக்கும் தொனிக்கின்றது.

வரைந்தமை செவிலி நற்றாய்க்கு உணர்த்தல்.

(வரைந்தமை - தலைவனும் தலைவியும் மணம் செய்து கொண்டதனை.)

367. மாதிவ ணீமுன்பு கோடீச்சு ரேசர் வரத்திற்பெற்ற
பாதிரி யோது பருதியி னப்பண் பகரிருசொல்
ஆதியு மீறும் புணர்பேர்முன் னாகின ளவ்வரசன்
ஓதிடு மற்றைய தானான் மணந்தங்க ளூரிழைத்தே.

(கு - உரை.) மாது இவண் நீ; மாது: விளி. பாதிரி ஓது பருதியின் நாப்பண் - பாதிரி, பருதி யென்ற சொற்களின் நடுவெழுத்துக்கள்; அவை திரு; என்றது தலைவியை. நீ முன்பு பெற்ற திருவென்க. பகர் இருசொல் ஆதியும் ஈறும் புணர்பேர் - முற்சொன்ன இரண்டு சொற்களின் முத லெழுத்தும் ஈற்றெழுத்தும் சேர்ந்த பேர்களில், (பாதிரி, பருதி); என் றது பாரி, பதி என்ற சொற்களை. முன் ஆகினள் - முதற்பேராகிய பாரி யானாள்; பாரி - மனைவி. நீ பெற்ற திரு பாரியானாள். அவ்வரசன் - அந் தத் தலைவன். ஓதிடும் மற்றையது ஆனான் - முன்னர் முதலும் ஈறும் சேர்ந்த பேர்களுள் மற்றொன்றாகிய பதி ஆனான்; பதி - கணவன். அர சன் பதி ஆனான். தங்களூரில் மணமிழைத்துத் திரு பாரியானாள்; அர சன் பதி ஆனான். இருவரும் மணஞ்செய்துகொண்டு கணவனும் மனைவியு மானார்களென்பது கருத்து.

இதில் எழுத்தலங்கார வகை அமைந்துள்ளது.

தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கு இயம்பென்றல்.

(நுமர்க்கு - உன்னைச் சார்ந்தவர்களுக்கு.)

368. கந்தனந் தாதைதென் கோடீச் சுரமன்ன கன்னிமுன்பு
தந்தனண் மாலை யெமக்கின்றெம் மாலையைத் தன்கழுத்திட்

டந்தன நீடுமெம் மூர்மன்ற லாற்றி யனையளொடு
வந்தனம் வந்தனஞ் செய்வா னுமர்க்குரை வாணுதலே.

(கு - உரை.) கந்தன் அம் தாதை - முருகனுடைய அழகிய தந்தை. முன்பு மாலை எமக்குத் தந்தனள் - முன்பு மயக்கத்தை எனக்குக் கொடுத்தனள்; பூமாலை யென்பது வேறு பொருள். இன்று எம் மாலையைத் தன் கழுத்தில் இட்டு-இன்று யாம்தந்த மலர் மாலையை அவளுடைய கழுத்தில் அணிந்து. அம் தனம் நீடும்; தனம் - பொருள். மன்றல் ஆற்றி - மணம் செய்து. வந்தனம் செய்வான் வந்தனம் - வணங்குதற்காக வந்தேம். நுமர்க்கு - உம்மவராகிய நற்றாய் முதலியோருக்கு.

இருவரும் மணஞ்செய்து கொண்டதைக் கூறுவதோடு கந்தனந் தாதை யென்றதைக் கூறினான், பின் குலம் பெருகுமென்பதை நினைந்து. இவ்வாக்கியம், "எந்தையே கந்தர் தந்தாய்" (திருவால. 16 : 8.) என்ற தருமியின் கூற்றை நினைப்பிக்கின்றது.

இதில், மாலையென்பதும் வந்தனம் என்பதும் மடங்கி வந்தன.

பாங்கி தான்அது முன்னே சாற்றினேனென்றல்.

(அது - நீ மணம் செய்துகொண்டதனை.)

369. மால்பற் றிடத்தினர் கோடீச் சுரவரை வாழெமர்க்குப்
பால்பற் றியநுமர் தம்முன்பு நீமணப் பந்தரின்மின்
கால்பற் றியதுமென் மந்திர மோதிக்கை பற்றியதூஉம்
வேல்பற் றியமன்ன முன்னே யுரைத்தேன் மிகமகிழ்ந்தே.

(கு - உரை.) மால் பற்று இடத்தினர் - திருமால் பொருந்திய இடப் பாகத்தை உடையவர். வரை - மலையில். பால் பற்றிய - பகுதியை உடைய. மணப்பந்தரில் - கலியாணப்பந்தலில். மின் கால் பற்றியதும் - தலைவியின் காலை அவள் அம்மி மிதிக்கையிற் பிடித்ததையும்; "நங் காலையங் கைப்பற்று காலையும்" (291) என்றார் முன்னும். மென் மந்திரம் - மென்மையாக உச்சரிக்கப்படும் மந்திரத்தை.

---

## உடன்போக்கு இடையீடு.

[தலைவனும் தலைவியும் சென்றவிடத்து உடன்போக்கில் நிகழும் தடை.]

நீங்குங் கிழத்தி பாங்கியர்க்குத் தன் செலவுணர்த்தி விடுத்தல்.

(தன்செலவு - தான் தலைவனுடன் செல்லுதலை.)

370. இல்லத்தும் பாலுற நெஞ்சோதிற் றன்னதை யேலுங்கற்பு
மெல்லத் தடுத்தழைத் தேகலிற் போவலென் வேந்தர்பின்னென்

றெல்லத் துடியிடைப் பாங்கியர்க் கென்செல வோதிச்சென்மின்
சொல்லத் தகையரன் கோடீச் சுரவெற்பிற் றூயவரே.

(கு - உரை.) நெஞ்சு இல்லத்து உம்பால் உற ஓதிற்று. எனும் கற்பு அன்னதை மெல்லத் தடுத்து ; அன்னதை - இல்லத்துறுதலை. என்வேந் தர்பின் போவல். ஒல் அதுடி இடைப் பாங்கியர்க்கு. என் செலவு - நான் செல்வதை. தூயவரேயென்றது அந்தணரை ; 371 - ஆம் செய் யுளைப் பார்க்க.

தலைவி தன் செலவு ஈன்றாட்கு உரைத்து விடுத்தல்.

(ஈன்றாட்கு - நற்றாய்க்கு.)

371. சேவை யுகைப்பவர் கோடீச்சு ரேசர் சிலம்பிலென்றன்
பாவையெங் கேகின ளென்றழூஉந் தாய்க்கென் பணிவுரைத்துக்
கோவை விரும்பி யுடன்போ தலுஞ்சொல்லிக் கூட்டுறுமென்
பூவையைப் போற்றச்சொன் னேனென்று மோதுமின் பூசுரரே.

(கு - உரை.) சேவை - இடபவாகனத்தை. என்றன்பாவை - என் மகள். என் பணிவு - என்னுடைய வணக்கத்தை. கோவை விரும்பி உடன்போதலும் - தலைவனைவிரும்பி அவனுடன் செல்லுதலையும். கூட்டு உறும் என் பூவையைப் போற்ற - கூட்டிலே இருக்கும் எனது நாகண வாய்ப் புள்ளைப் பாதுகாக்கும் வண்ணம்.

நற்றாய்க்கு அந்தணர் மொழிதல்.

(தலைவியால் வேண்டப்பட்ட அந்தணர் தலைவனுடன் அவள் சென்றதை நற்றாய்க்குத் தெரிவித்தல்.)

372. தெள்ளம் புலிபுனை கோடீச்சு ரேசர் சிலம்பிடத்து
வெள்ளம் வருமு னணைகோலி டாதது மேற்பட்டபோ
துள்ள முருகியென் கண்டேமுன் பெண்ணையங் கோதுமொரு
வள்ளல்பின் சென்றாள் வருவாள்சின் னாளின் மனைக்கணங்கே.

(கு - உரை.) அம்புலி - சந்திரனை. அணை கோலிடாது - அணை யிட்டு மறிக்காது. மேற்பட்டபோது - மிக்குவந்தகாலத்தில். உருகி என் - உருகினால் வரும் பயன் யாது. உன் பெண்ணைக் கண்டேம். சின்னாளில் மனைக்கு வருவாள். வெள்ளம்......உருகி என் : "ஆயவெள்ளம், வரு முன்வந் தாரிலை யேயணை கோலநம் மன்னவரே" வெங்கைக். 147.

தமர் பின்சேறலைத் தலைவி கண்டிரங்கல்.

(தன்னை மீட்டுக்கொள்ள வேண்டுமென்று தம்மவர் பின் தொடர்ந்து வருதலைத் தலைவி கண்டு வருந்துதல்.)

373. ஆன விதற்கென்ன செய்வோ மிறையை யருக்கனைமேற்
றானவர் சூழ்ந்திடு மாறெனப் போர்செயத் தாவிநந்தங்
கானவர் சூழ்ந்தனர் வில்லம்பு வேல்வளை கைப்பிடித்து
வானவர் சூழ்ந்திடு கோடீச் சுரநம்பர் மால்வரைக்கே.

(கு - உரை.) அருக்கனைமேல் தானவர். சூழ்ந்திடுமாறென - சூரியனை அசுரர்கள் சுற்றிக்கொண்டதுபோல ; இவ்வசுரர் மந்தேகரெனப் படுவர் ; "கதிரவ னோக்கித் தானுங் கலந்துகீள் குடபால் வெற்பில், எதிருறு மரக்க ரென்று மிகலுமா வேட்டை யாடி" (திருவிடை. வரகுண. 13.) நந்தங்கானவர் - நம் சுற்றத்தாராகிய வேடர்கள். கானவர் வில் அம்பு வேல் வளை கைப்பிடித்து இறையைச் சூழ்ந்தனர். தலைவனுக்குச் சூரியனை உவமை கூறியது அவனது விறலைப் புலப்படுத்துவதற்காக.

## தலைவன் தலைவியை விடுத்தல்.

(வருபவர்களைத் தலைவியின் உறவினரென்றறிந்து
அவர்களோடு போர்செய்தல் ஆகாதென்
றெண்ணி அவர்கள்பால் தலைவன்
தலைவியை விடுத்தல்.)

374. தேனேற்ற கோதை வனவேட ரேலொரு திண்கணையில்
வானேற்று வேனிவ ராவியெல் லாநுமர் வந்தனரேல்
ஆனேற் றினர்திருக் கோடீச்சு ரேச ரணிவரைக்கண்
நானேற்றி டாதகல் வேனீ யவர்பின் னடந்தருளே.

(கு - உரை.) கோதை : விளி. வன வேடரேல் - பாலைநிலத்தில் வாழும் எயினர்களாயின். ஒரு திண்கணையில் இவர் ஆவியெல்லாம் வான் ஏற்றுவேன் - ஒரு வலிய அம்பினால் இவர்களைக்கொன்று இவருயிர்களைத் தேவருலகத்திற்கு விடுப்பேன். நுமர் வந்தனரேல் ; வந்தனர் நுமரே லென விகுதி பிரித்துக் கூட்டுக. ஆன் ஏற்றினர். ஏற்றிடாது - எதிர்த்தல் செய்யாமல்.

## தமர்பின் செல்பவள் அவன்புறம் நோக்கிக் கவன்று அரற்றல்.

(தலைவன் புறங்காட்டிச் செல்லுதலைத் தலைவி
கண்டு கவலையுற்றுக் கூறுதல்.)

375. வெற்றிகொள் வேந்தர்தென் கோடீச் சுரம்வாழ் விமலர்வெற்பிற்
குற்றியன் மேவி டுகரமுன் னோருயிர் கூடுறுங்கால்
ஒற்றிய மெய்விட் டகல்வதி னம்மையிங் குய்த்தகன்றார்
பற்றிய வேடர் வரனோக்கி நம்மேற் பரிவிதுவே.

(கு - உரை.) குற்றியல் மேவிடு உகரம்முன் - குற்றியலுகரத்திற்கு முன். ஓர் உயிர் கூடுறுங்கால் - உயிரெழுத்தொன்று வந்து புணருங் காலத்து. ஒற்றிய மெய்விட்டு அகல்வதின் - அக்குற்றியலுகரம் தான் நின்ற மெய்யை விட்டு விட்டு நீங்குவதுபோல; "உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்" (நன்.) இங்கு நம்மை உய்த்து அகன்றார் - இவ்விடத்தில் நம்மை வைத்துவிட்டு நீங்கினார். வேடர் வரல்நோக்கி நம்மை உய்த்து அகன்றார். பரிவு - அன்பு. நம் சுற்றத்தாராதலின் பொறாது நம்மை விட்டுச் சென்றார்; இது நம்பாலுள்ள அன்பை விளக்கிய தென்றபடி;

---

## வரைதல்.

[மணஞ்செய்து கொள்ளல்.]

### வரைந்துழிக் கண்டோர் மகிழ்ந்துரைத்தல்.

(மணஞ்செய்துகொண்டவிடத்து அதனைக்
கண்டவர் மகிழ்ந்து கூறுதல்.)

376. அன்றியல் வள்ளிசெவ் வேண்மண நோக்கின மாங்கதன்பின்
இன்றிவர் செய்ம்மணங் கண்டோ மிவைமற் றிரண்டினுமே
குன்றவர் பேதையர் மன்றல்கண் டோர்விழி கொண்டதின்பம்
ஒன்றிரு மூன்றுகட் கோடீச் சுரவள்ள லோங்கலிலே.

(கு - உரை.) அன்று வள்ளி செவ்வேள் இயல் மணம் நோக்கினம் - பண்டைக்காலத்தில் வள்ளி முருகன் ஆகிய இவர்களுக்கு நிகழ்ந்த கலியாணத்தைக்கண்டு களித்தோம். மற்று: அசை. குன்றவர் பேதையர் - குறமகளிர்; என்றது வள்ளி நாய்ச்சியாரையும் தலைவியையும். மன்றல் - கலியாணம். ஒன்று இரு மூன்று கண் - பொருந்திய பெரிய மூன்று விழிகளையுடைய. ஓங்கலில் - மலையில்.

ஒன்றிரு மூன்று: எண்ணணி.

---

## இல்வாழ்க்கை.

[தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்துதல்.]

### தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

(உன் உதவியாலன்றோ நான் இவளை அடைந்தே
னென்று பாங்கியைத் தலைவியின்முன்
தலைவன் புகழ்தல்.)

377. கான்செய்த கொன்றையர் கோடீச்சு ரேசர் கதிர்வரைமேல்
தேன்செய் தனவித் திருவின்ப நானுறச் செய்யுனக்கு

நான்செய் திடுநன்றி காணேன் கதிர்முலை நன்னுதலாய்
வான்செய்த நன்றிக் குலகோ ரியற்றுகைம் மாறில்லையே.

(கு - உரை.) கான்செய்த - நறுமணத்தை உண்டாக்கிய. தேன் செய்தன - தேன் இனிமை செய்வதைப்போன்ற. இதிரு இன்பம் - இந்தத் தலைவியாற் பெறும் இன்பத்தை. வான் - மேகம். இதன் ஈற்றடி, "கைம் மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள்.) என்பதன் கருத்தையும், "வான்செய்த நன்றிக்கு வையகத் தோர் செய்யுங்கைம் மாறுண் டேயோ" (திருவிளை. மாணிக்கம் விற்ற. 86) என்பதன் சொற்பொருளையும் உள்ளடக்கி நின்றது.

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

378. இங்கடி யேற்கு முகமனென் றோமன்ன வென்றனையும்
எங்குலத் தோடிந்த மின்னையும் போற்றினை யின்னளொடு
திங்களங் கண்ணியர் கோடீச் சுரந்தனிற் செந்திருவும்
பங்கயக் கண்ணனும் போல்வாழ்தி யென்றும் பலனுறவே.

(கு - உரை.) முகமன் - உபசாரம். மன்ன : விளி. போற்றினை - பாதுகாத்தாய். இன்னளொடு - இத்தலைவியுடன். திங்களங் கண்ணியர் - திங்களாகிய கண்ணியை உடையவர்; "கூனற் றிங்கட் குறுங்கண்ணி" (திருஞா. தே.) செந்திருவும் - திருமகளையும். பங்கயக்கண்ணனும் - தாமரைபோன்ற விழிகளையுடைய திருமாலையும். இன்னளொடு வாழ்தி. பலன் - பயன்; என்பது அறம் முதலிய உறுதிப் பொருள்களை.

தலைவியை வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை வினாதல்.

(வினாதல் - பாங்கி வினாதல்.)

379. இமையா திருத்தி யிமைக்கிற் பிரிவென் றிறைவர்முன்னின்
றுமையா ளிடத்தினர் கோடீச்சு ரேச ருயர்வரைப்பால்
அமையார் புயத்தா யனைகாப் பினுநீ டருந்தனத்துக்
கெமையா ளிவர்தம் பிரிவினு மெவ்வா றிருந்தனையே.

(கு - உரை.) இறைவர் முன் நின்று இமைக்கின் பிரிவு என்று இமையாது இருத்தி - தலைவருடைய முன்னே நிற்கையிலும் கண்ணை இமைத்தால் அவரைக் காணாத பிரிவு நிகழுமெனக்கருதி இமையாமலே இருப்பாய்; "இமைப்பிற் கரப்பாக் கறிவல்" (குறள். 1129.) உமை ஆள் இடத்தினர். அமை ஆர் புயத்தாய் - மூங்கில்போன்ற தோள்களை உடையாய். அனை காப்பினும் - தாயினுடைய காவலிலும். நீடு அருதனத்துக்கு - பெரிய அரியபொருளின் பொருட்டாக. இருந்தனை - அவரைப் பிரிந்து ஆற்றி இருந்தாய்.

உமையாளிடத்தினரென்றது பிரிவின்மையைச் சுட்டியபடி ; சிற். 311-ஆம் செய்யுளைப் பார்க்க. பிரிவிலராய அவ்விருவர் வாழும் இடத்திற் பிரிவை எவ்வாறு ஆற்றினுய் என்றபடி.

தலைவி வருந்தாதிருந்தமை கூறல்.

(தலைவனது கருணை எனக்கு இன்பத்தையே
அளித்து வந்தமையால் வருந்தாதிருந்தே
னென்று தலைவி பாங்கிக்குக் கூறல்.)

380. சிதம்பயில் வேந்தருள் கோடீச் சுரநகர்த் தேவர்பிரான்
பதம்பணி யாரழற் கண்போ லிருந்து பனிக்கதிரோன்
வதம்புரி தென்றல்பைங் கன்னல்வில் வேளினை மாற்றியெனக்
கிதம்பண் ணியவத னுற்றுயர் காண்கில னேந்திழையே.

(கு - உரை.) சிதம் - ஞானம். வேந்து அருள் - தலைவனது கருணை ; எழுவாய். தேவர் பிரான் - தேவர்கட்குத் தலைவனுடைய. பதம் - திருத்தாளையும் ; பணி - ஆபரணமாகிய பாம்பையும் ; அழற்கண் - அக்கினிக் கண்ணையும் ; பனிக்கதிரோன் - சந்திரனையும் ; வதம் புரிதென்றல் - அழித்தலைச்செய்யும் தென்றற்காற்றையும் ; பைங்கன்னல் வில் வேளினை - பசிய கரும்பாகிய வில்லையுடைய மன்மதனையும். மாற்றி - என்னைத் துன்புறுத்தாமல் விலக்கி. இதம் - இன்பத்தை. பண்ணிய அதனுல் - செய்த அக்காரணத்தால். வேந்தருடைய அருள் தேவர்பிரானது பதம்போலிருந்து பனிக்கதிரோனையும் பணிபோலிருந்து தென்றலையும் கண்போலிருந்து வேளினையும் மாற்றினவென நிரனிறையாகக் கொள்க. சிவபிரான் தம் திருத்தாளால் தக்கயாகசங்காரத்திற் சந்திரனைத் தேய்த்ததையும், பாம்பு காற்றை உண்ணும் இயல்பினையும், நெற்றிக்கண்ணுல் அவர் மன்மதனை எரித்ததையும் முறையே நினைந்து இங்ஙனம் கூறினுள்.

பாங்கி தலைவனை வருந்தாதிருந்தமை வினுதல்.

381. மையமர் கண்டர்தென் கோடீச் சுரமன்ன மன்னவெழிற்
செய்யுறு மிந்த மடவன்ன மின்றிமுன் செஞ்சிலைவேள்
ஐயம் புகும்பொழு தெவ்வாறு நீவந் தடர்தலுறு
வெய்ய விரகப் பசிபொறுத் தாய்சொல் விளங்கிடவே.

(கு - உரை.) மை - கருமைநிறம். மன்ன : விளி. எழில் செய்யுறும் - அழகைச் செய்கின்ற. இந்த மட அன்னம் இன்றி - இந்த மடப்பம் பொருந்திய அன்னப்பறவையைப் போன்ற தலைவி யில்லாமல். முன் - நீ பிரிந்திருந்த அக்காலத்தில். செஞ்சிலை வேள் ஐ அம்பு உகும் பொழுது - மன்மதனுடைய ஐந்து மலரம்புகள் நின்மேற் சொரியப்படும்

பொழுது. அடர்தலுறு - வருத்துதலைச்செய்யும். விரகப்பசி - விரகமாகியபசி. எவ்வாறு பொறுத்தாய் - தலைவி யில்லாதபொழுது நீ எவ்வாறு ஆற்றி யிருந்தாய். சொல் - சொல்வாயாக.

மடத்திலேபெறும் சோறில்லாமல் வேள் பிச்சை புகும் அக்காலத்தில் எங்ஙனம் பசியைப் பொறுத்தாயென்பது மற்றொருபொருள்.

இச்செய்யுளோடு 95 - ஆம் செய்யுளை ஒப்பிடுக.

முதலடியில் மன்ன மன்ன வென்பது மடக்கு.

பாங்கி சேவிலிக்கு இருவர் அன்பும் உரைத்தல்.

(இருவரன்பும் - தலைவன் தலைவி இருவருடைய காதற்சிறப்பையும்.)

382. வேலுறழ் கண்ணிக்கு மேந்தற்கு மெய்யுரு வேறிவர்கள்
ஏலுறு மாவியு முள்ளமு மன்புட னின்பு மொன்றும்
மாலுறு பாகத்தர் கோடீச் சுரத்தெங்கண் மன்னுமுயிர்
போலுறு மம்மனை நோக்கிடிங் கின்னதுன் புண்ணியமே.

(கு - உரை.) வேல் உறழ் கண்ணிக்கும் - வேலை ஒத்த கண்ணையுடைய தலைவிக்கும். மெய் உரு - உடலாகிய உருவம். இவர்கள் ஏலுறும் - இவர்கள் ஏற்ற. ஆவியும் - உயிரும். ஒன்றையின்றி ஒன்று அமையாமையின் ஆவி முதலியன ஒன்றுமென்றார்; "ஆவியொன்றுட லிரண்டின் வாழ்நாள்", "மடமயி லன்னாண் மணமிசை வுற்ற வளவன்றன், னுடனுட லோரிரு வகையொன் றுயிரென வுரைசெய்ய" (திருவிடை. சித்திரகீர்த்தி. 8, சுணங்கன்கதி. 6.) மால் - திருமால். எங்கள் உயிர் போல் உறும் அம்மனை; அம்மனை - தாயே. நோக்கிடு. இன்னது - இங்ஙனம் இருத்தல். உன் புண்ணியமே - நீ செய்த நல்வினையின் பயனேயாம்.

பாங்கி இல்வாழ்க்கை நன்றென்று சேவிலிக்குஉரைத்தல்.

(இல்வாழ்க்கை - இருவரது இல்வாழ்க்கையும்.)

383. வன்புற் றரவணி கோடீச்சு ரேசர் வரையினுன்பெண்
மென்புத் தனம்விருந் தோர்க்கூட்டி வேந்தற்கும் வேண்டியிட்டங்
கின்புற்றுப் பின்றுயில் கூர்ந்துமுன் காலை யெழுந்திறைஞ்சி
அன்புற் றிடுமனை வாழ்க்கையின் மேலவ ளாயினளே.

(கு - உரை.) புற்றரவென்றது சாதியடை; "புற்று டரவார்த்த புனிதன் றன்னை" (தே. திருநா.) மென் புத்தனம்-மெல்லிய புதியசோற்றை. விருந்தோர்க்கு ஊட்டி. பின் துயில் கூர்ந்து முன் காலையெழுந்து: "பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே" (தனிப்.); "முன்னுறங்கப்

பின்னுறங்கல் பின்னெ ழாதல்" (திருக்குற். திருநகரச். 31.) மேலவள் - சிறந்தவள்.

செவிலி தலைவிகற்பியல் நற்றாய்க்கு உரைத்தல்.

384. வாலிய னீற்றரன் கோடீச் சுரந்தனில் வாழ்ந்திடுநம்
பாலியற் சொல்லி யிறைமீது வைத்த பரிவுமவள்
மேலியற் கற்பும் பொறையுமுன் னோர்ந்திடு மேதினியோர்
சாலியப் பெண்ணெனக் கூறுகின் றார்மலர்த் தாழ்குழலே.

(கு - உரை.) வால் இயல் நீற்று அரன்; வால் - வெண்மை. பால் இயல் சொல்லி - பாலைப்போன்ற இயல்பையுடைய மொழியையுடைய தலைவி. இறைமீது - தன் கணவன்பால். பரிவும் - அன்பும். அவள்மேல் இயல்கற்பும் - அவளது மேலான இயல்பையுடைய கற்பும். சாலி அப் பெண் என - அந்தப்பெண் அருந்ததியென்று. மேதினியோர் கூறுகின்றார்.

சாலியப் பெண்ணென்பதற்குச் சாலியர்குலத்துப் பெண்ணென மற்றொருபொருளும் தோற்றுகின்றது; "பொருவருங் கூற்றின் மேலும் போர்த்தொழி றொடங்கும் வேற்கண், உருவமிக் குடைநல் லாருஞ் சாலிய ருண்மை மாதோ" தனியூர்ப்புராணம், நகரப். 16.

செவிலி மனைவாழ்க்கைத்தன்மை உரைத்தல்.

(தலைவியின் மனைவாழ்க்கைத்தன்மையை.)

385. மறியார் கரத்தரன் கோடீச் சுரத்துநம் வாணுதலாள்
வறியார்க் கிரங்க லறங்காத்த லின்சொன் மருவுறுதல்
நெறியார் பொருட்குத் தகவே யழித்த னிகழ்பிறவும்
அறியா நடக்கு மனைவாழ்க் கையினன் கமைந்தனளே.

(கு - உரை.) மறி - மான். நெறி ஆர் பொருட்குத் தக அழித்தல் - நல்ல வழியே பொருந்திய வருவாய்க்கு ஏற்பச் செலவுசெய்தல்; "தற் கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" (குறள். 51.) அறியா - அறிந்து. மனை வாழ்க்கையில் நன்கு. வாணுதலாள் அமைந்தனள்.

செவிலி நற்றாய்க்கு இருவர்காதலும் உரைத்தல்.

(இருவர் - தலைவன் தலைவி.)

386. சந்திர சேகரர் கோடீச் சுரமன்ன தையன்மின்னே
தந்திர மாகத்தன் காதலைக் கேள்வர் தமக்களித்து
முந்திர வாதவர் காதலைத் தான்கொண்ட மோகத்தவர்
எந்திரத் தேரெங்ங னேகினு மாலையி லீண்டுறுமே.

(கு - உரை.) சிவபெருமானுக்குரிய இருபத்தைந்து மூர்த்தங்களுள் சந்திரசேகர மூர்த்தமென்பது ஒன்று. தையல் - தலைவி. தந்திரம் - உபாயம். கேள்வர் - கணவர். இரவாது-அவர்பால் தானே வலிய வேண்டாது. மோகத்து - மோகத்தினால்; அன்பினால். அவர் - அத்தலைவருடைய. எந்திரத்தேர் : வண்டி, தேர் முதலியவற்றிலுள்ள மரத்தின் சேர்க்கையை எந்திரமென்றல் மரபு ; "எந்திர வூர்தியோ டேனவை யியற்றி" பெருங். 2. 8 : 188. மாலையில் - மாலைக்காலத்தில். ஈண்டுறும் - விரைந்து மீண்டு வந்து சேரும்.

இதனால் தலைவன் மனத்தைத் தன்வசப்படுத்தி நடத்துகின்றாளென்று தலைவியின் நுண்ணறிவு கூறப்பட்டது.

---

## பரத்தையிற் பிரிவு.

[பரத்தையின் இன்பம் நுகர்தற்குத் தலைவன்பிரிதல்.]

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏதுவிதாகும் இறைவிக்கென்றல்.

(அங்ஙனம் தலைவன் பிரிந்தவிடத்து அச்செயலை அறிந்தவர்கள் இவன் இங்ஙனம் பிரிந்தது தலைவியின் ஊடலுக்குக் காரணமா மென்றல்.)

387. ஆடக வில்லரன் கோடீச் சுரத்திந்த வண்ணலந்த
நாடகம் பாட்டிய லுட்கோ ளபிநய நாடிவிழைந்
தேடகப் பூங்குழல் வேசையிற் கேகிடு மீதிறைவி
ஊடக மிக்க புலவியின் காரணத் துற்றிடுமே.

(கு - உரை.) ஆடகவில் - பொன்மலையாகிய வில்லையுடைய. நாடகம் - பரதநாட்டியம்; பாட்டியல் - சங்கீதம்பாடும் இயல்பு ; உட்கோள் - பாவம் ; அபிநயம் - பாவங்களைக் கைகள் முதலியவற்றாற் புலப்படுத்தல் ; இவை பரத்தையர் பாலமைய வேண்டிய கலைகள் ; சிலப். 14 : 167, 22: 138 - 9. ஏடகப் பூங்குழல் - இதழ்களை அகத்தேயுடைய பூவையணிந்த கூந்தலை யுடைய. வேசை இற்கு - பரத்தையின் வீட்டிற்கு. ஏகிடும் - போவான். இறைவியூடு அகம் மிக்க புலவியின் காரணத்து - தலைவியினிடத்து நெஞ்சில் மிகுந்த பிணக்கத்திற்குக் காரணமாக ; ஊடு அகம்- ஊடுகின்ற மனமுமாம். உற்றிடும் - பொருந்தும். ஈது உற்றிடும்.

தனித்துழி இறைவி துனித்து அழுதிரங்கல்.

(தனித்தவிடத்துத் தலைவி துன்பமுற்று வருந்துதல்.)

388. வினைத்துயர் தீர்த்திடுங் கோடீச் சுரநம்பர் வெற்பிலுல
கனைத்தையும் வெல்வேள் கலகத்தி லிந்த வமளியிலே
எனைத்தனி வைத்துப் பிறரிலங் காத்தற் கிறைவர்சென்றார்
கனைத்துறு தென்றலுந் திங்களும் வந்துனைக் காக்குமென்றே.

(கு - உரை.) வேள் கலகத்தில் - மன்மதன்செய்யும் யுத்தத்தில்; "மதன் கலகத்திலென்னைத் தனி யிங்கேவைத்து" (சா. துற); "வேள் கல கத்தணங்கே" (திருவெங்கைக்கோவை, 15.) அமளியில் - படுக்கையில்; போர் செய்வார் செய்யும் ஆரவாரத்தில் என்பது வேறுபொருள். பிறர் இலம் காத்தற்கு - பிறருடைய வீட்டைக் காப்பதன்பொருட்டு. இறைவர் காத்தற்குச் சென்றார். கனைத்து உறு - முழங்கிப் பொருந்துகின்ற. தென்றல் முதலியன காக்குமென்றது, அவைகாவா, மிகத்துன் புறுத்து மென்பதனைக் குறிப்பாகச் சொல்லியபடி.

(வேள் - சிற்றரசன்) செய்யும் போரமளியில் என்னைக் காத்தற்குரியவர் என்னைத் தனியே விட்டுப் பிறரைக் காக்கச்சென்றாரென்பது மற்றொருபொருள்.

ஈங்கிது என்னெனப் பாங்கி வினுதல்.

(இங்ஙனம் நீ துன்புறுதற்குக் காரணம் யாதென்று
தலைவியைப் பாங்கி வினுதல்.)

389. இரவி யெழுந்து மிருளே திமையவ ரிந்திரன்மால் [பில்
பரவி வணங்குதென் கோடீச் சுரவள்ளல் பைம்பொன்வெற்
குரவி வருங்குழன் மானே மகிழ்ந்து கொழுநருன்கண்
விரவி யிருந்திடு நாளின்ன லேது விளம்புகவே.

(கு - உரை.) இரவி - சூரியன். குரவு இவரும் குழல் - வாசனை பரவிய கூந்தலையுடைய. உன்கண் - உன்னிடத்தில். விரவி இருந்திடு இந்நாள் - பயின்று இருக்கும் இந்தக்காலத்தில். என்றும் பிரியாதவாறு கற்பொழுக்கத்தை மேற்கொண்ட இக்காலத்திற் களவொழுக்கத்திற் பிரிவு கருதி இன்னலுற்றதுபோல உறுதல் என்னகாரணம் என்றபடி.

இஃது எடுத்துக் காட்டுவமையணி.

இறைமகன் புறத்தொழுக்கு இறைமகள் உணர்த்தல்.

(புறத்தொழுக்கு - தலைவன் பரத்தைபாற் சென்றதனை.)

390. பதுமா தனன்பணி கோடீச்சு ரேசர் பனிவரைவாழ்
விதுமா முகிசென்று சென்றுபல் போதினும் வீழ்ந்துவரி

மதுமாந் திடுதலின் மாலாயென் னின்ப மருவினவர்
பொதுமாத ரின்பு முறவகன் றூர்கண்ணன் போக்கறிந்தே.

(கு - உரை.) பதுமாதனன் - பிரமன். விதுமாமுகி - சந்திரனைப் போன்ற அழகிய முகத்தையுடையாய்; இச்சொல் அசமுகியென்பது போல்வது. வரி - வண்டு. மதுமாந்திடுதலின் - தேனை அருந்துவது போல. வரி வீழ்ந்து மாந்திடுதலின். மாலாய் - காமமயக்கம் உடையராய், திருமாலாகி. பொதுமாதர் - பரத்தையர்களுடைய, இடைச்சியர்களுடைய. கண்ணன் போக்கு அறிந்து - கண்ணன் பலமாதரின்பத்தையும் உற்ற செயலைத் தெரிந்துகொண்டு. திருமாலாகி என் இன்பத்தைமருவியவர், கண்ணன்போக்கையறிந்து இடைச்சியர் இன்பம் மருவலுற்றாரென்பது மற்றொருபொருள். பொதுவரென்பது இடையர் பெயராதலின் பொதுமாதரென்பதற்கு இங்ஙனம் பொருள்கொள்ளப்பட்டது. வரி மதுமாந்திடுதலின்.........பொதுமாதரின்புமுற: "பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" (கலி. 40); "மகிழ்தரு மின்பத் தேறன் மாந்தினன் மணிவண் டன்னான்" பாகவதம், கோவியரை. 19.

## தலைவியைப் பாங்கி கழறல்.

(தலைவனுடைய குற்றத்தைக் கூறுதல் கற்புடைமைக்குத் தகாதென்று பாங்கி தலைவியை இடித்துரைத்தல்.)

391. பணவர வம்புனை கோடீச்சு ரேசர் பனிவரைப்பொன்
அணவரம் பைக்கிணை யூருமன் வேசையர்க் காசைகொண்டார்
மணவரத் தாரன்ப ரென்றிக ழேல்குல மாதர்மின்னே
கணவர தேத மெடுத்தோதன் மாண்பன்று கற்பினுக்கே.

(கு - உரை.) பண அரவம் - படத்தை உடைய பாம்பை. பொன் அணவு அரம்பைக்கு இணை ஊரு மன் வேசையர்க்கு - பொன்னிறம் பெற்ற வாழையினையொத்த துடையையுடைய பரத்தையர்பால்; ஊரு - துடை; அரம்பைக்கு இணையாக நடக்கும் வேசையரெனலுமாம்; நைடத. அன்னத்தைத் தூது. 23. மணவரத்தார் அன்பர் - நறுமணம் பொருந்திய மேலாகிய மார்பின் மாலையையுடைய தலைவர்; மண மாலையையணிந்து மணந்த அன்பர் அந்தமணத்தாற்பெற்ற இல்லறவின்பத்தை யோராமற் செல்வாரென்று எச்சப்பொருள் கூறுதலும் ஆம். குலமாதர் - கற்பொழுக்கத்தையுடைய பெண்டிர். கணவரது

ஏதம் - தம் தலைவருடைய குற்றத்தை. கற்பினுக்கு மாண்பன்று - கற்புக்கேற்ற மாட்சியையுடைய செயலன்று.

செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி அவ்வணி
உழையர்கண்டு அழுங்கிக் கூறல்.

(பூப்புற்றதை அறிவித்தற்குச் செம்மலர் முதலியவற்றை
அணிந்துகொள்ளச்செய்து ஒருத்தியைப் பரத்தை
வீட்டிலிருக்கும் தலைவன்பால் விடுத்த
பொழுது அதனைக்கண்ட அய
லார் வருந்திக் கூறுதல்.)

392. முன்னே வறிதி லிகழ்வார்கள் வீதியிம் மொய்குழலாள்
கொன்னே பவளமுஞ் செஞ்சாந்தும் வெட்சியின் கொத்துமணிந்
தென்னே படர்தனம் மின்னிலை காட்டற் கிசைந்ததன்றீ
தன்னேர் மிடற்றினர் கோடீச் சுரமென் னணிநகர்க்கே.

(து - உரை.) வறிதில் இகழ்வார்கள் வீதி - காரணமொன்றின்றியும் தலைவியை இகழும் பரத்தையர் தெருவில்; "நிந்தனை மாதர்" (417) என்பார் பின். படர்தல் என்னே - போதல் யாதுகாரணம்பற்றி. ஈது நம் மின் நிலைகாட்டற்கு இசைந்தது அன்று - இச்செயல், நம் தலைவியின் நிலைமையை வெளிப்படுத்தற்குத் தக்கதன்று. அல் நேர் மிடற்றினர் - இருளையொத்த கருமைநிறத்தையுடைய திருக்கழுத்தை உடையவர். என் அணி நகர்க்கு - என்று கூறப்படும் அழகிய நகரின்கண்.

பரத்தையர் கண்டு பழித்தல்.

393. மாமலர்க் கொன்றையர் கோடீச் சுரத்துறு மாதகத்தில்
பூமக ளாய தவடன் னிறையும் புறத்தெவரும்
தாமறி வுற்றிடத் தானுமப் பூமக ளானெனவே
காமரு செந்துகில் பூண்டன ளோவிந்தக் காரிகையே.

(து - உரை.) மாது - தலைவியானவள். அகத்தில் - வீட்டில். பூமகளாயது - பூப்புற்றவளானதை. அவள்தன் இறையும் - அவளுடைய தலைவனும். புறத்து எவரும் - வெளியேயுள்ள யாவரும். அப்பூமகள் - திருமகள். காமரு - விருப்பம் மருவிய. செந்துகில் - செவ்வண்ண ஆடை. திருமகள் செந்துகிலுடையாளாதலின் இவ்வாறு கூறினாள். தலைவி பூமகளென்பதைச் சேடி, தானும் பூமகளாகிக் காட்டுகின்றாளென்க; "இனையள்பூ மடந்தை யானாள், அன்னதாங் குணர்ந்து நீமா லாகிமற் றணைந்தின் புற்றாய்" (திருவிடை. சித்திரகீர்த்தி. 11) என்று பிறவிடத்தும் இவ்வாசிரியர் பூமகளென்பதைச் சிலேடையாக அமைத்துள்ளார்.

### பரத்தையர் உலகியல் நோக்கி விடுத்தல்.

(நீராடியபின் ஈராறுநாளும் தலைவியுடன் தலைவனிருக்க வேண்டு (நம்பி. சூ. 90.) மென்ற விதியை அறிந்து பரத்தையர் தலைவனைத் தலைவிபால் விடுத்தல்; உலகியல்-ஆன்றோரொழுக்கம்.)

394. கருந்திருக் கண்டர்தென் கோடீச் சுரத்துன் கடிமனையிற்
பொருந்திய முல்லைக் கொடிபூத்த தாகப் புகன்றனரால்
பெருந்திறன் மன்னவ நீயேகி நோக்கிப் பெருமகிழ்வுற்
றிருந்துசின் னாள்பின்னர் வந்தருள் வாயிவ ளென்மனைக்கே.

(கு - உரை.) கடிமனையில் - மணம்பொருந்திய வீட்டில். முல்லைக் கொடி பூத்தது - கற்பையுடைய தலைவி பூப்பெய்தினள்; முல்லைக்கொடி மலர்ந்ததென்பது மற்றொருபொருள்; வீட்டில் முல்லைவளர்த்தல் இயல்பு; "தொண்டையங் கனிவாய் மாதர்பொன் மேடைச் சுடர்மணித் தொட்டியில் வளர்த்த, தண்டளிர்த் தளவப் பசுங்கொடி" (திருவிடை. நகரச். 24); "மனைமரத், தெல்லுறு மௌவ னாறும்" (குறுந். 19); "எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த, முற்றிழையாள் வாட முறுவலிக்கும்" (தண்டி. மேற்.); "அல்லியங் கோதை மாத ரன்பொடு வளர்த்த முல்லை" (நைடதம்.) சின்னாள் இருந்து.

### தலைவன் வரவுகண்டுவேந்து வாயில்கள் மொழிதல்.

(வாயில்கள் - பாங்கி முதலியவர்கள்.)

395. ஐயா லடியுற்று நால்வர்க்கு முப்பொரு ளன்பினொடு
கையா லுணர்த்தரன் கோடீச் சுரமன்ன காரிகையின்
மெய்யார்ந்த செவ்வணி கண்டுடன் மீண்டனர் மென்குறிப்புச்
செய்யாமுன் னோர்வோர்க் குரையாற் பயனென்னை தேமொழியே.

(கு - உரை.) ஐ ஆல் அடி உற்று - அழகிய கல்லால மரத்தின் கீழிருந்து. நால்வர்க்கு - சனகாதியர் நால்வருக்கும். முப்பொருள் - மூன்று பொருள்களை; பதிபசுபாசங்களை. கையால் உணர்த்து அரன் - மோன முத்திரையத்தத்தால் தெளியச்செய்த சிவபெருமான். காரிகையின் - சேடியினது. உடன் மீண்டனர் - உடனே திரும்பிவந்தனர். ஓர்வார்க்கு- ஆராய்ந்தறிபவர்களுக்கு. குறிப்புச் செய்யாமுன் ஓர்வார்: "உரையாத முன்ன முணர்வார் தமக்கன்றி" வேங்கைக். 149.

ஐயாலடியுற்று நால்வர்க்கு முப்பொருள் : எண்ணணி.

இச் செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பணி.

## தலைமகன் வரவு பாங்கி தலைவிக்கு உணர்த்தல்.

396. அருளுற்ற மெய்யரன் கோடீச் சுரமன்ன வாயிழையாய்
இருளுற் றிடவிப் படிபுறம் போன விரவிவரின்
தெருளுற் றுவகை யுறுமெவர் வேந்தர் தெருவில்வந்தார்
மருளுற் றிடாதெதிர் கொண்டேத்தி யில்லம் வரவழையே.

(து - உரை.) அருள் உற்ற மெய் அரன் - உமாதேவியார் பொருந்திய திருமேனியையுடைய சிவபெருமான்; அருள் - உமாதேவியார்; "அருளென்ப கருணை சத்தி" (சூடாமணி.) அருளே திருமேனியாக உடையவரெனலுமாம். இ படி இருள் உற்றிட - இந்தப்பூமி இருளை அடைய. புறம்போன இரவி - புறத்தேபோன சூரியன்; அத்தமித்த சூரியன். தெருள் உற்று - தெளிவை அடைந்து. மருள் உற்றிடாது - மயக்கம் கொள்ளாமல்.

இஃது எடுத்துக் காட்டுவமையணி.

## தலைவி எதிர்கோண்டு பணிதல்.

(எதிர்கொண்டு - தலைவனை எதிர்கொண்டு.)

397. கனம்வந் தனகண்டர் கோடீச் சுரத்தனைக் கண்டவுடன்
தனம்வந்த தென்று களிகூர் மடந்தையர் தம்மைவிட்டு
மனம்வந்த தோவிங் கெளியே னிருக்கு மனைவரவித்
தினம்வந் தனந்தரு கின்றனன் கோடி திறலரசே.

(து - உரை.) கனம் - மேகம். வந்தன - வந்தாலன்ன. தனம் - பொருள். மனைவர மனம் வந்ததோ. இத்தினம் - இன்று. வந்தனம் தருகின்றனன் கோடி - வணக்கம் செய்கின்றேன், ஏற்றுக்கொள்வாயாக; கோடிவந்தனம் தருகின்றனன் எனலும் ஆம்.

## புணர்ச்சியின் மகிழ்தல்.

398. மாலையன் போற்றரன் கோடீச் சுரமின் வழங்கியவிவ்
வேலையி னின்றிங் கொருவலை வீசி விரவிடொரு
சேலையுட் பற்றின மோர்பணம் விற்றனஞ் செங்கையுற்ற
தாலைவில் வேட்குங் கிடையாதிவ் வேலை யவனியிலே.

(து - உரை.) மாலும் அயனும். இவ்வேலையில் நின்று-இப்பொழுது இருந்து. ஒருவலைவீசி - நீங்குதலைநீக்கி. விரவிடு ஒரு. சேலை - சேலையை. ஓர்பணம் சேலையுட் பற்றினம்; பணம் - அரவின்படம். விற்றனம் - ஒளி பொருந்திய தனம். ஆலைவில் வேட்கும் - கரும்பு வில்லையுடைய மன்மத

னுக்கும். வேலையவனியில் - கடல்சூழ்ந்த பூமியில்; இவ்வேலை - இச் செயல் எனலுமாம்.

இக்கடற்கரையில் நின்று ஒரு வலையை வீசிச் சேல் மீன் ஒன்றைப் பிடித்தோம்; அதனை ஒரு பணத்திற்கு விற்றோம்; அப்பணத்தையும் கையிற் பெற்றோமென்னும் வேறொரு பொருளும் இதில் தோற்றுகின்றது; வேலை - கடற்கரை.

வெள்ளணி அணிந்து விடுத்துழித் தலைவன் வந்து
பாங்கியை வேண்டல்.

(தான் புதல்வனைப் பெற்றமையைத் தலைவனுக்கு அறிவித்தற்கு நினைந்து
வெண்மலர் முதலியவற்றை அணிந்துகொள்ளச் செய்து ஒருத்தி
யைத் தலைவியானவள் தலைவன்பால் விடுத்தவிடத்து அது
கண்டு அவன் வந்துநின்று யான் தலைவியைப் பார்க்
கும்படி செய்தற்கு நீ தூதாக வேண்டுமென்று
பாங்கியை வேண்டல்.)

399. எள்ளருஞ் சீரரன் கோடீச் சுரத்துன தேவலினால்
வெள்ளணி பூண்டு வருமாதைக் கண்டிங்கு மேவினன்மேற்
கள்ளவிழ் கோதை மலர்த்திரு மாதைக் கலந்திடச்செய்
உள்ளள வும்மெனை வாடாது காத்தரு ளொண்ணுதலே.

(கு - உரை.) எள் அரும் - இகழ்தற்கு அரிய. சீர் - புகழ். மேல் - இனி. வெள்ளணி: வெண்மை மங்கலநிறம்; அரசர்க்குப் புதல்வன் பிறந்தால் தாம் வெள்ளணி அணிதலும் அணிவித்தலும் மரபென்பர்; இது பற்றி இது வெள்ளணி நாளென்றும் பிறந்த நாட் கொண்டாட்டமென்றும் கூறப்படும்; "பிறந்த நாள்வயிற் பெருமங் கலமும்" (தோல். புறத். சூ. 36) என்பதனாலும் அதன் உரையாலும், புறப் பொருள் வெண்பாமாலை, 212 - ஆம் செய்யுளாலும் இது விளங்கும். கலந்திடச்செய் - சேருமாறு செய்வாயாக. உள்ளளவும் - உள்ள அளவும்.

தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல்.

(தலைவி புனிறுதீர்ந்து நெய் முழுகியதைத் தலைவ
னுக்குப் பாங்கி தெரிவித்தல்;
நெய் - எண்ணெய்.)

400. பாலாழி திங்கட் பயந்தாங் கெழின்மகப் பங்கயத்தின்
மேலா ளனமா தயிர்த்துநெய் யாடினள் விற்றிகிரி

மாலா னவர்க்கருள் கோடீச்சு ரேசனை வாழ்த்துமெங்கள்
கோலா கலவின்றென் னுலாவ திங்கெவன் கூறுகவே.

(கு - உரை.) பாலாழி திங்கட் பயந்தாங்கு - பாற்கடல் சந்திரனைப் பெற்றதுபோல. எழில் மக - அழகுடைய பிள்ளையை. பங்கயத்தின் மேலாள் அன மாது - தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்ற தலைவி. உயிர்த்து - பெற்று. நெய் ஆடினள் - தைலஸ்நானம் செய்தாள். வில் திகிரி - ஒளியையுடைய சக்கராயுதத்தை. மாலானவர்க்கு - திருமாலுக்கு. கோலாகல - களிப்பை யுடைய தலைவனே. இங்கு இன்று என்னுல் ஆவது எவன்.

## தலைவன் தன்மனத்து உவகை கூர்தல்.

(கூர்தல் - மிகுதல்.)

401. வேணியி லாற்றினர் கோடீச் சுரந்தனில் வீற்றிருக்கும்
வாணிகர் கண்ணிதன் பாலார் முலையுநெய் வார்குழலும்
பாணியிற் பாலனு மேனியி னீடு பசுநரம்பும்
காணிய வென்ன தவஞ்செய் தனஞ்சென்ற காலத்திலே.

(கு - உரை.) வேணியில் - சடையில். வாள் நிகர் கண்ணிதன். பால் ஆர் - பால் நிறைந்த. நெய் வார் குழலும் - எண்ணெய் ஒழுகுகின்ற கூந்தலும். பாணி - கை. காணிய - காணுதற்கு. சென்ற காலத்திலே - முற்காலத்தில்.

இதில் வாணிகர் நெய்வார் என்னும் சாதிப்பெயர்களும் நெய்வார் குழலென்பதும் தொனிக்கின்றன; குழல் - நெய்பவர்களது நூற்குழ லென்னும் கருவி.

## தலைவிக்கு அவன் வரல் பாங்கி சாற்றல்.

402. ஊற்று மணலெனத் தன்னடிக் கென்னெஞ் சுருகிடச்செய்
தோற்றொடி பாகன்றென் கோடீச் சுரமன்ன கூர்விழியாய்
பாற்றினஞ் சூழ்வடி வேலார் நரகப் படுகடனின்
றேற்றக் கரைசேர் மதலையை நோக்குதற் கெய்தினரே.

(கு - உரை.) ஊற்றுமணல் என - ஊற்றிலுள்ள மணல் கரைவதைப் போல. பாற்றினம் சூழ் வடிவேலார் - பருந்தினங்கள் சூழ்ந்துள்ள கூர்மையையுடைய வேலையுடைய தலைவர். நரகப் படுகடனின்று - புத்தென்னும் நரகமாகிய படுகடலிலிருந்தும். ஏற்றம் கரைசேர் - உயர்வாகிய கரையிற் சேர்க்கின்ற; ஏற்ற - ஏற்றுதற்கு என்றுமாம். மதலையை - பிள்ளையை. புத்திரன் என்னும் சொற்பொருளை இக்கருத்து விளக்கி

நின்றது; "உமையா ளயில்வேலவனைப், புத்திரனென்னும் பொருள்பட வீன்றிலள்" வேங்கைக். 391.

கடலிலிருந்து கரைசேர்க்கின்ற தோணியைப்பார்க்கவென்பது மற்றொரு பொருள்; மதலை - தோணி.

தலைவி உணர்ந்து தலைவனோடு புலத்தல்.

403. புரத்தை யெரித்தவர் கோடீச் சுரம்வாழ் புகழிறைவ
பரத்தைநம் புற்றவர்க் கீண்டென்ன காரியம் பற்றிடுமவ்
வுரத்தை யுறும்பலம் போற்கிடை யாதிங் குறும்பயமென்
கரத்தை விடுவிடு தானையை யீதென்ன கைதவமே.

(த - உரை.) பரத்தை நம்புற்றவர்க்கு - பரத்தையரை விரும்பியவர்க்கு; பரலோக வாழ்வை விரும்பியவர்களுக்கென்பது மற்றொரு பொருள்; "வரத்தை விட்டனர் ஞானம் வந்து பரத்தை நச்சினர்" (அழகர் கலம். 44.) பற்றிடும் அவ்வுரத்தை உறும் பலம்போல் - பற்றப்படுகின்ற அப்பரத்தையின் மார்பில் உள்ள பலனாகிய தனத்தைப்போல, பற்றிடும் அந்த வலியையுடைய பயனைப்போல. இங்குக் கிடையாது. உறும்பயம் - இங்கே பால் உண்டு; பயம் - அச்சமென்பது வேறு பொருள். தானையை விடு - ஆடையை விடுவாயாக. கைதவம் - வஞ்சனை.

தலைவி பாணனை மறுத்தல்.

(தலைவனுடைய தூதாக வந்த பாணனைக் கண்டு தலைவி உடம்படாது வெகுண்டு கூறுகிற்றல்.)

404. சேணை யுறுபுகழ்க் கோடீச்சு ரேசர் சிலம்பிடைநின்
வீணை யிசைக்கவந் தாயிது கேட்டிங்கு மெச்சுவரார்
நாணை யிழந்த தனுவினுக் காமிந் நரம்பிசைநீ
காணையிற் சேடி வெகுளுமுன் பாண கடிதகலே.

(ந - உரை.) சேணை உறு புகழ் - நெடுந்தூரம் பரவிய புகழையுடைய. வீணை இசைக்க - வீணையை வாசிக்க; வீணான செய்தியைச் சொல்லவென்பது வேறு பொருள்; "வீணையும் பழைய பேச்சுரையுந் தொடுத்தனை" (அழகர்கலம். 44.) மெச்சுவர் ஆர் - வியப்பவர்கள் யார்; இல்லை. இந்நரம்பு இசை நாணை இழந்த தனுவினுக்கு ஆகும் - இந்த யாழின் இசை நாணத்தைக் கைவிட்ட மேனியையுடைய பரத்தையர்க்குப் பொருந்தும்; நாணினை நீங்கிய வில்லுக்கு இந்நரம்பு உதவும், இசைவிப்பாயாக என்பது வேறுபொருள். காண் அயில் சேடி - காணுகின்ற அம்பாகிய கண்ணையுடைய பாங்கி. காணையில்: ஐ, போலி. கடிது அகல் - விரைவிற் செல்வாயாக.

வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறல்.

405. வின்மால் வரைச்சிவன் கோடீச் சுரந்தனில் வீற்றிருக்கும்
வன்மால் களிற்றண்ண லுன்பே ருரைத்திடின் வையகத்தோர்
பொன்மாரி தூசு மணிமாரி யாரப் பொழிவர்பெருங்
கன்மாரி பெய்தன ளெம்பெரு மாட்டி கறுத்துநின்றே.

(கு - உரை.) வில் மால் வரை - பெரிய மலையை வில்லாகவுடைய. அண்ணல் : விளி. ஆர - நிறைய. எம்பெருமாட்டி - தலைவி. கறுத்து - கோபித்து. கல்மாரி பெய்தனளென்றது தன்னைத் தலைவி இகழ்ந்து ஓட்டி விட்டாளென்பதை மிகைப்படுத்திச் சொல்லியது. ; "கல்லாண் டெடேல்கருங் கண்சிவப் பாற்று" சிற். 387.

விறலி வாயில் மறுத்தல்.

(விறலி - பாணிச்சி ; சத்துவம் புலப்பட ஆடுபவளென்பது இதன் பொருள் ; விறல் - சத்துவம் ; உள்ள நிகழ்ச்சி உடம்பிற்றோன்றுதல்.)

406. அப்புறு வேணியர் கோடீச்சு ரேச ரசலத்திலோர்
கொப்புறு வீணை கொடுபாடு பாடினி கூறுமிது
தப்புவெங் காடியுந் தேனுவின் பாலுஞ் சருக்கரையும்
உப்பு நிகரெனச் செல்கா வலர்க்கிதை யுன்னிசையே.

(கு - உரை.) அப்பு - நீர் ; கங்கை. அசலத்தில் - மலையில். கொப்பு - கொம்பு ; விகாரம். பாடுபாடினி - பாடுகின்ற விறலியே. இது தப்பு - இது பிழையாகும். தேனுவின்பால் - பசுவின்பால். காடியும் உப்பும் நிக ரெனச் செல்காவலரென்றது கற்புமேம்பட்ட குலமகளிரையும் நாணின் றிப் பொருள்விழையும் பொதுமகளிரையும் வேறுபாடறியாது மருவுபவ ரென்பதைக் குறித்தவாறு ; "முருகார் முளரியு முள்ளியு முண்டக மூரியரம், பொருகா ரிரும்புங் கனகமும் பொன்பொங்கு தாரகையும், குருகார் தடங்களிற் கெண்டையு மீனெங் குரிசிலுக்கு, வருகாத னல்கிய வெங்கையும் யானு மடந்தையரே" அம்பிகாபதி. 481.

பாங்கி வாயில் மறுத்தல்.

(பாங்கிவாயில் - பாங்கியாகிய தூதை.)

407. அகவினை தீர்த்தருள் கோடீச்சு ரேச ரடிபணிந்தோர்
மகவரு ளென்றுங் கிரந்தவர் சூளையர் மாலிற்சிக்கித்
தகவுறு மச்சேய் தவழ்ந்தது நோக்கிலர் தண்மழலைச்
சுகமொழி கேட்கிலர் நின்றுநின் றுற்றதென் சொல்லணங்கே.

(கு - உரை.) அகவினை - பாவச்செயல்களை. அடிபணிந்து ஓர்மகவு அருள். சூளையர் மாலில் - பரத்தையர் மயக்கத்தில். தகவு உறும் அ சேய்- தகுதியை உற்ற அப்பிள்ளை. மழலை சுகமொழி - மழலையாகிய சுகத் தைத்தருகின்ற சொற்களை. நின்றார் - இது காறும் வாராது இருந்தார். இன்று உற்றது - இன்றைக்கு இங்கே வந்தது. என் - யாது காரணம்?

### விருந்தோடு வந்துழித் தலைவி பொறுத்தமை கண்டு தலைவன் மகிழ்தல்.

(வந்துழி - தலைவன் வந்தவிடத்து.)

408. தம்மை நிகர்பவர் கோடீச் சுரந்தனிற் றண்பிறைநேர்
செம்மை நுதற்கணே றிம்மாது தன்மைச் சிலையிணையும்
கொம்மை முலைவேசை யர்க்காப் படர்க்கை கொடுமயங்கும்
நம்மையு முன்னிலை சேர்த்திட்ட தூற்றவிந் நல்விருந்தே.

(கு - உரை.) தண்பிறை......சிலையும்-குளிர்ச்சியையுடைய பிறையை யொத்த செவ்விய நெற்றியின்கண் ஏறிய இத்தலைவியினுடைய கரியவில் போன்ற புருவங்களையும்; இது சினக்குறிப்பு. படர்க்கைகொடு - செல்லு தலை மேற்கொண்டு. முன்னிலை - முன்பு இருந்த நிலையில், முன்பாக; என்றது கோபத்தால் நெற்றியினிடத்தே ஏறிய புருவங்களைச் சாந்தத் தால் மீண்டும் முன்னிருந்த நிலையிலும், நம்மைத்தலைவியின் முன்பும் என்றவாறு. இவ்விருந்து சிலையிணையும் நம்மையும் முன்னிலை சேர்த் திட்டது.

இதில், தன்மை படர்க்கை முன்னிலையென்னும் இடப்பெயர்கள் தொனிக்கின்றன.

### பள்ளியிடத்தழுங்கல்.

(பாயலில் தலைவி மிக்க ஊடலோடிருத்தலை நோக்கித் தலைவன் வருந்துதல்.)

409. அறங்காட்டு சொல்லரன் கோடீச் சுரமன்ன வாயிழைநின்
திறங்காட் டிகல்கொண் மணுளர்வந் தாலெதிர் தேர்செலுத்தி
மறங்காட்டு வேழ முகைத்தாடல் செய்ய மதித்தல்விட்டுப்
புறங்காட் டுதலென்ன வீரங் கொலோவிந்தப் பூவகத்தே.

(கு - உரை.) நின்மணுளர், திறங்காட்டும் மணுளர், இகல்கொள் மணுளரெனக் கூட்டுக; இகல் - வீரம், பகை. எதிர் தேர் செலுத்தி யென்றது உருவகம். மறம் காட்டு வேழம் - வலியைக்காட்டும் யானையை; என்றது நகில்களை. ஆடல்: சிலேடை. மதித்தல் - எண்ணுதல். புறங் காட்டுதல் - உடலின் புறத்தைக் காட்டுதல், தோல்வியுற்று முதுகு

காட்டி ஓடுதல். என்ன வீரங்கொலோ - என்ன அன்போ (ஈரம் - அன்பு), என்ன வீரமோ. பூவகத்தே - பூமியினிடத்தில்.

சீறேலென்றவள் சீறடி தொழுதல்.

(அவள் சீறடி - தலைவியின் சிறியபாதத்தை; தொழுதல் - தலைவன் தொழுதல்.)

410. கானலை நீரென் றலையுற்ற மான்வரிற் காசினியில்
வானலை வெள்ளம் வெகுண்டிடு மோமுன் வரலெனவே
மானலை யுற்றேன் பிழைபொறுத் தாளென்றன் வந்தனங்கொள்
ஊனலை சூலத்தர் கோடீச் சுரமன்ன வொண்டொடியே.

(கு - உரை.) அலையுற்ற - அலைதலையுற்ற. வான் அலை வெள்ளம் - மேகத்தால் உண்டாகிற அலைகளையுடைய நீர் வெள்ளம். மான்வரின் வெள்ளம் வெகுண்டிடுமோ. வரல் என - வருதலையொழிவாயாக என்று சொல்ல. மானலை உற்றேன் - நாணுதலை அடைந்தேன்; "இள நவ்வி மான" (தக்க.) பொறுத்து ஆள்.

இஃது எங்கையர் காணின் நன்றன்றென்றல்.

(நீ என் அடிபணிதலைப் பரத்தையர் கண்டால் உனக்குத் தீங்கை விளைவிப்பரென்று தலைவி கூறுதல். தலைவனுக்குரிய பரத்தையை எங்கை யென்று தலைவி கூறுவது மரபு.)

411. வையுறுஞ் சூலத்தர் கோடீச் சுரத்தென்கண் மன்னவநீ
செய்யும் வணக்கமம் மாதர்கண் டாலங்ஙன் சேரவொட்டார்
மைய லடைந்துபின் னன்னவர் தம்மனை வாயினின்று
கையி லிருந்த தனமு மிழந்து கலங்குவையே.

(கு - உரை.) வை - கூர்மை. நீ என் கண் செய்யும் வணக்கம். அம் மாதர் - பரத்தையர். அங்ஙன் - அவ்விடத்தில். தனமும் - பொருளையும்.

அங்கவர் யாரையும் அறியேனென்றல்.

(நீ குறிக்கும் பரத்தையர் ஒருவரையும் இதுகாறும் அறிந்திலேனென்று தலைவன் கூறுதல்.)

412. தேங்கமழ் கொன்றையர் கோடீச்சு ரேசர் சிலம்புறுதே
மாங்கனி யார்ந்து சுகமா விருந்திடு வண்கிளிபோய்
வேங்கருங் கானத் திடைக்காஞ் சிரங்காய் மிசைந்திடுமோ
பாங்கரும் பாமுலை நானறி யேனொரு பாவமுமே.

(கு - உரை.) தேம் - தேன். தேமாங்கனி - இனிமையையுடைய மாம்பழத்தை. ஆர்ந்து - உண்டு. சுகமா - இன்பத்தோடு. வேம் கருங் கானத்திடை - வேகின்ற கரியகாட்டில் உள்ள. காஞ்சிரங்காய் மிசைந் திடுமோ - எட்டிக்காயை உண்ணுமோ. பாங்கு அரும்பாம் முலை - அழகையுடைய அரும்பு போலும் தனத்தையுடையாய். பாவம் - பாவ வினை; எண்ணம். 'ஒரு பாவத்தையு மறியேன்' என்பது உலகவழக்கு.

சுகமா விருந்திடு கிளியென்பது நயம்.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

(உம்முடைய காமக்கிழத்தியை நான் அறிந்தேனென்பதைத் தலைவி தலைவனுக்குக் கூறுதல்.)

413. வேயிருட் கண்டர்தென் கோடைச் சுரமன்ன வீதியினுன்
சேயினைப் பற்றி முலைமே லணைத்தனள் சென்றனளோர்
ஆயிழை பார்த்ததை யோர்மா தொருத்திக் கவன்சிறிய
தாயிவ ளென்றன ளூரு மறிந்ததுன் றன்களவே.

(கு - உரை.) இருள்வேய் கண்டர். உன் சேயினை : உன்னென்றது சினத்தைப் புலப்படுத்தியது. ஓர் ஆயிழை பற்றி அணைத்துச் சென்றனள்; அணைத்தனள் : முற்றெச்சம். ஓர் மாது அதைப்பார்த்து ஒருத்திக்கு, "இவள் அவன் சிறியதாய்" என்றனள். அவன் - அப்பிள்ளையினுடைய. உன்றன்களவை ஊரும் அறிந்தது.

தலைவியைப் பாங்கி தணித்தல்.

(தணித்தல் - ஊடலை ஆறச்செய்தல்.)

414. இலவி னிதழ்ச்செய்ய வாய்மங்கை யுப்பமைந் திட்டதுபோற்
புலவி யதுமிகுந் தற்றுகு நீட்டிடல் பொன்மலர்த்தார்
நிலவிடு வார்சடைக் கோடைச்சு ரேசர் நெடுங்கிரிமேற்
பலவின் புகழ்மன்ன ருன்றுள் பணிந்தனர் பார்த்தருளே.

(கு - உரை.) மங்கை : விளி. உப்பு அமைந்திட்டதுபோற் புலவி - உணவின்கண் உப்பு அளவில் அமைந்தது போன்றுள்ள ஊடல். நீட் டிடல் அது மிகுந்தற்றுகும் - நீளுதல் அவ்வுப்பு உணவில் மிக்கவிடத்துச் சுவையைக் கெடுப்பதுபோல இன்பத்தைக் கெடுக்கும்; "உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது, மிக்கற்று னீள விடல்" (குறள்.) பொன்மலர்த் தார் - பொன்போன்ற கொன்றைப்பூமாலை. பல இன்புகழ் - பலவாகிய இனிய புகழையுடைய; கொடை, கல்வி, வீரம் முதலியவற்றால் வரும் புகழ்.

### தணியாளாகத் தலைமகன் ஊடல்.

(தணியாளாக - தலைவி ஊடல் தணியாளாக.)

415. வாமான் கரங்கொண்ட கோடீச்சு ரேசர் வரையிலிவள்
மாமால் கரிமுன்னும் பூவார் சுனையினும் வந்தெனைநீ
காமா நிலமன்ன வென்றதக் காலமிக் காலநெஞ்சே
நாமா ரிவட்கு நமக்கிவ ளார்விடு நட்பினையே.

(த - உரை.) வாம் மான் - தாவுகின்ற மானை. இவள்: எழுவாய். மா மால் கரி முன்னும் - கரிய பெரிய யானையின் முன்பும். பூ ஆர் சுனையினும் - பூக்கள் நிறைந்த சுனையிலும். எனை நீ வந்து கா. மாநில மன்ன - பெரிய உலகை ஆளும் அரசனே. என்றது - என்று இத்தலைவி சொல்லியது. இவட்கு நாம் ஆர் - இவளுக்கு நாம் எத்தகைய தொடர்பு உடையேம் ; ஒன்று மில்லேமென்றபடி. இவள் நமக்கு ஆர். நட்பினை விடு.

முன் மூன்று அடிகளிலும் கூறிய செய்திகளிறுதருபுணர்ச்சியையும் புனறருபுணர்ச்சியையும் குறிக்கின்றது.

### பாங்கி தலைவனை இகழ்தல்.

416. முன்னாள் விருப்பினைப் பொன்னுட னீந்து முருகருந்தும்
மின்னார்க் கவரிடை வேறு மனமும் வெகுளியுங்கொண்
டென்னா ரமுதினைச் சீறுகின் றாயுனக் கீதழகன்
றொன்னாரை வெல்விடைக் கோடீச்சு ரேசர்வெற் போங்கரசே.

(த - உரை.) முன் நாள் விருப்பினை - முன்பு எம்பால் வைத்திருந்த விருப்பத்தை. பொன்னுடன் ஈந்து - பொருளோடு கொடுத்துவிட்டு. முருகு அருந்தும் மின்னார்க்கு-கள்ளை உண்கின்ற பரத்தையருக்கு ; மின்னார்க்கு ஈந்து. அவரிடை வேறு ஆம் மனமும் - அவர் பாற்பட்டு வேற்றுத்தன்மையை எய்திய மனத்தையும். வெகுளியும் - தலைவிபாற்கோபத்தையும். என் ஆர் அமுதினை - என்னுடைய கிடைத்தற்கரிய அமுதம் போன்ற தலைவியை. ஈது உனக்கு அழகு அன்று. ஒன்னாரை - பகைவரை. வெற்பு ஓங்கு அரசே - மலையிற் சிறந்துள்ள அரசனே.

### ஆயிழை மைந்தனும் ஆற்றுமையும் வாயிலாக வரவெதிர்கோடல்.

(தனது ஆற்றுமையும் மகனும் வழியாகத்தலைவனைத் தலைவி ஏற்றுக்கொள்ளுதல். ஆயிழை - தலைவி ; ஆற்றுமை - மேலும் தலைவனைக் கவலச்செய்தலைப் பொறுமை.)

417. கந்தனை யீன்றவர் கோடீச் சுரத்துறு காவலர்நீர்
மைந்தனைத் தோட்கொண்டு தந்திர மாவிங்கு வந்தடைந்தீர்
நிந்தனை மாதர் மயக்கிடை யென்ற னினைவுமக்கு
வந்தணை வுற்றது சிந்தனை செய்திடின் மாவியப்பே.

(கு - உரை.) காவலராகிய நீர். தோட்கொண்டு - தோளில் எடுத்துக்கொண்டு. தந்திரம் - உபாயம். நிந்தனைமாதர் மயக்கிடை - என்னை இகழ்ச்சிசெய்யும் பரத்தையருடைய மையலின் நடுவே; 392-ஆம் செய்யுளைப்பார்க்க. உமக்கு என்றன் நினைவு அணைவுற்றது வியப்பே. கந்தனையீன்றவரென்றது கருத்துடையடைகொளியணி.

புணர்ந்தவன் போயபின் பாங்கியோடு தன் மகனைப் புகழ்தல்.

(அவன் - தலைவன். தலைவி மைந்தனைப் புகழ்தல்.)

418. மருப்பயில் கொன்றையர் கோடீச் சுரத்து மறுகினிடை
இருப்புறு வேசையிற் கேகுறுந் தோன்ற லிரதந்தனைத்
திருப்பினன் சேணின்று நம்மனை வாயுறச் சேயிவன்றான்
விருப்புறக் கற்றதெங் கோவல வத்தொழின் மெல்லியலே.

(கு - உரை.) மரு - வாசனை. இற்கு - வீட்டிற்கு. தோன்றல் இரதந்தனை - தலைவரது தேரை. சேணின்று நம்மனைவாயுறத்திருப்பினன் - நெடுந்தூரத்தினின்றும் நமது வீட்டுவாயிலை அடையுமாறு தடுத்துத் திரும்பச் செய்தான். சேய் திருப்பினன். வலவத்தொழில் - வல்ல அத்தொழிலை, வன்மையுடைய அந்தச்செயலை. தேர்ப்பாகர்க்குரிய தொழிலை என்பது மற்றொருபொருள்; வலவன் - தேர்ப்பாகன். இரதந்தனைத் திருப்பினனென்றதற்கு ஏற்ப வலவத்தொழிலென நயம்படக் கூறினள். அறியாப்பருவத்து இத்தொழிலைக்கற்றது எவ்விடத்திலோ.

தலைவி தலைவனைப் புகழ்தல்.

419. சக்கர மாற்கருள் கோடீச்சு ரேசர் தடஞ்சிலம்பர்
புக்கதிற் போக விலைமாத ரில்லிடைப் போகவிலை
தொக்கநம் பால்வைத்த காதலிந் நாண்மிகத் தோன்றியது
மிக்கவர் நேச மிடையூ றுறாதென்றன் மெய்யணங்கே.

(கு-உரை.) மாற்குச் சக்கரம் அருள். போகவிலை மாதர் இல்லிடைப் புக்கது இல் - இன்பத்தை விற்கும் பரத்தையர் வீட்டிற்குப் போனது இல்லை. போகவிலைமாதர்; "பழிபடு போகம் விற்பார்" (திருவிளை.) நம்பால்வைத்த தொக்க காதல் போக இல்லை - நம்மிடத்தே கொண்ட மிக்க விருப்பம் நீங்கவில்லை. மிகத்தோன்றியது - அக்காதல் அதிகமாக விளங்

கியது. மிக்கவர் நேசம் - பெரியவர்களுடைய நட்பு. இடையூறு உறாது - இடையிலே தடை அடையாது. என்றல் மெய் - என்பது உண்மை; "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்" நாலடி. 125.

இதில் இரண்டாவது அடியிற் போகவிலை யென்பது மடக்கு.

பாங்கி தலைவியைப் புகழ்தல்.

420. திருந்திழை பாகர்தென் கோடீச்சு ரேசர் செழுஞ்சிலம்பிற்
பொருந்துமிவ் வஞ்சி யருள்பூத் திறையோன் புரிபிழைமிக்
கிருந்ததை யெண்ணிமுன் காயா துறுபல னீந்ததனால்
அருந்திறற் கற்புக் கரசியென் றேதிடு மம்புவியே.

(கு - உரை.) திருந்திழை - இலக்கணம் அமைந்த ஆபரணங்களையுடைய உமாதேவியாரையுடைய. இ வஞ்சி - இந்த வஞ்சிக்கொடி போன்ற தலைவி. அருள்பூத்து - அருளை வெளிப்படுத்தி. இறையோன் - தலைவன். காயாது - கோபியாமல். உறு பலன் - மிக்க பயனை; என்றது இன்பத்தை. அம்புவி ஓதிடும்.

வஞ்சி பூத்துக் காயாது பலன் (பழம்) ஈந்ததென்று கொடியின் செயலைப் புலப்படுத்தும் சொற்களை அமைத்திருப்பதும் காயாது பல னீந்ததென்றதும் இதன்பாலுள்ள நயங்கள்.

---

## ஓதற் பிரிவு.

[தலைவன் கல்வி காரணமாகப் பிரிதல்.]

கல்விக்குப்பிரிவு தலைவன் பாங்கிக்கு உணர்த்தல்.

421. செல்வி வளர்திருக் கோடீச்சு ரேசர் செழுங்கிரிமேற்
சொல்விற லுற்ற வறமுத லன்குந் தொகவியற்றும்
பல்வித மான புகழ்நல்கும் வேந்தர் பரவச்செயும்
கல்வி யழகே யழகா மெவருக்குங் காரிகையே.

(கு - உரை.) செல்வி - திருமகள்; "கோதில் சக்கரரேகை யீதிதைக் குலவுசெல்விகையிற் கண்டேன்" (சா. கும.) அறமுதலன்குந் தொக இயற்றும்: "அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையு நாட்டும்" (நீதிநெறி. 1.) வேந்தர் பரவச்செய்யும்: "அறிவுடை யோனு றரசுஞ் செல்லும்" (புறநா. 183.) கல்வியழகே யழகாம்: "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும், மஞ்ச ளழகு மழகல்ல-

நெஞ்சத்து, நல்லம்யாமென்னு நடுவு நிலைமையாற், கல்வி யழகே யழகு" நாலடி. 131.

கல்விப் பிரிவு பாங்கி மறுத்தல்.

422. நிறந்தரு சூலத்தர் கோடீச் சுரம்வாழ் நிருபசென்று
சிறந்திடு கல்விகள் வேண்டுவ யாவையுந் தேர்ந்துபின்னர்
இறந்தமின் னாரென்பை யன்னார்க ளாக வியற்றுதற்கோர்
திறந்தரு விஞ்சையுங் கற்றறி காணவுன் செல்வியையே.

(கு - உரை.) இறந்த மின்னாரென்பை - இறந்த பெண்களுடைய எலும்பை. அன்னார்களாக - மீண்டும் அப்பெண்களாகுமாறு. விஞ்சையும் - வித்தையையும். உன் செல்வியைக் காணக் கற்றறி; நீ பிரியின் இறந்துபடுவாளென்று குறிப்பித்தபடி; "ஓது வதற்கண்ண லேபிரிந் தாலொண் மயிலையென்பு, மாது படுத்தினர் போலோதி வாரும் வருந்த மிழைக், கோது பிரித்தறி கோமான் குலோத்துங்கன் கோழிவெற் பில், தீது படக்கொடி யாவிசென் றூலுந் திருப்புகைக்கே" (குலோத். கோ. 479); "ஆரும் விரும்பிய கல்விமே லாசை யுமக்குள தாயிடிற், பாருற வென்பொரு பாவையாப் பாடிய பாவலர் போலவே, நீரு மருந் தமிழ் செப்பிடு நீர்மை யறிந்திவ ணேகுவீர்" (அருணைக். 20); "விண் ணுக்கு மாமதி காயவெங் காம வெரிகொளுந்தப், பண்ணுக்கு மாமொழி மாதங்க மாம்பஞ்ச பூதியம்போம், கண்ணுக்கு மூக்குச் செவியாக்கை யற்ற கடத்திலங்கம், பெண்ணுக்கு வார்தமைப் போலோதி வாரும் பிரி பவரே" தனிப்.

தலைவன் உடன்படுத்தல்.

(தலைவன் தோழியைப் பிரிவிற்கு உடம்படும்வண்ணம் செய்தல்.)

423. கடமா வுரிபோர்த் தினமுகில் சூழுங் கதிர்ப்பவளத்
தடமால் வரைபுரை கோடீச்சு ரேசர் தமிழ்வெற்பிலோர்
மடமானை யென்றனக் கீந்தாயம் மானொடு வாழ்ந்திடநான்
திடமார் கலையிறை யாயினன் றேர்கவின் சேயிழையே.

(கு - உரை.) கடமா உரி - மதயானையினது தோலை. இனமுகில் சூழும் கதிர்ப்பவளத் தடமால் வரைபுரை - கூட்டமுடைய மேகம் சூழப் பெற்ற ஒளியையுடைய பெரிய பவளமலையைப்போன்ற. மடமானை - மடப்பம் பொருந்திய மான்போன்ற தலைவியை. திடம் - உறுதி. கலையிறை - கல்விக்குத் தலைவன்; மானோடு வாழ்ந்திடுதற்கு நான் ஆண் மானிற் றலைவனல்லன்றோ அழகாகு மென்பது மற்றொரு பொருள். கவின் - அழகு; இங்கே தகுதி.

### கல்விப் பிரிவு பாங்கி தலைவிக்கு உணர்த்தல்.

(கல்விப்பிரிவு - தலைவன் கற்பதற்காகப் பிரிதலை.)

424. வெற்றிகொண் மால்விடைக் கோடீச் சுரவள்ளல் வெற்பனைய
மற்றிணி தோளுடைச் சுந்தர ரானநம் மன்னவர்நூல்
பற்றிடு வாக்கர சாகிமெய்ஞ் ஞானசம் பந்தர்பதம்
பெற்றிட வெண்ணிப் பிரிந்தாரின் றோதப் பிறைநுதலே.

(கு - உரை.) மல் திணி தோளுடைச் சுந்தரரான நம் மன்னவர் - மற்போர் புரியும் நெருங்கிய தோளையுடைய அழகராகிய நம்முடைய தலைவர். நூல் பற்றிடு வாக்கு அரசாகி - நூலை உணர்ந்த சொல்லுக்குத் தலைவராகி; நாவலராகி. மெய்ஞ்ஞான சம்பந்தர்பதம் பெற்றிட - உண்மை யறிவொடு புணர்ந்த அறிஞரது நிலையைப்பெற. இன்று ஓதப்பிரிந்தார்.

இதில் சுந்தரர், வாக்கரசு (திருநாவுக்கரசர்), ஞானசம்பந்தரென்னும் சைவசமயாசாரியர் மூவர் திருநாமங்களுந் தொனிக்கின்றன.

### தலைவி கார்ப்பருவம் கண்டு வருந்தல்.

425. கல்விக் கடலைப் பருகிவந் தீண்டுக் கவிமழைதம்
சொல்வித் தகமுறப் பெய்வதற் கேகினர் தோன்றுமுன்னிச்
செல்விற் குனித்தம்பு தூற்றிடு மேலென்ன செய்குவன்யான்
வல்விற் செறியிழை கோடீச்சு ரேசர் வரையிடத்தே.

(கு - உரை.) கல்விக்கடல்: "கல்வி யென்னும் பல்கடல்" (திருவா. போற்றித்.) கவிமழை - செய்யுளாகிய மழை; "கவிமழைகள் சொரி புறவக் கவுணியக் கொண்டலை" (திருவிடை. கடவுள். 14.) சொல் வித்தகம் - சொற்பிரயோகத்தில் தேர்ந்த அறிவு. ஏகினர் தோன்று முன் - போன தலைவர் வருவதற்கு முன்பு. இ செல் - இந்தமேகம். விற் குனித்து - இந்திரவில்லை வளைத்து, வில்லை வளைத்து. அம்பு தூற்றிடும் - நீரைச்சொரியும், அம்புகளை மேலே விடும். மேல் - இனிமேல். வல் வில் செறி இழை - வலிய ஒளிசெறிந்த அணியை உடையாய்.

தலைவராகிய மேகம் வந்து கவிமழை பெய்தற்குமுன் இம்மேகம் பொழிந்தது.

### பாங்கி ஆற்றுவித்தல்.

426. மதிபுனை வேணியர் கோடீச் சுரமன்ன மாதிறைவர்
அதிர்மணித் தேர்வந் ததுவால் வளைகைக் கணிபணியைக்
கதிர்முலை யேற்றலர் கூந்தலில் வேய்விற் கலைபுனைந்தி
டெதிர்சென் றழைத்திடு வோமெழு நீத்திடிங் கின்னலையே.

(கு - உரை.) மதி - பிறை. மாது : விளி. மணி அதிர் தேர் - மணி முழங்குகின்ற தேர். தேர் வந்தது; கைக்கு வால்வளை அணி; கதிர் முலையில் பணியை ஏற்று. வேய் - புனைந்துகொள். கலை - ஆடை. கலையைப் புனைந்திடு. இங்கு இன்னலை நீத்திடு.

---

## காவற் பிரிவு.

[தலைவன் நாடு காத்தற்காகப் பிரிதல். அரசனாதலின் தலைவன் நாடுகாத்தற்குரியன்.]

### காவற்பிரிவு தலைவன் உணர்த்த உணர்ந்த தோழி தலைவிக்கு உணர்த்தல்.

427. பொன்னல மேருவிற் கோடீச்சு ரேசனைப் போற்றிடுநம்
மன்னவர் காவல னாவா னுரியதன் மாதரைநீ
டின்ன லுறுமற் புரப்போனென் றார்நென்ன லின்றகன்றார்
கன்னலஞ் சொல்லிமண் காக்கமுன் னீது கருதிலனே.

(கு - உரை.) பொன் நலம் மேரு வில்-பொன்னாலாகிய அழகிய மேருவாகிய வில்லையுடைய. காவலனாவான் - அரசன். மாதரை - மனைவியை, பெரிய பூமியை. நென்னல் - நேற்று; நென்னல், 'புரப்போன்' என்றார். கன்னல் - கரும்பு. மண்காக்க - நாடு காக்கும்பொருட்டு. ஈதென்றது, பெரிய பூமியை நீடிய துன்பம் அடையாமற் காப்பவன் அரசனென்னும் பொருளை; முன் ஈது கருதிலனென்றமையின் மாதரையென்பதற்குத் தனக்கு உரிய மனைவியை என்ற பொருளை முன் கொண்டாளாயிற்று.

### தலைவி கூதிர்ப்பருவம் கண்டு வருந்தல்.

(கூதிர்ப்பருவம் - ஐப்பசி கார்த்திகை மாதங்கள்.)

428. ஆடைவன் றோலுடைக் கோடீச்சு ரேச ரசலத்துறும்
வாடையிவ் வாடையிற் றீர்ந்திடு மோவன்பர் மார்பமின்றிப்
பேடைதன் சேவல் சிறகா லணைத்தும் பெரிதயரும்
ஓடை யுறுகார்க் குலமும் விளர்த்த துடன்முற்றுமே.

(கு - உரை.) ஆடை வன்றோலுடை - ஆடையாக வலிய தோலை உடைய. அசலத்து - மலையில். வாடை இ ஆடையில் - வாடைக்காற்று இந்த ஆடையினால். அன்பர் மார்பம் இன்றித் தீர்ந்திடுமோ. பேடை - பெண்பறவை. பெரிது அயரும் - மிக வருந்தும். அணைத்தும் பேடை அயரும். ஓடு ஐ உறு கார்க்குலமும் விளர்த்தது - ஓடுகின்ற அழகிய மேகக்கூட்டமும் வெண்ணிறங்கொண்டது. உடல் முற்றும் விளர்த்தது.

பாங்கி ஆற்றுவித்தல்.

429. செயிர்விடைப் பாகர்தென் கோடீச்சு ரேசர் செழுஞ்சிலம்பில்
வயிருட னன்பர்பொற் றேர்மணி யார்க்கின்ற மத்துறுமென்
தயிரென நீதள ரேல்சரற் காலத் தகையுணர்ந்துன்
உயிரினைக் காக்கவந் தார்நிலங் காத்தல்விட் டொண்ணுதலே.

(கு - உரை.) செயிர் - கோபம். வயிருடன் - ஊது கொம்பினோடு. வயிருடன் மணிகள் ஆர்க்கின்றன. மத்துறும் மென் தயிர் என - மத்துக் கடைதலுற்ற மெல்லிய தயிரைப்போல; "ஆயர் மத்தெறி தயிரி னுயி னர்" (சீவக. 421.) தளரேல் - வருந்தற்க. தகை - இயல்பு. சரற்காலம் - கூதிர்க்காலம். வந்தார் - அன்பர் வந்தார்; நிலங்காத்தலை விட்டு வந்தார்.

---

## தூதிற் பிரிவு.

[இருவேந்தரைப் பகைதணிவித்து நட்பாக்குதற்குத்
தலைவன் தூதாகச்செல்லுதல்.]

தூதிற்பிரிவு தலைமகனால் உணர்ந்த தோழி தலைவிக்குணர்த்தல்.

430. பாலங்கொள் கையினர் கோடீச்சு ரேசர் பரங்கிரிநம்
வேல ரிருமன்னர் போரூ ரிடந்தனின் மேவியெதிர்
சாலத் தணிகைகண் டென்றித் திருப்பதி சாருதுமென்
றாலங் குடிகொண்ட கண்ணணங் கேயின் றகன்றனரே.

(கு - உரை.) பாலம் - மழுவாயுதம்; நெற்றியென்னும் உறுப்பைக் கொண்ட கையையுடையாரென ஒரு பொருள் தோற்றியது. பரங்கிரி - உயர்வையுடைய மலையில். நம் வேலர் - தலைவர். போர் ஊர் இடம் தனில் - யுத்தம் நிகழும் இடத்தில். தணிகை கண்டு - தணிதலைக்கண்டு; என்றது தூது சென்று சமாதானம் செய்தென்றவாறு. இ திருப்பதி - இவ்வூரை. என்று - என்று கூறிவிட்டு. ஆலம் - விடம். குடிகொண்ட - இருப்புக்கொண்டாற் போன்ற.

இதில், பரங்கிரி, போரூர், தணிகை, திருப்பதி, ஆலங்குடி யென்னும் தலப்பெயர்கள் தொனிக்கின்றன.

தலைவி முன்பனிப் பருவங்கண்டு வருந்துதல்.

(முன்பனிப் பருவம் - மார்கழி தை மாதங்கள்.)

431. முன்பனி யெங்கும் புகைபோற் பரந்தது முன்மதனும்
வன்ப னிதன்கண் மறைந்தென்ற னுருயிர் வாங்கவரும்

அன்பனில் காலத் தவனொடெவ் வாறம ராற்றுவல்பே
ரின்ப னிராகுலன் கோடீச்சு ரேச னிமவரைக்கே.

(கு - உரை.) மதனும் வன்பன் - மன்மதனாகிய கொடியவன். இதன் கண் - இப்பனியில். வரும் - வருவான். அவனொடு - அந்த மன்மதனோடு. எவ்வாறு அமர் ஆற்றுவல் - எப்படிப் போர்புரிவேன்; போர் செய்ய அன்பன் வேண்டுமென்றபடி. நிராகுலன் - துன்பமில்லாதவன்.

## தோழி ஆற்றுவித்தல்.

432. அசைஞா யிறுதிங்கட் கண்ணன்செவ் வாயின னற்புதன்விண்
மிசைவாய் புகழ்த்திருக் கோடீச் சுரவண்ணல் வெற்பிடத்தில்
இசைவா வியாழஞ்சொல் வெள்ளியற் கோற்றொடி யிப்பொழுதுன்
நசைவாய்ந்து பொய்வ சனியாத மன்னிங்கு நண்ணுறுமே.

(கு - உரை.) அசைஞாயிறு - திரிகின்ற சூரியன். ஞாயிறு திங்கட் கண்ணன் - சூரியனையும் சந்திரனையும் கண்ணாக உடையவர். செவ்வாயினன் - செம்மையையுடைய வாயினையுடையார். அற்புதன் - ஞானவடிவினர்; "அற்புத மூர்த்தி" (நள். சிறப்புப்.) விண்மிசை வாய் - தேவருலகத்தில் வாய்ந்த. இசை வாவு யாழ் அம் சொல் - இசை பரவுகின்ற யாழின் ஓசையைப்போன்ற சொல்லையும். வெள் இயல் கோல் தொடி - வெண்ணிறமும் திரட்சியுமுடைய வளையையும் உடையாய். உன் நசை வாய்ந்து - உனது அன்பைப் பெற்று. பொய் வசனியாத மன் - பொய்ம்மொழி கூறாத தலைவன். நண்ணுறும் - வந்து சேருவான். இப்பொழுது மன் நண்ணுறும்; நீ வருந்தாதொழிக.

இதில் ஞாயிறுமுதல் சனியிறுதியாகவுள்ள ஏழு வாரங்களின் பெயர்களும் முறையே தொனிக்கின்றன.

---

## துணைவயிற் பிரிவு.

[தன்னுடைய நண்பனாகிய அரசனுக்குப் போரில் துணை செய்யும்பொருட்டுத் தலைவன் பிரிதல்.]

### துணைவயிற்பிரிவு தலைவனால் உணர்ந்த தோழி தலைவிக்கு உணர்த்தல்.

433. வானார் மதிச்சடைக் கோடீச்சு ரேசர் வரையிடத்தில்
ஊனார் வடிவே லிறைவரோர் வேந்துக் குதவியுறப்
போனா ரவட்கின்று னன்பர்வந் தார்துணைப் போயெனநீ
நானார் தரவருவேனென வோதி நறுநுதலே.

(கு - உரை.) ஓர் வேந்துக்கு உதவி உற - ஓர் அரசனுக்குத் துணை யாதற்கு. 'அவட்கு ..என': இது தலைவன் கூறியதாகத் தோழி கொண்டு கூறியது. அவட்கு - தலைவிக்கு. துணைப்போய் வந்தார். என - என்று சொல்லும்படி. நீ என. ஆர்தர - பொருந்த. என ஓதி - என்று சொல்லி. ஓதிப்போனார். போய்வந்தாரென்று சொல்லி முடிவதற்குள் மீண்டுவந்து விடுவேனென்றது விரைவைப் புலப்படுத்தியபடி.

தலைவி பின்பனிப்பருவம் கண்டு வருந்தல்.

(பின்பனிப்பருவம் - மாசி பங்குனி மாதங்கள்.)

434. காலனைக் கால்கொண் டுதைத்துயிர் வாட்டிக் கலங்கிடொரு
பாலனைக் காத்தவர் கோடீச் சுரத்திற் பரவைவிடம்
போலணை பின்பனி யாலென்ற னுருயிர் போதலுறின்
மேலனை போனுமின் னேபழி வேந்தரை மேவிடுமே.

(கு - உரை.) கால் கொண்டு உதைத்து. கலங்கிடு ஒரு. பாலனை - மார்க்கண்டேயரை. பரவை விடம்போல் அணை - கடலிற் பிறந்த விடத்தைப்போற் பொருந்துகின்ற; பின்பனிக்கு விடம் உவமை. போதலுறின் - போனால். மேல் - என் உயிர் போனபின். அனை - தாய். மேல் வேந்தரைப் பழி மேவிடும்.

தோழி ஆற்றுவித்தல்.

435. நீடல் லெனுங்கண்டர் கோடீச் சுரமன்ன நேரிழையோர்
ஆடல வற்கா வடுதுறை மேவி டரசையெண்ணிக்
கூடலைப் பார்த்துறு நெல்லையு நோக்கிக் குலவுமனம்
வாடல வற்கிறை வெற்றியங் கீந்தின்று வந்திடுமே.

(கு - உரை.) நீடு அல் எனும் கண்டர்; அல் - இருள். ஓர் ஆடல வற்கா - போர்செய்யும் ஓரரசன் பொருட்டு. அடுதுறை மேவிடு அரசை எண்ணி - போர்க்களத்திற்குச் சென்ற தலைவனை நினைந்து; துறை - போர்த்துறை. கூடலைப்பார்த்து - அவர் வருவாரோ வென்று கூடற்சுழியைப் பார்த்து. நெல்லையும் நோக்கி - நெற்குறியையும் பார்த்து; கட்டுப்பார்த்து. மனம் வாடல் - நெஞ்சம் வருந்தலையொழி. அவற்கு - அந்த அரசனுக்கு. இறை - நம் தலைவர். வெற்றி ஈந்து வந்திடும்.

இதில் ஆவடுதுறை, கூடல் (மதுரை), நெல்லை (திருநெல்வேலி) யென்னும் தலப்பெயர்களும் ஆவடுதுறை மேவிடு அரசு என அத்தல விருட்சத்தின் பெயரும் தொனிக்கின்றன.

---

## பொருள்வயிற் பிரிவு.

[தலைவன் பொருள் காரணமாகப் பிரிதல்.]

### தலைவன் பொருட்பிரிவு பாங்கிக்கு உணர்த்தல்.

436. பொன்னே யெனுமுன் னவசமுற் றொல்லைப் புறந்தடவி
என்னே யெனப்பின் விழித்தெழுந் தெங்குற்ற தித்துணைநாள்
கொன்னேயென் றோட்கென் பொருட்பிரி வென்னெனக் கூறுவனீ
மின்னே யெதிர்புகல் கோடீச் சுரநம்பர் வெற்பிடத்தே.

(கு - உரை.) பொன்னே எனும் முன் - திருமகள்போல்வாயென்னும் பொருள்படப் பொன்னே என்று சொல்லும் முன்னர். அவசமுற்று - பொன்னென்பதற்குப் பொருளெனப் பொருள்கொண்டு அதனைத் தேடுதற்பொருட்டுப் பிரியக் கருதுகின்றாரென நினைந்து உணர்வை இழந்து. ஒல்லை - விரைவில். புறம் தடவி - முதுகைத்தடவி. என்னே என - இவ்வாறாதற்கு என்ன காரணம் என்று யான் கூற. கொன்னே இத்துணை நாள் எங்கு உற்றது - வீணாக இவ்வளவு நாள் நீர் என்னைப் பிரிந்து சென்றது எங்கே. என்றோட்கு - என்ற தலைவிக்கு. என் எனக் கூறுவேன் - யாதென்று சொல்லுவேன். மின்னே நீ புகல் என்க.

" திரைகட லோடித் திரவியந் தேடென்று செப்புமௌவை, உரை பழு தன்றெனச் சோர்ந்தாள் கழுக்குன்றத் தோர்மடமான், அரைபணி நீர்ச்சந் தனங்கொண்டு பாங்கிய ராற்றியபின், இரைகடல் போய்வர வெத்தனை நாளென் றெழுந்தனளே " (தனிப்.) என்ற பாடலை இது நினைப்பிக்கின்றது.

### பொருட்பிரிவு பாங்கி தலைவிக்கு உணர்த்தல்.

437. படுவொன் றறம்பொரு ளின்பெனு மூன்றனுட் பாங்கிரண்டும்
நடுவொன் றுளதெனி னுண்டாமென் றோதி நலந்தருமா
வடுவொன் றிரண்டு வகிரன்ன கண்ணி மகிழ்நர்சென்றார்
கடுவொன்று கந்தரர் கோடீச்சு ரேசர்தண் கார்வரைக்கே.

(கு - உரை.) படு ஒன்று - உண்டாதல் பொருந்திய; படு - படுதல்; முதனிலைத்தொழிற்பெயர். பாங்கு இரண்டும் - இங்குக்கூறிய மூன்றனுள் பொருளின் இருசாரும் உள்ள அறமும் இன்பமும். நடு ஒன்று உளதெனில் - நடுவிலே உள்ள பொருள் இருப்பின். உளதெனின் உண்டாம்; " வடுவிலா வையத்து மன்னிய மூன்றில், நடுவண தெய்த விருதலையு மெய்தும் " (நாலடி. 114); " அறம்பொருளின்பமென், றோரா ரிவற்றி

ணிடையதனை யெய்துவார், சீரா ரிருதலையு மெய்துவர்" (சிறியதிரு மடல், 3-4.) மாவடு ஒன்று இரண்டு வகிர் அன்ன கண்ணி - ஒரு மாவடுவின் இரண்டு பிளவினை ஒத்த கண்ணினையுடையாய். மகிழ்நர் - தலைவர். கடு ஒன்று கந்தரர் - விடம் தங்கும் கழுத்தை உடையவர்.

### தலைவி இளவேனில் கண்டு வருந்தல்.

(இளவேனில் - சித்திரை வைகாசி மாதங்கள்.)

438. மென்மலர்க் கொன்றையர் கோடீச் சுரத்திள வேனில்கொண்டு
துன்மதி வெண்குடை யானந்த நீள்கடற் றுந்துபிப்போர்
மன்மதன் றாது வளர்கோல் விசய மருவவரும்
என்மனம் வாடுமிங் கிதறி யார்பொருட் கேகினரே.

(கு - உரை.) வேனில்கொண்டு - வேனிலைத் துணையாகக் கொண்டு. துன்மதி வெண்குடையான் - கொடிய சந்திரனாகிய வெள்ளிய குடையை யுடையவன். அந்த நீள் கடல் துந்துபிப்போர் மன்மதன் - அந்தப் பெரிய கடலாகிய முரசை யுடையவனாய்ப் போர் புரிதலையுடைய மன்மதனது. தாது வளர் கோல் - மகரந்தம் பெருகும் மலரம்புகள். விசயம் மருவ வரும் - அவனுக்கு வெற்றியுண்டாகஎன்பால் வரும். என் மனம் வாடும்- அது கண்டு எனது நெஞ்சம் வருந்தும்.

இதில் துன்மதி, ஆனந்த, துந்துபி, மன்மத, தாது, விசயவென்னும் வருடப்பெயர்கள் தொனிக்கின்றன; "பிரபவனாகிப் பிரசோத்பத்தி செய்கின்ற மன்மதா.........சருவசித் தாகிமே லட்சய னாகுவாய் மன்மதா" சா. தற.

### பாங்கி ஆற்றுவித்தல்.

439. கங்கைகொள் வேணியர் கோடீச்சு ரேசர்தங் காவிரிநாட்
டங்க யமுனை முலைத்தென் குமரி யனநடையாய்
இங்கினிச் சிந்துநன் கோதா வரியுறை யீர்ந்தொடையார்
தங்க வருகின் றனர்வேனில் கண்டு தளர்ந்திடலே.

(கு - உரை.) காவிரி நாட்டு - காவிரியால் வளமுறும் சோழநாட்டில்; "காவிரி புரக்கு நாடு" (பொருந.) அம் கயம் முனை முலை-அழகிய யானைக்கொம்பை அல்லது அதன் மத்தகத்தைப் பொருகின்ற தனத்தை யுடைய; கயம் - யானை; முனைதல் - போர்செய்தல். தென்குமரி - அழகிய பெண்ணே. அன்ன நடையாய். சிந்து நன்கு ஓதா வரி உறை ஈர்ந்தொடையார் - சிந்தென்னும் பாட்டை நன்றாகப் பாடி வண்டுகள் தங்குகின்ற ஈரத்தையுடைய மாலையை அணிந்த தலைவர்; ஓதா - ஓதி. தங்க - இங்கே வந்து இருத்தற்கு. தளர்ந்திடல் - வருந்துதலையொழி.

இதில் முன்பு கங்கை காவிரி யென்னும் இரண்டு நதிகளைக் கூறிய தற்கேற்ப யமுனை, குமரி, சிந்து, கோதாவரி யென்னும் ஆறுகளின் பெயர்களும் தொனிக்கின்றன. ஆறு ஆற்றின் பெயர்கள் இதில் வந்துள்ளன.

வேனிலுக்குத் தளரவேண்டாமென்றதற்கேற்ப ஆறுகளைக் கூறியிருத்தல் அறிந்து இன்புறற்பாலது.

தலைவன் உருவு வெளிப்பாடு கண்டு சொல்லியது.

(பொருள்பெற்று மீண்டுவரும் தலைவன் தன் ஆர்வமிகுதியினால் தலைவியின் உருவம் வழியிடையில் வெளியே தோன்றக்கண்டு கூறியது. இத்தோற்றம் உருவெளித்தோற்றமெனப்படும்.)

440. பொன்னுறு மேனியர் கோடீச்சு ரேசர் பொருப்பிலொரு
மின்னுறு கின்ற ததிலே பிறையும் வியன்குமிழும்
பன்னுறு வில்லுங் கணையுங் கமலப் பருமுகையும் [பே.
என்னுறு பார்வைமுன் னெங்கணுந் தோன்றுமி தென்வியப்

(கு - உரை.) ஒரு மின் உறுகின்றது. அதிலே - அந்த மின்னலில். பன்னுறு வில் - சொல்லப்படும் விற்படை. என் உறு பார்வைமுன் - என் கண்களின் முன். மின், பிறை, குமிழ், வில், கணை, கமலமுகை யென்றவை முறையே தலைவியின் மேனி, அவள் நெற்றி, நாசி, புருவம், கண்கள், நகில்களென்பவற்றை யெனக்கொள்க.

ஊர்வந்த தலைமகன் பாகற்குச் சொல்லியது.

(விரைவில் தேர் செலுத்தித் தன்னை ஊரிற் சேர்த்தியதை வியந்து தேர்ப்பாகனுக்குத் தலைவன் கூறியது.)

441. மலைவளை கையினர் கோடீச் சுரம்வாழ் வலவமுன்வான்
நிலைவளர் மாதலி கைத்திறங் கேட்டுள னீடதன்பின்
உலைவறு சீர்நளன் செய்கைகண் டேனின்றைக் குன்கைகண்டேன்
சிலைநுதல் பாலென் மனத்தின்முன் றேர்வரச் செய்தனையே.

(கு - உரை.) மலைவளை கையினர் - மேருமலையை வளைத்த திருக்கரத்தை யுடையார். வலவ - தேர்ப்பாகனே. வான் நிலை - வானமாகிய இடத்தில். மாதலி - இந்திரனுடைய தேர்ப்பாகன். உலைவு அறு சீர் - கெடுதலற்ற புகழையுடைய. நளன் செய்கை - நளன் தேர் செலுத்தும் செயலை; நளன்தேர் செலுத்துவதில் வன்மையுள்ளவனென்பது நைடதம் கலிநீங்குபடலத்தால் உணரப்படும். உன் கைகண்டேன் - உன் கைவன்

மையைப் பார்த்தேன். சிலை நுதல்பால் - வில்லைப்போன்ற நெற்றியை யுடைய தலைவியினிடத்து. மாதலி, நளன் என்னும் இருவர் வன்மையை யும்போன்ற வன்மை உன்பாலுளதென்றபடி.

பாங்கி தலைவன் வந்துழி மகிழ்ந்து உரைத்தல்.

442. மின்னிற் கிளர்சடைக் கோடீச் சுரவள்ளல் வெற்புறுநின்
பொன்னிற்குப் பொன்னு மணிக்கு மணியும் புரவலநீ
மன்னிற்கு ளெங்கு நிறைத்தாய் கொணர்ந்து மகிழ்வினினிக்
கன்னிக் குயின்மொழி துன்னுமில் வாழ்க்கை கனந்தருமே.

(கு - உரை.) நின் பொன்னிற்கு - நின் பொன்போன்ற தலைவிக்கு. பொன்னும் - தங்கத்தையும். மணிக்கு-அரதனம்போன்ற புதல்வனுக்கு; "நடை மணி" (சிற்.) மணி - மணிகளையும். மன் இற்குள் - நிலைபெற்ற வீட்டிற்குள். மகிழ்வின் கொணர்ந்து நிறைத்தாய். கன்னிக்குயில் மொழி - தலைவி. கனம் - பெருமை; பொருள்வளம் மிக்கமையின் இல் வாழ்க்கை கனம்தருமென்றாள். பொன், மணி முதலிய கனமுள்ள பொருள்களை நிரப்பியவதனால் பாரத்தைத் தருமென்னும் மற்றொரு பொருளும் தோற்றியது; இல்வாழ்க்கை மேகத்தைத் தரும்எனலும் ஆம்; "வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்" கலி. 16: 20.

தலைமகளோடு இருந்த தலைவன் கார்ப்பருவங் கண்டு சொல்லியது.

(கார்ப்பருவம் - ஆவணி புரட்டாசி மாதங்கள்.)

443. புறத்தாழ்மென் பூங்குழற் பொன்னிடை வந்து புணர்தலுற்றேன்
திறத்தார் மழுப்படைக் கோடீச்சு ரேசர் செழுமிடறு
நிறத்தாட் சிலம்பு சடையரு ளாமென நீயினிமெய்
கறுத்தார்த்து மின்னிப் பொழிமழை நாளுங் கனமுகிலே.

(கு - உரை.) புறம் தாழ் - முதுகின் புறத்தே தாழ்ந்த. பொன்னி டை - பொன்போன்ற தலைவியினிடத்து; புறத்தாழ்: புறந்தாழென் பதன் விகாரம். மிடறு - கண்டம். கறுத்து - கருநிறம் கொண்டு. மிட றெனக் கறுத்துச் சிலம்பென ஆர்த்துச் சடையென மின்னி அருளா மெனப் பொழியென்க; நிரனிறை. கனமுகிலே - நீர்ப்பாரத்தையுடைய மேகமே. முகிலே நாளும் பொழி; "எழுந்த தண்புய லிடைமரு திறை யவ னிபத்தின், முழங்கி யாங்கத னேடையின் மின்னியோர் மூன்று, செழுங்க ணுனுட னுமைதிகழ் சிறப்பின்விற் கோட்டிப், பொழிந்த சையமேற் சுராமு தகுத்தன போல" (திருவிடை. நாட்டு. 3); "ஒளிறு வாட் பொருப்ப னுடல்சமத் திறுத்த, களிறுநிரைத் தவைபோற்

கொண்மூ நெரிதர, அரசுபடக் கடந்த வானுச்சீற் றத்தவன், முரசதிர் பவைபோன் முழங்கிடி பயிற்றி, ஒடுங்கா ருடன்றவன் ரூனை வில்விசை, விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறாஉக், கண்ணொளி ரெஃகிற் கடிய மின்னியவன், வண்மைபோல் வானம் பொழிந்த நீர்" (பரி. 22 : 1 - 8) ; "ஊழி முதல்வ னுருவம்போன் மெய்கறுத்துப், பாழியந் தோளு டைப் பற்பநா பன்கையில், ஆழிபோன் மின்னி வலம்புரிபோ னின் றதிர்ந்து, தாழாதே சார்ங்க முகைத்த சரமழைபோல், வாழ வுலகினிற் பெய்திடாய்" (திருப்பாவை, 4) ; "நிடதநா டளிக்கும், மன்னர் மன்ன வன் மண்டமர் கடந்தவொள் வேலின், மின்னி யாங்கவன் முரசென விண்ணிடை யதிர்ந்து, பொன்னங் குன்றின்மே லவன்கொடை போன் மெனப் பொழிந்த" நைடதம், நாட்டு. 2.

## கோடீச்சுரக் கோவை

## மூலமும் குறிப்புரையும் முற்றுப்பெற்றன.

---

# சிறப்புப் பாயிரங்கள்.

---

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

1. அருமறைபோற் றிடுபரமர் மகிழ்கோடீச் சுரக்கோவை
யமிர்த வெள்ளத்
தொருதுறையி லிறங்கினர்க ளதிற்படிந்தன் னதன்சுவையாங்
குண்டு தம்பால்
வருதமிழ்ப்பா வலர்தமக்குங் கொடுத்தினிது பேருவகை
மருவு வார்மேற்
கருதுபல துறையினுமிவ் வாறேயாம் பார்த்திடுமின்
கற்று ளோரே.

கட்டளைக் கலித்துறை.

2. நாவணக் காக்கவி கற்றொ ருருவனிந் நானிலத்தே
கோவணத் தாண்டியைக் கோடீச் சுரனெனக் கூறியொரு
மாவணக் கோவை புனைந்தா னதையச் சுறுத்திமண்மே
லாவணத் தேவிற்கச் செய்தாரந் தோசெல்வம் யார்க்குரித்தே.

---

1. இதனை இயற்றியவர், இந்நூலாசிரியருடைய முதற்புதல்வராகிய ஸ்ரீ வடுகநாததேசிகர்.

2. இச்செய்யுள், இந்நூலை முதலில் அச்சியற்றுங்காலத்தில் நிந்தாஸ்துதியாக ஒருவரால் இயற்றப்பெற்றதாகத் தெரிகின்றது; அவர் இன்னரென்று தெரியவில்லை.

ஆண்டியைக் கோடீச்சுரனெனச்சொல்லி ஒரு முத்துமாலையையணிய அவனைப்பயமுறுத்திச் சிலர் அதனை ஆவணத்தில் விற்கச்செய்தன ரென்னும் ஒரு பொருள் இதில் தொனிக்கின்றது.

# பாடபேதம்.

---

| பாட்டின் எண். | | பாட்டின் எண். | |
|---|---|---|---|
| 9. | இருக்கின்றீர் | 231. | அலைவாய்க்குருகிழந்து |
| 10. | கைப்பட்டவால் | 290. | தார்க்குழலே |
| 19. | கக முதவும் | 303. | பிரிவண்ணினர் |
| ,, | முகமதிற்றோன்றிய | 336. | உரமேற்றிவளர்த்தமயில் |
| 28. | பொன்மலைபோல் | 342. | மகிழன்மி னேந்திழையீர் |
| 31. | தெளி வின்னதுவே | 349. | வன்பாங்கி |
| 54. | மாவனம் | 351. | திகையார் தனத் |
| 97. | பெட்டார் | 358. | எங்ஙனுங் காண்கிலன் |
| 148. | சாருமெங்கள் | 362. | நீட்டுவாள் |
| 151. | ஆற்றலளாய் | 415. | கரன்கொண்ட |
| 169. | தனங் தன்னின்மன் | 419. | புக்கதில்போகவிலை |
| 219. | விழியீர் | 428. | வெளிர்த்ததுடல் |
| 227. | சூழுறுவேணியினார் | 431. | முன்னமனும் |

---

# செய்யுள் முதற் குறிப்பகராதி.

உ

கணபதி துணை.

# தஞ்சைப் பெருவுடையாருலா.

---

## நூன்முகம்.

உலாவென்பது தமிழ்மொழிக்குரிய தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று; தலைவன் வீதியிடைப் பவனிவரும் சிறப்பைப்பற்றிக் கூறுவதாதலின் இஃது இப்பெயர் பெற்றது; (உலா-பவனி.) அவ்வாறு உலா வருகையில், பேதைமுதற் பேரிளம் பெண் ஈறாகவுள்ள * ஏழு பருவமகளிர்களும் அத்தலைவனைக் கண்டு விரும்பி மால்கொண்டனரென்னும் பொருளை அமைத்து அவனுடைய பலவகையான மேம்பாடுகளும் புலப்படக் கலி வெண்பாவாற் பாடப்படுவது இது. இவ்வேழுபருவ மகளிரும் பொதுமகளிராவர்; இது தொல். புறத். சூ. 30, நச்சினார்க்கினிய ருரையால் விளங்கும். இந்நூலிற் கூறப்பட்டவர்கள் உருத்திர கணிகையர்.

தாம் வழிபடு கடவுளர், தம்முடைய ஆசிரியர், தம்மைப் பாதுகாக்கும் அரசர் முதலியவர்களுள் யாரேனும் ஒருவரைத் தலைவராகக்கொண்டு புலவர்களால் அவரவர்களுக்கேற்பப் பாடப் படுவது; திருக்கைலாய ஞானவுலா, ஞானவினோதனுலா, மூவருலா என்பன முறையே உதாரணங்களாம்.

வடமொழியினும் தென்மொழியினும் உள்ள காப்பியங்களில் தலைவன் உலாவரும்பொழுது அங்கங்கே அவனைக்கண்ட மடவார் மயங்கியதும் பலவற்றைக் கூறியதுமாகிய செய்திகள் காணப்

---

* ஏழு பருவங்களுக்குரிய பிராயங்களாவன: பேதை ஐந்து முதல் ஏழுவரை; பெதும்பை: 8 - 11; மங்கை: 12 - 13; மடந்தை: 14 - 19; அரிவை: 20 - 25; தெரிவை: 26 - 31; பேரிளம்பெண்: 32 - 40 என்பர்; இ - வி. பாட்டியல், சூ. 99 - 103 பார்க்க; பிறவாறு கூறுவாரு முளர். பெருங்கதையில் உள்ள நீராட்டரவமென்னும் பகுதியில் இவ்வேழு பருவமகளிரின் இயல்புகளும் செயல்களும் தனித்தனியே விரித்துச் செவ்வனே கூறப்பட்டுள்ளன.

படும். கம்பராமாயணத்தில் இத்தகைய செய்திகளைக் கூறும் பகுதி யொன்று உலாவியற்படலமென்னும் பெயருடன் அமைந்திருத்தல் இங்கே கருதற்குரியது. உலாச்சிறப்பையே தனியாக அமைத்துப்பாடிய உலாப் பிரபந்தங்களுள் மிகப் பழமையானது மேற்கூறிய திருக்கைலாய ஞானவுலா ஆகும். அது முதலில் இயற்றப்பட்டதாதலின் ஆதிஉலா வெனவும் வழங்கப்பெறும். அவ்வுலாவைப் பின்பற்றித் தத்தமக்குத் தோற்றிய பலவகைக் கற்பனைகளை அமைத்துப் பிற்காலத்துப் பல கவிஞர்கள் உலாக்களை இயற்றினர்.

உலாவை உலாப்புறமெனவும் வழங்குவர்; "கோவையகம் வைத் துலாப்புறங் காட்டுதி" (கோடீச். 157) எனத் தொனியில் இந்நூலாசிரியர் இப்பெயரை அமைத்திருத்தல் காண்க.

தஞ்சைப் பெருவுடையாருலா வென்பது தஞ்சை இராச ராசேச்சுரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருவுடையார் (பிரகதீசுவரர்) மீது கோட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகரால் இயற்றப் பெற்றது. முதலாம் இராசராசசோழனால் திருப்பணி செய்து வழிபடப் பெற்றமையின் இத்தலம் இப்பெயர் பெற்றது. இது கருவூர்த்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பாப் பெற்ற தலம்; "பாரிற், கருவிசையை நீத்த கருவூரார் போற்றும், திருவிசைப் பாவுகந்த தேவே" (300-301) என்பர் இந்நூலாசிரியர்.

தன்னை வதம்செய்த ஆனந்தவல்லி அம்பிகையை நோக்கித் தஞ்சகாசுரன் என்பவன், "இத்தலம் அடியேன் பெயரால் வழங்க வேண்டும்" என்று வரம் பெற்றமையின் தஞ்சாபுரி அல்லது தஞ்சையெனவும், குபேரன் பூசித்துச் சிலகாலம் இருந்தமையின் * அளகையெனவும் இது வழங்கப்பெறும்.

அம்பிகையின் திருநாமம் பெரியநாயகி யென்பது; பிருகந் நாயகியென்று வடமொழியில் வழங்கும். இதில் எழுந்தருளி யுள்ள விநாயகமூர்த்திகள் பலர். அவருள் இந்நூலிற் காப்பாகக் கூறப்பெற்றவர் † அருமொழி விநாயகர்.

---

* இப்பெயர் குலோத்துங்க சோழன் கோவையிற் பலவிடத்து வந்துள்ளது; "அத்தாரு நேருங் குலோத்துங்க சோழ னளகைவெற்பில்", "அளகா புரிமன் குலோத்துங்கன்" 11, 162.

† அருமொழித்தேவரென்பது முதல் இராசராசதேவரது பெயராதலின் இம்மூர்த்தி அவ்வரசராற் பிரதிஷ்டிக்கப்பட்டவர் போலும்.

இத்தலத்திற்குப் பிருகதீசுவர மாகாத்மியம், சமிவன க்ஷேத்திர மாகாத்மிய மென்னும் வடமொழிப் புராணங்கள் இரண்டுள்ளன. ஆராய்ந்து பார்க்கையில் இந்நூலிற் காணப்படும் வரலாறுகள் பிருகதீசுவர மாகாத்மியத்தை ஆதாரமாகக்கொண்டு அமைக்கப்பெற்றுள்ளனவென்று தெரிகின்றது. இவற்றையன்றிப் பெருவுடையார் கோயிலிலுள்ள பல சாஸனங்களால், முதல் இராசராச சோழ தேவரும் அவரைச் சார்ந்தோர்களும் இத்தலத்திற் கற்பணியும் பொற்பணியும் செய்து பல நிபந்தங்கள் அமைத்ததும் பிறவும் அறியப்படுகின்றன.

* திருவாரூர்த் தியாகராசமூர்த்திபால் மிக்க பற்றுடைய

---

* "தஞ்சைக் கோயிலில் வயது முதிர்ந்தோராய் இக்காலத்துள்ள அர்ச்சகர் முதலியோர், ராஜராஜன் தஞ்சையில் கற்றளி அமைப்பதற்கு முன்னர்த் திருவாரூர்த் தியாகேசரை உபாசித்துத் தரிசனத்துக்கு அத்தலத்துக்கு அடிக்கடி போய் வந்ததாகவும், தஞ்சையிற் கோயில் அமைத்தபொழுது திருவாரூர்க் கோயிலிலுள்ள ஏற்பாடுகளையே கைக்கொண்டதாகவும், தஞ்சை, நாயக்கர் ஆட்சியில் வந்தகாலத்து அவர்கள் வைணவப் பற்றுடையவராய்த் தஞ்சைக்கோயிலைக் கவனிக்காமையிலுலே ராஜராஜன் காலத்தும் அவன்மகன் ராஜேந்திரன் காலத்தும் ஏற்படுத்தப்பட்ட வழக்கங்கள் நழுவினதாகவும், மகாராஷ்டிரர் ஆளுகையில் தஞ்சை வந்தகாலத்து அவர்கள் சைவர்களாதலால் சோழர்கள் காலத்து நழுவிய வழக்கங்களை அறிந்து அரசனே நேரில் திருவாரூர் சென்று வழக்கங்களைச் செவ்வனே விசாரித்து எழுத்தில் அமைத்துக் கொண்டு வந்து நழுவிய வழக்கங்களை நடைபெறும்படி செய்ததாகவும், எழுத்தில் அமைத்தது பத்திரம் முதலிய கடிதங்கள் வைத்திருக்கும் இடத்தில் இருப்பதாகவும் கூறுகின்றனர். இவர் கூற்றை உண்மையென்று கொள்வதற்கு ஆதாரமாக அக்கோயிலில் இப்பொழுது காணப்படுவனவற்றுள் சிலவற்றை ஈண்டு வரைகிறேன். திருவாரூர்க் கோயிலில் தியாகேசர் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதுபோலத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலிலும் தியாகேசர் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறார்.......................................திருவாரூர்த் தியாகராஜாவுக்கு விடங்கரென்று பெயர் இருப்பதுபோலத் தஞ்சையிலும் விடங்கரென்னும் பெயர் வைக்கப்பட்டுள்ளது. (S. I. I. Vol. II, Part V, Rajaraja's Life, 13.) சிலாசாஸனங்களில் தஞ்சைவிடங்கரென்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருவாரூரில் தியாகராஜாவுக்குரியது அஜபா நடனம். தஞ்சையிலுமஃதே. திருவாரூர்க்கோயிலில் நடைபெறுவதுபோல் தஞ்சையிலும் வஸந்தோத்ஸவம் 18 நாள் நடைபெறுகின்றது. திருவாரூரில் தியாகராஜாவுக்

சோழர்கள் இத்தலத்துள்ள சோமாஸ்கந்த மூர்த்தியைத் தியாக ராசமூர்த்தியாகவே பாவித்து அத்தலத்தில் அவருக்கு நடைபெறும் சிறப்புக்களையெல்லாம் இத்தலத்தே இவருக்கும் நடத்தி வந்தார்களென்று தெரிகிறது. * தஞ்சை விடங்கரென்பது இவரது திருநாமமென்பர்; இத்திருநாமம் சாஸனங்களிலும் காணப்படுகின்றது; "சீரார் கருணைத் தியாகரே - ஏராரோங், காரரே" (96 - 7), "வள்ளலினைக் கண்டு வணங்கியே" (299) என்னும் இந்நூற் கண்ணிகளில் தியாகரென்னும் திருநாமமும், அதன் பரியாயமாகிய வள்ளலென்னும் திருநாமமும் கூறப்படுதல் காண்க.

---

குரிய சுத்த மத்தளம், எக்காளம் தஞ்சையிலும் உள. திருவாரூரில் தியாகராஜா எந்தத் தினங்களில் எவ்வாறு புறப்படுகின்றாரோ அவ்விதமே தஞ்சையிலும் தியாகராஜாவுக்கு அதே தினங்களில் புறப்பாடு. திருவாரூரில் தியாகராஜாவுக்குப் பூஜை நடந்தபின் மூல லிங்கத்துக்குப் பூஜை. தஞ்சையிலும் தியாகராஜாவுக்குப் பூஜை நடந்த பின்னர் மூல லிங்கத்துக்குப் பூஜை. திருவாரூரில் உற்சவத்தில் குறவஞ்சி நாடகம் நடைபெறும்; தஞ்சையிலும் குறவஞ்சி நாடகம் உற்சவகாலத்தில் நடைபெற்று வருகிறது. திருவாரூரிற் சிலகாலமாய்க் குறவஞ்சி நடைபெறுவது நழுவியிருப்பதாய்த் தெரிகிறது. குறவஞ்சிநாடகம் ராஜராஜன் காலத்தில் தஞ்சையில் ஏற்படாமலிருந்தது..............................................ராஜேந்திரன் ஆட்சியில் ஏற்படுத்தியதாகச் சிலாசாஸனமொன்றால் (S. I. I. Vol. II, Rajaraja's Life, P. II, Note) அறியக் கிடக்கிறது. திருவாரூரில் ஸ்வாமி புறப்படும்போது சுந்தரமூர்த்திகள் விக்கிரகம் முன்கொண்டுபோகப் படுவது வழக்கம். ராஜேந்திரன் காலத்தில் அந்த ஸ்தானத்தில் தன் பிதாவாகிய ராஜராஜனது விக்கிரகத்தைக் கொண்டு போகும்படி ஏற்பாடு செய்தான். அஃது இன்னும் நடைபெறுகிறது. திருவாரூர்த்தேர் எல்லாக்கோயில் தேரையும்விடப் பெரியது. தஞ்சையிலும் அம்மாதிரி ஒரு பெரியதேர் அமைக்கப்பட்டிருந்தது. கடைசியாயிருந்த சிவாஜி காலத்தில் அவரிடத்தில் மந்திரி ஸ்தானம் வகித்திருந்த சோமநாத பண்டிதர் பெரிய தேரை இழுக்க ஆள் சேகரிப்பது கஷ்டமாயிருந்ததற்காக அதை அழித்துவிட்டு இப்பொழுதுள்ள தேரை அமைத்ததாகத் தெரிகிறது." (தஞ்சை, ஸ்ரீமான் ராவ்பகதூர் K. S. ஸ்ரீநிவாஸ பிள்ளையவர்கள் எழுதிய தமிழ்வரலாறு, பிற்பாகம், முற்பகுதி, ப. 161 - 2.)

* இப்படியே சோமாஸ்கந்தமூர்த்திக்குச் சில தலங்களிற் சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன.

இத்தலத்திற்குரிய ஆகமம் * மகுடாகமம். இங்கேயுள்ள விமானம் தக்ஷிணமேரு வென்றும் உத்தம விமானமென்றும் வழங்கப்படும். இத்தலத்திற்குரிய தீர்த்தங்களுள் சிவகங்கையென்பது இந்நூலிற் பாராட்டிக் கூறப்படும். தேவாரத்தில் வந்துள்ள 'தஞ்சைத் தளிக்குளம்' என்பது இதுவே யென்பர். இதனிடையே சிவலிங்கப் பெருமான் எழுந்தருளி யிருக்கின்றனர். இப்பெருமான் திருவுருவம் தீர்த்தம் வற்றிய காலத்துக் காணப்படும்.

இவ்வுலாவில் முதல் ஒன்பது கண்ணிகளிற் சிவபெருமான் பெருமை கூறப்படுகின்றது. இப்பகுதியிற் பலவகையான மடக்கணிகளும் திரிபும் காணப்படும். 10 - ஆவது முதல் 14 - ஆங் கண்ணி வரையிற் பெருவுடையார் வரலாற்றைக் கூறும் முகத்தாற் கரிகாலச்சோழனென்பவன் நருமதைக்குச் சென்று அங்கேயுள்ள ஓங்கார குண்டத்திலிருந்து பாணலிங்கம் கொணர்ந்து தஞ்சையிற் பிரதிட்டித்த செய்தியும், 14-ஆவது முதல் 17 - ஆவது கண்ணி வரையில் வசந்தருதுவிற் சித்திரை மாதத்தில் நிகழும் கொடியேற்றமும் திருவிழாச்சிறப்பும் சொல்லப்படும்.

18 - ஆங் கண்ணி முதல் பெருவுடையாரது திருப்பள்ளியெழுச்சியும் திருமஞ்சனமும் முறையே நிகழ்ந்த பின்பு அவர் பூசைகொண்டு பலவகைத் திருவாபரணங்களை அணிந்து கண்ணாடி பார்த்து ஆடன் மகளிர் நடம் நோக்கியருளும் சிறப்புச் சொல்லப்படும். இப்பகுதியிற் பலவகை உவமைகளும் தற்குறிப்பேற்றமும் சிவபெருமான் திருவுறுப்புக்களின் பெருமையும் காணப்படுகின்றன.

38-ஆவது கண்ணிமுதல் பெருவுடையார் திருவுலாப்போதுங்கால் அவரைத் தொடர்ந்துவந்த அடியார்கள் கூறப்படுகின்றார்கள். இப்பகுதியில் திருநந்திதேவர், சண்டேச நாயனார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்க வாசகர், வரகுண பாண்டிய தேவர், குலோத்துங்கரென்னும் சோழர், சேரமான் பெருமாணயனார், அந்தணர், ஓதுவார், ஸ்தானீகர், பரிகரத்தார் என்பவருடைய சிறப்புக்கள் முறையே பலவாறாகப் பாராட்டப் பெற்றுள்ளன.

---

* இச்செய்தி பிருகதீசுவரமாகாத்மியம், 15 - ஆம் அத்தியாயத்திலும் கூறப்படுகிறது.

முடிமன்னர்களாகிய பாண்டிய சோழ சேரர்களுள் ஒவ்வோரன் பரை இப்பகுதியிற் கூறியிருத்தல் அறிதற்பாலது.

48 - ஆங் கண்ணிமுதல் முற்கூறியவர்கள் தொடர்ந்துவர, பலவகை இசைக்கருவிகள் முழங்க, பெருவுடையார் பொற் பலகை யூர்தியில் எழுந்தருளித் திருவாயில் கடந்து கவிகை கவிப்ப, முத்துப்பந்தர் நிழல்செய்ய, ஆலவட்டம் முதலியன அசைய, மங் கையர்கள் கவரிகள்வீச, மகரதோரணம் கொடி முதலியன விளங்க, தஞ்சையில் அக்காலத்தில் ஆட்சிபுரிந்த அரசராகிய சரபோஜி மன்னர் வந்து வணங்க, விநாயகர் முதலியோர் சூழ்ந்துவர, தேவர்கள் மலர்மாரி பொழிய, திருச்சின்னம் ஆரவாரிக்க, நடைக்காவணத்தின் இடையே சென்று முருகவேள், உமாதேவி யார் என்பவரோடு திருத்தேரிலேறி வீற்றிருந்து திருவீதியிலெழுந் தருளுதல் கூறப்படும். இப்பகுதியில் திருச்சின்னம் ஆரவாரித் ததைக் கூறுகையில், * "ஒரு கிழவியின் நிழலில் யாம் வாழ்கின் றேம்" என்று பெருவுடையார் திருவாய்மலர்ந்தருளிய அரு மைச்செய்தி காணப்படுகின்றது.

76 - ஆங் கண்ணிமுதல் குழாங்களைப்பற்றிய செய்திகள் கூறப்படும். இப்பகுதியிற் கின்னரமகளிர் முதலியோர் குழாங் கொண்டு பெருவுடையாரைத் தரிசித்து மயங்கித் தமக்குள்ளே பேசிக்கொள்வதும் பெருவுடையாரை முன்னிலைப்படுத்தித் தமக்கு அருள்செய்யவேண்டுமென்று வேண்டித் துதிப்பதும் காணப்படும். "புவிபுரந்த நேரிவெற்பன் போற்றுமன்பிற் செய்த, கவினுர் மணிப்பொற்றேர்" (87) என்பதனுல் † சோழனெருவ னுல் தேர் இயற்றப்பட்டமை அறியப்படும். திருவாரூரிற் கன்றை இழந்த ஆவொன்று மனுநீதிச் சோழமன்னனது திருவாயின் மணியை அசைத்த செய்தியை நினைந்து, "செங்கைக் ‡ கன்றிழப் பார்........நன்றிந்தப், பூமன் மனைவாயிற் பொங்குமெழி லுற்றிருக் கும், மாமணியைச் சென்றசைப்போம் வம்மினென்பார்" (99 - 100) என்ற பகுதி அமைக்கப்பட்டிருத்தல் அறிதற்குரியது.

104 - ஆம் கண்ணிமுதல் பேதையின் அவயவ வருணனையும், 109 முதல் அவள் பருவத்திற்கேற்பச் செய்யும் செயல்களும்,

* இச்செய்தி பிருகதீசுவரமாகாத்மியம், 15 - ஆம் அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.

† இவனைக் குலோத்துங்கனென்பர் பிருகதீசுவர மாகாத்மியமுடை யார்.

‡ கன்று - வளையல்.

112 - இல் அவள் பெருவுடையாரைத் தரிசித்ததும், 113 முதல் சிவபெருமான்பாலுள்ள பொருள்களைப்பற்றி அவள் தாயரை வினவுவதும் அவர்கள் விடையளிப்பதும், 115 முதல் அவள் சிவபெருமான் திருக்கரத்திலுள்ள மானை வாங்கித் தருமாறு கேட்பதும், 117 முதல் தாயர் அம்மான் பெறற்குரியதன் றென்று கூறி அவளைத் தேற்றியதும் பெருவுடையார் அந்தத் திருவீதி கடந்ததும் கூறப்படும். இந்தப் பகுதியில், பேதையின் முடிக்கப்படாத கூந்தலுக்குக் கையறியாப் பேதையர் செய்கின்ற தொழிலை உவமைகூறும் வாயிலாக ஒரு நீதியையும், விழுந்து முளைத்த அவள் பல்லிற்கு இறந்து மீண்டும் உயிர்பெற்ற பூம் பாவையை உவமை கூறும் வாயிலாக திருஞானசம்பந்தர் செய்த அற்புதச்செயல் ஒன்றையும் ஆசிரியர் எடுத்தாளுகிறார். பிறர் செய் வதைக்கண்டு அவற்றைத் தானும் செய்யும் தன்மை பேதைப் பரு வத்தாருக்குண்மையை, "எனது பாவை பாலை உண்ணவில்லை; அதற்கு மருந்தூட்டுங்கள்" எனக்கூறுவதாக அமைத்ததனாலும், காகணவாய்ப்புள்ளுக்கு மங்கையர் சொற்களைப் பயிற்றுவதைக் கண்டு தானும் தன் பாவைக்குப் பயிற்றுகின்றாளென்பதனாலும் புலப்படுத்தியுள்ளார். சிவபெருமான்பால் எத்தகைய அன் புணர்ச்சியும் இல்லாதிருந்தும் அன்னையர்கள் அஞ்சலிப்பது கண்டு அஞ்சலித்தாளென்று கூறு முகத்தால் அத்தன்மையை நன்கு விளக்கி யிருக்கின்றார். அவளுக்குப் பாவைபாலுள்ள அன்பின் மிகுதியால் அதனோடு சேர்த்து விளையாடுதற்கு நினைந்து சிவபெரு மான் கைம்மானை விழைகின்றாள். அது கிடைத்தற்கரியதென் பதைப் புலப்படுத்த வந்த தாயர் சிவபெருமான் பெருமை முதலிய வற்றைக்கூறித் தேற்றாமல் பேதைப்பருவமுடைமைக் கேற்ப அச் சம் வரத்தக்க செய்திகளைக் கூறி ஆற்றுகின்றனர்; "அம்மான் சிவபெருமானையே பாயவந்தது; அது நின்கைக்கு அடங்குமோ" என்ற தாயர் சொற்களில் அஞ்சத்தக்க மானின் திறல் கூறப்படு கின்றது. பாவையொடு சேர்த்து விளையாட மானைக் கேட்டாளாத லின், "அதனை வாங்கி யளித்தவுடன் உன்மேலும் உன் அருமந்த பாவையின்மேலும் பாய்ந்துவிடும்" என்று தாயர் கூறும் கூற்று அவள் அடங்குவதற்கேற்ற சமாதானமாதலைக் காணலாம்.

124 - ஆங் கண்ணிமுதல் பெதும்பையின் அவயவ வருணனை யும் 128 முதல் அவள் நிலாமுற்றத்தில் அம்மானையாடிக்

கொண்டிருக்கையில் ஓவியக்கலையிற் கைதேர்ந்தவனொருவன் வர அவன்பால், "பெருவுடையார் திருவுருவத்தை ஒரு படத்துள் எழுதித்தருக" எனக்கேட்டமையும், 132 முதல் அவன், "அவரது திருவுருவம் எழுதற்கரிதெனினும் நானறிந்தவாறு எழுதுவேன்" என்று கூறிச் சோமாஸ்கந்தமூர்த்தத்தை எழுதித்தர, பெதும்பை அப்படத்திலுள்ளோரை இன்னாரென அவன்பாற் கேட்டுணர்ந்துகொண்டு, "குமரன்தேவி ஆகிய இவ்விருவர்களைப்போல என் உருவையும் இப்பெருமானது வலப்பக்கத்தே எழுதித்தா" எனக்கேட்க, அவன், "இம்மூவரும் ஒருவரேயல்லரோ ? உன்னை வலப்பக்கத்தில் எழுதினால் பண்டைநூலாற் கூறப்படாத ஒன்றை இவனெழுதினானென எல்லோரும் என்னை இகழ்வார்கள் ; ஆனால் ஒன்று சொல்வேன் ; கேட்பாயாக ; இத்திருவீதியிற் பெருவுடையார் தேரில் உலாப்போதுகையில் உன்னை அவரது வலப்பக்கத்தே காண்பேனாயின் விரைவில் அவ்வாறே எழுதித்தருவேன். இப்பொழுது இதனைப் பெற்றுக்கொள்" என்று கூறிக்கொண்டிருக்கையிற் பெருவுடையார் திருவீதியில் வந்தமையும், 145 முதல் பெதும்பை வீதியிற்சென்று அவரை வணங்கியபின் தோழியர்களைப்பார்த்து, "இவருடைய வலப்பக்கத்தில் நான் அமர்ந்தால் என்ன" என்றுகேட்க, அவர்கள், "இவர் அணிந்த பாம்பிற்கும், எருக்கமாலைக்கும், புலித்தோலுக்கும், காளைக்கும், விடத்துக்குமே நீ விருப்புற்றாயோ ?" என ஏசப் பெதும்பை பேசாதொழிந்ததும், பெருவுடையார் அவ்வீதியை அகன்றதும் சொல்லப்படும். பெதும்பையின் கொண்டை கூட்டிமுடிக்கப்பெற்றமைக்குத் தொண்டர்கள் எண்ணியவற்றை எண்ணியவாறே இறைவன்கூட்டி முடித்தலை ஆசிரியர் உவமை கூறுகின்றார். இப்பருவம் அன்பு அரும்பினும் அது முற்றாப்பருவமாதலின் அதற்கேற்பச் சூரியனைக் கண்டவுடன் மலரும் இயல்புள்ள தாமரைப்போதென்றும் மன்மதன் யுத்தம் புரிதற்கு ஏற்றவளென்று எண்ணிக் கொண்டிருக்கிறானென்றும் கூறியுள்ளார். சிவபெருமானது வலப்பாகத்தே வீற்றிருக்கவேண்டுமென்னும் அவா அவளுடைய விருப்பத்தொடக்கத்தையும் தோழியர் கூற்றால் நாணி அடங்கியது அவ்விருப்பம் முற்றாமையையும் புலப்படுத்தும்.

150 - ஆங்கண்ணி முதல் மங்கைப்பருவப் பெண்ணின் அவயவ வருணனை கூறப்படும். இப்பகுதியில் தஞ்சையிலுள்ள வம்பு

லாஞ்சோலையின் பெயரும், சண்பகவனம், வல்லம், மாகாளம், திரு முல்லைவாயில், திருக்குற்றாலம், மாயூரம், வஞ்சி, திருவலஞ்சுழி, கஞ்சனூர் என்ற சிவதலங்களின் பெயர்களும் தொனிக்கின்றன. 155-56 - ஆங்கண்ணிகளில் அவளுடைய ஒழுகலாறுகள் சொல்லப் படும். 157 முதல் அவள் பாங்கியிடம், தன் கனவில் சிவபெரு மான் வந்தமையையும், அவருக்கும் தனக்கும் நிகழ்ந்த சல்லாபத் தையும், அவர் காலையில் வருவதாகக் கூறிச்சென்றமையையும் சொல்லுவதாக அமைந்துள்ளது. இப்பகுதியில் அழகிய மடக் கணி அமைந்த சில கண்ணிகள் காணப்படுகின்றன. 165 முதல் தான் கண்ட கனவிற்குப் பயனென்னவென்று மங்கைகேட்கத் தோழி, "பெருவுடையார் உன்னை என்றும் பாதுகாக்கும் பொருட்டு வந்தாரென்று தோற்றுகின்றது" என்று கூற, மங்கை அவரை நினைந்து உறங்காதிருந்தமையும், காலையிற் பெருவுடை யார் அவளிருந்த வீதியில் திருவுலா வந்தமையும் கூறப்படும். 168 முதல் மங்கை சென்று அவரைத்தரிசித்து மால்கொண்ட மையும் பெருவுடையார் அடுத்த வீதிக்கு எழுந்தருளினமையும் கூறப்படும். 173 முதல் மங்கையின் நிலையையறிந்த செவிலித் தாய் பெருவுடையாரைப் பார்த்து, "இயற்பகையின் மனைவியைக் கொணர்ந்த தூர்த்தரே! மோகினியின் அழகில் மயங்கிய மத்தரே! (இவளுடைய வளையைக் கழலச்செய்தீரே) இவ்வளையில்லாமல் உம் முடைய ஆபரணப்பெட்டி குறையாக இருந்ததோ? (இவள் மேகலையைக்கழலச் செய்தீரே) இஃதல்லாமல் வேறொன்று உமக்கு அகப்படாதோ? இங்கே வந்து பெண்களுடைய மாமையழகையும் நாணத்தையும் கவர்வதல்லாமல் வேறு வேலை உமக்குக் கிடை யாதோ? இச்செயல் மிக நன்றாக உள்ளது! இதற்குத்தானோ தஞ் சைக்கு வந்தீர்?" எனக்கடிந்து கூறுதல் சொல்லப்படுகின்றது. இப்பகுதி உலகவழக்கை விளக்கிக்காட்டுவதாக உள்ளது.

180 முதல் மடந்தையின் அவயவ வருணனை தற்குறிப் பேற்ற முதலிய அணிகள் அமையக் கூறப்படுகின்றது. 191 முதலியவற்றில் அவள் ஒரு மாணிக்கத்தவிசில் வீற்றிருக்கையில் ஒரு குறத்தி வரு வதும், அவள் மடந்தையின் கைக்குறி மெய்க்குறி பார்த்துப் பலன்கூறுவதும், அவளுக்கு மடந்தை பரிசுகள் அளிப்பதும் ஆகிய செய்திகள் காணப்படும். இப்பகுதியில் அமைந்துள்ள செய்திகளிற் சில இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற சரபேந்திர

பூபால குறவஞ்சி என்னும் நாடகத்திலும் காணப்படுகின்றன். 202 முதல் சிவபெருமான் அந்த வீதியில் திருவுலாவருவதும் மடந்தை சென்று அவரைத் தரிசித்துக் காம மயக்கங்கொண்டு, "மன்மதனுடைய அம்புக்கு இரையாவதற்காகவோ என் தாய் என்னைப் பெற்று வளர்த்தாள்!" என்று இரங்கி வளைகழல அறிவு நீங்க அவசமாவதும், தோழியர்கள் அவளை வீட்டிற்குக்கொண்டு சென்று ஆற்றுதலும் சொல்லப்படும். 214 முதல் தோழியர்கள் செய்யும் உபசாரங்களால் மிக்க காமத்தையடைந்த மடந்தை சிவபெருமானை நினைந்து முறையிடுதல் கூறப்படும். இப்பகுதியில், பொருளை எளிதிலறிதற்குரிய சொல்லணியாகிய திரிபு யமகங்கள் அமைந்துள்ளன. 219 முதல் அவள்படும் அவஸ்தைகளும், வருந்திக்கூறும் கூற்றும், பெருவுடையாரது திருவருளால் ஒரு சிறிது மயக்கம் நீங்கினமையும் கூறப்படும்.

222 முதல் அரிவையின் அவயவ வருணனைகள் பல உவமைகளோடு காணப்படுகின்றன. அவளுடைய தேய்ந்த இடைக்கு, நல்லறிஞர்களை அவமதித்தோர் வாழ்வினை ஆசிரியர் உவமை கூறியுள்ளார். 230 முதல் அரிவை கல்யாணி என்னும் கிளியினைக் கையில் ஏந்தி, "நேற்று இவ்வீதியிற் பவனிவந்து எனக்கு மனவேறுபாட்டை உண்டாக்கிச் சென்ற பெருவுடையாரிடம் சென்று என்னுடைய தளர்ந்த நிலையை நன்றாகச்சொல்லி இங்கே அழைத்துவருவாயாக. அவ்வாறு வருவதற்கு அவர் இசையாராயின் என்பாலுள்ள மயலைப்போக்குதற்குரிய ஒரு மருந்தையேனும் வாங்கி வருக. அடியவர்கள் துதித்துக் கொண்டிருக்கும் காலையில் இந்தச் செய்தியை அவரிடம் சொல்லாதே. அம்பிகையின் திருச்செவியிற்படும்படி கூறற்க. இனமென்று நினைத்து அம்பிகையின் திருக்கரத்திலுள்ள கிளியிடம் சொல்லிவிடாதே" என்று சொல்ல, அக்கிளியானது, "அவ்வாறே செய்வேன்" என்று சொல்லிச்சென்று, பெருவுடையார் திருத்தேரில் வரக்கண்டு மீண்டு வந்து அவர் வரவை அரிவைக்கு உரைத்தமையும், அவள் வீதியின்கண்வந்து அவரைத் தரிசித்தமையும் கூறப்படும். 242 முதல் அவள் முறையிடும் வேண்டுதலும் சொல்லப்படும். 244 - 5 - ஆங்கண்ணிகளிற் காணப்படும் யமகங்கள் சுவைபட அமைந்துள்ளன. 246 முதல் அவள் பெருவுடையாரைப் பார்த்து, "நீர் நினைத்தால் மன்மதன் தனது மலர்ப்பாணத்தை நாணிற் கோத்தவுடன்

அந்த நாணாகிய வண்டுகள் அதனைத் தின்றுவிடாவோ? அன்று தக்கன் யாகத்திற் சந்திரனைத் தேய்த்த உமது திருத்தாள் என்னைத் துன்புறுத்தும் அவனை இன்றும் தேய்த்தற்குப் பொருந்தாதோ? இந்திரனாகிய குயிலின் சிறையை வெட்டினாற் போல மாமரத்தில் வாழும் இக்குயிலையும் அங்ஙனம்செய்தல் ஆகாதோ? அகத்திய முனிவருக்கு ஒருவார்த்தையை நீர் கட்டளையிட்டால் அவர், ஓசையால் என்னை வருத்தும் இந்தச் சமுத்திரத்தை உண்டுவிட மாட்டாரோ? உமது சடையிலுள்ள பாம்பிற்கு ஒரு சொல் உரைத்தால் அவற்றுள் ஒன்றுபோய் என்னைத் துன்புறுத்தும் தென்றலை உண்டுவிடாதோ?" என்று முறையிடுதலும் பெருவுடையார் அத்திருவீதியை அகலுதலும் சொல்லப்படும்.

252 முதல் தெரிவையின் வருணனை கூறப்படும். இப்பகுதியிலுள்ள உவமைகளெல்லாம் மதவேளுக்குரிய பொருள்களாகவே உள்ளன. 256 முதல் அவள் ஒரு வீணையைக் கையில் ஏந்திப் பெருவுடையார் புகழைப் பாடிக் கொண்டிருக்கையில் ஒரு தோழி அவர் திருவீதியில் தேரில் எழுந்தருளினாரென்று மொழிவது காணப்படும். பெருவுடையாருக்குரிய தசாங்கங்கள் அவ்வவற்றின் சிறப்பு விளங்க அத்தோழியின் கூற்றில் அமைந்துள்ளன. அவை வருமாறு:—

மலை: வெள்ளிமலை, ஆறு: காவிரி, நாடு: சோழநாடு, நகர்: தஞ்சை, மாலை: கொன்றை, குதிரை: வேதம், யானை: அயிராவணம், கொடி: இடபம், முரசு: நாதமுரசு, ஆணை: மும்மூர்த்திகளைக்கொண்டு உலகங்களையெல்லாம் ஆக்கி அளித்து அழிக்கும் ஆற்றல்.

267 முதல் தெரிவை வீதியில் வந்து சிவபெருமான் திருமேனியழகில் ஈடுபட்டு அவரைத் துதித்தல் கூறப்படும். இங்கே வந்துள்ள, "அச்சுதன் வேத னறியாச் சிவக்கொழுந்தே" என்னும் அடியில் ஆசிரியர் தம்பெயரைத் தொனிக்கச்செய்திருத்தல் அறிதற்குரியது. 276 - ஆங் கண்ணியில் அவ்வாறு துதிசெய்த தெரிவையின்மேல் மன்மதன் மலரம்பை எய்தமை கூறப்படும். துதிசெய்யுங்கால், "பாவி யநங்கன் பகருங் கணைதொடுத்தான்" என்னும் அடியில், மன்மதன் தகாதசெயல் செய்பவனென்பதை இரக்கத்தோடு நூலாசிரியர் குறிப்பாற் புலப்படுத்துதலைக் காண

லாம். 277 முதல் தெரிவை, "கண்ணுதலே, என்னுடைய நெஞ்சில் எப்பொழுதும் எழுந்தருளியிரும். இல்லையெனின் மன்மதன் போர்புரியாமலிருக்கும்படி கட்டளையிடும். அன்றேல் அக்காம னுக்கு எனது உருவம் தோன்றுதவண்ணம் ஒரு மந்திரத்தை எனக்கு உபதேசித்துப் பின்பு செல்லும். இல்லையெனின் உம் மைச் சும்மா விடமாட்டேன்" என்று கூறியதும், சிவபெருமான் உமையாளை நோக்கிப் புன்னகைசெய்துவிட்டு அவ்வீதியை அகன் றதும் மொழியப்படும்.

281 முதல் பேரிளம்பெண்ணின் உருவ வருணனை காணப்படு கின்றது. 287 முதல் அவள், கரிகாலனது கருங்குட்டநோயைத் தீர்த்த பெருமைவாய்ந்த சிவகங்கை யென்னும் தீர்த்தத்தில் நீரா டிப் பின்பு அத்தீர்த்தக்கரையிலுள்ள விசுவநாதரை வணங்கிப் பெருவுடையார் கோயிலுக்கு வந்து நூற்றெட்டுச் சிவலிங்கங் களைப்பணிந்து பெருவுடையாரையும் போற்றிப் பெரிய நாயகியை யும் இறைஞ்சிவருகின்ற ஒழுகலாறுடையாளென்பது கூறப்படும். 292 முதல் அவள், தன்னுடன் உறையும் மகளிர் இசைப்பாட்டின் பகுதிகளாகிய கீதம், பதம், வண்ணம் முதலியவற்றைப் பாடக் கேட்டுத் தேவாரத்திலொன்றைப் பாடுகவென்று கூற, அவர்கள், "நீயே அதனைக் கூறுக" என்றமையும், பின் அவள் தேவாரத் தாற் பல அற்புதச்செயல்கள் நிகழ்ந்ததை எடுத்துச்சொல்லி இசை யோடு சிலவற்றைப் பாடினமையும், அப்பொழுது பெருவுடையார் அத்திருவீதிக்கு எழுந்தருளினமையும், 298 முதல், உடனே பேரிளம்பெண் உடனிருந்த மகளிருடன்வந்து அவரை வணங்கி, " தன்பேரால் இந்த ஊர் வழங்கவேண்டுமென்ற வரத்தைப்பெற்ற தஞ்சகாசுரனுடைய விருப்பத்திற்கு இணங்க வழங்கும் தஞ்சை யென்னும் பெரிய ஊரை யுடையாய், கருவூர்த்தேவர் இயற்றிய திருவிசைப்பாவைக் கொண்ட தேவே, கொன்றைத்தாரை உடை யாய், வேலவனுடைய தந்தாய், திரிபுரத்தைச் செற்றோய், யானைத் தோலைப் போர்த்தோய்" என்று தோத்திரித்தமையும் உள்ளன. இப்பகுதியில், " தாரானே வேலவனைத் தந்தவனே முப்புரத்தின், போரானே யானையுரி போர்த்தவனே" (302) என்னுங் கண்ணி யில் சொல்முரண் அமைந்துள்ளது. 303-ஆங் கண்ணிமுதல் பேரி ளம் பெண்ணின் வேண்டுகோள் காணப்படுகின்றது. அவ்வேண்டு கோள் மெய்யன்பர்கள் யாவராலும் செய்யத்தகுவதொன்றும்.

அது வருமாறு :—

"நீடுருத்தி ராக்கம்வெண் ணீறுன் புகழதனைப்
பாடு மறிவினர்நின் பாதமலர்—நாடுகின்ற
அஞ்செழுத்துத் தம்பா லடியேன் மனமுருகத்
தஞ்சமுற நன்குவரந் தந்தருள்வாய்".

305 முதல் பேரிளம்பெண் தேர்நிலை யளவும் சென்று திரும்பி னமையும், மன்மதன் அவள் ஞானநிலைக்கு அதிசயித்து நின் றமையும், 307 முதலியவற்றில் இவ்வாறு யாவருக்கும் காட்சி தந்து பெருவுடையார் தம்கோயில் எய்தினரென்பதும் கூறப்படும். இறுதிக்கண்ணியில் இது தஞ்சைப் பெருவுடையார்திருத்தேருலா வாகும் என்பது சொல்லப்படுகிறது.

ஏனைய உலாக்களுட் பெரும்பாலனவற்றில் ஏழுபருவ மகளி ரும் கண்டு காதலிக்கத் தலைவன் உலா வந்த செய்தி அமைக்கப் பட்டுள்ளது. இவ்வுலாவிலோ சில புதிய அமைப்புக்கள் உண்டு. பேரிளம்பெண் தேர்நிலைவரை சென்று திரும்பினளென்றமையும், பெருவுடையார் மீண்டும் திருக்கோயில் எய்தினரென்றமையும், இஃது இன்னுருலா என்று சுட்டிக் கூறுவதும் இவ்வாறுள்ளவற் றுட் சிலவாம்.

இவ்வுலாவின் அமைப்பைப் பார்க்கையில், சிறந்த தமிழ்ப் புலமை வாய்ந்து விளங்கிய அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் இயற்றப்பெற்ற திருவாரூருலாவின் அமைப்பைப் பெரும்பாலும் பின்பற்றி இஃது இயற்றப் பெற்றதாகத் தெரிகிறது.

இவ்வுலாவில் ஆசிரியர் பலவகைச் சொல்லணி பொருளணி களையும், தலசம்பந்தமான கதைகளையும், நீதிகளையும் அமைத் திருப்பதும், இவர் இயற்றிய வேறு நூல்களில் மிகுதியாகக் காணப் படுகின்ற தொனி முதலியன காணப்படுதலும், தம்மை ஆதரித்த தஞ்சைச் சரபோஜி மன்னரைப் பற்றிக் கூறியிருப்பதும், தம் பெய ரைத் தொனியில் வைத்திருப்பதும், பிறவும் அறிந்து இன்புறற் குரியன.

---

கணபதி துணை.

# கருவூர்த் தேவர் திருவிசைப்பா.

## தஞ்சை இராசராசேச்சரம்.

### பண் பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப் பரிதி
யொன்றுநூ றுயிர கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ
வங்ஙனே யழகிதோ வரணம்
பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம்
பருவரை ஞாங்கர்வெண் டிங்கள்
இலைகுலாம் பதணத் திஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (க)

நெற்றியிற் கண்ணென் கண்ணினின் றகலா
நெஞ்சினி லஞ்சிலம் பலைக்கும்
பொற்றிரு வடியென் குடிமுழு தாளப்
புகுந்தன போந்தன வில்லை
மற்றெனக் குறவென் மறிதிரை வடவாற்
றிடுபுனன் மதகில்வாழ் முதலை
எற்றுநீர்க் கிடங்கி னிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (உ)

சடைகெழு மகுடந் தண்ணிலா விரிய
வெண்ணிலா விரிதரு தரளக்
குடைநிழல் விடைமேற் கொண்டுலாப் போதுங்
குறிப்பெனோ கோங்கிண ரனைய
குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந்
துக்கசெஞ் சுடர்ப்படு குவையோங்
கிடைகெழு மாடத் திஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (ங)

வாழியம் போதத் தருகுபாய் விடயம்
வரிசையின் விளக்கலி னடுத்த
சூழலம் பளிங்கின் பாசல ராதிச்
சுடர்விடு மண்டலம் பொலியக்
காழகில் கமழு மாளிகை மகளிர்
கங்குல்வா யங்குலி கெழும
யாழொலி சிலம்பு மிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (௪)

எவருமா மறைகள் வையும்வா னவர்கள்
ஈட்டமுந் தாட்டிருக் கமலத்
தவருமா லவனு மறிவரும் பெருமை
யடலழ லுமிழ்தழற் பிழம்பர்
உவரிமா கடலி னொலிசெய்மா மறுகில்
உறுகளிற் றரசின தீட்டம்
இவருமால் வரைசெ யிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (௫)

அருளுமா றருளி யாளுமா றாள
வடிகட மழகிய விழியுங்
குருளும்வார் காதுங் காட்டியான் பெற்ற
குயிலினை மயல்செய்வ தழகோ
தரளவான் குன்றிற் றண்ணிலா வொளியுந்
தருகுவால் பெருகுவான் றெருவில்
இருளொலாங் கிழியு மிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (௬)

தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின்
றளிரிறப் பிலையுதிர் வென்றால்
நினைப்பருந் தம்பாற் சேறலின் றேனு
நெஞ்சிடந் தருகுவ தென்னே
சுனைப்பெருங் கலங்கற் பொய்கையங் கழுநீர்ச்
சூழன்மா ளிகைசுடர் வீசும்
எனைப்பெரு மணஞ்செ யிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (௭)

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பல ரேம்பலித் திருக்க
என்னெடுங் கோயி னெஞ்சுவீற் றிருந்த
வெளிமையை யென்றுநான் மறக்கேன்
மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல்செய் நாடக சாலை
இன்னடம் பயிலு மிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (அ)

மங்குல்சூழ் போதி னெழிவற நிறைந்து
வஞ்சகர் நெஞ்சகத் தொளிப்பார்
அங்கழற் சுடரா மவர்க்கிள வேனல்
அலர்கதி ரனையர்வா ழியரோ
பொங்கெழிற் றிருநீ றழிபொசி வனப்பிற்
புனறுளும் பவிர்சடை மொழுப்பர்
எங்களுக் கினிய ரிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (கூ)

தனியரெத் தனையொ ராயிர வருமாந்
தன்மைய ரென்வயத் தினராங்
கனியரத் தகுதீங் கரும்பர்வெண் புரிநூற்
கட்டிய ரட்டவா ரமிர்தர்
புனிதர்பொற் கழலர் புரிசடா மகுடர்
புண்ணியர் பொய்யிலா மெய்யர்க்
கினியரெத் தனையு மிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே. (க0)

சரளமந் தார சண்பக வகுள
சந்தன நந்தன வனத்தின்
இருள்விரி மொழுப்பி னிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவரை
அருமருந் தருந்தி யல்லறீர் கருவூ
ரறைந்தசொன் மாலையீ ரைந்தின்
பொருண்மருந் துடையோர் சிவபத மென்னும்
பொன்னெடுங் குன்றுடை யோரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

உ
கணபதி துணை.

# தஞ்சைப்

# பெருவுடையாருலா.



## காப்பு.

அருமொழி விநாயகர்.

அருளுதவுங் கீர்த்தி யருமொழிவே ழத்தின்
இருமலர்ப் பொற்றா ளிறைஞ்சிக்—குருமதியார்
செஞ்சடையா ரெங்கள் சிவனார் பெருவுடையார்
தஞ்சையுலாச் சொல்வேன் றக.

## நூல்.

சிவபெருமான் பெருமை.

1. பார்கொண்ட பாற்கடற்பொன் பாரிறையும் பங்கயனும்
சீர்கொண்ட விந்திரனுந் திண்சுரரும்—பேர்கொண்ட

---

# குறிப்புரை.

## காப்பு.

அருமொழி வேழத்தின் - அருமொழி விநாயகருடைய. அருமொழி விநாயகரென்பது பெருவுடையார் திருக்கோயிலிலுள்ள பிரதான விநாயகருடைய திருநாமம். குரு மதி ஆர் - நிறம்பொருந்திய பிறை தங்கப்பெற்ற. செஞ்சடையார்; "செஞ்சடையா னந்தத் தெருவகன்றான்" (கண்ணி, 123.) பெருவுடையார் - ஸ்ரீ பிருகதீசப்பெருமான். இவருடைய திருவுருவம் மிகப்பெரியதாதலின் இவருக்கு இத்திருநாமம் அமைந்தது. தகச் சொல்வேனென இயைக்க.

## நூல்.

1. பார்கொண்ட - வன்னிலத்தைக்கொண்ட; "பார்முதிர் பனிக்கடல்" (முருகு. 45.) பொன் பார் இறையும் - திருமகளுக்கும் பூமிதேவிக்கும் தலைவரான திருமாலும்.

2. மானுடரும் போற்று மலர்த்தாளான் வஞ்சகரைத்
தானுடன் கூடித் தடுத்தாளான்—மானமுறு

3. வேதச் சிலம்பினன் வெண்கயிலை யென்றுரைக்கும்
சீதச் சிலம்பினன் செங்கையினன்—ஓதரிணப்

4. பாணியான் மெய்த்தொண்டர் பாங்கினழைத் தால்வரப்
பாணியா னேர்மூன்று பார்வையான்—வேணியின்மேல்

5. வாரியான் நீள்கருணை வாரியான் பொன்னிமய
நாரியான் வாசுகிவின் னரியான்—நேரிலக

6. மன்னுவளை வான்குழையான் மாமலர்க்கை யோங்குழையான்
தன்னைவணங் காரிடத்தே தான்குழையான்—பன்னுதிறல்

7. ஆகுவான் றந்தைவணங் கன்பருற வாகுவான்
வாகுவான் பாந்தளணி வாகுவான்—மாகடுக்கைப்

---

2. வஞ்சகரைத் தடுத்து ஆளான்; இது வஞ்சகமில்லாதாரைத் தடுத்தாட்கொள்வாரென்பதைக் குறிப்பிக்கின்றது. மானம் - பெருமை.

3. வேதம் சிலம்பினன் - வேதமாகிய சிலம்பணியை அணிந்தவர். சீதம் சிலம்பு - குளிர்ந்த மலை. செங்கையினன் - திருவாதிரை நக்ஷத்திரத்துக் குரியவர்; "செங்கையர் நாளினர்" (கோடீச். 99); "செங்கையாட்டினர்" (நாகைக். நைமிசப். 1.) ஓது அரிணம்-சொல்லப்படுகின்ற மானை ஏந்திய.

4. பாணியான் - திருக்கரத்தை உடையவர். வர பாணியான் - வருதற்குத் தாமதியார். வேணி - சடை.

5. வாரியான் - கங்கையை அணிந்தவர்; வாரி - நீர். கருணைவாரியான் - அருட்கடலாகவுள்ளார்; வாரி - கடல்; வருவாயுமாம். இமய நாரி - உமாதேவியார். வாசுகியை வில்லிற் கட்டிய நாணாக உடையார்; நாரி - நாண்.

6. வளை வான் குழையான் - சங்கமாகிய வெள்ளைக் குண்டலத்தை உடையார். கை ஓங்கு உழையான்; உழை - மான். தான் குழையான் - தாம் இரங்காதவர்.

7. ஆகுவான் தந்தை - விநாயக மூர்த்தியின் தந்தை; ஆகு - பெருச்சாளி. அன்பர் உறவு ஆகுவான். வாகு வான் பாந்தள் அணி வாகுவான் - அழகிய பெரிய பாம்பை யணிந்த திருத்தோளையுடையவர்; வாகு - அழகு, தோள்.

8. போதினன் வேதவகுப் போதினன் பூங்குழைசேர்
காதினன் காலனைமுன் காதினன்—கோதில்சீர்

9. ஆலத்தான் கந்தரத்தி லாலத்தான் கூர்மையுறு
பாலத்தான் சொல்லயன்க பாலத்தான்—நீலக்

பெருவுடையார் வரலாறு.

10. கரிகாலச் சோழன் கருத்திலன்பு பற்றி
நிருமதையி னேகி நிலாவும்—வரிவளையின்

11. ஓங்கார முற்றிலங்கு மோங்கார குண்டத்திற்
பாங்கா வெடுத்துப் பணிந்தேத்தி—ஆங்குநின்று

12. மண்டலத்தி னுள்ளோ ரதிசயிக்க வானோர்கள்
வண்டுணர்ப் பார மழைபொழியக்—கொண்டுவர

13. ஏர்வளருந் தஞ்சை யிராசரா சேச்சுரத்தில்
பேர்வளர மன்னும் பெருவுடையான்—சீர்வளரும்

---

7 - 8. மா கடுக்கைப் போதினன் - பெரிய கொன்றைப்பூவை அணிந்தவர்; கொன்றைமலர் பிரணவ வடிவமாதலின் மா என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. வேதம் வகுப்பு ஓதினன். காலனை காதினன் - கூற்றுவனை உதைத்தவர்.

9. ஆலத்தான் - நால்வர்க்கு உபதேசித்தற்கு இடமாகிய வடவால மரத்தையுடையார். கந்தரத்தில் ஆலத்தான் - கழுத்தில் விடத்தை யுடையவர்; நீலகண்டர். பாலத்தான் - மழுப்படையை யுடையவர்; பாலம் - மழுப்படை. அயன் கபாலத்தான்-பிரமகபாலத்தை யுடையவர்.

இனிக் கரிகாலச் சோழதேவர் நருமதை ஆற்றிலுள்ள ஓங்கார குண்டத்திலிருந்து பெருவுடையாரை எழுந்தருளச் செய்து இத்தலத்திற் பிரதிஷ்டை செய்வித்த வரலாறு கூறப்படும்.

10. நிருமதையின் ஏகி - நருமதா நதிக்குச்சென்று; நருமதை நிருமதையெனவும் வழங்கும்.

10 - 11. வளையின் ஓங்கு ஆரம் - சங்கத்திலிருந்து உண்டாகிய உயர்ந்த முத்துக்கள். ஓங்கார குண்டம் - இது நருமதா நதியின்கண் வாணலிங்கங்கள் நிரம்பி யிருக்கப்பெற்ற ஒரு மடுவின் பெயர். பாங்கா - அழகுற.

12. மண்டலத்தில் - பூமியில். துணர் - பூங்கொத்து.

13. இராசராசேச்சுரம் என்பது தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலின் திருநாமம். இது, முதல் இராசராச தேவரால் அமைக்கப் பெற்றதாயினும் விளங்குதற்கு இங்ஙனம் கூறப்பட்டது.

14. உத்தமவி மானத்த ஞேங்குதனி மானத்தன்
உத்தம தேவ னுருத்திரன்—கொத்தலர்கள்

திருவிழாச் சிறப்பு.

15. மண்டும் வசந்தத்து மேட மதியதனிற்
கொண்ட விடபக் கொடியேற்றி—எண்டகைய

16. திவ்வியமா வாகனங்கள் மேற்பவனி சென்றுவந்து
செவ்வியரு ணல்குந் திருநாளில்—இவ்வுலகோர்

17. தம்பணிகண் மாநெருக்கந் தன்ற லுரிஞ்சவுதிர்
செம்பொ னிறையுந் திருநாளில்—நம்பன்

திருப்பள்ளி யெழுச்சி.

18. தரிசிக்க வின்பந் தருநாளி லோர்நாள்
பரிவிற் கனகமண்ட பத்தில்—வரிநெடுங்கண்

19. ஆர்ந்தமலர்க் கூந்த லருட்பெரிய நாயகியைச்
சேர்ந்தணைத்து மன்னுஞ் செழுந்துயிலைக்—கூர்ந்ததிரை

20. ஏற்றிடு வேலை முகட்டி லெழுங்கதிரோன்
தோற்றிடு முன்னந் துறந்தெழுந்து—பாற்றரளம்

---

14. உத்தம விமானமென்பது தஞ்சைத் திருக்கோயிலிலுள்ள விமானம்; விமானத்தின் பெயர்கள் பலவகைப்படும். தனி மான் அத்தன் - ஒப்பற்ற மானைத் தாங்கிய திருக்கரத்தை யுடையார்; அத்தம் - கை. உத்தமதேவன்: பிருகதீசர் திருநாமங்களுள் ஒன்று.

15. வசந்தத்து - வசந்தருதுவில்; இளவேனிலில். மேடமதி - சித்திரை மாதம். இடபக்கொடி - ரிஷபத்துவசத்தை. இதில் மேடம் இடபமென்னும் ராசிகளின் பெயர்கள் தொனிக்கின்றன.

16. திவ்வியம் - தெய்வத்தன்மையுள்ள. பவனி-திருவுலா; "பவனி தொழுவார்" (தமிழ்நா.89.) செவ்வி - யாவரும் தரிசித்துய்தற்குக் காட்சி தந்தருளும் சமயத்தை.

17. பணிகள் - ஆபரணங்கள். மாநெருக்கந்தன்னால் - மிக்க நெருக்கத்தால். உரிஞ்ச - உரிஞ்சுதலால். செம்பொன் நிறையும் - செம்பொன் நிறைதற்குரிய.

18. ஓர் நாள் - ஒரு தினத்தில். பரிவின் - அன்பினாலே.

17 - 8. நம்பன் இன்பந்தருநாளிலெனக் கூட்டுக.

19. பெரிய நாயகி யென்பது இத்தலத்து அம்பிகையின் திருநாமம்; பிருஹந்நாயகியென வழங்கும்.

19 - 20. கூர்ந்த திரை - மிக்க அலைகள். வேலை முகட்டில் -

## திருமஞ்சனமாடியருளல்.

21. துன்னு மலரமளி நீங்கிச் சுவைப்பாலும்
மன்னுததி யுங்கனியின் வர்க்கமும்—கன்னலும்

22. தண்படிந்த சந்தனமுஞ் சார்ந்த சிவகங்கை
வண்புனலுங் கொண்டு மகிழ்ந்தாட்டிப்—பண்புமிகும்

## பூசை.

23. ஆதிசைவர் நீடுமகு டாகமத்தி லாரணத்தில்
ஓதிசைவிற் செய்பூசை யுட்கொண்டு—மீதிடையிற்

## திருவாபரணம் புனைந்தருளல்.

24. பொற்றாச தார்த்துப் புறவுலாப் போதலினால்
உற்ற திசைமுகனென் றோதலுறும்—விற்றவள

25. அன்ன முடியை யறியாமற் செய்கின்ற
தென்ன மகுட மினிதேற்றி—மன்னும்

26. தரணியிரு வோருதித்த தன்மையெனக் காதில்
அருண மணித்தோ டணிந்து—சுரர்களைமுன்

27. காத்தமணி கண்டத்திற் கண்ட சரம்புனைந்து
மாத்தவள முத்து வடமிலைந்து—நீத்தமுறு

---

கடலின் உச்சியில். துயிலைத் துறந்தெழுந்து. பால் தாளம் - வெண்ணிறமுள்ள முத்துமாலைகள் ; ஆகுபெயர்.

21. அமளி - படுக்கை. ததி - தயிர். கனியின் வர்க்கம் - பழவகைகள். கன்னல் - கருப்பஞ்சாறு ; ஆகுபெயர்.

22. சிவகங்கை - இத்தலத்திற்குரிய ஒரு தீர்த்தம்; பெருவுடை. 288.

23. மகுடாகமம் - இருபத்தெட்டு ஆகமங்களிலொன்று ; இஃது இத்தலத்திற்குரியது. இசைவின் - விதிப்படியே. இடையின்மீது என மாற்றுக.

24 - 5. பொன் தாசு அது ஆர்த்து - பொன்னுடையை அணிந்து ; அது : பகுதிப்பொருள் விகுதி. புறவுலா - கோயிற் புறத்தே திருவீதிக்கண் எழுந்தருளும் பவனி. வில் தவள அன்னம் - ஒளியையுடைய வெண்ணிறமுள்ள அன்னப்பறவை ; பிரமதேவராகிய அன்னப்பறவை. மகுடம் ஏற்றி - கிரீடம் சாத்தி.

26. தரணி யிருவோர் - இரண்டு சூரியர்கள். அருணமணித் தோடு - செந்நிறமுள்ள மாணிக்கத்தாலாகிய தோடுகளை.

26 - 7. மணிகண்டம் - நீலகண்டம். தேவர்களைக் கொல்ல வந்த

28. பாற்கடலிற் றோன்றுபல பானு வெனப்பதக்கம்
ஏற்கமுத் தாரத் திடைமலைந்து—பாற்குருவாய்ச்

29. சேகரத்தி லுற்றபுனல் சிந்துகின்ற தாரையென
ஆகமதின் முந்நூ லணிதயக்கி—மோகமுறு

30. தாருவன மாதர் தகைப்பார்வை பாய்ந்ததெனக்
காருண் மணிச்செய் கலன்பூண்டு—சீருதவு

31. மல்லிகை முல்லை மருக்கொழுந்தி னற்றொடுத்த
மெல்லியற் பூந்தொடையல் மேல்வனைந்து—மல்லலுற்ற

32. தோளிடைநற் கேயூரஞ் சூட்டிமலர் முன்கையினில்
வாளிடுபைம் பொற்கடக மன்னுவித்துக்—கோளரவை

33. வெம்புலியின் றோலுடைமேல் வீக்கி யிருப்பதெனச்
செம்பொற் கடிசூத் திரந்தரித்து—நம்புடனே

34. ஏருதவு முத்த மியல்வச் சிரநீலம்
கூருதர பந்தனங் கொண்டசைத்துச்—சீருறவே

---

விடத்தைத் தரித்திருத்தலின், "சுரர்களை முன்காத்த கண்டம்" என்றார். நீத்தம் - வெள்ளம்.

28. முத்தாரத்திற்குப் பாற்கடலும் அதனிடையேயுள்ள மாணிக்கப் பதக்கத்திற்குச் சூரியனும் உவமைகள். பாற்குருவாய் - வெள்ளை நிறத்தையுடையதாய்; குரு - நிறம்.

29. சேகரத்தில் - திருமுடியில். புனல் - கங்கை. முந்நூல் - பூணுநூல். பூணுநூலுக்குக் கங்கையின் தாரை உவமை.

30. மாதர்களுடைய. தகை - அழகு. கார் உண் மணிச் செய் கலன் - நீல் மணிகளாற் செய்யப்பட்ட ஆபரணங்களை. தாருகாவனத்திற் பிக்ஷையெடுத்தற்கு அழகிய வடிவங்கொண்டு சிவபெருமான் சென்றருளினரென்னும் வரலாறு ஈண்டு அறியற்பாலது.

31. தொடையல் - மாலை. மல்லல் - வளம்.

32. கேயூரம் - தோள்வளை. வாள் - ஒளி. கடகம் - முன்கையணியை.

32-3. புலித்தோலாடையின்மேல் அரவைக் கட்டியிருத்தல்போல. கடி சூத்திரம் - அரைஞாண். நம்பு - விருப்பம்.

34. கூர் - மிகுதி. முத்துமுதலியவைகள் மிக்குத்தோன்றும் உதரபந்தனம். உதரபந்தனம் - வயிற்றின்மேற் கட்டப்படும் கச்சுப்போல்வது. அசைத்து - கட்டி.

35. நீடிய மால்மு னிலம்பிளந்து பல்லூழி
தேடிய தாண்மேற் சிலம்பமைத்துக்—கூடியெழில்

36. கூர்ந்ததிரு வாசிகை கோட்டிப் பரிதியெனச்
சார்ந்தநிலைக் கண்ணுடி தான்பார்த்து—வார்ந்தகுழற்

37. கன்னலெனு மஞ்சொற் களபமுலைப் பொற்றொடிக்கை
நன்னுதலார் செய்யு நடநோக்கி—முன்னவனை

உடன் வருவோர்கள்.

38. வந்திறைஞ்சும் வானோர் மகுடபந்தி மாமணிகள்
சிந்தப் பிரம்பு செலுத்திறையும்—முந்தொருநாள்

39. தந்தையிரு தாள்சிதைத்துச் சார்ந்த சிவத்துரோ
கந்தவிரச் செய்த கருத்தனும்—வந்தெம்மைச்

40. சாலக்காத் தாளுமுயர் சங்கரனார் தம்மிடத்தில்
கோலக்காத் தாளங்கொள் கோமானும்—மாலவிழிப்

---

35. மால் - திருமால். எழில்கூடி என மாற்றியுரைக்க.

36. கோட்டி - வளைத்து. நிலைக்கண்ணுடிக்குச் சூரியன் உவமை. வார்ந்த - நீண்ட.

37. கன்னல் - சருக்கரை. நன்னுதலார் - உருத்திர கணிகையர்.

இனி உடன் வருவோர் கூறப்படுவர்.

38. மகுட பந்தி - கிரீடவரிசைகள். பிரம்பு செலுத்து இறை - திருநந்திதேவர்; "வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி, பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி, அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும், நந்தியெம் பெருமான்" திருவிளை. கடவுள். 13.

39. சிவத்துரோகம் - அபிஷேகத்திற்கு வைத்திருந்த பாற்குடத்தை உதைத்துக் கவிழ்த்த தந்தையின்செயல். கருத்தன் - சண்டேச நாயனார்; "தந்தைதா ளொடுபிறவித் தாளெறிந்து நிருத்தரிரு தாளைச் சேர்ந்த, மைந்தர்" திருவிளை. கடவுள். 18.

40. சால - மிக. காத்து ஆளும். கோலக்கா - திருக்கோலக்காவென்னுந் தலத்தில். தாளங்கொள் கோமான் - திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்; "நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந்தனுக்குல கவர்முன், தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மையாளனை" (தே. சுந்தர. திருக்கோலக்கா.) மால - மயங்க.

41. பாலத் தனுக்குவிண்ணோர் பண்டுதவல் போலமணர்
ஆலத்தை யூட்டவுண்ட வையனும்—வேலையென

42. நீரூர்முத் தாற்றிலிட்ட நீணிதியந் தன்னையெழில்
ஆரூர்க் குளத்தெடுத்த வண்ணலும்—சீரூர்

43. குருந்துறையீ சன்பாற் குலவுமுப தேசம்
பெருந்துறையிற் பெற்ற பிரானும்—திருந்திய

44. மான முறுசிவலோ கத்தை வளமதுரை
மாநகரிற் கண்டுவந்த வள்ளலும்—வானிதிக்கோன்

45. சாலநிதி நல்கத் தரையிற் புதையலுங்கொண்
டாலயமீ சற்கிழைத்த வத்தனும்—பாலெலாம்

46. சோதியுலா வுங்கயிலைச் சோதி தனக்குமகிழ்ந்
தாதியுலாச் சொன்ன வரசனும்—கோதிலா

47. வார மிசைவேத வாசகரு மூவர்தே
வார மிசைக்கின்ற மாதவரும்—ஏரமரும்

---

40 - 41. விழிப்பாலத்தனுக்கு - நெற்றிக்கண்ணையுடைய சிவ பெருமானுக்கு ; பாலம் - நெற்றி. பண்டு உதவல் போல. ஐயன் - திருநாவுக்கரசு நாயனார். மால அமணர் ஊட்ட வெனக் கூட்டுக. வேலையென - கடல் போலவே.

42. முத்தாறு - திருமணி முத்தாறு; இது விருத்தாசலத்தைச் சார்ந்தது. ஆரூர்க் குளம் - தேவ தீர்த்தம். அண்ணல் - சுந்தரமூர்த்தி நாயனார்.

43. குருந்து - குருந்தமரம். பெருந்துறையில் - ஆளுடையார் கோயிலில் ; இதன் வடமொழிப் பெயர் பிருஹத் தீர்த்தமென்பது. பிரான் - திருவாதவூரர்.

44. மானம் - பெருமை. வள்ளல் - வரகுணதேவர் ; இச்சரி தத்தைத் திருவிளையாடற்புராணத்துள்ள வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலத்தால் உணரலாகும். நிதிக்கோன் - குபேரன்.

45. அத்தன் - தலைவன் ; என்றது குலோத்துங்கனென்னும் ஒரு சோழனை.

46. ஆதியுலா - திருக்கைலாய ஞானவுலாவை. அரசன் - சேரமான் பெருமாணாயனார்.

47. வாரம் இசை - அன்பு இசைந்த. வேதவாசகர் - வேதியர். தேவாரம் இசைக்கின்ற மாதவர் - தேவாரத்தைப் பண்ணுடன் ஓதுவார்.

48. தண்மைத் தடங்கோயில் காணிகொண்ட தானிகரும்
திண்மைப் பரிகரத்துச் சேனையரும்—உண்மைதரு

49. மேலான வாழ்த்தொலியான் மெய்யணிவெண் ணீற்றொளியாற்
பாலாழி போலப் பரந்துவரக்—கோலத்

## இசைக் கருவிகள்.

50. தடமருவு கல்லவடந் தக்கைகுழல் பேரி
நடமுருடு கல்லலகு நல்யாழ்—குடமுழவு

51. சங்கம்பொற் றாளந் தகுணி துடிபடகம்
எங்கு மதிர வெதிர்முழங்கத்—துங்க

## திருவீதிக்கெழுந்தருளல்.

52. மணமிலகு பொற்பலகை மேற்கொண்டு வானோர்
கணமிறைஞ்சும் வாயில் கடந்து—வணமருவித்

53. தண்டருதிங் கட்கொழுந்து தான்வளர்ந்து நின்றதென
வெண்டரளப் பொற்கவிகை மேல்விளங்கக்—கண்டவர்கள்

54. பார்வை கவரமுத்தின் பந்தரதன் மேனிழற்றச்
சீர்வைகு மாலவட்டஞ் சேர்ந்தசையப்—பேர்மருவு

---

48. தானிகர் - ஸ்தானீகர். பரிகரத்துச் சேனையர் - திருத்தொண்டு செய்யும் பலவகைக் கூட்டத்தார்.

49. பாலாழி - பாற்கடல். திருநந்திதேவர் முதலியோருடைய திருக்கூட்டத்திற்குப் பாலாழி உவமை; பெரிய. திருக்கூட்டச். 3.

50. தட - பெருமை. நடம் முருடு - நடத்திற்குரிய முருடென்னும் வாத்தியம். கல்லவடம் முதலியன வாத்திய விசேடங்கள்.

51. தகுணி - தகுணிச்சமென்னும் வாத்தியம்.

52. பொற்பலகை - படிச்சட்டம்; "பொற்பலகை யேறிவந்து" (312) என்பர் பின். கணம் - கூட்டம். வாயில் - கோபுரவாயில். வணம் - வண்ணம் - அழகு.

53. திங்கட்கொழுந்து - பிறை. தரளப் பொற்கவிகை - முத்தக்குடை.

54. அதன்மேல் - முத்தக்குடையின்மேல். ஆலவட்டம் - ஒருவகை விசிறி; தாலவிருத்தமென்னும் வடமொழிச் சிதைவென்பர்.

55. சங்கைப் பழித்தகண்டத் தண்களபக் கொங்கையினார்
செங்கைக் கவரித் திரள்வீசத்—துங்கமொடு

56. சுந்தரங்கொண் மாமகர தோரணமுங் கேதனத்தின்
பந்திகளு முன்பு பரந்திலங்கச்—சந்தமுறு

57. நானிலமுஞ் செங்கோ னடத்து மெழிற்றஞ்சை
மாநகர மன்னனெதிர் வந்திறைஞ்சத்—தான

உடன்வருந் தேவர்கள் முதலியோர்.

58. முகத்திலொரு கைப்புதல்வன் மூடிகமும் வேலன்
மகத்துவம் பெற்ற மயிலும்—சகத்தையருள்

59. நாலான னத்தனிவர் நாகனமுங் காவல்செய்
மாலான நத்தனிவர் வாகனமும்—மேலான

60. தெண்மதியி னாதித்தர் செம்பொற்றே ரீராறும்
வெண்மதியின் முத்து விமானமும்—வண்மை

61. தகவா னுருத்திரர் சார்பதினோ ரேறும்
மகவா னயிரா வதமும்—மிகவாக

62. மற்றைத் திசையோர் மகிழ்ந்துவரு மூர்திகளும்
பற்றுடைய பூத பதாதியும்—வெற்றி

---

55. கண்டம் - கழுத்து.

56. கேதனத்தின் பந்திகள் - கொடிகளின் வரிசைகள். சந்தம் - அழகு.

57. மன்னனென்றது இங்கே சரபோஜி மகாராஜாவை. தானம் - மதம் ஒழுகுகின்ற.

58. முகத்தில் ஒருகையையுடைய புதல்வன்; புதல்வன் - விநாயகக்கடவுள். மூடிகம் - பெருச்சாளி. வேலன் - முருகக்கடவுள்.

59. நால் ஆனனத்தன் - பிரமதேவர்; ஆனனம் - முகம். இவர் - ஊர்கின்ற. நாகு அனம் - இளமையையுடைய அன்னப்பறவை. மாலான - மயக்கம்கொண்ட; மாலென்னுந்திருநாமம் உள்ளவென்றுமாம்; நத்தன் - சங்கை உடையவன்; நத்து - சங்கு. வாகனம் - கருடன்.

60. தெண்மதியின் - தெளிந்த புத்தியையுடைய. ஆதித்தர் - சூரியர் பன்னிருவர்.

61. வான் உருத்திரர் - பெருமைபொருந்திய ஏகாதச உருத்திரர். ஏறு - ரிஷபம். மகவான் - இந்திரன்.

62. பூதபதாதி - பூதப்படை.

63. வடுகன் ஞமலியும் மாமதங்கொள் சாத்தன்
கடுக நடத்துங் களிறும்—அடல்செய்

64. திடமதுர வான்சிலையுந் தேங்கணையுங் கொண்டு
தொடரு மதவேள் சுகமும்—கொடுமையிலா

65. எண்மர் வசுக்களு மெழுமா தபோதனரும்
பண்மருவு விஞ்சையரும் பன்னகரும்—திண்மைப்

66. பனகா திபமுனியும் பாய்புலிக்கா லோனும்
சனகாதி நான்முனிவர் தாமும்—கனமுடனே

67. மல்லலுறுஞ் சாரணரும் வாழ்த்துசித்தர் கூட்டமும்
சொல்லுமெழிற் கின்னரருஞ் சூழ்ந்துவர—வில்லினுதற்

68. கங்கையா தித்தீர்த்தக் கன்னியருஞ் சீர்கொளெழு
மங்கையரும் வாம மருங்கிலுறத்—துங்கவிசை

69. பன்னுகின்ற தும்புருவு நாரதரும் பாடிவர
மன்னிமையோர் பூமா மழைசொரியப்—பொன்னி

திருச்சின்னம்.

70. நதியுடைக்கோன் முன்னோர் நரைமுதியா ணீழல்
வதிகின்றோ மென்னவந்தான் வந்தான்—விதியால்

---

63. வடுகன் - வைரவக் கடவுள். ஞமலி - நாய். மதம் - வலி; “நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்” (மலைபடு. 280.) சாத்தன் - ஐயனார்.

64. மதுரவான்சிலை - கரும்புவில். தேங்கணை - தேனை யுடைய மலர்ப்பாணம். மதவேள் - மன்மதன். சுகம் - கிளி.

65. எழு மா தபோதனர் - எழு முனிவர்கள். விஞ்சையர் - வித்தியாதரர். பன்னகர் - நாகலோகத்தார்.

66. பனகாதிபமுனி - நாகங்களுக்குத் தலைவராகிய முனி; பதஞ்சலி முனிவர். புலிக்காலோன் - வியாக்கிரபாதர். கனம் - பெருமை.

67. மல்லல் - வளம். வில்லின்நுதல் - வில்லைப்போன்ற நெற்றியை யுடைய.

68. எழுமங்கையர் - சப்த மாதர்கள். வாம மருங்கில் - இடப்பக்கத்தில்; இடப்பக்கம் அம்பிகையின் பக்கமாதலால் கங்கை முதலிய தீர்த்தக் கன்னியர் வாமமருங்கிலுறவென்றார்.

68 - 9. இசையைப் பாடி வர. மன் - நிலைபெற்ற.

69 - 70. பொன்னி நதியுடைக் கோன்முன் - கரிகாலனென்னும்

71. சகத்தவர்விண் ணேர்சூழச் சார்ந்துதக்கன் செய்த
மகத்தளவுஞ் சென்றுவந்தான் வந்தான்—மிகத்துங்க

72. வன்மதில்சூழ் தஞ்சைக்கு வந்தான்வந் தானெனவே
பொன்மருவு சின்னம் புகழ்ந்தார்ப்பத்—துன்னும்

திருத்தேரிலெழுந்தருளி உலாப்போதல்.

73. மருக்கா வணப்பூ மலர்மாலை தூக்கும்
திருக்கா வணத்தூடு சென்று—குருக்கிளர்வேல்

74. வல்லானும் வெற்பின் மடமானுந் தானுமெழில்
வில்லார் மணித்தேர் மிசையேறி—மல்லார்

---

அரசன் கனவின்கண். என்ன வந்தான்-என்று திருவாய்மலர்ந்தருள வந்தான். ஸ்ரீ பிருகதீசரது ஆலயம் கட்டப்படுகையில் சிற்பிகளுக்கெல்லாம் உணவு, நீர் முதலியன அளித்த ஒரு முதியாளிடம் தங்கள் நன்றியைக் காட்டுதற்கு அறிகுறியாக அச்சிற்பிகள் அம்முதியாள் விரும்பியபடி அவள் வீட்டிலிருந்த கல்லொன்றை விமானத்தின் சிகரத்தின் நடுவில் அமைத்துக் கோயிலைக் கட்டி நிறைவேற்றினார்களாக, ஒருநாள் சோழனது கனவிற் பெருவுடையார், "யாம் கிழவியளித்த நிழலில் உவந்திருக்கின்றேம்" எனத் திருவாய்மலர்ந்தருள, சோழன் உண்மையறியாது மயங்கிப் பின்னர் அறிந்தனனென்பது வரலாறு. இது பிருகதீசுவர மாகாத்மியத்திற் கண்டது; "அம்மையார் நிழலில்யா மமர்வோமென் றருள்செய்த, செம்மையார் வீற்றிருக்குந் திருத்தஞ்சை" மாயூரப். திருநாட்டுப். 54.

71 - 2. மகத்தளவும் - யாகசாலை வரையிலும். சென்று வந்தான் - போய்வந்தவர். மதிலாற் சிறப்பெய்திய நகரமாதலின் மிகத்துங்க வன் மதில்சூழ் தஞ்சையென்றார்; சா. தற. 3 : 1, 9 : 11, 30 : 25. பொன் மருவு சின்னம் - பொற்சின்னமென்னும் வாத்தியம். துன்னும் - நெருங்கிய.

73. மரு கா வண்ணம் பூ மலர்மாலை - வாசனையையுடைய சோலையிலுள்ள அழகிய பொலிவுபொருந்திய மலர்களாலாகிய மாலைகளை. தூக்கும் - தொங்கக்கட்டிய. திருக்காவணத்தூடு - பந்தலின் கீழே; இது நடைக்காவணமெனப்படும். குரு - நிறம்.

73 - 4. வேல் வல்லான் - முருகக் கடவுள். வெற்பின் மடமான் - உமாதேவியார். தான் - சிவபெருமான். இம்மூர்த்தி சோமாஸ்கந்தர்; பெருவுடை. 135. வில் - ஒளி. மணி - மாணிக்கம்; ஒலிக்கும் மணியுமாம். மல் - வளம்; மல்லலென்பது கடைக்குறைந்து நின்றது.

75. துணைவேத வாசி துலங்கமணி வீதி
அணைய நடாத்து மளவில்—இணையிலாக்

குழாங்கள்.

76. கின்னரர்தங் கன்னியருங் கிம்புருடர் வஞ்சியரும்
பொன்னுலகில் வாழ்கின்ற பூவையரும்—பன்னுபரன்

77. தேரி லிருக்குந் தெரிவையருந் தேர்ப்பாகன்
ஊரி லிருக்குமல ரோதியரும்—பேரில்கு

78. வின்னா ணுலகத்து மெல்லியருங் கூர்வாளி
தன்னாட் டினிதிருக்குந் தையலரும்—நன்னுதலும்

79. திங்கள் வதனமுஞ் சேல்விழியும் வார்காதும்
குங்குமச் செப்பனைய கொங்கையும்—பொங்குகவின்

80. காந்தளொ னுங் கையுங் கனத்தமணி மேகலையும்
பூந்துகிலு முத்திழையும் பொற்பணியும்—ஏந்துகின்ற

81. மின்னின் கொடிகளோ மேவு மயிலினமோ
என்னக் களிப்புடன்வந் தேமருவித்—துன்னுமேன்

82. மாடத்தின் மண்டபத்தில் வன்மதிலிற் சித்திர
கூடத்திற் செய்திடுபொற் குன்றத்தில்—ஆடகத்

---

75. வேதவாசி - வேதமாகிய குதிரைகள்.

76 - 7. பரன் தேரிலிருக்கும் தெரிவையர் - பூமியிலுள்ள மங்கையர்; பரன் தேர் - பூமி. தேர்ப்பாகன் - பிரமன். அவனுடைய ஊர் - சத்தியலோகம். ஓதியர் - கூந்தலையுடைய மகளிர்.

78. வில் நாண் உலகத்து மெல்லியர் - நாகலோகத்து மங்கையர்; வில் நாண் - மேருவாகிய வில்லிற்பூட்டிய நாணாகிய வாசுகி. கூர்வாளி - திருமால்; வாளி - அம்பு. வாளிதன் நாடு - வைகுந்தம்.

76 - 8. பரன்பாகன், பரன்வில், பரன் வாளியெனவும் கூட்டுக.

80. காந்தள் - காந்தட்பூ. பூந்துகில் - பூத்தொழில் செய்யப்பெற்ற ஆடைகள்; “ கோபத் தன்ன தோயாப் பூந்துகில் ” (முருகு. 15.) முத்து இழை - முத்தாற்செய்யப்பெற்ற ஆபரணங்கள். பொற்பணி - பொன்னாற் செய்யப்பெற்ற ஆபரணங்கள். ஏந்துகின்ற - மேற்கூறியவற்றை யேந்துகின்ற.

81. என்ன - என்று கண்டோர் சொல்லும்படி.

81 - 2. மேல்மாடத்தில் - மாளிகையின் மேல். சித்திர கூடத்தில் - தெற்றியம்பலங்களில். செய்திடு பொற்குன்றத்தில் - கட்டுமலையில்.

83. தண்ணாரும் வீதி தனிற்குழாங் கொண்டுநின்று
பெண்ணா ரிடத்தேந்தி பேரெழிலைக்—கண்ணாரக்

84. கண்டுபணிந் தேத்திடுங்காற் காம னிடுங்கலகம்
கொண்டுதமிற் றாமியற்பூங் கோதையீர்—கண்டோர்

85. இடரனைத்துந் தீர்க்கு மிறைமுகத்தைப் பாரீர்
படரொளிப்பொற் கேயூரம் பாரீர்—திடமுற்ற

86. பத்தியுடன் வந்து பணிந்தோர் தமக்கிட்ட
சித்திதரு பாதந் தெரிசியீர்—இத்தண்

87. புவிபுரந்த நேரிவெற்பன் போற்றுமன்பிற் செய்த
கவினார் மணிப்பொற்றேர் காணீர்—இவனழகைக்

88. காணாத கண்ணல்ல கண்ணல்ல வென்றுரைப்பார்
வீணாள் செலுத்தினோ மேலென்பார்—சோணாடர்

89. தங்கடவ மிக்கதென்பார் சார்ந்தகங்கை வெற்புதவு
மங்கை தவத்தை மகிழ்ந்துரைப்பார்—தங்குகடைக்

90. கண்கொண்டு நோக்குகின்றார் காமாரி யாரெமக்குத்
தண்கொன்றை மாலை தருவரென்பார்—வண்கனிவாய்

---

83. குழாம் - கூட்டம். பெண்ணார் இடத்து ஏந்தி - உமாதேவியாரை இடப்பாகத்தேயுடைய பெருவுடையாரது ; ஏந்தி - ஏந்தியவர் ; பெயர்.

84. கலகம் - சண்டை ; "வில்வேள் கலகத்தில்" கோடீச். 388 ; சா. தூற. 25.

இதுமுதல், குழாத்தினர் தம்முள் தாம் பேசிக்கொள்ளுதல் கூறப்படும்.

85. இறை - பெருவுடையாரது. கேயூரம் - தோள்வளை.

87. நேரிவெற்பன் - சோழமன்னன் ; நேரி - சோழர்க்குரிய ஒரு மலை ; இஃது அகத்தியரால் அழுத்திவிடப்பட்டதென்று செவ்வந்திப் புராணம் கூறும்.

88. காணாத கண் நல்ல கண் அல்ல : "காரோண னுருநோக்காக் கண்ணென்ன கண்ணே" (திருநாகைக். அகத்தீசப். 25.) மேல் வீண் நாள் செலுத்தினோம் ; மேல் - முன். சோணாடர் - சோழநாட்டினர்.

89. தவமென்பதைக் கங்கையென்பதனோடு கூட்டுக.

90. காமாரியார் - மன்மதனுடைய பகைவர் ; பெருவுடையார்.

91. சார்ந்த சிறுமுறுவல் கண்டோந் தடம்புயத்திற்
சேர்ந்த மினியென்று செப்புவார்—நேர்ந்தெதிரே

92. பொன்மலையிற் கைவைத்தீர் போற்றதனைப் போலுமெங்கள்
வன்முலையிற் கையொருகால் வைத்திடீர்—மன்னுதுடி

93. எல்லுமிர வுந்தொடுவீ ரெங்க ளிடைத்துடியைச்
சொல்லுகணப் போதேனுந் தொட்டிடீர்—மல்லுலகில்

94. எண்மையுற வந்தன்பர்க் கெல்லா முதவுகின்ற
வண்மை யெமக்கு மறந்தீரோ—உண்மையாய்

95. நம்பினங்கா ணும்மை நவில்கருப்பு வில்லினன்
அம்பின் குணநீ ரறிவீரே—சம்புவே

96. நேரார் புரத்தைவென்ற நித்தரே தென்னளகைச்
சீரார் கருணைத் தியாகரே—ஏராரோங்

97. காரரே மூவிலைவேல் கையிற் பிடித்ததனி
வீரரே மேரு விடங்கரே—காரணரே

---

91. சிறுமுறுவல் - புன்னகை. சேர்ந்தம் - சேர்ந்தனம் ; துணிவு பற்றி இறந்த காலத்தாற் கூறினர்.

92. பொன்மலையில் - மேருமலையில். வல் - சூதாடுகருவி. துடி - உடுக்கையை.

93. எல்லும் - பகலும். இடைத்துடியை - இடையாகிய துடியை. கணப்போதேனும் - க்ஷணப்பொழுதாவது.

94. எண்மை - எளிமை ; இது ஸௌலப்பியமெனப்படும்.

95. உம்மை நம்பினம். காண் : அசை. குணம் - தன்மை,நாணி ; சிலேடை.

96. நேரார் புரத்தை - பகைவர்களுடைய திரிபுரங்களை. அளகை - தஞ்சையின் திருநாமங்களுள் ஒன்று ; “ குலோத்துங்க சோழ னளகை யுமத், திங்கா விரியுநன் னுடுமிந் நேரந் தெரிசிப்பரே ” (குலோத். கோவை. 397.) கருணைத் தியாகரென்பது தஞ்சையிலுள்ள சோமாஸ் கந்த மூர்த்தியின் திருநாமம் போலும்.

96 - 7. ஓங்காரரே - பிரணவத்தின் பொருளாயுள்ளவரே; ஓங்கார குண்டத்திலிருந்து எழுந்தருளியவரே யெனினும் ஆம் ; 11 - ஆம் கண்ணியைப் பார்க்க. மேருவிடங்கரே: தக்ஷிணமேருவென்பது தஞ்சைக் கோயிலிலுள்ள விமானத்தின் பெயர் ; விடங்கர் - பேரழகையுடையவர்.

98. ஆதிநா கப்டணியி ரஞ்சலி ரென்றொருசொல்
ஓதினல் வாய்முத் துதிர்ந்திடுமோ—நீதியோ

99. என்றுரைப்பார் வல்விரகத் தேற்ற மலர்ச்செங்கைக்
கன்றிழப்பார் கைவளையைக் காணுமென்பார்—நன்றிந்தப்

100. பூமன் மனைவாயிற் பொங்குமெழி லுற்றிருக்கும் [மணி
மாமணியைச் சென்றசைப்போம் வம்மினென்பார்—தாம

101. கோதை யினையவிழ்ப்பார் கூட்டிமுடிப் பார்தனத்து
மாதுகிலை நீத்திடுவார் மன்னுவிப்பார்—பேதுறுவார்

102. செவ்வாய் மதிவதனத் தேவிதனைத் தேரினிற்கண்
டெவ்வாறு சென்று ளிவளென்பார்—இவ்வாறு

103. தம்மையறி யாது மயங்குந் தரளவடக்
கொம்மை முலையார் குழாத்தொருத்தி—செம்மைதரு

---

98. ஆதிநாகம் - ஆதிசேடன். பணி - திருவாபரணம். வாய்முத் துதிர்ந்திடுமோ; "மெல்ல மெல்லச்சொன்னல், வாய்முத்தஞ் சிந்தி விடுமோவெல் வேலி வடிவம்மையே" (தனிப்.); "சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" சீற். 57.

99. விரகத்து - விரகத்தால். கன்று - வளையல்களை. காணும் - பார்த்தருள்வீராக.

100. பூமன் - அரசனுடைய. வாயின்மணி - கடைவாயிலிற் றூங்கும் ஆராய்ச்சி மணி; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க" (சிலப். 20 : 53); "மனுவின்பொற்கோயில் வாயிற், பொன்னணி மணி", "நின் கொற்ற வாயில் தூங்கிய மணியை" (பெரிய. மனுநீதி. 27, 29); "மணிவாசற்றூங்க" (அரங்கத். 72); "ஆடுங்கடை மணி நாவசையாமல்" (தனிப்.) தாமம் அணி - மாலையை அணிந்த.

99 - 100. கன்றையிழந்த பசு மனுநீதிச்சோழன் அரண்மனை வாயிலிற் கட்டப்பட்டிருந்த மணியை அடித்ததை நினைந்து இங்ஙனம் கூறினர் போலும்.

101. கோதையினை - கூந்தலை. நீத்திடுவார் - நீக்குவார். மன்னுவிப்பார் - அத்துகிலை நிலைபெறச்செய்வார். பேதுறுவார் - மயக்க முறுவார்; "பேதுறு கின்ற போன்ற பெருமழைக் கண்கள்" சீவக. 2544.

102. செவ்வாயையும் மதிபோன்ற வதனத்தையுமுடைய தேவிதனை - உமாதேவியாரை. இக்கண்ணியிற் செவ்வாய் மதி யென்னும் இரண்டு கோள்களின் பெயர்கள் தோன்றுகின்றன.

103. கொம்மை - வட்டம். குழாத்து - கூட்டத்துள்.

பேதை.

104. பெண்களெழிற்றிலக மென்னவளர் பேதையுயர்
தெண்கடலிற் றோன்றாத சிற்றமுதம்—திண்கருத்தை

105. நாட்டலின்றிக் கையறியாப் பேதையர்செய் நற்றொழில்போல்
கூட்டி முடித்திடாக் கூந்தலாள்—ஈட்டமுடன்

106. அண்டரெல்லாம் போற்று மளகா புரேசனெழிற்
கண்டவிடம் போலிருக்குங் கண்ணினாள்—வண்டினங்கள்

107. பூமருவு காமயிலைப் பூம்பாவை யென்றுரைக்கும்
தேமொழிபோற் சென்றுவந்த சிறெயிற்றாள்—ஏமமிலாக்

108. குஞ்சரக்கன் றின்வாயிற் கோடடங்கி மன்னுதல்போல்
மஞ்சணியா கத்தடங்கு மாமுலையாள்—அஞ்சலென்னே

109. நீடிமரப் பாவை விளையாட நீவருகென்
றாடி நிழலை யழைத்திடுவாள்—கூடிமுலைப்

---

104. திலகம் - மேலாதல். கடலிற் றோன்றாத சிற்றமுதமென்பது: விலக்குருவகமென்னும் அணி; "அலையிடைப் பிறவா வமுதே யென்கோ" (சிலப். 2: 78); "வாரி அலையிற் பிறவா வமுதம்" (தண்டி. சூ. 37, மேற்.); "கடற் பிறவாத வின்னமுதம்" (பிரபு. மாயை. பூசை. 20.) பருவத்தாற் சிறுமையென்றும் அடை கொடுக்கப்பட்டது.

105. கை அறியாப் பேதையர் - விதிவிலக்குக்களை அறியாத அறிவிலிகள். இக்கண்ணி, "பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப், பேதை வினைமேற் கொளின்" என்ற திருக்குறட் கருத்தைப் பெற்றுள்ளது. ஈட்டம் - தொகுதி.

106. சிவபெருமான் திருக்கழுத்திலுள்ள விஷம் செயலற்றிருத்தலின் அஃது உவமை கூறப்பெற்றது.

107. பூ மருவு - பூக்களிற் சேர்கின்ற. கா - சோலை. மயிலை - மயிலாப்பூர். பூம்பாவை - இறந்து சம்பந்த மூர்த்தியால் உயிர்பெற்ற ஒரு வணிகப்பெண். அவள் இறந்து பிறந்தது இங்கே உவமை. விழுந்து முளைத்த பல்லையுடையாளிவளென்பது கருத்து. சிறெயிறு - சிறுமை. எயிறு.

107. ஏமம் இலா - பாதுகாப்பு இல்லாத.

108. கோடு - கொம்பு. மஞ்சு அணி - அழகையணிந்த. அஞ்சல் என்னே - நீ பயப்படுதற்குக் காரணம் யாது.

109. மரப்பாவை விளையாட - மரப்பாவையை வைத்து விளையாடுதற்கு. நீடி விளையாட வெனக் கூட்டுக. ஆடி நிழலை - கண்ணாடியிற் றோன்றும் தன்னுடைய பிரதிபிம்பத்தை.

110. பாலுண் கிலதெனது பாவைமருந் தூட்டுமென்று
சேலுண்க ணன்னையர்பாற் செப்புவாள்—கோலமுறு

111. பூவைக்கு மின்னூர்சொல் போதித்தல் கண்டெதிரே
பாவைக்குத் தன்சொல் பயிற்றுவாள்—மேவுமிவள்

112. ஆதிதனை யன்னையர்க ளஞ்சலிக்க வஞ்சலித்துத்
தாதிவர்பூங் கொன்றையரைத் தான்பார்த்துச்—சோதியணி

113. மின்னேர் சடாமகுட வெண்பிறையை யென்னிதென்றாள்
மன்னேர் மருவு மதியென்றார்—பின்னர்

114. வலங்கையினி லோங்கு மழுவையென்னி தென்றாள்
இலங்கி யிடும்பரசி தென்றார்—நலங்கொளிடம்

115. தன்னில் வளருமுமை தன்னையிது வென்னென்றாள்
கன்னி யிதுகலைமான் கன்றென்றார்—இன்னதனை

116. வாங்கியெனக் கிப்போது வண்பாவை தன்னுடனே
தாங்கிவிளை யாடத் தருகென்றாள்—ஆங்கவரும்

117. மாங்குயிலே யிம்மான் வனமா னினமல்ல
ஓங்கு முனிவரர்க ளோமத்தில்—ஆங்கெழுந்து

---

110. எனதுபாவை பால் உண்கிலது. ஊட்டும் - நீங்கள் ஊட்டு வீர்களாக. சேல் உண்கண் - சேலையொத்த கண்களையுடைய. தாயர் ஐவராதலின் அன்னையரென்றார்; "ஐவர் நலனேம்ப" (சீவக. 363) என்பதும் அதனுரையும் இங்கே அறியற்பாலன. கோலமுறு-அழகுற்ற.

111. பூவைக்கு - நாகணவாய்ப் புள்ளிற்கு.

112. ஆதிதனை - பெருவுடையாரை. கொன்றையரை - அவரை; இது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

113. மின் நேர் - மின்னலை ஒத்த. என் இது என்றாள் - இது யாது என வினவினாள். மன் ஏர் - நிலைபெற்ற அழகு. மதி என்றார் - சந்திரன் என்றார்.

114. பரசு இது என்றார்; பரசு - மழுவாயுதம்.

114 - 5. இடந்தன்னில் - இடப்பக்கத்தில். உமைதன்னை-மானை நோக்கி. கன்னி: விளி.

116. இப்போது தருக என்றாள். ஆங்கவர்: ஒருசொல்நீர்மைத்து; அவரும் - தாயரும்.

117. மா குயிலே. வனமான் - காட்டிலேதிரிகின்ற மான். முனிவரர்கள் - தாருகாவனத்து முனிவர்கள். ஓமத்தில் - யாகத்தில்.

118. தேனையுற்ற பூங்கொன்றை வேணிச் சிவபெரு
மானையன்று பாய்வதற்கு வந்ததுகாண்—ஆனநெடு

119. வன்கண்மை யுள்ளதிவர் மாமலர்க்கை போலவே
நின்கை யினிலடங்கி நிற்குமோ—என்குறித்தாய்

120. வாங்கி யளித்தவுடன் மன்னு முனையுமுன்றன்
பாங்குறுபொற் பாவையையும் பாய்ந்திடுங்காண்-நாங்களினி

121. வானத் தெழுந்து வருங்கலைமா னைப்பிடித்துத்
தானிற்றை நாளே தருகின்றேம்—தேனேவா

122. என்ன வெடுத்தா ரிவளிருகண் முத்துதிர்த்தாள்
அன்னவரு மின்சொலா லாற்றினர்—கன்னல்விற்

123. பஞ்சசர னுதியோர் பாங்கு வரத் தஞ்சைச்
செஞ்சடையா னந்தத் தெருவகன்றான்—மஞ்சுதனை

---

118. தேனை ; ஐ : அசை நிலை ; "விண்ணை மடங்க" (சிற். 75.) வேணிச்சிவபெருமான் - வேணியையுடைய இறைவன் ; வேணி - சடை ; பெருமானென்பதற்குப் பெரிய மானென்பது மற்றொரு பொருள். ஆன - அத்தகைய.

119. கைபோலவே - கையில் அடங்கியிருப்பது போலவே. நிற்குமோ? ஓகாரம் : எதிர்மறை. என்குறித்தாய் - என்ன நினைத்தாய்.

120. பாய்ந்திடும் - மான் பாய்ந்துவிடும்.

121. கலைமானை - சந்திரனிடத்துள்ள மானை. அம்புலியிலுள்ள மானைப்பார்த்து விளையாடற்கழைத்தல் குழந்தைகளுக்கு இயல்பென்பது பற்றி அஃது இங்கே கூறப்பட்டது ; அம்புலிமானே வாவாவென்று அழைக்குந் தொடர் இக்காலத்தும் வழங்கும். இற்றைநாளே - இன்றைக்கு.

117 - 21. இம்மான் அல்ல ; ஓமத்தில் வந்தது ; வன்கண்மையுள்ளது ; நிற்குமோ ; பாய்ந்திடுங்காண் ; கலைமானைப் பிடித்துத் தருகின்றேம் ; வாவெனமுடிக்க.

122. எடுத்தவர் தாய்மார். முத்து - நீர்த்துளிகளை. கன்னல்வில் - கரும்பு வில்லையுடைய.

123. பஞ்சசரன்-ஐந்து அம்புகளையுடைய மன்மதன் ; சரம்-அம்பு. பாங்கு - பக்கத்தில். தஞ்சைச் செஞ்சடையான் ; "செஞ்சடையாரெங்கள் சிவனார் பெருவுடையார்" (காப்பு.) மஞ்சுதனை - மேகத்தை.

## பேதும்பை.

124. ஏற்றிடுமக் கோமறுகி லோர்பெதும்பை யெல்லையெதிர்
தோற்றின் மலர்வனசத் துய்யமுகை—ஆற்றலுடன்

125. புத்தலரை வாளிகொண்டு போர்புரியச் சித்தசனுர்
சித்தமதி லெண்ணவளர் செவ்வியாள்—கொத்திதழித்

126. தோட்டலங்க லீசர்மெய்த் தொண்டரெண்ணத் தின்படியே
கூட்டுதல்போற் கூட்டிமுடி கொண்டையாள் - பூட்டியநாண்

127. விற்கு நிகர்நுதலாள் வெங்கொலையும் வஞ்சனையும்
கற்கும் பருவக் கயல்விழியாள்—பொற்கதிரார்

128. தென்னளைகைக் காவிற் செறிகமுகின் பச்சிளங்காய்
தன்னை நிகருந் தனத்தினுள்—துன்னுமெழில்

129. சந்திர காந்தத் தகட்டுநிலா முற்றத்தில்
சுந்தரப்பொன் னம்மானை தொட்டாடிப்—பந்துமுலைப்

130. பாங்கியருந் தானு மிருக்கும் பதத்திலங்கோர்
ஓங்கெழி லோவியஞ்செய் வோன்வந்தான்—ஆங்கவனை

---

124. கோமறுகு - இராசவீதி. எல்லை எதிர் தோற்றின் - சூரியன் நேரே உதித்தால். வனசம் துய்யமுகை - தாமரையினது அலரும் பருவமுள்ள அரும்பு; தூயவென்பது துய்யவெனவும் வழங்கும்.

125. புதுமை அலர் ஐவாளிகொண்டு - புதிய ஐந்து மலர்ப்பாணங்களைக்கொண்டு. சித்தசனுர் - மன்மதன். செவ்வி - பருவம். இதழி - கொன்றை.

124 - 5. ஆற்றலுடன் போர்புரியவென முடிக்க.

126. ஈசர் கூட்டுதல்போலென்க; "வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்" (தே. திருநா. திருமறைக்காடு.) முடி கொண்டையாள் - முடித்த கொண்டையையுடையவள். பூட்டிய நாண் - நாணைப் பூட்டிய.

126-7. விற்கு - வில்லுக்கு. பொற்கதிர் - பொன்னெளி. பூட்டிய நாண் வில்லென்றது வளைவைக்கருதி.

128. அளைகை - தஞ்சையிலுள்ள. கா - வம்புலாஞ் சோலையில். கமுகின் - பாக்குமரத்தின். பச்சிளங்காய் - மிகவும் இளையகாய். எழில் துன்னும் - அழகு நெருங்கிய.

129. சந்திரகாந்தத் தகட்டுநிலா முற்றத்தில் - சந்திரகாந்தக் கற்பலகைகளைப்படுத்த நிலாமுற்றத்தில்.

130. பதத்தில் - சமயத்தில். எழில் ஓங்கிய. ஓவியம் செய்வோன்- சித்திரம் எழுதுவோன். அவனை நோக்கியென ஒருசொல் வருவிக்க.

131. ஈச னளகை யிறைவன் மணிமிடற்றுத்
தேசனுரு வோர்படத்திற் றீட்டிநீ—நேசமுறத்

132. தந்திடுக வென்றுரைத்தாள் சார்ந்தவன்மெய்ச் சோதிதனை
இந்த வடிவுடையா னிக்குணத்தான்—சந்தமிது

133. பெற்றவனென் றெண்ஞானம் பெற்றோர்க்கு முன்குறிக்க
உற்றுரைக்க வுள்ளவா றெண்ணாதே—மற்றவனை

134. யாரெழுத வல்லார்கள் யானுணர்ந்த திங்கெழுதி
ஏரெழுபூங் கோதையுனக் கீவனெனாச்—சீருருவ

135. நாலாறு மேலொன்றி னைந்தின் மேலொன்றை
நூலாறு தீட்டியிதை நோக்கென்றான்—கோலமணி

136. வால்வளைக்கை நோக்கி மருங்குமையை யாரென்றாள்
மால்வெற் பரசன் மகளென்றான்—வேல்வலத்தான்

---

131. தேசன் உரு - சிவபெருமான் திருவுருவை. தீட்டி - எழுதி.

132 - 3. சந்தம் - இயல்பு. பெற்றோர்க்கும் ; உம்மை : உயர்வு சிறப்பு. இந்தப்பகுதி, "மைப்படியுங் கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான், ஒப்புடைய னல்ல னொருவ னல்ல னோரூர னல்லனோ ருவம னில்லி, அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணி னல்லால், இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே" (தே. திருநா.) என்னுந் தேவாரக் கருத்தைத் தன்பாற்கொண்டு விளங்குகின்றது.

134. உணர்ந்தது - உணர்ந்த மட்டில். எனா - என்று சித்திர மெழுதுவோன் சொல்லி.

134 - 5. சீர் உருவம் நாலாறுமேல் ஒன்றில் - திருவுருவங்கள் இருபத்தைந்தில் ; அவையாவன : சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாண சுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகாநுக்கிரகர், ஸோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசனர், தக்ஷிணாமூர்த்தி, இலிங்கோற்பவர். நால் ஐந்தின் மேல் ஒன்றை - இருபத்தொன்றாவதாகிய ஸோமாஸ்கந்தத் திருவுருவை ; திருத்தேரில் எழுந்தருளியிருப்பது இதுவே. நூல் ஆறு - ஓவியநூல் முறைப்படியே ; ஆகமநூன் முறைப்படியே எனலுமாம். நோக்கென்றவன் சித்திரமெழுதினவன்.

136. வால் வளைக்கை - பெதும்பை. நோக்கி - அத்திருவுருவத்

137. தன்னை நடுவைக்குந் தனிக்குழவி யாரென்றாள்
கன்னியிவன் காங்கேயன் காணென்றான்—மின்னிடையாள்

138. இக்குமர னிம்மடந்தை போல வெனையுமிவர்
தக்க வலத்தெழுதித் தாவென்றாண்—மிக்கோர்

139. உளங்கொளிந்த மூவுருவு மோருருவ மல்லால்
விளங்குபரன் றன்னிலிவர் வேறே—களங்கறுத்தோன்

140. தன்னையெளி தெல்லோர்க்குஞ் சாரக் கிடைத்திடுமோ
உன்னை வலப்பா லுறவெழுதின்—முன்னூற்குள்

141. இல்லா விதியை யிவனெழுதி னானெனவே
எல்லோரு மென்னை யிகழ்ந்திடுவார்—சொல்லுவலொன்

142. றென்னைமுனி யேலளங்கை யீச னமலனிங்கே
பொன்னந் திருத்தேரிற் போதுங்கால்—உன்னையான்

143. காணிலவன் றன்பால் கடுகப் பொறித்திடுவேன்
மாணிழையா யிப்படத்தை வாங்கென்றான்—வாணுதலாள்

144. வாங்களவிற் றஞ்சை வளர்பரமன் வீதிதனில்
ஓங்கு மணித்தே ருடன்வந்தான்—ஆங்கணுகித்

---

தைப்பார்த்து. மருங்கிலுள்ள உமையைநோக்கி இவள் யாரென்றாள். வெற்பரசன் மகள் - இமவானின் புத்திரி.

136 - 7. வேல் வலத்தான் தன்னை - முருகக்கடவுளை நோக்கி. காங்கேயன் - முருகக்கடவுள் ; கங்கையின் புதல்வரென்பது பொருள்.

138. வலத்து - வலப்பக்கத்தில்.

139. உளம் கொள் - தியானித்தற்குத் தக்க. மூவுருவம் - சிவபெருமான் திருவுருவம், உமாதேவியாரின் திருவுருவம், இடையிலுள்ள முருகக்கடவுளின் திருவுருவம். களம் - கழுத்து.

140. முன் நூற்குள் - பழைய நூல்களுள். கிடைத்திடுமோ - கிடைப்பானோ.

139 - 40. களங்கறுத்தோன் கிடைத்திடுமோ என்க.

141. ஒன்று சொல்லுவல் - ஒருபாயத்தைச் சொல்லுவேன்.

142 - 3. யான் உன்னை அவனுடைய வலப்பக்கத்தே காணின். கடுகப் பொறித்திடுவேன் - விரைவாக எழுதுவேன்.

144. வாங்கு அளவில் - அப்படத்தை வாங்கும்பொழுது.

145. தோழியருந் தானுமச் சோதிதனைக் கண்டிறைஞ்சி
வாழியித் தேவர் வலப்புறத்தில்—யாழின்

146. மதுரவுரை யீர்நான் வதிந்திடினென் னென்றாண்
மதிவதனப் பாங்கியர்கண் மாதே—எதிருமிவர்

147. பூணுக்கு மாலைக்கும் புற்கலைக்கு மூர்திக்கும்
ஊணுக்குங் காதலித்தா யோவென்று—நாணமுறக்

148. கூறி யுடனகைத்தார் கோற்றொடிமா றொன்றுரையாள்
வேறு திகைத்துநின்றாண் மீதவளைச்—சீறுமலர்

149. அம்பன் மதியா தகன்றான் வளர்தஞ்சை
நம்பன் றிருத்தேர் நடத்தினான்—பம்புமெழிற்

மங்கை

150. செங்கையினா ளங்கொருத்தி தென்றற்றே ரான்விரும்பு
மங்கைப் பருவ மருவினாள்—பங்கமிலாச்

151. சொற்செறிந்த வம்புலாஞ் சோலையன்ன கூந்தலாள்
நற்சண் பகவன நாசியாள்—விற்செறிந்த

---

145. தானென்றது பெதும்பையை. சோதிதனை - சோமாஸ்கந்த மூர்த்தியை. வாழி: அசை; "வாழி தன்மனை மடவர லறிவுறா வண்ணம்" (வி. பா. குருகுலச். 25.) யாழின் - யாழோசையைப்போல.

146. உரையீரென்றது தோழியரைநோக்கி. என் - என்னகுற்றம். பாங்கியர்கள் : எழுவாய்.

147. பூண் - பாம்பு. மாலை - எலும்புமாலை எருக்கமாலை முதலியன. புற்கலை - புலித்தோலாகிய ஆடை. ஊர்தி - இடபம். ஊண் - விடம். காதலித்தாயோ ; ஓகாரம் : வினா. இக்கண்ணி இகழ்ச்சிக்குறிப்பு.

148. கோற்றொடி - பெதும்பையானவள். மாறு ஒன்று உரையாள் - விடையொன்றும் சொல்லாதவளாகி.

148 - 9. மலரம்பன் - மன்மதன். பம்பும் - பரவும்.

150. தென்றற்றேரான் - தென்றற்காற்றைத் தேராகவுடைய மன்மதன். பங்கம் - குற்றம்.

151. சொல் - புகழ். வாசனை பரவுகின்ற சோலையைப்போன்ற கூந்தலாள் ; வம்புலாஞ்சோலை - இத்தலத்தில் முன்பிருந்த ஒரு பூஞ்சோலை; பெரிய திருமொழி, 1. 1: 6.

இதுமுதல் 154-ஆங் கண்ணிவரையிற் சிவதலப்பெயர்கள் தொனிக்கின்றன.

152. வல்லமெனுங் கொங்கையாண் மாகாளம் போற்கண்ணாள்
முல்லைவா யுற்றதெனு மூரலாள்—சொல்லியசீர்

153. ஏற்றிடுகுற் றாலந்தா னென்னும் வயிறுடையாள்
சாற்றிடுமா யூரமெனுஞ் சாயலாள்—போற்றதுறும்

154. வஞ்சி யிடையாள் வலஞ்சுழிநல் லுந்தியாள்
கஞ்சனூ ரன்ன கதிநடையாள்—விஞ்சுபுகழ்

155. ஆசினியின் மேகந் தனைவிட் டணிதருமின்
காசினியில் வந்தன்ன காட்சியாள்—மாசிலாத்

156. தாய ரிடம்பிரிந்து தண்பளிங்கு மாளிகையில்
தூயதனிப் பாயற் றுயில்புரிவாள்—மேயகந்

---

சண்பகம் வனம் நாசியாள் - சண்பகமலரைப்போன்ற அழகையுடைய மூக்கையுடையாள். சண்பகவனம் - திருநாகேசுவரம். வில் - ஒளி.

152. வல் அம் எனும் கொங்கையாள் - சூதாடுகருவியின் அழகை யுடையன வென்று சொல்லப்படும் கொங்கையை உடையவள்; வல்லம்- திருவல்லம். மா காளம்போற் கண்ணாள் - கொடுமையிற்பெரிய விடம் போன்ற கண்ணையுடையாள்; மா - கருமையுமாம். மாகாளம் - உஞ்சை மாகாளம், அம்பர்மாகாளம் முதலியன. முல்லை வாய் உற்றது எனும் மூரலாள் - முல்லையரும்பு வாயிற் பொருந்தியது என்று சொல்லுதற்குக் காரணமான பற்களையுடையவள். முல்லைவாய் - திருமுல்லைவாயிலென்னுந்தலம். உற்றது : சாதியொருமை.

153. குறு ஆலம்தான் என்னும் வயிறு உடையாள் - குறிய ஆலிலை என்று சொல்லப்படும் வயிற்றை உடையவள்; குற்றாலம் - திருக்குற்றாலம். மாயூரம் எனும் சாயலாள் - மயிலின் சாயலென்று சொல்லும் மென்மையை யுடையவள்; மாயூரம் - கௌரீமாயூரம், அல்லது திருமயிலாடுதுறை.

154. வஞ்சி இடையாள் - வஞ்சிக்கொடிபோன்ற இடையையுடையவள்; வஞ்சி - திருவஞ்சைக்களம்; பெரிய. சேரமான். 46 - 7 - ஆம் திருவிருத்தங்களைப்பார்க்க. வலஞ்சுழிநல் உந்தியாள் - வலமாகச் சுழித்த நல்ல கொப்பூழையுடையாள்; வலஞ்சுழி - திருவலஞ்சுழி. கஞ்சன் ஊர் அன்னம் கதி நடையாள் - பிரமதேவர் ஊர்ந்து வரும் அன்னப்பறவையின் நடையைப்போன்ற நடையையுடையவள்; அன்ன கதி : தொகுத்தல் விகாரம். கஞ்சனூர் - ஒருதலம். கதி - நடை; கதிக்கின்ற நடையெனலுமாம்.

155. ஆசினியில் - ஆகாயத்திலுள்ள. மேகத்தைவிட்டு மின்னல் நீங்கிப் பூமியின்கண் வந்தாற்போன்ற தோற்றத்தையுடையவள்.

157. தற்பநூ லாயுஞ் சதிரினுள் யாவரொடும்
பற்பல வார்த்தை பகர்ந்திடாள்—பொற்புமிகு

158. பூங்கோதை வேற்கட் புளகமுறு விற்புருவப்
பாங்கிதனைப் பார்த்திரவிற் பாதியிலே—ஒங்குமணிக்

159. கன்றணிகை யாய்நான் கனவின் மனைமுகப்பில்
நின்றனனங் கோர்பெரிய னீள்சடையன்--கொன்றையந்தார்

160. நாகநீ றென்பு நவில்சூலந் தான்றரித்
தேகினன் வீதியிடை யானவனை—மோகமொடு

161. சூலியா வாவென்று சொன்னே னவனுமெனைச்
சூலியா வாயென்று சொல்லினன்—ஏலநான்

162. மாதவா போகலெனக் கூறினேன் மற்றவனும்
மாதவா போகலென வாய்மலர்ந்தான்—மீதுநான்

---

156 - 7. மேய - விரும்பிய. கந்தற்பநூல் - மன்மதனுக்குரிய நூலை; "கணிகையர் முகத்திற் கூறுங் காமனு கமங்கள்" (திருக்குற்றாலப். மந்தமாருதச். 41); கந்தர்ப்பனென்பது எதுகைபற்றிக் கந்தற்பனென வந்தது; "அற்சனை பாட்டே யாகும்" (பெரிய. தடுத்தாட்கொண்ட. 70.) என்பதிற்போல. சதிரினுள் -திறமையையுடையவள். பற்பலவார்த்தை பகர்ந்திடாளென்றது சிலவார்த்தையே பேசும் இயல்புடையாளென்றதை விளக்கியபடி; "சிலமெல் லியவே கிளவி" (குறுந். 70); "சிலசொல்லிற் பலகூந்தல்" புறநா. 166.

158. புளகமுறு பாங்கியெனக் கூட்டுக. இரவிற் பாதியிலே பார்த்து; இரவிற்பாதி - பாதியிரவில். ஓங்குமணி - விலையால் ஓங்கும் மணிகள் இழைத்த; "அளவில், விலைகொ ளொழின்மணி" (190 - 91) என்பர் பின்.

159. கன்று - வளை. மனைமுகப்பில் - வீட்டின்வாயிலில்.

இக்கண்ணிமுதல், பெருவுடையாரைத் தான் கனவிற்கண்டதை பாங்கிக்கு மங்கை கூறுகின்றள்.

159 - 60. கொன்றையந்தாரையும் நாகத்தையும் நீற்றையும் என்பையும் சூலத்தையும் தரித்து வீதியிடத்து ஒருவர் சென்றார். அவனை நோக்கியென ஒரு சொல் வருவிக்க.

161. சூலியா வா என்றேன் - சூலத்தையுடையவரா அங்கேவந்தவர்? வருகவென்றேன். சூலி ஆவாய் - இனிக் கருப்பமுடையவளாக நீ ஆவாய். ஏல - பொருந்த.

162. மாதவா போகல் எனக் கூறினேன் - மாதவனே போகாதே

163. என்பணியாய் நில்லென் றிசைத்தே னவனுமெனை
என்பணியாய் நில்லென் றியம்பினன்—முன்பணிந்தேன்

164. காலை வருதுமெனக் கட்டுரைத்தான் கட்டுரைக்கும்
வேலை தனிலே விழித்திட்டேன்—மேலிதனுக்

165. கென்ன பயனுரைத்தி டென்று ளுயர்தஞ்சைப்
பின்னற் சடையான் பெருவுடையான்—உன்னையென்றும்

166. போற்றுதற்கு வந்ததெனப் பூங்கொடியே யென்கருத்தில்
தோற்றுகின்ற தென்னவவள் சொல்லினள்-கோற்றொடியும்

167. உள்ள மகிழ்ந்தவனை யுன்னியுறங் காதிருந்தாள்
கள்ளமலர்க் கொன்றையினன் காலையிலே—தெள்ளியசீர்த்

168. தேரின் மிசையே திகழுநெடு வீதிவந்தான்
காரிகையுஞ் சென்றுகண்டு கைகுவித்து—நாரினொடு

169. நம்புவே தங்கள்வந் தேத்தவளர் நாதனே
சம்புவே யின்று தனியேற்குன்—அம்புயத்தார்

170. மாலையுத வென்றுண் மதனன்கைப் பூத்தொடுத்து
மாலை யுதவினன் மால்கொண்டு—நீலமணிக்

---

என்று சொன்னேன். போகல் மாது அவா என வாய் மலர்ந்தான் - நான் செல்லுதற்குக் காரணம் ஒரு மாதிடத்து விருப்பமென்று திருவாய் மலர்ந்தான். மீது - அதன்மேல்.

163. என்பு அணியாய் நில் என்று இசைத்தேன் - எலும்பை ஆபரணமாக உடையாய், நிற்கவேண்டுமென்று சொன்னேன். என் பணியாய் நில் என்று இயம்பினன் - என்னுடைய ஏவலுக்கு அடங்கி நிற்பாயாக என்று கூறினன்.

164. வருதும் - வருவேம். கட்டுரைக்கும் வேலைதனில் - உறுதிமொழியைக் கூறும்பொழுது. இதனுக்கு - இக்கனவிற்கு.

165. பயன் - பிரயோசனம்.

166. வந்தது போற்றுதற்கு என - வந்தசெயல் பாதுகாத்தற்காக என்று. அவள் - பாங்கி. கோற்றொடி - மங்கை.

167. அவனை உன்னி - பெருவுடையாரை நினைந்து. உன்னி உறங்காதிருந்தாள்: இது கண்டுயில் மறுத்தலென்னும் மெய்ப்பாடு; (தொல். மெய்ப். சூ. 22.) கள்ள - கள்ளையுடைய; கள்ளமென்பதற்குக் கரவு என்பது மற்றொருபொருள்.

168. காரிகை - மங்கை. நாரினொடு - அன்புடன்.

169 - 70. நம்பு-விருப்பம்; "நம்புமேவு நசையாகும்மே" (தொல்.

174. கண்டனைப்பார்த் தீங்கென்னைக் காவென்று ளாதிவலக்
கண்டனைமுன் னல்லதெனக் காட்டினான்—கண்டனைய

172. சொல்லியெழிற் கைவளைகள் சோரநின்றாள் பொன்மேரு
வில்லிமணித் தேர்நடத்தன் மேவினான்—மல்லற்

173. செவிலி யிதுவறிந்து தென்மறுகில் வந்து
கவன மகணிலையைக் கண்டு—சிவனெதிரே

174. ஈகையினி லோங்கு மியற்பகையின் காந்தையெனும்
தோகையினைக் கொண்டுவந்த தூர்த்தரே—மோகினியாய்ச்

175. சால முனிவருறை தாரு வனத்தணைந்த
மாலின்மேன் மால்கொண்ட மத்தரே—பாலுற்று

உரி. சூ. 31.) அம் புயத்து ஆர் மாலை உதவு - அழகிய தோள்களிற் பொருந்திய மாலையை அருள்வாயாக. கைப்பூத்தொடுத்து - கையிலுள்ள மலரம்புகளை எய்து. மாலை உதவினான் - மயக்கத்தை அளித்தான்.

171. ஆதி - பெருவுடையார். வலக்கண்தனை முன்பு காட்டினான். நல்லது என்பது உடன்பாட்டுக் குறிப்பு; "நலதப் படியே" (சா. தற 00.) இடக்கண் உமாதேவியாருக்கு உரியதாதலின் இங்கே வலக்கண் கூறப்பட்டது.

171 - 2. கண்டு அனைய சொல்லி - கற்கண்டைப்போன்ற சொல்லை யுடைய மங்கை. மேரு வில்லி - மேருவாகிய வில்லையுடையவர். மேவினான் - விரும்பினான், தொடங்கினான். மல்லல் - வளம்.

173. தென்மறுகில் - அழகிய வீதியில். கவனம் - நினைவு, நடை.

174. ஈகையினில் ஓங்கும் இயற்பகையின் - கொடையில் உயர்ந்த இயற்பகை நாயனாருடைய; "இல்லையே யென்னாத வியற்பகை" (தே. சுந்தா.) காந்தை - மனைவி. தூர்த்தர் - காமுகர்; தூர்த்தமென்பது ஊமத்தையாதலால் அதனை யணிந்தவரென்பது மற்றொருபொருள். இயற்பகை நாயனார் சரித்திரத்திற் சிவபெருமானைத் தூர்த்த சேகரரென்பர் பக்தவிலாச முடையார்.

174 - 5. மோகினியாய் அணைந்த மால் - மோகினியின் உருவங் கொண்டு தாருகாவனத்து முனிவர்களின் நிறையை அழிக்க வந்த திருமால். தாருவனம் - தாருகாவனம். மால்கொண்ட - மயக்கங்கொண்ட. மத்தர் - மயக்கத்தையுடையார்; ஊமத்தம் பூவை யணிந்தவரென்பது மற்றொரு பொருள். பால் உற்று - உம்முடைய பக்கத்தை அடைந்து.

176. வாடுகின்ற வின்னாள் வரிவளையில் லாதுமது
நீடுபணிப் பெட்டி நிறைந்திலையோ—கூடுமிந்த

177. யாழ்மொழியின் காஞ்சி யினையன்றி வேறுமக்குக்
கேழ்கிளரு மேகலை கிட்டாதோ—சூழ்வந்து

178. வேலை நிகர்கண்ணார் மெய்யெழிலாண் கொள்வதலால்
வேலை யுமக்கிங்கு வேறிலையோ—மேலிதுநன்

179. றின்னதற்கோ தஞ்சை யினில்வந்தீ ரென்றுமகள்
தன்னுடனே யில்லந் தனிற்சென்றாள்—மன்னத்

மடந்தை.

180. தடந்தெருவு தன்னிடையே சாருமொரு மாது
மடந்தைப் பருவமுற்ற மஞ்ஞை—திடங்கொண்ட

181. ஆடவர்கள் தம்மனத்தை யாடுகின்ற பம்பரம்போல்
நாடிச் சுழலவைக்கு நற்குழலாள்—பீடுபெறு

182. சந்திரற்குத் தன்னேர் சிறிதுந் தராதவனை
அந்தரத்திற் போகச்செய் யானனத்தாள்—சந்ததமும்

---

176. பணிப்பெட்டி - ஆபரணப்பெட்டி ; இவள் கைவளை நழுவு கின்றதனைக் கூறியபடி.

177. காஞ்சி - மேகலை வகைகளுள் ஒன்று ; எட்டுக் கோவையை யுடையது ; " எண்கோவை காஞ்சி " பிங்கல. 16, ந. மேற்.

178. வேலை நிகர் கண்ணார் - வேற்படையை ஒத்த கண்ணை யுடையவர் ; வேலை - கடலுமாம். வேலை -தொழில் ; " அடித்தொழும்பு செய்தொழுகும், இவ்வேலை யீந்தா ரெமக்கு " (காசிக்கலம். 91) ; " வேலையுல கிற்பிறக்கும் வேலையொழிந் தோமில்லை " திருவாங்கக். 54.

179. இன்னதற்கோ - மகளிரை வருத்துதற்கோ.

179 - 80. மன் அ தடந்தெரு - நிலைபெற்ற அந்தப் பெரிய தெரு. மஞ்ஞை - மயில்.

181. பீடு - பெருமை.

இது முதல் மடந்தையின் கேசாதிபாத வருணனை கூறப்படும்.

182. தன் ஏர் - தனது அழகை ; தன் நேர் - தன்னை ஒத்த வென லும் ஆம். அந்தரம் - ஆகாயம் ; பிறர் துணையில்லாத நிலைமையென்பது மற்றொரு பொருள் ; " காரை யந்தரத் தலைத்திடு கருங்குழல் " (திரு விடை. சோமதீர்த்த. 2) ; " ஏத்திமையோர், நண்புறு மாதர்க ளந்தரத் தோர்மண்ணி னண்ணிலரே " (கோடீச். 190); " அதன்மமெவர்க்காகு

183. கூற்றுவனை யாருங் குலவுந் தருமனெனச்
சாற்றிடச் செய்யுந் தடங்கண்ணாள்—ஆற்றலொடும்

184. நீண்டகொடுஞ் சாப நிலவி யிடுநெடுநாண்
பூண்டிடத் தோற்றும் புருவத்தாள்—வேண்டும்

185. இனத்தினுட னும்ப லெழிற்போது தோற்று
வனத்திருக்க மன்னியசெவ் வாயாள்—கனத்தபுகழ்

186. உண்ட கமலமுகை யோங்கலருற் றேகவெழில்
கொண்டு வளருங் குவிமுலையாள்—கண்டு

187. தனக்குவமை யென்றுரைக்குந் தண்காந்தட் பூவைக்
கனத்தகிரி வைத்தவெழிற் கையாள்—சினத்தினெழு

---

மது நின்னிடத்துளதாற் சசியே, தெய்வ, மந்தரத்தில் விட்டதன்னை யிந்த வாறலைந்திடென்று" (சா. தூ. 19.) ஆனனம் - முகம்.

183. தருமன் - கூற்றுவனுக்குரிய ஒரு பெயர்; தருமத்தை யுடையவனென்பது மற்றொரு பொருள். கூற்றுவனைவிடக் கண்கொடிய தென்பது கருத்து; இங்கே கூறியவாறே, "தருமனெனக் கூற்றையெ வருஞ்சொல்லக் கூர்த்த நயனத்தாள்" (சா. தூ. 11) எனவும், "இய மனைத் தரும னெனவுயிர் வாட்டி......இலகு மடக்கொடி கூர்விழி" (திருவிடை. வரகுண. 73) எனவும் கூறுவர்.

184. சாபம் - வில். நாண் - நாணி; இலச்சையென்பது மற்றொரு பொருள்; "அந்த மதனவல்லி வண்டைநாண் கொண்டிடச் செயோதியாள்" (சா. தூ. 11); "கெண்டையங் கணிநுள் கூந்தலுக் குவமை இளைத்துதற் கியாதுள ததுநீள்,...குலவி வண்டினத்தை நாணு றுத்தி" திருவிடை. வரகுண. 71.

185. எழில் ஆம்பல் போது - அழகிய செவ்வல்லிப்பூ. வனம் - நீர்; காடென்பது மற்றொருபொருள்; தோற்றவர்கள் காட்டிற்குச் சென்று மறைந்து தங்குதல் இயல்பு; "மருவுற் றிடுங்குமிழை வனத்தி லொதுக்கிவைத்த மூக்கினுள்" (சா. தூ. 11); "கடுக்கையினை......... வனத்தகற்றி" (திருவிடை. வரகுண. 71); "கமலமென் மலரை வனம் புகுத் தியவேற் கண்ணிணை" (நைடதம், அன்னத்தைத்தூதுவிட்ட. 13) என்பவற்றின் கருத்தும் இதை யொத்திருத்தல் காண்க.

186. கமலமுகை - தாமரையரும்பு. அலருற்று - மலர்ந்து; பழி மொழியை யடைந்தென்பது மற்றொரு பொருள்.

187. தனக்கென்றது கையை. உரைக்கும் - பார்த்தவர்களாற் சொல்லப்படுகின்ற. கிரி - மலை. காந்தள் உண்டாதற்கு இடம் மலை. தோல்வியடைந்தோர்கள் மலையிற் சென்று மறைந்திருத்தல் மரபு; "கந்த

188. பாரரவு காலருந்திப் பன்னிடுவன் மீகத்தில்
ஆரவொளி வுற்றிடவோங் கல்குலாள்—ஏரமரும்

189. தாற்றினள வுங்கதலி யோங்கித் தலைகுனிந்து
தோற்றிட மன்னுந் துடையினாள்—போற்று

190. வளனு மிருதுவு மன்னிவளர் தேமாந்
தளிர்நிறத்தை மாற்றுகின்ற தாளாள்—அளவில்

191. விலைகொ ளெழின்மணியின் வில்லார் தவிசின்
தலையி னமர்வேலை தன்னின்—மலையுறைவாள்

192. அங்கொருத்தி கைக்குறிபார்த் தோது மனநடையாள்
இங்கிவண்முன் னம்பணியா வேத்திநின்று—பங்கயத்து

193. மின்னே யமுதமே மெல்லியலே பெண்ணரசே
பொன்னே வளர்குயிலே பூங்கொடியே—நின்னிடது

---

மலர்க் காந்தளினை முந்துமலை யேறவைத்த கையினாள்'' (சா. குற. 11) என்பர். சினத்தின் எழு - கோபத்தால் எழுகின்ற.

188. பார் அரவு - பூமியிலுள்ள பாம்பு ; பருமையுள்ள பாம்பென்னலுமாம். கால் அருந்தி - காற்றையுண்டு; பாம்பு காற்றை அருந்துதல் இயல்பு ; வாதாசனமென்னும் பெயரும் இதனைப் புலப்படுத்தும் ; பட்டினி கிடந்தென்பது குறிப்புப்பொருள். வன்மீகத்தில் - புற்றில். ஒளிவுற்றிட - ஒளித்தலுற, மறைய.

189. தாற்றின் அளவும் - குலையினும் வரையில். கதலி - வாழைமரம். தலை குனிந்து தோற்றிட - தலை வளைந்து தோன்ற; தோற்றிட - தோல்வியடைய. தோல்வியுற்றவர்கள் நாணத்தால் தலைகுனிந்து நிற்பார்கள்.

190. வளனும் - அழகும். மிருதுவும் - மென்மையும். அளவில் - அளவில்லாத.

191. வில் ஆர் மணியின் தவிசின் தலையில் - ஒளி பொருந்திய மாணிக்கத்தாற் செய்யப்பெற்ற பீடத்தின்மேல். வேலைதன்னில் - காலத்தில்.

191 - 2. மலை உறைவாள் ஒருத்தி - மலையின்கண் இருப்பவளாகிய ஒரு குறத்தி. கைக்குறி பார்த்து ஓதும் - கையிலுள்ள ரேகைகளைப் பார்த்துக் குறிசொல்லும். அன நடையாள் - அன்னத்தின் நடைபோலும் நடையை யுடையவள். இவள் முன்னம் பணியா - இவளுடைய முன்பு வந்து பணிந்து.

192 - 3. பங்கயத்து மின்னே - தாமரை மலரிலுள்ள திருமகளே.

194. செங்கையினைக் காட்டுகென்றாள் காட்டினாள் சீர்பெறுதன்
அங்கையிற் கோலை யதினீட்டித்—தங்குமிந்த

195. மீன விடப விரேகையினால் வெற்றிபெறும்
மான வரசர் மணமுரியாய்—ஈனமிலாச்

196. சூல வரையொன்று தோன்றுதலாற் பொற்குவைகள்
ஞாலமிசை வேண்டினர்க்கு நல்குவாய்—கோலச்செவ்

197. வண்ணமறு வொன்று வலமுலைக்கண் மேவியதாற்
பெண்ணாலு மோராணும் பெற்றெடுப்பாய்—நண்ணும்

198. வலமுதுகின் மார்பில் வலஞ்சுழிதான் மேலாம்
நலமே யுனக்களிக்கு நாளும்— பலனிற்றைக்

199. கெத்தமத வேட னியற்கணையி னால்விரகத்
தத்தொன்று வந்துன்னைச் சார்ந்திடுங்காண்-அத்தினுக்கும்

---

இதுமுதற் குறிசொல்லும் குறத்தியின் கூற்று

193 - 4. இடது செங்கையினைக் காட்டுகென்றாள்; இடது - இடப் பக்கத்தில் உள்ளதான. ஆடவருக்கு வலப்பக்கமும் மகளிருக்கு இடப் பக்கமும் நிமித்தம் முதலியவற்றை அறிதற்கு உரியன வென்பர். காட்டினாள் - மடந்தை காட்டினாள். அங்கையிற்கோல்: குறிசொல்லுங் குறத்தியின் கையிற் கோல் இருத்தல் மரபு; "புலிப்பற் றாலியும் புனைந்துமாத் திரைக்கோல், வலக்கையிலேந்தி" (சா. குற. 30: 13 - 4.) அதில் - அக்கையில். கோலை நீட்டியென இயைக்க.

195. மீன இடப இரேகையினால்-உன் கையிலுள்ள மீன ரேகையினாலும் இடப ரேகையினாலும். மான அரசர் மணம் உரியாய்-பெருமை பொருந்திய அரசருடைய மணத்திற்கு உரியை ஆவாய்; மன்னர் ஒருவரை மணப்பாயென்பது கருத்து.

196. சூலவரை-சூலரேகை. பொற்குவைகள்-பொன் குவியல்களை.

197. வண்ணம் - நிறத்தையுடைய. பெண் நாலும் - நான்கு பெண்களையும்.

198. வலமுதுகின் மார்பில் - முதுகின் வலப்பக்கத்திலும் மார்பின் வலப்பக்கத்திலுமுள்ள. வலஞ்சுழி தாம் - வலமாகச் சுழித்திருக்கும் சுழிகளானவை. பலன் இற்றைக்கு - இற்றைக்கு உரிய பலன் யாதெனின்.

199. எத்தன் மதவேள் - எத்தனாகிய மதவேள்; எத்த - எத்துதலையுடைய வென்றுமாம்; எத்துதல் - ஏமாற்றுதல்; "எத்துந் தமதுரை தேறினன் றேனே" (தஞ்சை. 26.) விரகத் தத்து - விரகத்தால் உண்டா

200. பெற்றமூர் தஞ்சைப் பெருவுடையார் நின்பங்கில்
உற்றிருந்து காப்பரென வோதினள்—சிற்றிடையும்

201. இன்னவெலா மெண்ணி யிதயந் தனில்வைத்துப்
பொன்னுந் துகிலும் புகழ்ந்தளித்தாள்—அந்நிலையிற்

202. கீத வொலியுங் கிளர்தூ ரியத்தொலியும்
வேதவொலி யுங்காதின் மேவுதலு—மாதரார்

203. தம்மொடெழுந் தங்கேக வேகினெமைத் தாமிழப்பாய்
அம்மவென்ப போல்வளைக ளார்ப்பரிக்க—வெம்மதன்றன்

204. அப்புக் கிரையாவா யாவணத்திற் போயினெனச்
செப்புவன போலச் சிலம்பேங்கத்—தப்பாது

205. நாண மகலுமங்தோ நாரியிவட் கின்றெனல்போற்
பூணணிக ளோதிப் புடையிரங்கக்—காணிளைஞர்

206. சிந்தை துவள விடைதுவளத் தென்மறுகில்
வந்தவனைக் கண்டுவந்து வந்தித்து—முந்தென்னைக்

---

டாகும் ஆபத்து; "மகத்தினந் தத்து வருந்தின மாக்கினன் மாமனுக்கே" (மயிலைத் திரிபந். 10.) அத்தினுக்கும் - அந்த ஆபத்திற்கும்.

200. பெற்றம் ஊர் - இடபவாகனத்தை ஊர்கின்ற. நின்பங்கில் - உன்னுடைய சார்பாக. காப்பர் - அந்த ஆபத்திலிருந்து நீக்கி உன்னைப் பாதுகாப்பார். சிற்றிடை - மடந்தை ; எழுவாய்.

201. அளித்தாள் : அளித்தது குறத்திக்கு.

202. கீதம் - இசைப்பாட்டு. தூரியம் - வாத்தியம்.

203. ஏக - போகாநிற்க. ஆர்ப்பரிக்க - மிகமுழங்க ; "அருவியின் கணமார்ப்பரித் திழிகுவது" (திருவிடை. நாடு. 8) ; "போற்றுநன் மகமு மறைகளார்ப் பரிப்பும்" மச்சபுராணம், திரிபுரநிர்மாண வருணனை. 14.

204. அப்புக்கு - பாணங்களுக்கு. ஆவணம் - வீதி ; "வனமுலைத் தடங்க ளசைந்திடி னொடியு மருங்குன்மெல் லெனநடந் திடுமென், றின மணிச் சிலம்பு காலில்வீழ்ந் திசைப்ப" (திருவிடை. நகரச். 22) என்பதில் இக்கண்ணியின் கருத்து அமைந்துள்ளது.

205. இன்று இவட்கு நாணம் அகலும் ; நாரி - வில் நாணென்பது வேறு பொருள். நாண், நாரியென்பவை ஒரு நயம். பூண் அணிகள் - பூண்ட ஆபரணங்கள். ஓதிப்புடை - கூந்தலினிடத்தே.

206. தென் மறுகில் - அழகிய வீதியில். வந்து அவனைக்கண்டு உவந்து ; வந்தவனை யெனலுமாம்.

207. காமலரார் செஞ்சடையா காமதக ளுவென்றுண்
மாமதனன் சிறிவில்லை வாங்கியே—தேமொழிதன்

208. நெஞ்சிடத்தில் வன்முலையி னீள்விழியிற் சென்னிதனில்
வெஞ்சரங்கள் பாய மிகவிடுத்தான்—அஞ்சினாள்

209. இம்மதன னம்புக் கிரையாக வோவென்னை
அம்மை வளர்த்திட்டா ளங்கென்றாள்—செம்மையுறு

210. மானமொடு கைவளையும் வல்லறிவும் போக்கினாள்
மீனவிழிப் பாங்கியர்கண் மெய்ந்நடுங்கி—மானும்

211. இணையிலெனுங் கன்னிதனை யிற்கொண்டு சென்றங்
கணையிற் கிடத்தி யதன்மேன்—மணமருவும்

212. ஆரம் பனிநீ ரளவித் தடவினார்
வாரமொடு மாந்தளிரை மார்பணைத்தார்—ஈரவுயிர்

213. தந்தளிக்கு மாலவட்டந் தான்விசிறி னாரிவையோங்
கிந்தனத்தி னெய்சொரிந்த தேய்ந்ததாற்—பைந்தொடியும்

214 விற்றஞ்சை நாதவென்பாள் வேளெறியும் பூங்கணைகள்
மற்றஞ் சையுமிங்கு மாற்றென்பாள்—பற்றிப்

---

207. கா - காத்தருள்வீராக. காமதகனுவென்றது காமனால் வரும் துன்பத்தைப்போக்கவேண்டுமென்னுங் குறிப்பையுடையது; "காமாந் தகர்காசிக் கண்ணுதலார்க் கோதீர்" (காசிக்கலம்பகம், 10); இது கருத்துடையடை கொளியணி.

208. நெஞ்சிடத்தில் தாமரைமலரையும் நகிலில் மாம்பூவையும் விழியில் அசோகமலரையும் தலையில் முல்லைமலரையும் எய்தான்; குவளை கொலைப்பாணமாதலின் இங்கே கூறப்படவில்லை; "நெஞ்சி லரவிந்த நீள்சூதங் கொங்கையிலே, துஞ்சும் விழியில சோகமாம் - வஞ்சி யர்தஞ், சென்னியிலே முல்லை திகழ்நீல மல்குலிலே, அன்னவே ளெய்யுமியல் பாம்" இரத்தினச்சுருக்கம், 37.

210. மானம் - நாணம். மானும்: உம்மை உயர்வு சிறப்பு.

211. இணை - ஒப்பு. இல் கொண்டு; இல் - வீடு. அணை - படுக்கை.

212. ஆரம் - சந்தனக்குழம்பை. அளவி - கலந்து. வாரமொடு - அன்பினொடு. ஈர உயிர் - குளிர்ந்த காற்றை; உயிர் - காற்று.

213. இந்தனத்தில் - (தீப்பற்றிய) விறகில்.

214. வில் - ஒளியையுடைய. மற்று - அசை. கணைகள் அஞ்சை யும் - பாணங்கள் ஐந்தையும். பற்றி - விரும்பி.

215. பரமாவென் பாளென்னைப் பாங்கிளுெடு காத்தல்
பரமா வெனவே பகர்வாள்—கருதியெழுந்

216. தோங்குமழு வாளாவென் ருேதிடுவா ளென்செய்வாள்
ஏங்குமழு வாளா வெனக்கரைவாள்—ஆங்கதன்பின்

217. கங்கா தரவென்று கட்டுரைப்பா ளுன்னையன்றி
இங்கா தரவெனக்கா ரென்றிசைப்பாள்—எங்கள்

218. உருத்திரா வென்பாளின் ருெல்காதோ வென்னை
வருத்திரா வென்றதனை வைவாள்—கருத்தனே

219. என்று புலம்புற் றெழுவாள் படுத்திடுவாள்
ஒன்றுமுரை யாணெட் டுயிர்ப்பெறிவாள்—அன்றிருந்த

220. யானெங்கே யென்கை வளையெங்கே யென்மனது
தானெங்கே யென்றுபின்னுஞ் சாற்றுவாள்—கானினுடன்

221. ஏடமருங் கொன்றையந்தார்த் தஞ்சை யெழிற்பெருமான்
நீடருளான் மால்சிறிது நீங்கினுள்—மாடங்கள்

அரிவை.

222. சொன்னமலை யென்னத் துலங்குமன்ன வீதிதனின்
மன்னு மொருத்தி வளரரிவை—பன்னுகின்ற

---

215. பரமா - பரமனே. காத்தல் பரமா - பாதுகாத்தல் உமக்குப் பாரமா; “ஆர்க்குப் பரமா மறுமுகவா” திருமுருகு. இறுதி வெண்பா.

216. ஓங்கும் மழுவாளா: மழுவாளா - மழுப்படையை உடையவரே; மழுவாகிய வாளையுடையீரென்றுமாம். ஏங்கும் - இரங்குவாள்; அழுவாள்; ஆ எனக்கரைவாள்.

217. கங்காதர என்று கட்டுரைப்பாள் - கங்கையைத் தாங்கியவரே என்று சொல்லுவாள்; தன்னை ஆதரிக்கவேண்டுமென்பதைக்குறிப்பித்தபடி. இங்கு ஆதரவு எனக்கு ஆர்.

218. உருத்திரா - உருத்திரரே. வருத்து இரா ஒல்காதோ என்று அதனை வைவாள்; ஒல்குதல் - சுருங்குதல்; அதனை - அந்த இராவை.

220. கானினுடன் - நறுமணத்தோடு.

221. ஏடு - பூவிதழ். தஞ்சை எழிற்பெருமான் - தஞ்சைவிடங்கர்.

222. சொன்ன மலை - மேருமலை. அன்ன வீதிதனில் - அப்படிப்பட்ட வீதியில்; மன்னவீதியெனப் பிரித்து இராசவீதி யெனலுமாம்; “ஏற்றிடுமக் கோமறுகில்” (124) என்ருர் முன்னும்.

223. விஞ்சு முகிலினமும் மெய்ஞ்ஞான மில்லார்த
நெஞ்சு மெனவிருண்ட நீள்குழலாண்—மஞ்சிதழித்

224. தார்சுமக்கும் பொற்புயத்தான் தஞ்சைப் பெருவுடையான்
வார்சடைமே லிந்துவெனும் வாணுதலாள்—போர்முகத்திற்

225. சுத்தவீ ரத்தரங்கைத் துன்னுவடி வேலதனைச்
சத்தியிலை யென்னுந் தடங்கணாள்—சித்தசவேள்

226. பண்ணுடு சொல்லிரதிப் பாவை யெழில்பார்க்கும்
கண்ணாடி யன்ன கபோலத்தாள்—விண்ணுடர்

227. வெள்ள மகிழ்ந்துண்ண வேலை யினிலுதித்த
தெள்ளமுத மொத்திருக்குந் தீஞ்சொலாள்—உள்ளொளிய

228. தேமல் படர்ந்து திரண்டெழுந்து வெண்டாளத்
தாம மணிந்துவிம்மித் தானெருங்கி—ஏமமொடு

---

223. மெய்ஞ்ஞானம் - சிவஞானம். மஞ்சு இதழி - அழகையுடைய கொன்றை; கார்காலத்திற்குரிய கொன்றையுமாம்.

224. சடைமேல் இந்து - பிறை. சடைமேலுள்ள பிறை நெற்றிக்கு உவமை; இது புகழ் பொருளுவமையணியின் பாற்படும்; "இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும், பிறையேர் திருநுதலும் பெற்றது" தண்டி. சூ. 30, மேற்.

225. வீரத்தருடைய கையிலுள்ள வேற்படையை; சத்தி இலை- வன்மை இல்லாதது; என்பது குறிப்பு. வேலிற்குச் சத்தியென்னும் பெயரும் இலைவடிவமும் உண்டு; சிலேடை; "வெற்றி வேலைநீ டிதுசத்தி யிலையென வேலை, சுற்று மாநிலஞ் சொலவுறு துணைமத விழியாள்" (திருவிடை. தேவவிரதச். 24.) சித்தச வேள் - சித்தத்தில் தோன்றுகின்ற வணங்கிய மன்மதன்.

226. பண் நாடு சொல் இரதி பாவை - மன்மதன் மனைவி. கபோலம் - கன்னம்.

226 - 7. விண்ணுடர் வெள்ளம் மகிழ்ந்து உண்ணும்படி வேலையிலுதித்த; வெள்ளம் - மிகுதி; "ஆளமர் வெள்ளம்" (பு. வெ. 32.) வெள்ளம் உண்ணக் கடலிலுதித்த வென்பது ஒருநயம். தீஞ்சொல் - இனிய சொல். உள் ஒளிய - யாவரும் நினைத்தற்குரிய ஒளியை உடைய.

228. தாளம் தாமம் - முத்துமாலை. தாம் நெருங்கி. ஏமமொடு- இன்பத்தோடு.

229. கைக்கடங் காதுகண்ட காமுகரைக் காமசரம்
தைக்கும் படிசெய் தனத்தினாள்—இக்குமேல்

230. தாழ்விலா நல்லறிஞர் தம்மை யவமதித்தோர்
வாழ்வதெனத் தேய்ந்த மருங்குலாள்—சூழ்வயிரம்

231. மன்னியபொற் பீடத்தில் வந்திருந்து கல்யாணி
என்னுங் கிளியிணைக்கை யேந்தியெங்கள்—இன்னமுதே

232. நென்னற் பரிமீது நீடரச மாவீதி
தன்னி லெழிற்பவனி தான்வந்தாங்—கென்னிடத்தின்

233. மாமால் கொடுத்தகன்ற வள்ள லுயர்தஞ்சைக்
காமாரி தன்பாற் கடுகப்போய்—நீமானித்

234. தென்னவச நன்கோதி யீங்கழைத்து வந்திடுக
அன்னதற்கன் னாிசையா ராயினரேல்—என்னைப்

---

229. காமசரம் - மன்மதபாணம். இகு மேல் - இந்தப் பூமியின் மேல்.

230. அறிஞர்-புலவர்; புலவரை அவமதித்தோரது வாழ்வு இவளது இடை தேய்தலுக்கு உவமை; "நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி ... ......................நும்போ லறிவி னுமரு ளொருவன் புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை, யிகழ்ந்ததன் பயனே" (புறநா. 202 : 8-13); "மாற்ற ருந்தட மணிமுடி யிழந்தவா ளரக்கன், ஏற்ற மெவ்வுல கத்தினு முயர்ந்துளா னெனினும், ஆற்ற னன்னெடுங் கவிஞரோ ரங்கத முரைப்பப், போற்ற ரும்புக ழிழந்தபே ரொருவனும் போன்றான்" (கம்ப. முதற்போர். 249); "வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோற் றீத்தழன்மீ, மண்டு கொடுஞ்சுரம்" நள. கலிதொடர். 133.

231. 'இன்னமுதே' என்பதுமுதல் தான்வளர்த்த கல்யாணி யென்னும் கிளியைப் பார்த்து அரிவை கூறும் கூற்று; தாம் வளர்த்த கிளிக்கு மகளிர் ஒரு பெயர்வைப்பது இயல்பு. பேரிளம்பெண் தான் வளர்த்த கிளிக்குச் சிவபக்தவாணி யென்னும் பெயரிட்டு வளர்த்து வந்தாளென்பர் திருவாரூருலாவுடையார். கிளியைத் தூதாக அனுப்புதல் சொக்கநாதருலா, 318-ஆங் கண்ணியாலும் உணரலாகும்.

232. நென்னல் - நேற்று. அரசமாவீதிதன்னில் - இராசவீதியில்; கண்ணி, 124, 222.

233. காமாரி - மன்மதனை வென்றவர். வள்ளலாகிய தஞ்சைக் காமாரி யிடத்தே. மானித்து - என்னிடத்தே அபிமானம் உற்று.

234. என் அவசம் - யான் செயலற்றிருத்தலை. நன்கு ஓதி.

235. பொருந்து மயலகன்று போவதற்கு நல்ல
மருந்தொன்று வாங்கி வருக—திருந்திதனை

236. மேவடியார் போற்றிசெயும் வேலையினிற் கூறாதே
தேவி செவிகேட்கச் செப்பாதே—பூவனைய

237. சத்திகையிற் கிள்ளையொடுஞ் சாற்றாதே யென்றுரைத்தாள்
தத்தையவ டாள்வணங்கித் தையலே—இத்தனைநீ

238. ஈங்குரைப்ப தென்னே யிசைத்துவந்தே னோர்கணத்தில்
ஏங்கலெனத் தேற்றிவிரைந் தேகுங்கால்—ஆங்கதன்முன்

239. பொற்றடந்தேர் மீது புராரிநெடு வீதிதனில்
உற்றதனைக் கண்டுமனத் தோகையுடன்—சிற்றிடைபால்

240. மீண்டுமுன் வந்தான் மணித்தேர் மிசையளகை
ஆண்டவனென் றோதியவ ளத்தத்திற்—காண்டகவே

241. மன்னியதா லங்கதனை வாழ்த்தியங்கு நின்றெழுந்து
தென்னிலங்கு துங்கத் தெருவினிடைத்—துன்னு

242. கடுமா மிடற்றளகைக் கண்ணுதலான் முன்னர்
நெடுமா லுடன்வந்து நின்றாள்—அடிபணிந்து

243. தென்னளகை வாழுஞ் சிவபரனே யாவருக்கும்
மன்னவனே யென்னை மறந்தனையோ—உன்னையான்

---

235. மயல் - மயக்கம். இதனை - யான் கூறிய இச்செய்தியை.

236. வேலையினில் - காலத்தில். தேவி - உமாதேவியாருடைய.

236 - 7. பூ அனைய கை - தாமரைப்பூவை ஒத்த கை. சத்தி - உமாதேவியார். உமாதேவியார் கைக்குப் பூ உவமை. தத்தை - கிளி. தையலே - இளமையை உடையாய்.

238. வந்தேன் : விரைவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாயிற்று. ஓர்கணத்தில் - ஒரு க்ஷணத்தில். ஏங்கல் - ஏங்காதே. தேற்றி - தலைமகளைத் தெளியச்செய்து.

239 - 40. புராரி - திரிபுரங்களின் பகைவர்; பெருவுடையார் : எழுவாய். மனத்து ஓகையுடன். சிற்றிடைபால் - அரிவையினிடத்தே. அளகை - தஞ்சை. ஆண்டவன் வந்தான். அத்தத்தில் - கையில்.

241. மன்னியது - கிளி தங்கியது ; ஆல் : அசை. தென் இலங்கு - அழகு விளங்குகின்ற ; தென் - தென்னையுமாம்.

242. நெடுமால் - மிக்க மயக்கம்.

243. இக்கண்ணி முதலியவை அரிவை கூற்று.

244\. மாதேவா வென்றென்றும் வாழ்த்துகின்றே னீமகிழ்ந்து
மாதேவா வென்றொருகால் வாய்திறவாய்—மீதே

245\. உரத்தனந்தா வென்ன வுரைக்கின்றே னீதான்
உரத்தனந்தா வென்றெனைப்பார்த் தோதாய்-கருத்துறினீ

246\. மீனவன்பூ வாளிதனை வின்னாணிற் சேர்த்தலுமத்
தேனினமே யங்கதனைத் தின்னாதோ—மானத்தோ

247\. டன்று மதிதன்னைத் தேய்த்த வணிமலர்த்தாள்
இன்றதனைத் தேய்க்க விசையாதோ—துன்றுமகத்

248\. தோங்கு புரந்தரனை மொண்குயிலைப் போலிந்த
மாங்குயிலைத் தோணெரிக்க வாயாதோ—பாங்குபெறு

249\. சீரிலகு கும்பமுனிக் கோர்வார்த்தை செப்பிலவன்
வாரிதனைத் தன்வயிற்றில் வையானோ—வேரிமலர்

250\. துன்று சடைப்பணிக்கோர் சொல்லுரைக்கி னென்றேகித்
தென்றலெல்லாந் தன்னுணவு செய்யாதோ—என்றுருகிப்

---

244\. மாதேவா என்று - மகாதேவாவென்று; மாதே வருவாயாக என்பது மற்றொரு பொருள்.

245\. உரத்து அனந்தா - மார்பின்கண் ஆதிசேடனை ஆபரணமாக உடையாய். உரம் தனம் தா என்று-மார்பில் உள்ள தனத்தை எனக்குக் கொடு வென்று. நீ கருத்துறின் - நீ திருவுளம் பற்றினால்.

246\. மீனவன் - மீனக் கொடியையுடையவன்; மன்மதன்; எழுவாய். பூவாளிதனை - மலரம்பை. வில் நாணில் - வில்லிலுள்ள நாணில். சேர்த்தலும் - வைத்தவுடனே. அத்தேன் இனமே - அந்நாணாக அமைந்துள்ள வண்டின் கூட்டமே. அங்கு அதனைத் தின்னாதோ - அங்கே அந்த மலரை உண்டு விடாதோ. மானத்தோடு - பெருமையோடு.

247\. அன்று - தக்கனுடைய யாகசங்கார காலத்தில். அதனை - அந்த மதியை. மகத்து - தக்கனது யாகத்தில்.

248\. புரந்தரன். - இந்திரன். இந்திரனைத் தோணெரித்தாரென்பதும் அவன் குயில்வடிவமாகி மறைந்தானென்பதும் புராணவரலாறு; தக்க. 488.

249\. கும்பமுனிக்கு - அகத்திய முனிவர்க்கு. ஓர் வார்த்தை செப்பில் - ஒரு சொல்லைக் கட்டளையிட்டால். வாரிதனை - கடலை. அகத்திய முனிவர் கடலைக் குடித்தவராதலின் இங்ஙனம் கூறினள். வேரி - தேன்.

250\. சடைப்பணிக்கு - தேவரீருடைய சடையிலுள்ள பாம்பிற்கு.

251. பண்ணீர்மென் சொல்லி மறுகுற்றுள் பல்சடைமேல்
தெண்ணீரான் பொற்றேர் செலுத்தினன்—எண்ணிதயத்

தெரிவை.

252. தேவரிடைச் சென்ற தெருவினிடை வாழுமொரு
பாவை தெரிவைப் பருவத்தாள்—ஆவல்

253. மதன்யானை போலு மலர்க்குழலா ளெய்யும்
முதல்வாளி யன்ன முகத்தாள்—புதுமலர்க்கை

254. உற்ற கரும்புருவ மொத்தபுரு வத்தினள்
வெற்றிமுர சன்ன விழியினள்—முற்றுபணை

255. மாமருவு காகளத்தை மானும் பணிமொழியாள்
மாமகுடம் போலும் வனமுலையாள்—காமருறு

256. வீணையினைத் தான்வாங்கி மென்சுருதி கூட்டியதிற்
பாணுறுதா னங்கடொறும் பன்னுவிரல்—மாணுறவே

---

பாம்பு காற்றை யுண்ணும் இயல்பையுடையது; "பாரரவு காலருந்திப் பன்னிடுவன் மீகத்தில், ஆர" (188) என்றார் முன்னும்.

251. பண்ணீர் மென்சொல்லி - பண்ணினது தன்மையையும் மென்மையையும் உடைய சொல்லையுடையவள்; அரிவை; பண் ஈர் மென் சொல்லியெனப் பிரித்துப் பொருள்கொள்ளலுமாம்; ஈர், ஈரமென்பதன் விகாரம். மறுகுற்றுள் - மறுகினள். தெண்ணீர் - கங்கை. எண் இதயம் - தியானிக்கும் நெஞ்சு.

252. பாவை - பிரதிமை போல்வாள். ஆவல் - விருப்பம்.

இது முதல் தெரிவையின் வருணனை.

253. மதன்யானை - இருள். முதல்வாளி - தாமரைப்பூ.

254. கரும்பு உருவம் ஒத்த - கரும்புவில்லின் வடிவத்தை ஒத்த. மதன் வெற்றி முரசு - கடல். பணை - கிளைகளையுடைய.

255. மா - மாமரம். காகளம் - காளம்; அவனுடைய காளம் குயில். மகுடம் - அவனுடைய கிரீடத்தை; "கனங்குழை மடந்தை யெழில்கனிந் தொழுகுங் கதிரிளந் தடமுலை வரிவில், அநங்கவேண் மணம்வைத்திடு மணிச் செப்பு மவன்புனை மகுடமு நிகர்க்கும்" திருவிடை. வரகுண. 77.

253 - 5. மன்மதனுக்குரிய பொருள்களையே தலைவியின் உறுப்புக்களுக்கு இக்கண்ணிகளில் உவமை கூறியது மரபுவமையின்பாற் படுமென்பர்.

256. வாங்கி - கைக்கொண்டு. தானம் - ஸ்வர ஸ்தானம்.

257. சென்றாச லாடச் செழித்திடந்த நாதமுமோர்
ஒன்றுகண்ட நாதமுஞ்சேர்ந் தொன்றாகக்—கொன்றையந்தார்

258. சூடு முயராளகைச் சோதி புகழதனைப்
பாடும் பதத்திலொரு பான்மொழியாள்—நீடுமின்னே

தசாங்கம்.

259. வானவர்சூழ் வெள்ளி மலையான்றன் பாற்படிந்தோர்
மானவினை மாற்றுபொன்னி மாநதியான்—மாநிலத்தில்

260. ஈட்டுபுகழ்த் தேச மெவற்றினுக்கு மேலதென
நாட்டுகின்ற சோழவள நாட்டினன்—சூட்டிய

261. தென்வளருந் தார்வளவர் தேசமெனும் பொற்பாவை
தன்வதன மாயவுயர் தஞ்சையான்—முன்வந்து

262. கண்டமட மாதர்தங் கண்க ளெனப்புகலும்
வண்டினங்கள் சூழ்கடுக்கை மாலையான்—புண்டரிகன்

---

257. ஊசல் ஆட - போய் வந்து அசைய; "ஊசலாடுபைங்கமுகு" (சீவக. 68.) செழித்திடு அந்த நாதம்; நாதம் - இசை. கண்ட நாதம் - தெரிவையின் குரல்; பாட்டும் குரலும் ஒன்றாதல்: "பருந்து நிழலும் போற் பாட்டு மெழாலும், திருந்துதார்ச் சீவகற்சே சேர்ந்தன" சீவக. 730.

258. அளகைச் சோதி - பெருவுடையார். பதத்தில் - சமயத்தில். ஒரு பான்மொழியாளென்றது தோழியொருத்தியை. 'நீடுமின்னே' என்பதுமுதல் அத்தோழியின் கூற்று.

இது முதற் பெருவுடையாருக்குரிய தசாங்கம் கூறப்படும்.

259. மானவினை - பெரிய தீவினைகளை. பொன்னி மா நதி - காவிரியாறு; ஸ்வர்ணநதியென்பது இதன் வடமொழிப்பெயர்; "மலைத் தலைய கடற்காவிரி, புனல்பரந்து பொன்கொழிக்கும்" (பட்டினப் பாலை, 6 - 7.) வெள்ளி பொன்னென்பது இதில் ஒருநயம்.

260. ஈட்டுபுகழ்......நாட்டினன்: "நாடெனப் படுவது நினதே யத்தை" (புறநா. 35); "மண்ணு வதுஞ்சோழ மண்டலமே" தனிப்.

261. தென் - அழகு. வளவர் தேசமெனும் பொற்பாவை - சோழ நாடாகிய மங்கை.

262. கடுக்கை மாலை - கொன்றைமாலை. புண்டரிகன் - பிரமன்; புண்டரிகம் - தாமரை.

263. கண்டமதிற் றோன்றுங் கடும்பரியா னீடுமதம்
கொண்டவீ ராயிரங் கோட்டிபத்தான்—மண்டுசுடர்

264. பற்றுதிகி ரிக்கைப் பதாகையான் சொன்மேன்மை
முற்றிய நாத முரசினான்—உற்றதன்முன்

265. தேக்கு முலகங்க ளெல்லாமுத் தேவரைக்கொண்
டாக்கிப் புரந்தழிக்கு மாணையான்—ஊக்கமிகு

266. விண்ணவரு மண்ணவருஞ் சூழ்ந்துவர வீதியிடை
நண்ணினான் றேரிலென நன்கிசைத்தாள்—ஒண்ணுதலாள்

267. அங்கையுறு வீணையினை யவ்விடத்தே வைத்தெழுந்து
தங்குமணி வீதியிடைத் தான்வந்து—சங்கரன்றன்

268. மேற்றுங்க வான்மதிய மேவுமகு டத்தொளியும்
போற்றுங் கருணை பொழிமுகமும்—சாற்றுகின்ற

269. விண்டலமும் பாரும் விலையன் றிதற்கென்னும்
குண்டலத்தின் மேவிய கோலமும்—கண்டத்தின்

270. ஆலமே கஞ்சொரிந்த வாலிகள்போல் வெண்டரள
மாலை யணிந்திருக்கு மார்பெழிலும்—சாலவும்

---

263. கண்டம் - கழுத்து; பிரமன் கழுத்தில் தோன்றிய பரியென்றது வேதக்குதிரையை. ஈராயிரங்கோட்டு இபம்-இரண்டாயிரம் கொம்புகளையுடைய அயிராவண மென்னும் யானை ; இபம் - யானை ; கோயினான் மணிமாலை, 4 - ஆஞ்செய்யுளைப்பார்க்க. சுடர் - ஒளி.

264. திகிரிக்கைப்பதாகை-சக்கரத்தைத் திருக்கரத்திலேயுடைய திருமாலாகிய விடைக்கொடி. நாதமுரசு: "நாதப்பறையினர்" திருவாசகம், அன்னைப்பத்து, 1.

265. "தன்வலியாணை தாங்கி, மூவண்ணறன் சந்நிதி முத்தொழில் செய்ய வாளா, மேவண்ணல்" திருவிளை. பாயிரம், 1.

(258.) பான்மொழியாள் (266) இசைத்தாளென்க.

267. மணி வீதி - அழகிய வீதி.

268. மேல் துங்கம் வால் மதியம்.

268 - 72. இக்கண்ணிகளிற் பெருவுடையாரது கேசாதிபாதம் கூறப்படும்.

269. இதற்கு விலை அன்று என்னும். கண்டத்தின்-கழுத்திலுள்ள.

270. ஆலம் மேகம் - விடமாகிய மேகம். ஆலி - ஆலங்கட்டிகள். ஆலிகள் முத்துக்களுக்கு உவமை. தரளமாலை - முத்துமாலை. முத்துப் பிறக்கும் இடங்களுள் மேகமும் ஒன்று.

271. கூருற்ற வெங்கோட்டு மானுங் கொலைமழுவும்
சீருற்ற பொன்னுடை சேரிடையும்—பேருற்ற

272. பண்கொண்ட வேதப் பரிபுரமும் பொற்பினொடு
தண்கொண்ட பாத சரோருகமும்—கண்களிப்பக்

273. கண்டு பணிந்தெழுந்து கையஞ் சலிசிரமேற்
கொண்டு புகழ்த்தஞ்சைக் கோமானே—பண்டுதே

274. டச்சுதன் வேத னறியாச் சிவக்கொழுந்தே
சச்சிதா னந்தத் தனிமுதலே—நச்சு

275. வதியுங் களத்தமுதே வான்கடலே யெங்கள்
நிதியமே யென்றங்கு நின்று—துதிசெயுங்காற்

276. பாவி யநங்கன் பகருங் கணைதொடுத்தான்
காவியங்கட் காரிகைதான் கண்ணுதலே—மேவுறவே

277. என்னகத்தி லென்று மெழுந்தருளி வைகுமின்றேற்
கன்னலான் போரொழியக் கட்டுரையும்—அன்னதின்றேல்

278. துன்னுவேட் கென்னுருவந் தோன்று தொருவிஞ்சை
இன்றிங் கெமக்குதவி யேகுமப்பால்—அன்றேல்

---

271. வெங்கோட்டுமான் - வெவ்விய கொம்புகளையுடையமான்; திருக்கரத்திலுள்ள கலைமான்.

272. பரிபுரம் - சிலம்பு. பாத சரோருகம் - திருவடித்தாமரை; சரோருகம் - தாமரை.

273. சிரமேற் கையை அஞ்சலி செய்துகொண்டு. 'புகழ்த்தஞ்சைக் கோமானே' என்பதுமுதல் தெரிவை கூற்று.

274. சத் சித் ஆநந்தம் - உண்மை அறிவு இன்பம். நச்சு - நஞ்சு; விடம்.

276. அநங்கன் - மன்மதன். காவி - கருங்குவளைப்பூ.

277. என் அகத்தில் - என் மனத்தில்; என்வீட்டிலென்பதும் ஒரு பொருள். வைகும் - தங்குவீராக. கன்னலான் - கரும்புவில்லையுடைய மன்மதன். ஒழிய - நீங்கும்படி. கட்டுரையும் - பொருள் பொதிந்த மொழிகளை உறுதியாகக் கட்டளையிடுவீராக; "கட்டுரைத்துக் காணென்றான்" நளவெண்பா.

278. வேட்கு - மன்மதனுக்கு. என் உருவம் தோன்றாது - என் வடிவம் புலப்படாதபடி. விஞ்சை - மந்திரத்தை; கோமச். 171 - ஆம்

279. உமைவிடே னென்று ளுமையாளை நோக்கி
இமையோர் பணிந்தேத்து மெம்மான்—அமைவில்

280. சிறுமுறுவல் செய்துகொடு சென்றானின் றுளம்
மறுகிடையே நின்று மருண்டாள்—பிறளொருத்தி

பேரிளம்பெண்.

281. திட்பமுறு முத்தமிழுஞ் செவ்வி பெறவுளத்திற்
பெட்பிறெடு கற்றறிந்த பேரிளம்பெண்—கட்புலக்கு

282. மாந்தளிர்வண் ணத்தை மறைக்கு மெனச்செம்பஞ்
சேந்த வணியா வெழிற்றாளாள்—ஆய்ந்தநூல்

283. சொற்கவிஞர் நல்லுவமை தோன்றும விப்படியிற்
கற்கடக மென்னுமுழுங் காலிறுள்—பொற்கிரிவாழ்

284. மல்லற் பிடியின் வளர்துதிக்கை யென்றெவரும்
சொல்லற் குரிய துடையிறுள்—நல்லறிஞர்

285. உன்னுகின்ற நெஞ்சைத் திறைகொள்ள வுந்திமேல்
மன்னு முரோமமணி வல்லியாள்—இந்நாளும்

286. நானிழைத்த குற்றம் பொறுத்திடென நன்கிடைக்குத்
தானிறைஞ்சத் தாழுந் தனத்திறுள்—மாநிலத்தில்

---

செய்யுளைப்பார்க்க. அப்பால் ஏகும். உருவந் தோன்றாதபடி இந்திரன் நளனுக்கு ஒருவிஞ்சை உபதேசித்தானென்பது அறியற்பாலது; “இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே யிளவேனில், மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தால் - அன்னோர், தமக்கெம்மைத் தோன்றாத் தகையதோர் விஞ்சை, எமக்கின் றருள்புரிந்தே யேகு” நளன். சு. 43, மேற்.

279 - 80. எம்மான் உமையாளை நோக்கி முறுவல் செய்தென்க.

281. திட்பம் - திண்மை. மூன்று தமிழையும். பெட்பிறெடு - விருப்பத்தோடு. கட்புலக்கு - காண்போருடைய கண் அறிவிற்கு; இதில் அத்துச்சாரியை குறைந்து நின்றது.

பேரிளம்பெண் செயற்கைஅழகை விடுத்தவளாதலின் அதற்கேற்ப அவளுடைய வருணனை இனிக் கூறப்படும்.

282. மறைக்கும் என - செம்பஞ்சுக்குழம்பு மறைக்கும் என்றெண்ணி; காலிற் செம்பஞ்சுக் குழம்பு இடவில்லை யென்றபடி.

283. கற்கடகம் - நண்டு. பொற்கிரி - மேருமலை.

284. மல்லல் - வளம்.

287. அஞ்சனந் தீட்டாத கண்ணு ளணிமலரின்
மஞ்சரிகள் சூட்டாத மைக்குழலாண்—மஞ்சுருவம்

288. தேய்த்தபெரு நோய்தீர்த்துச் செம்பியனைக் காத்தபுகழ்
வாய்த்தசிவ கங்கை மகிழ்ந்தாடிக்—கூர்த்தகரை

289. மீதி லிருக்கின்ற விச்சுவநா தற்பணிந்து
கோதிலா தோங்குபூங் கோயிலுற்றுச்—சோதிமிகத்

290. தேங்குநூற் றெட்டுச் சிவனைப் பணிந்துநதி
தாங்கு பெருவுடையார் தாள்போற்றிப்—பாங்கினருள்

291. நாடு தனிப்பெரிய நாயகிபொற் றாளிறைஞ்சி
நீடிவரு கின்ற நியதியாள்—கூடவுறை

292. மாதர்கீ தம்பதங்கள் வண்ணங்கள் பாடுதல்கேட்
டோதுகதே வாரத்தி லொன்றென்றாள்—போதணியும்

293. கோதையினா ரன்னதைநீ யாமுணரக் கூறுகெனப்
பாத மலரிற் பணிந்திரந்தார்—மாதிவளும்

---

287. அஞ்சனம் - மை. மஞ்சரிகள் - பூங்கொத்துக்களை. மஞ்சு உருவம் - அழகிய உருவத்தை.

288. செம்பியன் - கரிகாலச்சோழன்..

287 - 8. கரிகாலனுக்கிருந்த குட்டநோய் சிவகங்கையில் நீராடிய பின் நீங்கியதென்பது வரலாறு; இது பிருகதீசுவர மாகாத்மியத்திற் கண்டது.

289. விச்சுவநாதற் பணிந்து-விசுவநாதரை வணங்கி. பூங்கோயில்- பெருவுடையார் கோயிலை; "பூங்கோயி லெய்தினன்" (312) என்பர் பின்.

291. பெரியநாயகி : அம்பிகையின் திருநாமம். நியதி - நியமம்.

292. வண்ணங்கள் - வர்ணங்கள். கீதம் முதலியன இசையிலுள்ள உருப்படிகள். தேவாரத்தில் ஒன்று ஓதுகவென்று பேரிளம்பெண் கூறினாள்.

293. கோதையினார் - கீதம் முதலியவற்றைப்பாடிய மாதர். அன்னதை - தேவாரத்தை. யாம் உணர நீ கூறுக என்று பேரிளம்பெண்ணை நோக்கிச் சொல்ல; இதனாற் பேரிளம்பெண்ணின் மேம்பாடு புலப்படுகின்றது. இவள் - பேரிளம்பெண்.

294. மென்பரவை யிற்கல் மிதந்துவரக் கண்டதுவும்
என்பிணைப்பெண் ணாக வியற்றியதும்—இன்புதவு

295. சங்கரனை நள்ளிரவிற் றூதுசெலச் சாற்றியதும்
செங்கலைப்பொன் னாக்குந் திறமுளதும்—சங்கமொடு

296. செம்மலுறு வையையினி லேடெதிர்க்கச் செய்ததுவும்
வெம்முதலை யுண்மகவை மீட்டதுவும்—நம்மையாள்

297. மூவர்வாய்ச் சொற்றுதியோ வேறே மொழிந்திடுமின்
பாவையீ ரென்றிசையிற் பாடினள்—மேவியிவள்

298. ஓதுமிசை கேட்க வுவந்துவரல் போலவெங்கள்
நாதனுமப் பொன்மறுகி னண்ணினன்—மாதரினம்

299. உள்ள மகிழ்ந்தங் குடனெழுந்து சூழ்ந்துவந்து
வள்ளலினைக் கண்டு வணங்கியே—தெள்ளறிவின்

300. நேராய் வரம்பெற்று நின்றதஞ்ச காசுரன்றன்
பேரால் விளங்குகின்ற பேரூரா—பாரிற்

301. கருவிசையை நீத்த கருவூரர் போற்றும்
திருவிசைப் பாவுகந்த தேவே—மருவிதழித்

302. தாரானே வேலவனைத் தந்தவனே முப்புரத்தின்
போரானே யானையுரி போர்த்தவனே—சீரானே

---

294 - 7. இக்கண்ணிகளில் இவள்பாடும் தேவார வகைகளும் சைவசமயாசிரியர் மூவருடைய அரிய செயல்களும் கூறப்படும்.

294. பரவை - கடல்.

295. தூதுசெலச் சாற்றியதும் பொன்னாக்கும் திறமுளதும் சுந்தரமூர்த்திநாயனருடைய அருமைச் செயல்கள்.

296. செம்மல் - பழம்பூ ; தலைமையுமாம்.

297. மூவர்வாய் சொல் துதியோ - தேவாரங்களோ. இசையிற் பாடினள் - "சொற்றுணை வேதியன்" முதலிய பதிகங்களை இசையோடு பாடினள்.

298. நாதன் - பெருவுடையார்.

299. வள்ளலினை - பெருவுடையாரை.

301. கருவிசையை - பிறப்பினுடைய வேகத்தை. இதழி - கொன்றை. இராசராசேச்சுரம் கருவூர்த்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பாப் பெற்றது.

302. இக்கண்ணியிற் சொல்முரண் உள்ளது.

303. நீடுருத்தி ராக்கம்வெண் ணீறுன் புகழதனைப்
பாடு மறிவினர்நின் பாதமலர்—நாடுகின்ற

304. அஞ்செழுத்துத் தம்பா லடியேன் மனமுருகத்
தஞ்சமுற நன்குவரந் தந்தருள்வாய்—எஞ்சலிலா

305. தென்று புகழ்ந்தா ளெழிற்றேர் நிலையளவும்
சென்றருள்பெற் றுத்திரும்பித் தேறினாள்—வென்றிச்

306. சிலையிற்கோல் பூட்டியவேள் செப்புமிவண் ஞான
நிலைமைக் கதிசயித்து நின்றான்—சொலவுற்ற

307. இன்னா ரெவருக்கு மிவ்வாறு காட்சிதந்து
தென்னா ரளகைச் சிவபெருமான்—மன்னுற்ற

308. துங்க மணித்தேரி னின்றெழுந்து தூரியங்கள்
எங்குமுன் போல வெதிர்முழங்கப்—பொங்கிவழி

309. வேரிநறு மென்கூந்தல் வின்னுதற்செவ் வாய்க்கருங்கண்
நாரியர்கள் வந்து நடம்புரியச்—சீரிலகு

310. வெண்கவரி யாலவட்டம் வின்மகர தோரணங்கள்
வண்கவிகை சூழமறை வாழ்த்தெடுப்பத்—தண்குலவு

311. பூமழைவா னோர்பொழியப் பொன்மழைமண் ணோர்சொரியத்
தேமணிச்சொற் றேவியுடன் சேயினுடன்—காமரணி

---

303 - 4. நீடு உருத்திராக்கம். நின் பாதமலரை நாடுதற்குக் காரணமாகிய அஞ்செழுத்து. தம்பால் - உருத்திராக்கம் முதலிய மூன்றனிடத்தும். தஞ்சம் - பற்றுக்கோடு. எஞ்சல் - குறைதல்.

305. தேர்நிலை - தேர்முட்டி ; தேர்தங்குமிடம்.

306. கோல் - அம்பை. வேள் - மன்மதன். அதிசயித்து - வியப்புற்று. சொலவுற்ற - மேலே சொல்லுதற்கமைந்த.

307. இன்னார்-பேதை முதலிய எழுவர். தென்னாளகை-தஞ்சை ; தென் - அழகு ; தெற்குமாம்.

308. மணி - ஒலிக்கும் மணி. தூரியங்கள் - வாத்தியங்கள்.

309. வேரி - தேன். நாரியர்கள் - உருத்திர கணிகையர்கள்.

310. வில் - ஒளி.

311. தேம் மணி சொல் - தேன்போன்ற அழகிய சொற்களையுடைய. தேவி - பெரியநாயகி. சேய் - முருகக்கடவுள்.

312. பொற்பலகை யேறிவந்து பூங்கோயி லெய்தினன்
அற்புடனே யாரு மகமகிழ்ந்தார்—பொற்பிசையும்

313. ஈது புகழ்த்தஞ்சை யீசன் பெருவுடையான்
ஓது திருத்தே ருலா.



## ✻ சிறப்புப் பாயிரம்.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

**ப**ண்ணியற்சொற் பாவலருங் காவலரு நாவலரும்
படிகொண் டாட
எண்ணியமற் பொருவிடையார் பெருவுடையார் தஞ்சையுலா
வினிது செய்தான்
நண்ணியமெய்ஞ் ஞானமுயர் சீரண்ட வேரண்ட
நகரில் வாழ்வோன்
புண்ணியநற் றவக்கொழுந்து சிவக்கொழுந்து வள்ள லுயர்
புலமை யோனே.

---

312. பொற்பலகை - படிச்சட்டம். அற்பு - அன்பு. பொற்பு இசையும் - அழகுபொருந்திய.

* இதனை இயற்றியவர் இந்நூலாசிரியருடைய இரண்டாம் புதல்வராகிய ஸ்ரீ சாமிநாத தேசிகர்.

பெருவுடையாருலாவின்

# பாடபேதம்.

[எண்-கண்ணி எண்.]

காப்பு. சொல்வேன்றகும்.

2. தானுடனுங்கூடி
3. ஓதருணப் [யான்
4. அழைத்தாலவர்ப் பாணி
12. வண்டுணரப்பார்மழை பொழிய
13. பேர்வளருமன்னு
15. வசந்தருது, வசந்தாரத்து [நாளில்
18. தெரிசிக்க வின்பத்திரு
29. அணிதயங்கி, அணிதயங்க
40. பாலவிழி
48. பரிகலத்து
70. நதியுலவு கோன்
81. வங்தேர் மருவி
88. சேணுடர்
90. காரியாரின் றெமக்குத் தரவென்பார், தருமென்
94. உண்மையதாய் [பார்
100 - 101. மணிக்கோதை
110. பாலுண்கிலே யெனது
112. அஞ்சலிக்க வஞ்சலித்த
115. தன்னை யிஃதென்னென்
134. உனக்கிவனென [ருள்
135. நாலைந்து மேலொன்றை
147. பொற்கலைக்கும்
154. அன்னக்கதிநடையாள்
156. பாயிற்றுயில்புரிவாள்
159. நின்றனனங்கோர் பெரிய
171. இங்கென்னை [நீள்
175. தாரு வனத்தணைந்து
180. மடந்தைப் பிராயமுற்ற
203. ஏகலேகிலெமை
204. போகிலென
211. இணையிலெனுங்கன்னி
223. மெய்ஞ்ஞானமுமில்லார்
242. கண்ணுதலோன்
280. பிறிதொருத்தி
285. நெஞ்சின் திறைகொள்ள, நெஞ்சந் திறைகொள்ள
292. ஓதுதே வாரத்தில்
299. சூழ்ந்துவர
309. மின்னுதற்

உ

கணபதி துணை.

# சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்.

## நூன்முகம்.

குறவஞ்சி யென்பது, பிற்காலத்தெழுந்த பலவகைப்பட்ட பிரபந்தங்களுள் நாடகவகையைச் சார்ந்தது. பண் திறம் முதலிய பண்டைத் தமிழிசை வகையாலமைந்த இலக்கியங்களும் அவற்றிற்குரிய இலக்கணங்களும் இப்பொழுது அருகிவிட்டன. இப்பிரபந்தத்தின் அமைப்பும் இதன்பாற் காணப்படும் இசைப்பகுதிகளும் வடமொழி முறையைப் பின்பற்றியிருத்தலினால் இம்முறை பிற்காலத்ததெனக் கருத இடந்தருகின்றது. பன்னிரு பாட்டியலில் 'குறத்திபாட்டு' என்னும் ஒரு பிரபந்தத்தின் இலக்கணமாக, "இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும், திறப்பட வுரைப்பது குறத்தி பாட்டே" என்னும் சூத்திரமொன்று காணப்படுகின்றது. அவ்விலக்கணம் குறத்தி குறிகூறுவதாக இயற்றப்படும் ஒருவகை நூலுக்கு உரியதாகத் தோற்றுகின்றது.

குறவஞ்சியுள் வரும் பல செய்திகளுள் குறத்தி குறி கூறுதலும் ஒன்று. 96 - வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகிய கலம்பகத்துள் 'குறம்' என்ற ஒருறுப்பு உண்டு. அதன்கண்ணே குறத்தி குறிகூறுதலொன்றே காணப்படும்.

இக்காலத்து வழங்கும் மீனாட்சியம்மை குறமென்னும் நூலைப்போன்ற சிலவற்றிற் குறத்தி குறிசொல்லுதற்கு முன்னும் பின்னும் சில செய்திகள் காணப்படுகின்றன. எனவே, பன்னிரு பாட்டியல் இயற்றப்பட்ட காலத்துக் குறத்திபாட்டென்ற ஒரு வகைப் பிரபந்தமட்டும் வழங்கிவந்ததென்றும், அதனைப் பின்பற்றி ஒருறுப்புக் கலம்பகத்துள்ளே அமைக்கப்பட்டதென்றும் அவ்விரண்டையும் தழுவி இசைப்பாட்டும்கலந்து குறமென்னும் பிரபந்தம் எழுந்ததென்றும், அவற்றைப் பின்பற்றி நாடகமுறையிற் குறவஞ்சியென்னும் பிரபந்தம் இயற்றப்பட்டதென்றும் தோற்றுகின்றன.

இக்குறவஞ்சி நாடகவகையுட் சேர்ந்ததென்பது, "பல வளஞ்சேர் குறவஞ்சி நாடகத்தை" (திருக்குற்றாலக் குறவஞ்சி) என்பதனால் உணரப்படும்; "பொருட்குற வஞ்சி நாட்யம் புகன்றிட விமயச் செல்வி, கருணைபெற் றுவந்த நாரி கணபதி காப்புத் தானே" (அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி) என்பதனால் 'குறவஞ்சி நாட்டியம்' என்றும் இது வழங்கிவந்ததாகத் தெரிகின்றது. குறத்தியின் இயல்பு, அவள் குறி கூறுதல், அவளைக் குறவன் தேடிவந்து காணல் முதலிய குறத்தியின் திறத்திலமைந்த செய்திகளே பெரும்பாலும் இதன்கண் அமைந்திருத்தலின் இஃது இப்பெயர் பெற்றதுபோலும்; குறவஞ்சி - குறப்பெண்.

பிற்காலத்துத் தமிழ்நாட்டில் ஆடப்பட்ட நாடகங்களிற் கணபதி வருதல், கட்டியக்காரன் வருதல், மோகினியும் மோகனராஜனும் வருதல் முதலியன முதலில் நிகழும். அவற்றை நாடகப்புத்தகங்களிற் காணலாம். அம்முறையைப் பின்பற்றியே இக்குறவஞ்சி நாடகமும் தொடங்கப்படுகின்றது.

காப்பும் மங்களமும் கூறப்பெற்ற பின் கட்டியக்காரன் வருதலும் பாட்டுடைத்தலைவன் பவனிவருதலை அவன் கூறுதலும் குறவஞ்சியின் முதலில் அமைக்கப்படும். தலைவன் பவனிக்குமுன் கணபதி எழுந்தருளுதலும் சிலவற்றிற் கூறப்படும். பின் கட்டியக்காரன் எச்சரிக்கை கூறுதல் சில குறவஞ்சிகளிற் காணப்படுகிறது. தலைவன் பவனிவருகையில் தலைவியொருத்தி அவனைக்கண்டு காமுறுதலும் அவளுடைய வருணனையும் இயல்பும் பின்பு கூறப்படும். தலைவியின் பெயரைக் குறவஞ்சி நூலாசிரியர்கள் பலவிதமாகக் கூறுகின்றனர். அவற்றுட் சில வருமாறு:—மதனவல்லி, வசந்தவல்லி, காமரசவல்லி, தெய்வமோகினி, மோகினி, இராசமோகினி, மதனரதி, மோகனவல்லி, மோகனாங்கி யென்பனவாம்.

தலைவனைக் காமுற்ற தலைவி விரகவேதனையால் மன்மதனையும் சந்திரன், தென்றல், குயில் முதலியவற்றையும் நிந்தித்துப் புலம்பல் பின்பு காணப்படும். பாட்டுடைத்தலைவனை விளித்து இரங்குதல் திருவாரூர்க் குறவஞ்சியிற் காணப்படுகின்றது.

அப்பால், தலைவியின்பாங்கி வருதலும் அவளைத் தலைவி தூதுபோக்கலும் அப்பொழுது குறத்தி வருதலும் அவளுடைய இயல்பும் அவளுடைய வரவைப் பாங்கி தலைவியிடம் கூறலும், தலைவி அக்குறத்தியை அழைப்பித்தலும் அவள் வந்து வாசல்

வளம் கூறுதலும் காணப்படுகின்றன. வாசல்வளம் கூறுதல் சிலவற்றிற் காணப்படவில்லை.

பின்னர்த் தலைவி, குறத்தியை யாரென வினவுதலும், தேசம், மலைவளம், சாதிவளம், நதிவளம் முதலியனவற்றைக் கேட்டலும் அமைக்கப்படும். குறத்தி அவற்றைக் கூறுதல் பின்பு காணலாம். அண்டகோசங்களின் பகுப்பைக் கூறுதல் சில குறவஞ்சிகளில் உள்ளது. குறத்தி தன் சாதியார் வசிக்கும் மலையின் பெருமையைக் கூறுதல் அப்பால் அமைக்கப்படும். பின்பு, "யார் யாரிடத்தே குறிசொல்லி எவ்வெப்பரிசுகளை நீ பெற்றாய்?" என்பது முதலியவற்றைத் தலைவி கேட்டலும், குறத்தி அவற்றைக் கூறுதலும், பாட்டுடைத்தலைவனுக்குக் குறிசொல்லிப் பெற்ற வரிசைகள் இன்னவையென்று சொல்லுதலும் உள்ளன. தலைவனுக்குக் குறிசொன்ன செய்தி சில குறவஞ்சிகளில் இல்லை.

அப்பால், தலைவி தன் கையைப் பார்த்துக் குறி சொல்ல வேண்டுமென்று கேட்டலும் குறத்தி தெய்வபூசைக்குரியவற்றைச் செய்யும்படி சொல்லித் தெய்வங்களை வேண்டிப் பின்பு குறிசொல்லத் தொடங்கித் தலைவி பாட்டுடைத்தலைவன்மேல் விருப்பமுற்றதைக் குறிப்பாகவும் பின்பு வெளிப்படையாகவும் சொல்லி அவனது திருவருள் வாய்க்குமென்றும் அவன் உன்னை மணந்தருள்வானென்றும் கூறுதலும் உள்ளன.

அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையில் தூதுபோன பாங்கி தலைவனிடமிருந்து மாலை வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தாளென்னும் செய்தி சில குறவஞ்சிகளிற் காணப்படுகின்றது.

குறத்தி இங்கே இவ்வாறிருக்க, அவளுடைய கணவனாகிய குறவன் தன்னுடைய கையாளாகிய * குளுவனோடு வேட்டைக்குப் புறப்பட்டு வருதலும் பறவைகளைப்பிடிக்க வலையமைக்கும் முறையை அவன் குளுவனுக்குக் கூறுதலும் பறவைகள் வருதலும் அவை ஓடிவிடுதலும் பின்பு சொல்லப்படும். குளுவன் பெயரை வேறு குறவஞ்சிகளின் ஆசிரியர்கள் வேறு வேறாகவும் வழங்குவர்; புலியன் நூவன் சிங்கன் என்பன அவற்றிற் சில.

இவ்வாறு பறவைவேட்டையாடிக்கொண்டிருந்த குறவனுக்குத் திடீரென்று குறத்தியின் நினைவு வருதலும் அவளுடைய பிரிவாற்றாது அவன் வருந்துதலும், குளுவனை அவளிருக்குமிடம் தேடி

* குளுவன் - மலைவாணருள்ளே ஒருவகைச் சாதியான்.

அறிந்து வருமாறு சொல்லுதலும், அவன் குறத்தியின் அடையாளங்களைக் கேட்கக் குறவன் அவற்றைச் சொல்லுதலும், அவன் பாட்டுடைத் தலைவன் நகரத்தில் அவளைக் காணலாமென்றலும், குறவன் அங்கே சென்று அவளைக்காணலும், கண்டு தன் ஆற்றாமையைப் புலப்படுத்தி அவளைப் பல வினவுதலும், அவள் விடை கூறுதலும், இருவரும் ஒருங்குசேர்ந்து தலைவனை வாழ்த்துதலும் குறவஞ்சியின் இறுதிப்பகுதியாக அமையும். சில குறவஞ்சிகளில் இம்முறை வேறுபட்டுள்ளது. நிற்க ;

இந்தச் சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகமானது, தஞ்சையில் அரசாண்டுகொண்டிருந்த சரபோஜிமன்னர்மீது இயற்றப் பெற்றது. இடையிடையே விருத்தம், அகவல், வெண்பா முதலிய செய்யுட்களையும் வசனத்தையும் விரவுவித்துக் கீர்த்தனரூபமாக இஃது அமைந்துள்ளது. எளிய நடையில் அமைந்தது. இந் நாடகம் தஞ்சைப் பிரகதீசுவரர்கோயிலில் திருவிழாக்காலத்தில் ஆடப்பட்டு வருகின்றதென்பர். * அஷ்டக் கொடி விழாக்காலத்தில் ஆடப்படுவதாதலின் அஷ்டக்கொடிக் குறவஞ்சியெனவும் இது வழங்கும். † சோழர்காலத்தில் ' இராஜராஜ நாடகம் ' என்னும் ஒரு நாடகம் இக்கோயிலில் ஆடப்பட்டுவந்ததாகத் தெரியு வருகின்றது.

இது நாடகத்தமிழ்வகையைச்சேர்ந்ததாதலின் அவ்வச்சாதியார் இடம் முதலியவற்றிற்கு ஏற்பப் பேசும் முறையிற் சில சொற்களும் சொற்றொடர்களும் மரூஉமொழிகளாகவும் இழிசனர் மொழிகளாகவும் காணப்படுகின்றன ; வதைக்குது, உதைக்குது, இருக்குது, பதறுதடி, கட்டலையோ, குத்தலையோ, வருகுது, நாலு கால், நாப்புக்காட்டி, பெருகுது, கேளடையே, தேடலை என்பன அவற்றுட் சில.

குறச்சாதியாரின் வழக்கங்கள் பல இதனால் அறியப்படுகின்றன. குறத்தி குறிகூறும் திறமுடையாளென்றும் அவள் மாத்திரைக்கோலும் குறக்கூடையும் வைத்திருப்பாளென்றும் அவள் கைக்குறிகளையும் மெய்க்குறிகளையும் பார்த்துப் பலன் கூறுவாளென்றும் குறிகூறுவதற்குமுன் பல தெய்வங்களுக்குப் பூசைபோடச்செய்து அத்தெய்வங்களையும் தனது குல தெய்வத்தையும்

* அஷ்டக்கொடி - எட்டுக்கொடி.

† S. I. I. Vol. 2. Part ii, Rajaraja's Life.

வேண்டிக்கொள்வாளென்றும் பலதலங்கள், நதிகள், மலைகள் முதலிய இடங்களிற் சஞ்சரிப்பவளென்றும் அறியப்படும் செய்திகள் அவற்றிற் சில. மலைவளம் முதலியவற்றைப்பாடிக் குறிஞ்சிநிலத்தில் இருந்தவராகப் பழைய தமிழ் நூல்களிற் கூறப்படும் அகவன் மகளிரும், அந்நிலத்துமகளிர் தலைவன்பாற்கொண்ட காமநோயால் வருந்தும்பொழுது தாயர் வெறியாட்டெடுப்பதற்குமுன் கட்டுப் பார்த்துக் கூறும் கட்டுவித்தியரும், வெறியாடும் தேவராட்டியரும் ஆகிய சிலர் கூறப்படுகின்றனர். குறவஞ்சிகளிற் காணப்படும் குறத்தியர் இயல்பும் செயல்களும் அவர்கள் இயல்பு செயல்களோடு பெரும்பாலும் ஒப்புமை உடையனவாகக் காணப்படுதலின் இவரும் அவர்கள் வகையைச் சார்ந்தவராதல் கூடுமென்று தோற்றுகின்றது.

இந்நூலில் வந்துள்ள குறிவகைகளும் நிமித்தங்களும் வருமாறு :-கைரேகை, கால்ரேகை, மறு, தழும்பு, சுழிகள், கவுளி, விரிச்சி, ஆந்தையின்சொல். குறவர்கள் வேட்டையாடுதலும், பறவைகளைத் தந்திரமாக வலைவீசிப் பிடிப்பதும் பிறவுமாகிய வழக்கங்களும் இந்நூலிற் காணப்படுகின்றன.

இதனுள் தலைவியின் கூற்றாக வரும் பாடல்கள் புறத்திணைக் கைக்கிளைவகையைச் சேர்ந்தனவாகக் கொள்ளுதல் பொருந்தும். அவ்வகையாக இதன்பால் அமைந்துள்ள துறைகள் மன்மதோபாலம்பனம், சந்திரோபாலம்பனம், தென்றலைப்பழித்தல், காமமிக்க கழிபடர்கிளவி, தூதுபோக்கல், மெலிவொடு வைகல் முதலியனவாம்.

குறத்தி கூற்றிலும், பிற இடங்களிலும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் இந்நூலிற் கூறப்பட்ட தலங்கள் வருமாறு :—காசி, மல்லிகார்ச்சுனம் (ஸ்ரீசைலம்), அருணை, காஞ்சீபுரம், கோகர்ணம், காளத்தி, திருவதிகை, சிதம்பரம், சீகாழி, திருக்கடவூர், மாயூரம், திருவாவடுதுறை, திருவாரூர், திருவிடைமருதூர், குடந்தை, கொட்டையூர், திருவையாறு,சிரகிரி, திருவரங்கம், திருவானைக்கா, மதுரை, இராமேசுவரம், ஆலங்குடி, திருக்குற்றாலம், நாகை (திருநாகைக்காரோணம்), கூடலூர்.

இத்தலங்களுள், அருணையில் திருமாலும் பிரமதேவரும் அடிமுடி தேடியதும், காஞ்சியில் உமாதேவியார் தவஞ் செய்ததும், கோகர்ணத்திற் சிவலிங்கப் பெருமானை இராவணன் வலிதிற் பறித்

தெடுக்க முயன்றபோது அப்பெருமான் பசுவின் செவிவடிவான மையும், காளத்தியிற் கண்ணப்பர் சிவபெருமான் கண்ணிற் கண் இடந்து அப்பியதும், சிதம்பரத்தில் ஸ்ரீ நடராசப்பெருமான் பதஞ்சலி வியாக்கிரபாதர்களின் பொருட்டு நடனம் செய்ததும், சீகாழி பிரளயகாலத்தில் தோணியாக மிதந்ததும், திருக்கடவூரிற் சிவபெருமான் மார்க்கண்டேயருக்காக யமனைக் காலால் உதைத்ததும், மாயூரத்தில் உமாதேவியார் மயில்வடிவம் கொண்டு பூசித்ததும், திருவாவடுதுறையிற் சிவபெருமான் அரசமரத்தின் கீழ் எழுந்தருளியிருப்பதும், திருவாரூரில் திருமகள் சிவபெருமானைப் பூசித்ததும், இராமேசுவரத்தில் இராமர் சிவபெருமானைப் பூசித்ததும் ஆகிய வரலாறுகள் இந்நூலில் எடுத்தாளப்படுகின்றன.

நதிகள்: கங்கை, காவிரி, தாமிரபர்ணி, வைகை, முத்தாறு, பாலாறு, சொன்னமுகி, கம்பை, சேயாறு, யமுனை, துங்கபத்திரை, நருமதை, சங்கநதி, கபிலநதி, சரஸ்வதி, கிருஷ்ணை.

மலைகள்: மேரு, பொதியில், நேரி, கயிலை, காளத்தி, குற்றாலம், திருவேங்கடம், பழனி, ஆனைமலை, கொல்லிமலை, விராலிமலை, சோலைமலை, சுவாமிமலை, திரிசிராமலை.

தஞ்சைத் தலசம்பந்தமான வரலாறுகள் சில இதில் உள்ளன.

இதிற் கூறப்படும் தெய்வங்கள்: கணபதி, பிரகதீசர், சந்திரமௌளீசர், பெரியநாயகி, கந்தவேள், வாணி, விசுவநாதர், அஷ்டலக்ஷ்மிகள், திருமகள், திருமால், காமாட்சி, வெள்ளைப் பிள்ளையார், ஆநந்தவல்லி, தஞ்சேசர், இரட்டைப்பிள்ளையார், சப்தகன்னியர், வள்ளிநாயகி, ஏக்கலாதேவி.

பாட்டுடைத்தலைவராகிய சரபோஜி அரசருடைய புகழ், வீரம், கொடை, தெய்வபக்தி, அரசியற்சிறப்பு முதலியன இடையிடையே பாராட்டப்பட்டுள்ளன. அம் மன்னவருடைய தசாங்கங்கள் 40 - ஆம் பாட்டிற் காணப்படுகின்றன.

குறத்தி பலசாதிப் பெண்களுக்குக் குறி சொல்லுகையில் அவர்கள் குறி கூறுமாறு தத்தம் மொழிகளிற் சொல்லுதல் இதிற் காணப்படுகின்றது. அப்பாட்டில், தெலுங்கு, மகாராஷ்டிரம், கன்னடம், ஹிந்துஸ்தானி, ஆங்கிலமாகிய பாஷைச் சொற்றொடர்களை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார். சலாம் என்னும் ஹிந்துஸ்தானிமொழி சில இடங்களில் வந்துள்ளது.

இந்நூலாசிரியர் தம் கூற்ருகவும் பிறர் கூற்ருகவும் பல உவமைகளை அமைத்துப் பொருளைப் புலப்படுத்திச் செல்கின்ருர். ஒரு பறவை வலையிற் சிக்கிக்கொண்டு விழிப்பதற்கு, இலக்கணந்தெரியாதோர்கள் கவிசொல்லி, அறிஞர்கள் அக்கவியிலுள்ள குற்றத்தைக் கேட்கையில் விழிப்பதை உவமை கூறியுள்ளார். இஃது ஆசிரியர் அனுபவத்திற் பார்த்து அமைத்திருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது. கயவர்களை அறிவுடையவர்கள் பகையும் நண்புமின்றி அயலாக வைத்து ஆளுதலும், பாவஞ்செய்பவன் பிறரைத் தன்னைப்போலாக்குதலும் ஆகிய செய்திகளை உவமையாக ஆள்கின்ருர். புலனை அடக்கும் ஞானிகள் ஒருமித்த கருத்தினராதலும், உயிர் சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளில் முறையே சில தத்துவங்களோடு செல்லுதலும், ஆங்காரத்தை அடக்கிப் புலனைவென்று சித்தத்தைப் பரத்தில் நிறுத்தி யோகஞ்செய்வார் அசைவற்றிருத்தலுமாகிய யோகஞானச் செய்திகளை உவமைகளாகவும், ஆருதாரங்களின் அமைப்பை உருவகமாகவும் அமைத்துள்ளார். குறவன் கூற்றிற் காணப்படும் உவமைகளில், பறவை காலிலும் கழுத்திலும் வலையை மாட்டிக்கொள்ளுதற்குத் திருடர்களுக்குக் காலிலும் கையிலும் தொழுக்கட்டையை மாட்டிவிடுதலும், முத்துக்கு இருப்பைப்பூவும், வைடூரியச்சுட்டிக்குப் பூனைக்கண்ணும், ஆடைக்குப் பாம்புரியும் அக்குறவன் அறிதற்கு உரியனவாக உள்ளன.

சிலேடை, ஏது, தற்குறிப்பேற்றம், அவநுதி முதலிய பொருளணிகளும் மடக்கும் சந்தமும் இந்நூலுள் அங்கங்கே அமைந்துள்ளன. மதனவல்லி சந்திரனைப் பழிக்கும் கூற்றிற் பத்தொன்பது வருடங்களின் பெயர்களும், குறவனுக்கும் குறத்திக்கும் இடையே நடைபெறும் வினவிடையில் தலங்களின் பெயர்களும், தமிழ்க்காரிகை யென்பதிற் காரிகையென்னும் இலக்கண நூற்பெயரும் தொனிக்கின்றன.

இவற்றையன்றி இந்நூலிற் காணப்படும் பழமொழிகளும் பழைய நூற் கருத்துக்களும் இசைவகைக்குரிய இலக்கண அமைதிகளும் பிறவும் அறிந்து இன்புறற்குரியன.

---

# தஞ்சைச் சரபோஜிமன்னர் சரித்திரம்.

இக்குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவரான சத்ரபதி ராஜஸ்ரீ சரபோஜி, தஞ்சைமா நகரத்தை ஆண்ட மகாராஷ்டிர மன்னர்களில் ஒருவர். இவர் தஞ்சையை அரசாண்டகாலம் கி. பி. 1798 முதல் கி. பி. 1832 வரையிலாகும்.

இவருடையகுலம் * போசலகுலம் (சர. குற. 2) என்று கூறப்படுகின்றது. அப்பெயர் இன்ன காரணத்தால் அமைந்ததென்று தெரியவில்லை. மகாராஷ்டிர நாட்டை ஆண்டுவந்த கொற்றவேந்தராகிய சிவாஜி (*Shivaji the Great*) மன்னருடைய சகோதரரும் வெங்காஜி என்று வழங்கப்பட்டவருமாகிய ஏகோஜி யென்பவர் தஞ்சையில் † கி. பி. 1674 - இல் மகாராஷ்டிர அரசை நிறுவினர். அக்காலமுதல் தஞ்சையரசை மகாராஷ்டிரமன்னர்கள் ஆளத் தொடங்கினர். ஏகோஜிக்குப்பின் ஆண்ட மன்னர்களுள் துளஜாஜி யென்பவருக்குப் பிள்ளையின்மையின் அவர் சரபோஜியை ஸ்வீகாரம் செய்துகொண்டனர். அப்பொழுது அவரால் இடப்பட்ட பெயரே சரபோஜி யென்பது. மகாராஷ்டிரமன்னர்களுள் இவருக்குமுன் மூன்று அரசர்கள் இப்பெயரை யுடையவர்களாக இருந்தமையின் இவர் சரித்திர ஆராய்ச்சியாளர்களால் ‡ நான்காம் சரபோஜி யென்று குறிக்கப்படுவார்.

இவர் துளஜாஜியின் புதல்வரென்று இந்நூலுள்ளும் கூறப்படுவர் (சர. குற. 9.) திருவாதிரை நட்சத்திரத்தில் உதித்தவரென்று இந்நூல் கூறும்; சர. குற. 47.

துளஜாஜி சரபோஜியை ஸ்வீகாரம் செய்துகொண்டபிறகு, இவரைத் தஞ்சை ரெஸிடெண்டாக இருந்த ஒருவரிடம் ஒப்பித்தார். அப்பெழுது அவரிடம் இவர் ஒப்பிக்கப்பட்டதை விரும்

---

* இது போஸ்லே (Bhosle) எனவும் வழங்குமென்று தெரிகின்றது; See '*History of the Mahratta people*' by Kincaid and Parasnis, Vol. II, p. 4; போன்ஸ்லே என்றும் வழங்கும்.

† The Gazetteer of the Tanjore District, Vol. I.

‡ Annual Report of South Indian Epigraphy, 1924.

பாத சிலர் துளஜாஜியின் காமக்கிழத்தியினுடைய புதல்வராகிய அமரஸிம்ஹ ரென்பவரை மன்னராக்க முயன்றனர். கி. பி. 1786-இல் துளஜாஜி இறந்துபோகும் சமயத்தில் அவர்கள்செய்த சில தந்திரங்களினால் அமரஸிம்ஹர் 1787 - இல் அரசரானார்.

அக்காலத்தில் தஞ்சையிலிருந்த ஸ்குவார்ட்ஸ் (The Rev. Schwartz) என்னும் பாதிரியார் சரபோஜியே அரசுக்குரியவரென்பதை யறிந்து அவ்வுரிமைக்குரிய நியாயங்களைக் கிழக்கிந்தியா கம்பெனியின் நிருவாக சபையாருக்கு (Court of Directors) எடுத்துரைத்தனர். அவற்றின் உண்மையையறிந்த அச்சபையார் 1798 - இல் சரபோஜியையே அரசராக்கினர். சரபோஜி அரசியலைக் கைக்கொண்டபின்னர் தம் ஆட்சி உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கே கொடுத்துவிட நினைத்தார். அவ்வாறே அரசை 1799 - இல் ஒப்பித்தார். தஞ்சைக்கோட்டையின் உரிமையொன்றுமே இவர்பால் இருந்தது. கம்பெனியாரிடமிருந்து * உதவிநிதி பெற்றுவந்தார்.

தாம் அரசியலைப்பெறாமல் இருந்த இடைக்காலத்துச் சரபோஜி, சென்னை நகரத்தில் பாதிரிமார்களின் ஆதரவில் இருந்தார். அக்காலத்து அவர்களுடைய உதவியினால் ஆங்கில மொழிப் பயிற்சி பெற்றார். அரசாளும் பாரத்தைக் கம்பெனியாரிடம் கொடுத்துவிட்ட சரபோஜி கல்வி விநோத வகையிலேயே தம் காலத்தைப் போக்கிவந்தாரென்று தெரிகிறது. சங்கீதம் வைத்தியம் முதலிய பல கலைகளில் இவர் நல்லறிவுடையவர்; "பல கலைக ளுணர்ந்ததஞ்சைச் சரபோஜி" சர. குற. 45.

பெரிய புத்தகசாலையொன்றை அமைத்து அதில் தமிழ், தெலுங்கு, வடமொழி, மகாராஷ்டிரம் முதலிய பல மொழிகளிற் பல அச்சுப் புத்தகங்களையும் ஏட்டுச்சுவடிகளையும் தொகுத்து வைத்தார். அது ஸரஸ்வதி மகாலென வழங்கும். † அப்புத்தகசாலையில் 22,000 நூல்கள் இருந்தனவென்று கூறுவர். பல அருமையான ஓவியப்படங்களைத் தொகுத்துத் தம் அரண்மனையை அலங்கரித்தார். ஒரு சிறிய அச்சுயந்திரசாலையை வைத்திருந்தார்;

---

* ஒருலக்ஷம் பொன்னும் நிலவரியில் ஐந்திலொரு பங்கும் பெற்றதாகக்கூறுவர்; '*The Maratha Rajas of Tanjore*' By Mr. K. R. Subramanian, M. A., p. 72.

† Ibid, Page 73.

அதில் தேவநாகர எழுத்தச்சுக்களும் இருந்தன. ஒரு சிறிய காட்சிச்சாலை (Museum)யை அமைத்து அதிற் பலவகை நாணய முதலியவற்றைத் தொகுத்துவைத்தனர். இவர் குதிரையின் இலக்கணங்களை அறிந்தவர். பல உயர்ந்த சாதிக் குதிரைகளை வைத்துப் பாதுகாத்து வந்தார்; "பரிக்காம னகுல னெங்கள் சரபேந்திர பூபதி" என ஒரு புலவர் கூறுதல் காண்க. பல வித்து வான்களை வருவித்து வைத்து அவர்கள் கல்விப்புலமையை அறிந்து இன்புற்று வந்தார். இவர் காலத்தில் பல தமிழ் வட மொழி வித்வான்களும் சங்கீத வித்வான்களும் வைத்திய சிரேஷ் டர்களும் தஞ்சை அரண்மனையிற் கவலையின்றி இருந்துவந்தனர். ஆரோக்கியசாலை ஒன்றை நிறுவி அதிற் பல வைத்தியர்களை அமைத்து யாவருக்கும் வைத்தியம் செய்யுமாறு செய்தார்.

"மதமுகவ நம்பியறு முகவன் கந்தன்
மலர்ப்பாதந் தனைப்போற்றி வைய கத்தோர்க்
கிதமுறவென் றாரோக்ய சாலை யொன்றை
யேற்படுத்தி முன்முனிவர் சித்தர் யோகர்
பதமுறவே சொல்லிய நூல் தம்மை யெல்லாம்
பார்த்துணர்ந்து நாடோறும் சரப பூபன்
முதல்வனிச்ச யித்தபடி செரோரோ கந்தான்
மொழியவயன் றேவிகலை வாணி காப்பாம்"

(* சரபேந்திரர்வைத்தியம்.)

இவர் வைத்தியர்களையும் தமிழ்ப் புலவர்களையும் கொண்டு அனுபவ வைத்தியமுறைகளைச் செய்யுள் நடையிற் பாடச்செய்து தொகுப்பித்து வைத்தார். அவ்வாறு தொகுக்கப்பெற்ற நூல்கள் பல 'சரபேந்திரர்வைத்தியம்' என்னும் பெயரோடு உள்ளன. இவ் வாரோக்கிய சாலையில் ஐயாக்கண்ணுபிள்ளை என்னும் வைத்தியர் தலைவராக இருந்தாரென்று தெரிகின்றது. வைத்திய நூல்கள் இயற்றினவர்கள் இக்குறவஞ்சி நூலாசிரியராகிய சிவக்கொழுந்து தேசிகர், திருவேங்கடத்தாபிள்ளை, காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், வேங்கடாசலம் பிள்ளை, சுப்பராயக் கவிராயர் முதலியோர்.

---

* Ms No. 57 of The Tanjore Saraswathi Mahal Library.

இவருக்கு முத்தாம்பாள் என்ற ஒரு காமக்கிழத்தி இருந்தாள். அவள் இரண்டு பிள்ளைகளை வைத்துவிட்டு இறந்தனள். * அவள்பால் மிக்க அன்புடைய இம்மன்னர் அவள் பெயரால் சத்திரம் முதலிய தருமங்களைச் செய்தார். அச்சத்திரம் முத்தாம்பாள் சத்திரம் (ஒரத்தநாடு) எனப்படும். ஸ்குவார்ட்ஸ் பாதிரியார் இறந்தபின்பு அவர்பாலுள்ள அன்பினால் தஞ்சைக் கோட்டைக்குள்ளேயுள்ள சிவகங்கைக் குளத்துக்கருகில் அவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் கட்டினார். ஆங்கிலேயர்பால் தமக்குள்ள நன்றி யறிவிற்கு அறிகுறியாக,சேதுபாவாசத்திரம் சாலுவ நாயக்கன் பட்டணம் என்னும் இரண்டிடங்களில் இரண்டு கோபுரங்கள் கட்டினார். அவை ஒவ்வொன்றிலும் நெப்போலியன் 1815 - இல் தோல்வியுறப் பிரிட்டிஷார் வெற்றியுற்றதைக் கொண்டாடும் பொருட்டுச் சரபோஜி மகாராஜரால் கட்டப்பட்டன வென்று எழுதப்பட்டுளது.

---

* சரபோஜிமன்னர் மருந்துகளுக்குப் பயன்பட ஒரு கஞ்சாத்தோட்டம் வைத்திருந்தாரென்றும், ஒருநாள் அத் தோட்டத்தில் இவர் உலாவி வருகையில் ஒரு சிமிழ் அங்கே கிடப்ப அதனை எடுத்துப்பார்த்தனரென்றும், அதனுள் ஒருவகை மை இருப்பதைக்கண்டு எடுத்துக் கண்ணில் இட்டுக்கொண்டபொழுது ஓரிடத்திலிருந்த புதையலொன்று இவர் கண்ணுக்குப் புலப்பட்டதென்றும், ஒருநாள் ஒரத்தநாட்டுப் பக்கத்திலிருந்த காட்டிற்கு வேட்டையாடச் சென்றபொழுது அக்காட்டில் அந்த மையைக் கண்ணிலிட்டுப் பார்த்தாரென்றும், அப்பொழுது ஓரிடத்தில் மிக்க புதையல் இருப்பதையறிந்து கொள்ளுதற்கு முயல அதனைக் காத்திருந்த பூதமொன்று துன்புறுத்திற்றென்றும், பின்பு அப்பூதத்தை வழிபட்டுக் கேட்க அது கர்ப்பமுடைய பெண்ணொருத்தியை அவளுடைய உடம்பாடு பெற்றுப் பலியிட்டாற் புதையலை உமக்கு அளிப்பேனென்று ஆவேசமுகமாகவந்து சொல்லிற்றென்றும், அரசர் அரண்மனை மீண்டபின்னர் அப்புதையலை எடுத்தலைப்பற்றிய கவலையோடிருப்ப அதனை அறிந்த முத்தாம்பாள்என்னும் தாசி கர்ப்பவதியாகிய தன்னை அவ்வாறு பலியிடலாமெனவும் அப்புதையலாற் பெற்ற தொகையைக் கொண்டு முப்பத்திரண்டு அறங்களையுஞ் செய்விக்கவேண்டுமெனவும் தான் அதுகாறும் அனுபவித்த உலக இன்பங்கள் போதுமெனவும் தன் உயிர்போயினும் ஏழைகள் இன்பம்பெறுதல் தன்கருத்தெனவும் கூறினாளென்றும், அரசர் அவ்வாறே அவளைப் பலியிட்டுப் புதையலைப்பெற்று அவள்பெயரால் அறங்களை நடத்தினாரென்றும் கூறப்படும் வரலாறொன்று கர்ணபரம்பரைச் செய்தியாக வழங்குகிறது.

முத்தாம்பாள் புரத்தில் சத்திரத்தோடு இரண்டு யாகசாலைகள் கட்டினார். வேறு பல இடங்களில் அறச்சாலைகள் கட்டுவித்தார்.

இம்மன்னர் சிவபக்தி மிக்கவர். இவர்களுடைய குலதெய்வம் சந்திர மௌலீசுவரர் (சர. குற. 2.)

"சித்தபரி சுத்தருக்குத் தேறுசிவ பத்தருக்குச்
சத்துவகுணத்தருக்குத் தண்மதிமுகத்தருக்கு" (சர. குற. 4)

"செஞ்சுட ருதிக்குமுன் னெழுந்து புனல்படிந்து
திருநீறணிந்து ருத்திராக்ஷ மணி பூண்டு
நெஞ்சினி லெழுமன்பி னோடு சந்திவந்தனம்
நிலைதரு சிவபூஜை புரிகுவ ருடனுண்டு" (சர. குற. 27)

என்பவற்றால் இவருடைய சிவபக்தி புலப்படும். பிரகதீசுவரர் கோயிலிலுள்ள * விநாயகர் கோயிலைச் செப்பஞ்செய்து கர்ப்பக்கிருகமும், அர்த்த மண்டபமும், மஹாமண்டபமும், பிறமண்டபங்களும் கட்டுவித்தார். உள் பிராகாரத்தைச் சுற்றிக் கல்தளவரிசை போடச்செய்தார். பழைய விநாயக விக்கிரகத்தை எடுத்துவிட்டுப் புதிய விக்கிரகமொன்றைப் பிரதிஷ்டிப்பித்தார். பெருவுடையாருக்கு வெள்ளி ரிஷபம் செய்துவைத்தார்.

"புள்ளிமயில் வாகனனை யீன்றிடுங் கடவுள்பரி
பூரணவுல் லாச வாசர்
பொருந்துசுரு திக்குமெட் டாதபெரு வுடையீசர்
பொன்னடி வணங்கி யோங்கி
வெள்ளிரிஷ பஞ்செய்து வைத்தசர போசிதுரை
வேந்தன்."

"சீருறுதென் றஞ்சைநகர்ச் சரபோஜி மன்னன் செழிக்கவருள் சரபேசன் திருபுவனம்" (சர. குற. 41) என்பதனால் இவர் திருபுவனத்திலுள்ள சரபமூர்த்தியை வழிபட்டு வந்தாரென்று தோற்றுகின்றது.

* South Indian Inscriptions, 420 of 1924.

இவர் * காசிக்கு ஒருமுறை சென்று கங்கையாடி ஸ்ரீ விசுவ நாதரைத் தரிசித்து வந்தாரென்று இக்குறவஞ்சி கூறும்; "நல னுறு காசி நண்ணியொண் கங்கை, மென்புனல் படிந்து விச்சுவ நாதன், தன்பத பங்கயந் தனையெதிர் பணிந்து, வேண்டிய வரங் கள் விருப்புட னேற்று, நீண்டிடு மகிழ்ச்சி நிலவுற வந்தோன்"(9.)

இங்ஙனம் தருமசிந்தனையும் சங்கீதம் முதலிய கலைகளில் அன் புங்கொண்டு வள்ளலென்றும் வித்தியா விநோதரென்றும் புகழ் பெற்று விளங்கிவந்த சரபோஜிமன்னர் கர (கி. பி. 1832) வருஷத் திற் பூதவுடம்பை நீத்து இறவாத புகழுடம்பை எய்தினர்.

இவ்வள்ளலைப் பற்றி,

"உசிதவாணர் தரமறி யன்புள்ள
உத்தமன் சரபேந் திரன்"

"உடுத்தநல்ல வஸ்திரபூ ஷணமுஞ்செம்பொன்
உம்பளசம் பளமுடனெந் நாளுமன்னம்
கொடுத்துதவு தருமதுரை தஞ்சை யாளும்
குபேரசர பேந்திர மால்"

"அறிவினலே யறிந்தன்ன வத்திரம்
கொடுக்கு மிங்கித சங்கீத சாகித்திய
குணம்வளர் சரபேந்திரன்"

"வேலைசுற்றும் பூவரைப்பிற் புகழாற்றுஞ் சரபோசி
வேந்தர் வேந்தன்"

* இவர் காசிக்குச்சென்ற பொழுது வழியிலே சந்தித்த பல பைராகிகள் இவரை, 'மூப்பனர்தேசத்துராஜா' எனச் சுட்டித் தம்முள் பேசிக்கொண்டாரெனவும் அவ்வாறு அவர்கள் கூறுவதன் கார ணத்தை விசாரிக்கையில் அக்காலத்தில் கபிஸ்தலமென்னும் ஊரி லிருந்த மூப்பனர் ஒருவர் அன்னதானம் நிரம்பச் செய்தாராதலின், பல தேசங்களிலிருந்து வந்த யாத்திரிகர்கள் அவர் சத்திரத்தில் அன்ன முண்டுவந்து அவருடைய தருமத்தைப் புகழ்ந்தாரென்று அறிந்து, "நம் நாட்டு மிராசுதார் ஒருவர் இவ்வளவு செய்து புகழடைந்தபோது நாம் என் இந்தத்தருமத்தைச்செய்து புகழ்பெறக் கூடாது?" என எண்ணித் தஞ்சைமீண்டவுடன் பலவிடங்களிற் சத்திரங்கள் கட்டுவித்தனரெனவும் ஒரு கர்ணபரம்பரைச்செய்தி வழங்குகிறது.

"தென்னளகைச் செங்கோன் மனுநீதி
செலுத்தியே வள்ளலி லுயர்ந்த
மன்னர்கோன் சரபேந்திரன்"

"எவ்வுயிருந் தன்னுயிரென் றெண்ணுசர பேந்திரமால்"

எனப் புலவர்கள் மனங்குளிர்ந்து பாராட்டியதற்குக் காரணம் இவர் அவர்களுக்குச்செய்த பேருதவியும் அவர்கள்பாற் காட்டிய அன்பும் என்பதில் ஐயமில்லை.

இவருக்குப்பின் கரஞு பங்குனிமீ இவருடைய குமாரர் சிவாஜி மகாராஜர் தஞ்சைநகரத் தலைமையை மேற்கொண்டார்.

---

## * சிறப்புப் பாயிரம்.

---

மன்னுமதி மந்தரத்தாற் றமிழ்க்கடலைக் கடைந்துகுற
வஞ்சி யென்னும்
இன்னமுதந் தனையெடுத்துப் பகர்ந்திடுநா வெனுங்கரத்தா
லெழிலார் தஞ்சை
என்னுநகர் மேவுசர பேந்திரர்க்குப் புலவர்களு
மினிதுட் கொள்ள
நன்னயங்கொ ளேரண்ட புரத்துவளர் சிவக்கொழுந்து
நல்கி னானே.

---

* இச்செய்யுள் நூலாசிரியர் காலத்ததே; இயற்றியவர் பெயர் தெரியவில்லை.

உ

கணபதி துணை

# ஸ்ரீ சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்.

## காப்பு.

### கணபதி.

1. அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பார்கொண்ட புகழி னோங்கும்
பதியெனுந் தஞ்சை மேவும்
தார்கொண்ட மார்ப னெங்கள்
சரபோஜி மன்னன் மீது
சீர்கொண்ட தமிழி னாலே
திகழ்குற வஞ்சி கூறப்
பேர்கொண்ட பிரக தீசர்
பெறுகண பதிகாப் பாமே.

(கு - உரை.) பிரகதீசர் - பெருவுடையார். (க)

2. சந்திரமௌளீசர்.

தன்னிகர் செல்வன் றஞ்சைச்
சரபோஜி மன்னன் மீது
நன்னயத் தமிழி னாலே
நவில்குற வஞ்சி கூற
உன்னுபோ சலகு லத்துக்
குயர்குல தெய்வ மாகி
மன்னுசந் திரமௌ ளீசர்
மலர்ப்பதங் காப்ப தாமே.

(கு - உரை.) சந்திரமௌளீசர்: தஞ்சை மகாராஷ்டிர மன்னர்களுடைய குலதெய்வம். இப்பெருமானது கோயிலொன்று தஞ்சை அரண்மனையில் உண்டு. (உ)

## பிரகதீசர் முதலியோர் காப்பு.

3. **நாட்டைராகம் - ஜம்பை தாளம்.**

1 வெற்றிகொண் [1] மதில் [2] வளை தஞ்சை மாநகர்
மிக்கவண் புகழ்கொடு நீடுவாழ்தரு
கொற்றவ னெனுஞ்சர போஜி மன்னன்மேற்
குறவஞ்சி கூறக்

கற்றவர் பரவிடு கொன்றை மாலையர்
கட்செவி யொடுமதி தங்கு வேணியர்
மற்றணி மால்விடைப் பிரக தீசர்தம்
மலர்ப்பதந் துணையே - ஜயஜய

2 மருமல ரகழிசூழ்ந் தாழி சூழ்ந்திடு
மகிதல மெனவொளிர் தஞ்சை மாநகர்
குருசி லெனுஞ்சர போஜி மன்னன்மேற்
குறவஞ்சி கூறத்

திருமக ளிறைவனு மலரின் மேவிய
திசைமுக னும்பணி பிரக தீசர்தம்
ஒருபுற மேவிய பெரிய நாயகி
உபயபதந் துணையே - ஜயஜய

3 மலிதரு புகழுறு மளகை யாமென
வளமுறு தஞ்சையி னிலகு போசல
குலமணி யெனுஞ்சர போஜி மன்னன்மேற்
குறவஞ்சி கூற

மலையிடைத் தனதொரு மருப்பிற் பாரதம்
வரையிப முகத்தவ னிருப தத்தொடும்
கலவமென் மயிலிவர் கந்த வேளிரு
கமலபதந் துணையே - ஜயஜய

4 நடைமயில் வளர்பொழில் சுலவு தஞ்சைமா
நகருறை பவனணி மன்னு கொற்றவெண்
குடைநிழ லுறுசர போஜி மன்னன்மேற்
குறவஞ்சி கூறக்

---

பி - ம். 1 ‘மணிமதில்’ 2 ‘வளர்தஞ்சை’

கடலமு தனையசொல் லோடதன்சுவை
கனிவுறு பொருள்களுங் கருணை தன்னொடு
திடனுற வுதவிடு வாணி தன்னெழிற்
றிருவடி மலர்துணையே - ஜயஜய.

(து-உரை.) 1. மல் தனி விடை. 2. அகழிக்கு ஆழியும் தஞ்சைக்குப் பூமியும் உவமை; "சக்கர வாளமுந் தகுபுறக் கடலும், இக்குவ லயத்தை யினிதுசூழ்ந் திடுதல்போல், கார்வளர் மதிலு நீர்நிறை யகழியும், மஞ் சுறச் சுலவுந் தஞ்சைமா நகரும்" (30 : 23 - 6) என்பர் பின். பெரிய நாயகி: தஞ்சைக்கோயிலில் எழுந்தருளிய அம்பிகையின் திருநாமம். உபயபதம் - இரண்டு திருவடிகள். 3. விநாயகர் தமது ஒற்றைக்கொம்பி னாற் பாரதத்தை எழுதினமை, "நீடாழி யுலகத்து மறைநாலொ டைந் தென்று நிலைநிற்கவே, வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ் சொன்னநாள், ஏடாக மாமேரு வெற்பாக வங்கூ ரெழுத்தாணிதன், கோடாக வெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ" (வி. பா. காப்பு) என்பதனால் அறியப்படும். கலவம் - தோகை. 4. நடைமயில் - நடையாற்சிறந்த மயில்; "நடைமயிலே" (பிரயோக. 42.) சொல்லுக்கு அமுதும் பொருளுக்கு அதன் சுவையும் உவமை. (௩)

## மங்களம்.

4. சுருட்டிராகம் - ஆதி தாளம்.

பல்லவி.

மங்களம் சரபேந்திரர்க்கு ஜய மங்களம்

சரணங்கள்.

1 புகழ்சோழ தேசருக்குப் போசலகு லேசருக்குச்
சகலருக்கும் நேசருக்குத் தஞ்சைநகர் வாசருக்கு (மங்களம்)

2 சித்தபரி சுத்தருக்குத் தேறுசிவ பத்தருக்குச்
சத்துவகு ணத்தருக்குத் தண்மதிமு கத்தருக்கு (மங்களம்)

3 நிலமதிவி சாலருக்கு நீடுறுசெங் கோலருக்குத்
தலமதனின் மேலருக்குச் சரபபூ பாலருக்கு (மங்களம்)

(து - உரை.) 3. மதிவிசாலர் - விரிந்த அறிவையுடையவர். தலம் - பூமி. மேலர் - மேலானவர். (௪)

## கட்டியக்காரன் வருதல்.

5 **அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

வரமுறு சரப மன்னர் வளர்தஞ்சை நகரந் தன்னில்
மருவுமோ கினிப்பெண் மேவும் வாசற்கட் டியக்கா ரன்றான்
குரவமென் மலர்ப்பூங் கோதைக் குறவஞ்சி நாட கத்திற்
கருள்கண பதிவந் தாரென் றவையின்முன் சொலவந் தானே.

(கு - உரை.) வரம் - மேன்மை. மோகினிப்பெண் - சரபேந்திரர் மேற் காதல்கொண்ட ஒருபெண்; இவள் மதனவல்லி யெனவும் கூறப் படுவாள். மேவும் - விரும்பும். குரவம் - வாசனை; அம் : சாரியை; குரவமென்மலர் - குராமலருமாம். (ரு)

6. 1 பரசுராகம் - ஆதிதாளம்.

**பல்லவி.**

கட்டியக் காரன்வந் தானே - ஒய்யாரமாகக்
கட்டியக் காரன்வந் தானே.

**அனுபல்லவி.**

கட்டிய கொண்டை வனப்புறு சென்னியிற்
கட்டழ குருமாலை கட்டிக்கொண்டுநல்ல (கட்டியக்)

**சரணங்கள்.**

1 2 மிகவெழி லுற்றிடு காவிச் சல்லடம்
மிசைசுற் றிடுகச்சை யிறுக்கியே
தகதிமி தக்கிட திக்கிட வென்னத்
தருக்குடன் மேன்மீசை முறுக்கியே (கட்டியக்)

2 புகலுறு நெற்றியி லிட்டிடு சிந்துரப்
பொட்டுடன் பொற்பிரம் பேந்தியே
மகராஜ ராஜனுக்குச் சரபோஜி ராஜனுக்கு
மந்தர ராஜனுக்குச் சலாமெனவே (கட்டியக்)

3 தரணி புகழ்ந்திடு மன்னர்கள் சூழத்
தகவுடு கணத்திடை மதியென மேவும்
வரபோ சலகுல மணியினைக் கண்டு
சரபோஜி மகாராஜா சலாமெனப் பணிந்து (கட்டியக்)

பி - ம். 1 நாதநாமக்கிரியை 2 'மிகுமெழில்'

(து-உரை.) பல்லவி. ஒய்யாரம் - உற்சாகம். அனு. உருமாலை - ஒருவகை ஆடை. 1. காவிச்சல்லடம் - காவிநிறம் பொருந்திய ஒருவகைக் காலுறை; "காவிச் சல்லடந் தொடுத்துக்கொண்டு" (56) என்பர் பின். 2. சிந்துரப்பொட்டு - குங்குமப்பொட்டு. சலாம் - வந்தனமென்னும் பொருள் தரும் இந்துஸ்தானிச் சொல்; "சலாமிடற் கேக்கறும்" (மீனாட்சி. பிள்ளைக். காப்பு. 4.) 3. உடுகணம் - நட்சத்திரக்கூட்டம். வரம் - மேன்மை. (சு)

## கணபதி வருகை.

### வசனம்.

இப்படி மகாராஜாவின் சபையில் வந்த கட்டியக்காரன் இந் நாடக ரக்ஷணையாகக் கணபதி வருகிறதைச் சபையிற் சொல்லுகிறான்.

7. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

* சந்ததமு மெண்மர்குடி கொண்டு நிற்கத்
தாரணியி லனைவர்களு மகிழ்ந்து வாழத்
தொந்தமின்றி யுழுவைபசுத் துறையிற் கூடிச்
சுகமாக விளையாட வரசி யற்றும்
சுந்தரனுஞ் சரபோஜி மன்னன் மீது
சொல்லுகின்ற குறவஞ்சித் தமிழைக் காக்கத்
தந்திமுக னுருவா கனமீ தேறிச்
சபையோர்க்குக் காட்சிதரத் தோன்றி னாரே.

(து - உரை.) எண்மர் - எட்டு இலக்குமிகள். தொந்தம் - சண்டை. உழுவை - புலி. உழுவையும் (புலியும்) பசுவும். (எ)

8. மத்தியமாவதி ராகம் - ஆதி தாளம்.

### பல்லவி.

† கணபதி வந்தாரே - கருணாகரரான
கணபதி வந்தாரே

### அனுபல்லவி.

மணமலர்ச் சோலைசூழ் தஞ்சைச் சரபோஜி
மகராஜன் சபைதனி லனைவரு மகிழ்ந்திடக் (கணபதி)

---

* இச்செய்யுள் தஞ்சைப்பிரதியிற் காணப்படவில்லை.

† இக் கீர்த்தனம் ஒருமை முடிபாக ஒரு பிரதியில் இருக்கிறது.

சரணங்கள்.

1 ஆருவா கனர்வந்தார்
அம்பிகை தனயர் வந்தார்
பாகசா தனன்போற்றும்
பாதபங் கயர்வந்தார் (கணபதி)

2 வாமன ரூபர்வந்தார்
மகேசுவர புத்ரர்வந்தார்
சோமசே கரர்வந்தார்
சூர்ப்பகர் ணர்வந்தார் (கணபதி)

3 ஐந்து கரத்தர்வந்தார்
ஆனைமா முகத்தர்வந்தார்
தொந்தி வயிற்றர்வந்தார்
1 தொழுமொற்றைக் கொம்பர்வந்தார் (கணபதி)

(கு - உரை.) 1. பாகசாதனன் - பாகனென்னும் அசுரனைக் கொன்றவன்; இந்திரன். 2. வாமனரூபர் - குறிய உருவத்தை யுடையவர். சோமசேகரர் - சந்திரனை முடியிலணிந்தவர்; விநாயகருக்குந் திருமுடியிற் பிறையுண்டென்பர். சூர்ப்பகர்ணர் - முறம்போன்ற செவிகளை யுடையவர். (அ)

சரபேந்திரர் பெருமையும் அவர் பவனி வருதலும்.

வசனம்.

அவன், பிறகு மகாராஜாவின் மகிமையும் அவர் பவனிவருகிறதும் சொல்லுகிறான்.

9. நேரிசை ஆசிரியப்பா.

பார்கொண்ட தென்றிசைப் பரதகண் டத்திற்
சீர்கொண்ட சோழத் திருநா டதனிற்
றிருமக ளிருக்குஞ் செந்தா மரையாய்
விரவுபா ரதிக்கு வெண்டா மரையாய்
5 அளவில்செல் வத்தா லளகைமா நகராய்
உளமகிழ் சிறப்பி 2 னும்பர்நா டாகி
வேதமும் வேள்வியு மிகுந்தய னுலகாய்
மாதவ னுறைதலின் வளரவன் பதியாய்ச்

பி - ம். 1 'தொகுமொற்றை' 2 'உம்பரி னுடாய்'
3-4. சீவக. 30; திருவிளை. நகரச். 4.

சேவுயர் கொடியோன் றிகழ்தலிற் கைலைபாய்
10 யாவரு முறைதலி னெழிற்சிவ புரியாய்
மீதலத் தோங்கிய விறன்மிகு மதிலும்
பாதலத் தணுகிய பரவுநீ ரகழியும்
வேதியர் நியமமும் வேந்தர்தம் வீதியும்
பேதமில் வணிகர் பின்னவர் தெருக்களும்
15 மாடமா ளிகைகளு மகிழா ரியங்களும்
நீடுகைத் தந்திக ணிலவிடும் பந்தியும்
வளர்பரிக் குலங்கண் மருவிடு சாலையும்
அளவில்பல் பண்டத் தாவண நிரையும்
விளங்கெழிற் றஞ்சை வியன்பதி யிடத்து
20 வளங்கொள்போ சலகுல வரோதய னாகிய
மருவுசீர்த் துளசி மன்னவன் புத்திரன்
சரபோஜி யென்னத் தகுமியற் பெயரினேன்
ஆகமங் கலைக ளருமறை புராணம்
பாகுறு மனுநூல் பலவுநன் குணர்ந்தோன்
25 படை [1] குடி கூழமைச்சுப் பகர்ந்திடு நீதி
[2] நட்பர ணிவற்றி னயந்திடுஞ் சிறப்பினேன்
கொடையினின் முகிலலை கொண்டிட வலைத்துத்
திடமதின் மேருவைச் சிரங்குனி வித்து
வேள்வியிற் சதமகன் வெள்கவிண் ணடக்கிக்
30 கேள்வியி லநந்தனைக் கீழ்ப்படச் செய்து
வடிவினிற் சிலைக்கை மதனனை மறைத்துத்
தடையிலா துயிர்க்கெலாந் தண்ணளி புரிந்து
புகலரி யணைமிசைப் பொருந்தவீற் றிருந்து
மகிதலம் புரப்பவன் மன்னவர் [3] பெருமான்
35 உலகமன் னவர்க ளுற்றெதிர் பணிய
நலமுறு காசி நண்ணியொண் கங்கை
மென்புனல் படிந்து விச்சுவ நாதன்
தன்பத பங்கயந் தனையெதிர் பணிந்து
வேண்டிய வரங்கள் விருப்புட னேற்று
40 நீண்டிடு மகிழ்ச்சி நிலவுற வந்தோன்

---

பி - ம். 1 'குடியமைச்சு' 2 'நட்புட னிவற்றி னுயர்ந்திடும்' 3 'பெருமகன்'

பொன்னெடுந் தேர்களும் பொருந்துகுஞ் சரங்களும்
பன்னுயர் பரிகளும் பதாதியுஞ் சூழ
மன்னவர் குழுவு [1] மந்திரத் தலைவரும்
தந்திகர் மந்திரி [2] தந்திரக் கணமும்
45 [3] சேனைத் தலைவருஞ் செறிந்திடு நண்பரும்
[4] தானை பதிகளுந் தன்புடை நெருங்கத்
தூரிய முழங்கத் துலங்குபொற் றொடிக்கை
நாரிய ரளவிலர் நடனஞ் செய்யப்
பாலெழிற் கவரிகள் பாங்கின திரட்ட
50 மேனுயர் பொற்கால் வெண்குடை நிழற்றக்
கண்கொடு கண்டோர் களிக்கப்
பண்புறு யானைமேற் பவனிவந் தனனே.

(கு - உரை.) அடி: 3. "பொன்னினி திருக்குங் கஞ்சப் புதுமலர் மாடமாகி......யிலங்கிடு மதுரை" (திருவிடை. வரகுண. 2.) 4. பாரதி - கலைமகள். 8. மாதவன் - திருமால்; அவன்பதி திருவைகுந்தம். 9. சே உயர்கொடி - இடபக்கொடி. 13. நியமம் - வீதி. 14. பின்னவர் - வேளாளர். 15. அரமியங்கள் - நிலா முற்றங்கள். 18. ஆவணநிரை - கடைவீதியின் வரிசை. 24. பாகு உறு - பகுதி அமைந்த; பக்குவமுற்ற வெனலுமாம். 25 - 6. "படைகுடி கூழமைச்சு நட்பரணாறும், உடையா னரசரு ளேறு" (குறள். 381); (திருவிடை. உரோமச. 39.) 27. அலை கொண்டிட - அலைதலையடைய, கடல் நீரைக்கொள்ள. 28. மேருவைச் சிரங்குனிவித்து; மேரு, சிவபெருமானால் வில்லாக எடுக்கப்பட்டபோது வளைந்ததை இத்தொடர் தெரிவிக்கின்றது; தோற்றவர்கள் தலைகுனிதல் இயல்பாதலின் மேருவைத் தலைவணங்கச்செய்து என்ற மற்றொரு பொருள் தோற்றுகிறது; கோடீர். 36; "திடமதின் மேரு வென்னுந் தெய்வத வரையை வென்று" (திருவிடை. மாந்தாதா. 2). 29. சதமகன்- இந்திரன். வெள்க - நாண. விண் அடக்கி - தேவருலகத்திலே இருக்கச்செய்து. 30. அநந்தனை - ஆதிசேடனை. கீழ்ப்படச்செய்து - பாதாளத்தில் இருக்கச்செய்து; தாழ்வுறச்செய்து என்பது மற்றொருபொருள். 31. மதனனை - மன்மதனை. 33. அரியணை - சிங்காசனம். வீற்றிருந்து - கவலையின்றி யிருந்து; வீறு - வேறொன்றற்கில்லாத அழகுமாம். 42. பன் உயர் பரிகள். பதாதி - காலாட்படை. 43. மந்திரத்தலைவர் - மந்திரிகளில் உயர்ந்தோர். 44. தந்திரக்கணமும் - சேனைக் கூட்டங்

பி - ம். 1 'மந்திரி' 2 'தந்திரி' 3 'சேனைக்கிறைவரும்' 4 'தானாதிபரும்'

களும். 46. தானுபதிகள் - ஒருவகை உத்தியோகத்தர்கள்; "தானுபதியெனவுஞ் சற்றுமதித் தானிலையே" (தனிப்.) 47. ஆரியம் - வாத்தியம். 49. பால் எழிற் கவரிகள் - பாலின் அழகையுடைய வெண்கவரிகள்; எழில் - எழுச்சியுமாம். பாங்கினர் - பக்கத்திலுள்ள மங்கையர்கள். இரட்ட - மாறிவீச. (கூ)

## மதனவல்லியின் இயல்பு.

### வசனம்.

இப்படி மகாராஜா பவனி வருகிறபோது மகாராஜாவை மோகினிவந்து கண்ட செய்தியைச் சொல்லுகிறான்.

10. **அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

தரணிபுகழ்ந் திடுந்தஞ்சைச் சரபநரேந் திரன்பவனி
தன்னைக் கண்டு
வரியளிசூழ் மலர்க்கூந்தன் மதனவல்லி யெனுமொருமின்
மறுகி னூடே
பெருமயலுங் கிறுகிறுப்புங் கொண்டந்த மன்னவனைப்
பின்றொ டர்ந்து
மருவுதற்குக் காதல்கொண்ட தகைசொல்வே னெவர்களுக்கும்
வகைசொல் வேனே.

(கு - உரை.) கிறுகிறுப்பு - மயக்கம். (க0)

11. [1] **ஆகிரி ராகம் - சாபு தாளம்.**

1 அந்த மதனவல்லி வண்டைநாண் கொண்டிடச்செய்
யோதியாள்—பாரில்
அங்கனையார் தங்களினுத் துங்கமுறு பதுமினிச்
சாதியாள்

2 கந்தமலர்க் காந்தளினை முந்துமலை யேறவைத்த
கையினாள்—மாற்றில்
கனத்தசெங் கனகத்தைமே லடித்துப் பணிசெயச்செய்
மெய்யினாள்

3 தங்கமுலை பம்பரத்தை யம்புவிமீ தாட்டிடுமோ
தங்கமே—இடை
சாயலுறு நற்றுடியை வாயிலறை வித்திடுமோர்
சிங்கமே

பி - ம். 1 பிலஹரிராகம் - மிசிரதாளம்

4 புங்கமுறு மம்புயத்தைப் பங்கமுற்ற தென்னவொளிர்
முகத்தினாள்—வானிற்
பொலிந்திலங்கு வெண்பிறையைக் களங்கமுற்ற தென்றோது
நகத்தினாள்

5 கண்டோர் மனத்தைத்தன் சுழிக்கு ளழுத்திடும்
உந்தியாள்—கொங்கைக்
களிற்றுத் தறியென்ன வயிற்றின்மே லுரோம
பந்தியாள்

6 விண்டிடுங் கன்னலைச் சாறு பிழிந்திடுந்
தோளினாள்—மாவின்
விளங்குந் தளிர்கண்டு [1] பயந்தங் கிருக்கச்செய்
தாளினாள்

7 மருவுற்றி டுங்குமிழை வனத்தி [2] லொதுக்குவித்த
மூக்கினாள்—இந்த
வையத் திராதமுதம் வானத் தொளிக்க வைத்த
வாக்கினாள்

8 தருமனெனக் கூற்றை யெவருஞ்சொல் லக்கூர்த்த
நயனத்தாள்—தஞ்சைச்
சரபோஜி நரபாலர் கருணை தனக்கேற்ற
வயனத்தாள்.

(து - உரை.) 1. மதனவல்லி: எழுவாய். நாண் கொண்டிட - மன்மதன் நாணைக்கொண்டிட; நாணத்தையடைய என்பது மற்றொரு பொருள்; சிலேடை. ஓதியாள் - கூந்தலை யுடையாள்; "கூந்தலுக் குவமை கிளத்துதற் கியாதுளதது...குலவிவண்டினத்தைநா ணுறுத்தி" (திருவிடை. வரகுண. 71.) அங்கனையார்-மகளிர். உத்துங்கம்-மேன்மை. பதுமினியென்பது மகளிருக்குள் உத்தமஜாதி மகளின் பெயர். 2. கந்த மலர்......கையினாள்: தோற்றுப்போனவர்கள் மலையிலேறி ஒளிந்திருத்தல் இயல்பு; காந்தள் குறிஞ்சிநிலத்திற்குரியதாதலின் இங்ஙனம் கூறினார்; பெருவுடை. 187. அடித்துப் பணிசெயச்செய்: பணி-ஆபரணம்; தங்கத்தை அடித்து ஆபரணம் செய்தல் இயல்பு; ஏவலென்பது மற்றொரு பொருள்; வேலையாட்களை அடித்து ஏவல் செய்யுமாறு செய்விப்பது மரபு. 3. தங்கமுலை: எழுவாய்; பம்பரம் ஆட்டப்படுதலாகிய இயல்பைத் தோல்வியுற்று அலைக்கப்படுமென்னும் பொருளமையக்

---

பி - ம். 1 'பசந்து' 2 'ஒதுக்கிவைத்த'

கூறினர். மாதங்கம் - யானை. துடியை - உடுக்கையை. துடி அடிக்கப்படுதலுக்குக் காரணம் இடையென்றது தற்குறிப்பேற்றம் ; கோடீச். 11. 4. புங்கம்-தூய்மை. பங்கமுற்றது - சேறுற்றது ; பழுதுற்றதென்பது மற்றொருபொருள் ; கோடீச். 26. களங்கம்-கறை; குற்றமென்பது வேறுபொருள். நகத்திற்குப் பிறை உவமை: (சீகாளத்தி. கடவுள்.) 5 உந்தியாள்-நாபியை உடையவள். தறி - யானைத்தம்பம். உரோம பந்தி - வயிற்றுமயிரொழுங்கு. 6. கன்னலை - கரும்பை. தோளுக்குக் கரும்பு உவமை. பயந்து - பசந்து ; அஞ்சி யென்பது வேறுபொருள். 7. குமிழை வனத்தில் ஒதுக்குவித்த மூக்கு : பேருவுடை. 185, குறிப்புரையைப்பார்க்க ; திருவிடை. வரகுண. 71. 'அமுதம் வானத்தொளிக்கவைத்தவாக்கு' என்பதனோடு, "ஒளியுறு மின்னுன் னிடைநோக்கி வானி லொளித்திருக்கும்" (கோடீச். 23) என்பது ஒப்புநோக்கற் பாலது. 8. தருமனென..........நயனத்தாள் : பேருவுடை. 183 ; திருவிடை. வரகுண. 73. வயனம் - வசனம் ; " நால் வயனத்தவ " திருவிளை. மாறி. 27. (௧௧)

மதனவல்லி பந்தாடுதல்.

12. அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்,

அந்தமிகு மதனவல்லி தஞ்சைவளர் சரபோஜி
[1] யண்ணன் மீதே
சந்தமுறுங் கவிப்புலவ ருரைத்தபுகழ்க் கவிகடமைத்
தடங்கொள் வீணைத்
தந்திரியி னுறப்பாடிச் செங்கைவளை கலகலெனத்
தனது கொங்கைச்
சுந்தரங்கொள் கந்துகத்தை யெடுத்தடித்து விளையாடத்
தொடங்கி னாளே.

(கு - உரை.) தந்திரி - யாழ்நரம்பு. கொங்கைச் சுந்தரங்கொள் கந்துகத்தை - நகிலினது அழகைக்கொண்ட பந்தினை ; கோடீச். 22.

13. ஏந்தெழிலார் மதனவல்லி யெடுத்தடிக்குங் கந்துகமேந்
திழையார் முன்னம்
கூந்தலினை யவிழ்த்தாடை நெகிழ்த்துமணி வடஞ்சிதறக்
கொங்கை சேர்ந்து
காந்தளியற் றிடுஞ்செய்கை செய்தல்கண்டு வெட்கியதைக்
கைவிட் டாங்கே
வாய்ந்தநெடு வீதியுற்றுள் சரபநரேந் திரன்பவனி
வரல்கண் டாளே.

---

பி - ம். 1 'அண்ணல் பேரில்'

(கு - உரை.) காந்தன் - கணவன். "கொந்தார் குழல்சரியக் கோல முகம்வியர்ப்பச், சந்தார் திதலைத் தனமசையப்—பந்தேநீ, சிற்றிடையா ளார்வமொடு நீண்டிவிளை யாடுதற்கு, நற்றவமென் செய்தாய் நவில்" கந்துகம் அவிழ்ந்து நெகிழ்த்துச் சேர்ந்து செய்கைசெய்தல் கண்டெண்க. (௧௩)

## மதனவல்லி சரபேந்திரன் பவனிகண்டு மயல் கோள்ளுதல்.

14. சௌராட்டிர ராகம்—மிசிர தாளம்.

பல்லவி.

மோகினி வந்தாள் அதிரூப
மோகினி வந்தாள்

அநுபல்லவி.

வாகு பெறுமுயர் தஞ்சைச் சரபோஜி
மன்னர் தமைக்கண்டு முன்ன மயல்கொண்ட (மோகினி)

சரணங்கள்.

1 பனிமதி நுதலில் வசிகர திலகமுன்
[1] முனிவ ரருமன முருக வொளிதர
கனதன மருவு தரள மணிவட
மலையி னிழிதரு மருவி தனைநிகரவே (மோகினி)

2 மகர மிலகிய துவச [2] னிரதியெனும்
வடிவ வனிதையி னதிக மிவளென
அகமதி லெணியடி மயிலே குயிலே
அடிமை வருவனெனப் பிறகே தொடர்ந்திடவே (மோகினி)

3 கமலை யிவளென வுருவசி யெனநீள்
கயல்விழி மேனகை யாமிவ ளெனவே
அமரர் மெச்சுதி லோத்தமை யெனவந்
தவனியி னுலவு [3] மொருமின லெனவே (மோகினி)

(கு - உரை.) அநு. வாகு-அழகு. 1. முனிவரரும் மனம் உருக; முனிவர் அருமனம் உருகவெனலுமாம். தரளமணிவடம்-முத்துமாலை. 2. மகரம் இலகிய துவசன் - மன்மதன். வடிவம் - அழகு. இரதியாகிய அழகிய

பி - ம். 1 'முனிவருறுமனம்' 2 'இரதியென வடிவவனைசயின்' 3 'ஒரு மின்னெனவே'

பெண்ணேக்காட்டிலும் இவள் மிக்க அழகுடையவள். அகமதிலெணி - மனத்தில் நினைத்து. துவசன் தொடர்ந்திட வென்க ; " மகரமெழுதிய துவச மதனுனது சரணமடி, முககமல மலரவொரு முறுவல்செயு மொன மொழியும் " (கும்பேசர்குறவஞ்சி.) 3. கமலே - திருமகள். மினல் - மின்னல். (கச)

15. அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

தங்குபெறுந் திறல்வீரர் சேனைக்கா வலர்களொடு
தானு மோர்பால்
மங்கையர்சே னுபதியாய்ச் சேவித்து வருமதனன்
மதன வல்லி
எங்களுயர் தஞ்சைநகர்ச் சரபோஜி மன்னவன்ற
னெழிலை நோக்கித்
துங்கமனத் திடைக்காதல் கொண்டிடுமுன் மலர்வாளி
சொரிந்திட் டானே.

(த - உரை.) மங்கையர் சேனுபதி - மங்கையர்களாகிய படைக்குத் தலைவன். வாளி - அம்பு. (கரு)

மதனவல்லிக்குப் பாங்கியர்கள்
சீதளோபசாரஞ் செய்தல்.

வசனம்.

மகாராஜாவைக் கண்டு மோகித்த மோகினி மன்மதபாணத்தினலே வருந்துகிறதைக் கண்டு சகிமார்கள் அவளுக்குச் சீதளோபசாரஞ் செய்தார்கள்.

16. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருந்தம்.

மதனன்விடு மலர்க்கணையாற் றுயர மேவும்
மதனவல்லி [1] தனைச்சூழ்ந்தோர் [2] மனைக்குட் சேர்த்து
விதமுறுநல் லிளவாழைக் குருத்தைப் பாய்மேல்
விரித்ததனிற் படுக்கவைத்துப் பனிநீர் தொட்டு
வதனமதைத் துடைத்திலகு துகிலாற் காற்று
வரவீசிச் சிறிதறிவு தோற்றச் செய்தார்
இதமுறுசீர்ச் சரபோஜி மன்னன் றஞ்சை
யிடத்திலவள் காமனைப்பார்த் திதுசொல் வாளே.

---

பி - ம். 1 'தனைச்சூழ்வோர்' 2 'மனைக்கட்'

## மன்மதோபாலம்பனம்.

**17.**

### பந்துவராளி ராகம்—[1] திச்ர தாளம்.

#### கண்ணிகள்.

1 பிரபவ னாகிப் பிரஜோற்பத்தி [2] செய்கின்ற
மன்மதா—இன்று
பேதையேன் றன்னைப் பரிதாபி யாக்கலென்
மன்மதா

2 பரவுங் கடலினைத் துந்துபி யாக்கொண்ட
மன்மதா—நீயும்
பாவைமார் களுக்குவி ரோதியா யினதென்ன
மன்மதா

3 வானின்மேற் கொடுந்தான் மதியைக்குடையாக்கி
மன்மதா—காற்றும்
வடக்கோடுந் தேர்கொண்டா யிதுவென்ன காலயுக்தி
மன்மதா

4 மீனகே தனத்தினால் விஜயம்பெறலாமோ
மன்மதா—யார்க்கும்
விகுருதியா காதிருந்தான் மிகவும் ஜயமாமே
மன்மதா

5 தேனார் மலரம்பா லானந்த மடைகின்றாய்
மன்மதா—சீறும்
திறவம்பொன் றுளதாயிற் பிரமாதி யாவையே
மன்மதா

6 மானேர் கரமுற்ற ஈசுவரன் முன்னாளின்
மன்மதா—உன்னை
வாட்டிய காலையிற் காட்டுங் குரோதி யல்லை
மன்மதா

7 தெரியுமிவ் வுலகத்தி [3] லேவர்கி லகத்தினால்
மன்மதா—என்மேல்
சித்திர பானுவைப்போன் மெத்தவுங் காய்கிறாய்
மன்மதா

---

பி-ம். 1 'மிச்ரதாளம்' 2 'செய்திரு' 3 'தேவர்'

8 சரபோஜி மகராஜர் தமைநான் மருவச்செய்
மன்மதா—நீ
சருவஜித் தாகிமே லக்ஷய ருருவாய்
மன்மதா.

(கு - உரை.) 1. பிரபவன்-புகழையுடையவன்; பிரபாவனென்பதன் திரிபு. பிரஜோற்பத்தி - மக்களை உண்டாக்குதல். பரிதாபி - துன்புறுபவள். 2. துந்துபி-முரசு. விரோதி - பகைவன். 3. கோடும் துன் மதி - வளைந்த கெட்ட சந்திரனை; மேற்கு ஓடும் - மேற்கே செல்லும் என்பதும் ஆம். வடக்கோடுந்தேர் - தென்றல்; "வடக்கோடுந் தேருடையான்" (சிவப்பிரகாசமுனிவர்பாடல்.) என்ன காலயுக்தி - என்ன காலத்திற் குரிய யுக்தி 4. மீன கேதனத்தினால் - மீன் கொடியினாலே. விஜயம் - வெற்றி. விகிருதி - வேறுபாடான இயல்பு. ஜயம் - வெற்றி. சீறும் திறத்தையுடைய அம்பு. 5. பிரமாதி - மிக்கவலியையுடையவன்; பிரமன் முதலியவரானுமாம். 6. குரோதி-சினத்தையுடையவன். 7. ஏவர் கிலகத்தினால் - யார்செய்த கலகத்தால். சித்திரபானு - அக்கினி. 8. சருவஜித் - எல்லாவற்றையும் வெல்பவன். அக்ஷயன் - அழிவற்றவன்; க்ஷயம்-அழிவு.

இந்தப்பாட்டில் பிரபவ, பிரஜோற்பத்தி, மன்மதா, பரிதாபி, துந்துபி, விரோதி, துன்மதி, காலயுக்தி, விஜய, விகுருதி, ஜய, ஆனந்த, பிரமாதி, ஈசுவர, குரோதி, கிலக, சித்திரபானு, சருவஜித், அக்ஷய என்னும் பத்தொன்பது வருடங்களின் பெயர்கள் அமைந்திருத்தல் காண்க. பிரபவனென்று தொடங்கி அக்ஷயனென்று முடித்தது ஒருநயம். (௧௭)

## [1] சந்திரோபாலம்பனம்.

### வசனம்.

இந்தப்படி மன்மதனைப் பார்த்துச் சொன்னபிறகு சந்திரனைப் பார்த்துச் சொல்கிறாள்.

18. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

ஒண்முகில்போ லுதவுசர போஜி மன்னன்
உள்ளமகிழ்ந் துறைதஞ்சை யிடத்து மேவும்
தண்ணறுங்கோங் கரும்பென்னக் கமல மென்னத்
தருமகுட மெனச்செம்பொற் கும்ப மென்ன

---

1 உபாலம்பனம் - பழித்தல்.

வண்ணமலை யெனமுளைத்துப் பணைத்தெழுந்து
வயங்குமணி வடஞ்சுமந்து நெருங்குங் கொங்கைப்
பெண்ணமுத மனையவள்விண் மதியை நோக்கிப்
பேசுவா ளிந்தவகை யேசு வாளே.

(த - உரை.) கமலம் - தாமரை; இங்கே அதனரும்பு. பணைத்து - பருத்து. மதியை - சந்திரனை. (௧௮)

19. [1]பிலகரி ராகம்—திச்ர தாளம்.

கண்ணிகள்.

1 மதனன் குடையாகி மடவாரை வாட்டவந்த
மதியே - உனக்கோர்
மதியிருந்தா லல்லவோ வறிவாயிப் போதுநீ
மதியே

2 அதிரூப வாணென்றும் பெண்ணென்று மெனைச்சொல்வார்
மதியே - பார்த்தால்
ஆணல்லை பெண்ணல்லை யலியா யிருக்கின்றாய்
மதியே

3 சதுரனீ யென்றுரைத்தார் விருத்தனா யிருக்கின்றாய்
சசியே - பாம்பின்
தன்வாய்ப் படுந்துயரஞ் சற்று நினைக்கிலையே
சசியே

4 அதன்ம மெவர்க்காகு மதுநின் னிடத்துளதால்
சசியே - தெய்வம்
அந்தரத்தில் விட்டதுன்னை யிந்தவா றலைந்திடென்று
சசியே

5 மருவவென்னை மயக்கியுன் வசஞ்செயப் பார்க்கிறாயோ
இந்துவே - தேவர்
மந்திரியின் மனையாளால் வந்தகுறை போதாதோ
இந்துவே

6 உருவிற் கறுப்பையிந்த வுலகமா னென்றல்பொய்
இந்துவே - உனக்
குள்ளக் கறுப்பல்லவோ மெள்ளமே லுதித்ததிங்கு
இந்துவே

7 அரிவையோ டுதித்தும்பெண் ணருமை யறிந்திலையே
வெண்ணிலாவே - எண்ணின்
அதுவுமல் லாதுனக் கெதிரல்ல வோநானும்
வெண்ணிலாவே

8 இருநிலம் போற்றுந்தஞ்சைச் சரபோஜி மன்னருடன்
வெண்ணிலாவே - நானே
இருந்திடுவே னங்கேவா விருந்திடு வேனுனக்கு
வெண்ணிலாவே.

(கு - உரை.) 2. பெண்ணென்றது சந்திரன் ஸ்திரீகிரகம் என்று வழங்குதல்பற்றி. 3. சதுரம் - சாமர்த்தியம், நாற்கோணம், விருத்தம் - வட்டம், முதுமை, விரோதம். நீ நாற்கோணமுடைய உருவமுள்ளவ னென்பார்கள்; ஆனால் வட்ட வடிவுள்ளவனாகவன்றோ இருக்கின்றா யென்று ஒரு பொருள் தோற்றுகின்றது. சசி - சந்திரன். 4. அந்தரத்தில் ஆகாயத்தில், துணையற்ற நிலையில்; (பெருவுடை. 182.) 5. இந்து - சந்திரன். தேவர் மந்திரியின் மனையாளால் - பிருகஸ்பதியின் மனைவியாகிய தாரையால். குறை: தாரையை விரும்பியதுபற்றிச் சந்திரனைப் பிருகஸ்பதி குறைந்துபோகும்படி சபித்தனரென்பது வரலாறு. 6. உள்ளக் கறுப்பு: "மனத்தினுட் கறுப்பு வைத்து" (பெரிய. மெய்ப்பொருள். 7); "மனத்த கறுப்பெனின்" (நீதிநெறி. 58.) சந்திரன்பாலுள்ள களங்கத்தை மானென்றல் மரபு. 7. அரிவை - திருமகள். பெண்ணருமை யறிந்திலையே: "பெண்ணுடன் பிறந்ததுண்டே வெண்ணிலாவே, யென்றன், பெண்மைகண்டுங் காயலாமோ வெண்ணிலாவே" (குற்றாலக் குறவஞ்சி, 23); "மாதுடன்கூடப்பிறந்து மறந்தாயே திங்களே" (திருமலையாண்டவர் குறவஞ்சி.) எதிர் - பகை. (௧௧)

மதனவல்லி தென்றலை வெறுத்துக் கூறல்.

வசனம்.

இந்தப்படி சந்திரனைப் பார்த்துச் சொல்லிப் பிறகு தென்றலைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

20. வெண்பா.

வென்றி மதவேளை விண்மதியை நோக்கிமனம்
கன்றி வெறுத்துரைத்த காரிகையாள்—பின்றொடர்ந்து
தென்றலை நோக்கித் தியங்கி யுரைக்கின்றாள்
என்றனைநீ வாட்டுதலே னென்று.

(கு - உரை.) என் - என்னகாரணம்பற்றி ; ஏனென்று உரைக்கின்றாள். (௨௦)

21. **காம்போதி ராகம்—ஆதி தாளம்.**

**கண்ணிகள்.**

1 கந்தமிகுஞ் சந்தமல யந்தனி லிருந்துவந்தாய்
தென்றலே — தமிழ்க்
காரிகையின் சீர்மையுறு நேர்மையறி யாததென்னே
தென்றலே

2 மந்தமுறு மாருதமாய் முந்தியெல்லா நின்றனையே
தென்றலே—இன்று
மண்டுபிர சண்டகுணங் கொண்டுலவி [1] வந்ததென்னே
தென்றலே

3 வாடையொடு கோடையுமே லூதையுமிங்குன்னைப்போலத்
தென்றலே—வந்து
வருத்தமெதிர் விளைத்திடலை யொருத்தருமுன் கண்டதில்லை
தென்றலே

4 நீடுதிரைக் கடலொலிக்குங் குயிலிசைக்கும் பரிதவிப்பேன்
தென்றலே—இங்கு
நீயுமொரு வாதமதாய் மோதுமிதை யேதுசொல்வேன்
தென்றலே

5 ஒருகுணத்தின் மருவிலைநீ பிரிவிலவர்க் கமுதாவாய்
தென்றலே—பிரிந்தோர்க்
கோங்குவிட மாகிமய லாங்குறவே தீங்குசெய்வாய்
தென்றலே

6 விரவுதழல் சொரிவதுன்றன் மருவியற்கைக் குணந்தானோ
தென்றலே—பொதியம்
மேவுசந்த னடவியிற் சூழரவின் றீவிடமோ
தென்றலே

7 மருவிமுன்பு சுந்தவகன் மதனன் [2] வாகனமானாய்
தென்றலே—இன்று
வன்னிவக னயினை [3] மேற் கன்னிவா கனமுமாவாய்
தென்றலே

---

பி - ம். 1 'வந்ததென்னீ' 2 'வாகனனானாய்' 3 'வேற்கன்னி'

8 சரபோஜி மன்னரென்னை மருவுரர் நாளைக்குத்
தென்றலே—அங்கே
சார்ந்திலைப்புத் தீர்ந்திடலாம் போந்திடுகிப் போதினிநீ
தென்றலே.

(த - உரை.) 1. கந்தம் மிகும் - மணம் மிக்க. சந்தமலயம் - சந்தன மரங்களையுடைய பொதியின்மலை; "சந்தனப் பொதியில்" என்பர். தமிழ்க் காரிகையின் - இனிமையையுடைய பெண்ணின்; அகத்தியமுனி வன் இருந்த மலயத்தில் இருந்துவந்த நீ காரிகையென்னும் தமிழ் நூலின் சிறப்பை அறியாததென்னவெனப் பொருள்படுவது ஒருநயம். 2. மந்தம் - மெல்லிய நடை. பிரசண்டகுணம் - பிரசண்ட மாருதத்தின் குணம். 3. வாடை - வடகாற்று. கோடை - மேல்காற்று. மேல் ஊதையும் - இவ் விரண்டையுமன்றி மேலுள்ளகாற்று; அது கீழ்காற்று; இது பாரிசேடத் தாற் பெறப்படும். 4. வாதம் - காற்று, ஒருபிணி. 5. பிரிவிலவர்க்கு - கணவனைப்பிரிதல் இல்லாதவர்களுக்கு. மயல்-மயக்கம். 6. சந்தனடவி- சந்தனமரக் காடு; சந்தனமரத்தைப் பாம்பு சூழ்ந்திருத்தல் இயல்பு; "சந்தனத்தின் வேரும் அரவமரு வேங்கடமே" (திருவேங்கடமாலை, 87.) 7. கந்தவகன் - மணத்தைச்சுமப்பவன்; இது காற்றின் பெயர் களுள் ஒன்று. வன்னிவகன் - நெருப்பைச் சுமப்பவன்; சுடுகின்ற யென்றபடி. கன்னி வாகனமுமாவாய் - துர்க்கையின் ஊர்தியாகிய சிங்கம்போலவும் ஆவாய்; என்றது உயிரைப் போக்குதற்குரிய கொடுமையையுடையாயென்றபடி. 8. போந்திடுகெ இப்போது. ()

## கழிக்கரைப் புலம்பல்.

### வசனம்.

இந்தப்படி தென்றலைப் பார்த்துச் சொன்னபிறகு குயிலையும் மாலைப்பொழுது முதலியவற்றையும் நோக்கிச் சொல்லுகிறாள்.

22. சங்கராபரண ராகம்—தீச்ர தாளம்.

### கண்ணிகள்.

1 ஏற்ற மன்மதன் காளமே—இன்று
எனக்கு நீயொரு காளமே

2 போற்றி டந்திமுன் மாலையே—மிகப்
போதச் செய்வதென் மாலையே

---

பி - ம். 1 'மிச்ரதாளம்'

3 தோற்று சோலைநல் லலர்களே—கூடித்
தூற்று வார்சில ரலர்களே

4 ஆற்றல் கொண்டிரை வேலையே—மாதர்க்
கல்லல் செய்வதுன் வேலையே

5 ஓத வேலையுள மச்சமே—மிக
உற்ற தென்றுமுள மச்சமே

6 மீது சென்றிடு வங்கமே—நின்று
மெலியு மென்வடி வங்கமே

7 கோதில் மாதவள வன்னமே—இங்குக்
கொண்டி லேனிவள வன்னமே

8 மாதண் போதுறு காசையே—சரப
மன்னர் மேலெனக் காசையே.

(கு-உரை.) 1. காளம் - ஊதுகருவிகளுள் ஒன்று ; காகளமென்றும் கூறப்படும் ; மன்மதன் காளம் - குயில். ஒரு காளம் - ஒரு விஷம். 2. அந்தி - இரவு. மிக ...... மாலையே - என் மயக்கத்தை அதிகப்படுத்துவது யாதுகாரணம்பற்றி ; "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" (குறள். 1227) என்பாராதலின் இவ்வாறு கூறினாள். 3. சோலை நல் அலர்களே - சோலையிலுள்ள அழகிய மலர்களே. சிலர்கூடி அலர்கள் தூற்றுவார் ; அலர் - பழிமொழி ; தூற்றுவார் - பலரறியச்சொல்லுவார். 4. இரை வேலையே - முழங்குகின்ற கடலே. அல்லல் - துன்பத்தை. உன்வேலை - உனதுதொழில். 5. மச்சமே - மீனே. என்றும் உள்ளம் அச்சம் மிக உற்றது. 6. வங்கமே - கப்பலே. என் வடிவு அங்கம் நின்று மெலியும் ; வடிவு - அழகையுடைய. 7. தவள அன்னமே - வெண்மை நிறத்தையுடைய அன்னப்பறவையே. இவ்வளவு என்றது சிறுமையைச் சுட்டியது. அன்னம் கொண்டிலேன். 8. காசையே- காயாமரங்களே. ஆசை உள்ளதென ஒருசொல் வருவிக்க. (௨௨)

சகி வருதல்.

23. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

[1] மன்மதனே வெண்மதியே தென்ற லேபார்
வளைகடலே கடற்கரையே குயிலே காவே

---

[1] இச் செய்யுளில் முதலடியில் ஏகாரமாக இருப்பனவெல்லாம் ஐகாரமாக ஒருபிரதியிற் காணப்படுகின்றன.

என்றிவற்றை நோக்கிமிக வெறுத்துப் பேசும்
எழின்மதன வல்லியுயர் தஞ்சை மேவும்
மன்னர்பிரான் சரபோஜி மன்ன ரென்னும்
மணாளருக்கென் செய்தியெலாம் வருத்துக் கூற
இன்னகைதோற் றிடுஞ்சகியை வரக்கா ணுமென்
றெண்ணினா ளவளுமெதிர் நண்ணி னாளே.

(கு - உரை.) ஏகாரங்கள் எண்ணுப்பொருளன; விளியுருபுமாம்.
சகி - தோழி. (உ௩)

24. சாவேரி ராகம்—ஆதி தாளம்.

பல்லவி.

சகிவந்தா ளையா மதனவல்லிக்கிசைந்த
சகிவந்தா ளையா

அனுபல்லவி.

மகிதலம் போற்றிடுஞ் சரபோஜி மன்னவன்
மருவு முயர்தஞ்சை நகர மிதுதன்னில் (சகி)

சரணங்கள்.

1 கலீர்கலீ ரென்னச் சிலம்புக ளார்க்கக்
கடுநடை யுடனே மலர்முகம் வேர்க்கப்
[1] பலபல பெண்களுங் கேகின்று பார்க்கப்
பக்ஷமா மதனவல்லி மனத்துயர் தீர்க்கச் (சகி)

2 சரசமா கக்கூடி [2] விளையாடப் பண்டு
சரபோஜி மகராஜர் தயவுனக் குண்டு
பரவச மாயழைத்து வருகின்றேன் கண்டு
பயந்திடா தேயென்று திடஞ்சொல்லிக் கொண்டு (சகி)

(கு - உரை.) அனு. மகிதலம் - பூமி. 1. வேர்க்க - வெயர்க்க. (உ௪)

---

1 தஞ்சைப்பிரதியில் இப்பாட்டுள்ள ஏடு பாதி ஒடிந்திருக்கிறது. எஞ்சியுள்ளதில் வேறு ஒரு பாட்டின் பகுதிபோன்ற கீழ்க்கண்ட குறை வரிகள் காணப்படுகின்றன: '.........மன்றல்செய் கோதையிலவண...... நின்றிடுததாயினேக்கண்டெதிர்கூ.........சரபோஜி மனனரருளவட........ ......விரைவினி வினனலகளசெனறி...............'

பி - ம். 2 'விளையாடவென்று'

## மதனவல்லி சகியைப் பார்த்துக் கூறல்.

வசனம்.

வந்த சகியைப் பார்த்து மோகினி சொல்லுகிருள்.

25. நாதநாமக்கிரியை ராகம்—ஆதி தாளம்.

பல்லவி.

மதன்கல கத்திலென்னைத் தனியிங்கே வைத்தென்ன
விதமாகப் புறஞ்சென்று யடிநீ சகியே

அனுபல்லவி.

கதியெனக் குன்னையல்லாற் காணேனே வேறுநான்
அதுதானுன் மனமறி யாததோ சகியே (மதன்)

சரணம்.

1 சரபோஜி மகராஜர் பவனிதன் னைக்கண்டேன்
மருவநா னவர்மேல் மால்கொண்டேன் சகியே
பருவ மடந்தையர் பலர்நின்று ரெனைப்போல்
ஒருவரு மயல்கொள்ளக் காணேனே சகியே (மதன்)

(கு - உரை.) பல். மதன்கலகத்தில்.........வைத்து: கோபச்.

388. (உரு)

## மதனவல்லி சகியைத் தூது விடல்.

வசனம்.

மோகினி பின்னுமந்தச் சகியைப் பார்த்துத் தூதுபோக வேண்டுகிருள்.

26. கல்யாணி ராகம்—ஆதி தாளம்.

பல்லவி.

இந்தமட்டுஞ் செய்யடி சகியேநீ
இந்தமட்டுஞ் செய்யடி

அனுபல்லவி.

சந்தம் வளருந்தஞ்சைச் சரபோஜி 2மன்னர்தம்பால்
சார்ந்தென் விரகமெல்லா மோர்ந்திடச் சொல்லவேண்டும் (இந்த)

---

1 பிரதிகளில் இந்த ஒரு சரணமே காணப்படுகின்றது.
பி - ம். 2 'மன்னவர்பால்'

**சரணங்கள்.**

1 அவருக் கெனைப்போது மடந்தையா ரொருக்காலே
அறியாமன் மயல்கொண்டேன் சிறியாளா கையினாலே
கவலையுற் றிடமத னெறிகிறான் மலர்க்கோலே
கருது மிதையவர்க் குரைநடந் தனம்போலே (இந்த)

2 தென்றலம் புலிகட்கென் செய்தேனு னபசாரம்
தெரிக்கு மவைசெய்வ தேதிப் படிகோரம்
நன்றவர்க் கிவையெல்லா நவினுவா யிந்நேரம்
நாமிரு வருமிருந்த நன்மைக்கிங் குபகாரம் (இந்த)

3 மனத்தினைத் தூதுவிட்டே னதன்செய்தி யோராமல்
மகிழ்ந்தவ ரிடத்தி லிருந்தது வாராமல்
அனத்தினை யனுப்பலா மதுசெல்லுஞ் சோராமல்
அதுநிற்க நீயேசெல் வருத்தத்தைப் பாராமல் (இந்த)

(கு - உரை.) அனு. சந்தம் - அழகு. விரகம் - பிரிவாலுண்டாகிய வருத்தம். 1. மடந்தை யார்: ஒருவரு மிலரென்றபடி. மலர்க்கோல் - மலரம்புகள். அனம்போலே நடந்து உரை. 2. தென்றலுக்கும் அம்புலிக்கும். கோரம் - கொடுமை. 3. மனத்தினை......வாராமல்: "நீரிருக்க......என்னெஞ்சமல்லதொரு வஞ்சமற்ற துணையில்லையென், றுதாரத்தினொடு தூதுவிட்டபிழை யாரிடத்துரைசெய் தாறுவேன்......திரும்பியே வருதலின்றியே......என்னையுமறந்து தன்னையுமறந்ததே" திருவரங்கக். 24. (உசு)

**வசனம்.**

பின்னும் சகியைப்பார்த்து மோகினி தூது சொல்லும் வகையினைச் சொல்லுகிறாள்.

27. **தோடி ராகம்—சாபு தாளம்.**

**பல்லவி.**

சொல்லும் வகையெல்லா முறையா யுனக்குநான்
சொல்லுகின் றேனடி தேனே

**அனுபல்லவி.**

வல்லோர் புகழ்தஞ்சைச் சரபோஜி மகராஜர்
மனத்துக் கிசைந்திடுந் தூதுநீ யினிதாகச் (சொல்லும்)

சரணங்கள்.

1 செஞ்சுட ருதிக்குமுன் னெழுந்து புனல்படிந்து
திருநீறணிந்து ருத்ராக்ஷ மணிபூண்டு
நெஞ்சினி லெழுமன்பி னொடு [1]சந்தி வந்தனம்
நிலைதரு சிவபூஜை புரிகுவ ருடனுண்டு (சொல்லும்)

2 விஞ்சை தருவேத புராணங்க ளோதிடுவோர்
விருப்புடன் பெரியோர்பா லிருப்பார்கேள் வியினீண்டு
கஞ்சமலர்த் தாரினர்க்குஞ் செம்பொன்முதற் றனங்கள்
கனக்கவே செய்வரிந்தக் காலங்களிற் கூறாதே (சொல்லும்)

3 மச்சங்கொங் கணமீழ மலையாளஞ் சாளுவம்
வங்காளந் துலுக்காண மராடஞ்சீ னத்தோடு
கொச்சி முதலான தேசமன் னவர்வந்து
கூடிப் பணிந்துநிற்குஞ் சமயத்தி லுரையாதே (சொல்லும்)

4 மெச்சுமதி மந்திரிமார் தளகர்த்தர் முதலான
மேலோர்தஞ் செய்கைசொல்லி வினவுங்காற் பகராதே
கச்சணி முலைமாதர் நடனஞ்செய் வேளையினும்
கவிவாணர் பிரசங்கஞ் செய்போதும் புகலாதே (சொல்லும்)

5 நீலத் தடங்கண்மாதர் தூதுக ளங்கங்கே
நீள்கடை தோறுநிற்குஞ் சமயம்பார்த் தன்பாலே
சாலப் பெருஞ்சேனை சூழப் பவனிவரத்
தாம்வரு மகராஜர் சபையதன் முன்பாலே (சொல்லும்)

6 பாலுற்றிடும் போதவ் வாசற் புறநின்று
பணிந்துரைத் தாலது பலித்திடு நம்பாலே
மாலுற்ற துவும்நான் மேலுற்ற துஞ்சொலி
மாலைகைக் கொண்டிங்கு [2] வந்திடு கென்பாலே (சொல்லும்)

(கு - உரை.) 2. கஞ்சமலர்த்தாரினர் - அந்தணர்; கோடீச். 361. கனக்க - மிகுதியாக. 4. தளகர்த்தர் - சேனாதிபதிகள். 5. நீலம் தட கண் - குவளைமலரைப்போன்ற விசாலமாகிய கண்களையுடைய. தூதுகள் - தூதுவந்தவர்கள். கடைதோறும் - வாயில்கள்தோறும். 6. பால் உற்றிடும்போது - பக்கத்திற்செல்லும்போது. மால் - மயக்கம். வந்திடுகு என்பாலே. (௨௭)

பி - ம். 1 'சந்தியாவந்தனம்' 2 'வந்திடு பெண்பாலே'

## பாங்கியைத் தூதுவிட்ட மதனவல்லி இரங்கல்.

28. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சொன்னவிந்த வகையெல்லா மதன வல்லி
சொல்லி [1] யந்தப் பாங்கிதனை விடுத்தா ளந்த
[2] மின்னிடையாள் மதயானைக் குலஞ்சூழ் தஞ்சை
வீதிதனிற் பிடியெனவே நடந்தாங் கெய்தி
மன்னர்பிரான் சரபோஜி மன்னன் றன்பால்
வகுத்துரைக்குஞ் சமயமெதிர் பார்த்து நின்றாள்
அன்னதற்கு [3] ளவளவளை வரக்கா ணேனென்
றுற்றுமற் சிலசொற்க ளறைகின்றாளே.

(கு - உரை.) அவள் - மதனவல்லி. அவளை - பாங்கியை. (உஅ)

வசனம்.

தூது சொல்லப்போனவள் இன்னும் வரவில்லையென்று மோகினி சொல்லுகிறாள்.

29. அடாணு ராகம்—[4] சாபு தாளம்.

பல்லவி.

இன்னம் வரக்காணேனே சகியைநான்
இன்னம் வரக்காணேனே

அனுபல்லவி.

மன்னர் புகழுந்தென் றஞ்சைச் சரபோஜி
மன்னன்பாற் றூதுசென்ற கன்னிகை தனையிங்கே (இன்னம்)

சரணங்கள்.

1 பாவாயென் றேனிங்குப் பாவாயென் றாளந்தப்
பாவிக்கென் னாவி பதைப்புத் தெரியாதே
காவாய்க் குயிலினங் கூவி வதைக்குது
காமன் கணையென்மே லோவா துதைக்குது (இன்னம்)

2 பாலனஞ் செய்திடன் பாலனை மேயென்றேன்
பாலனங் கொண்டுநின் பால்வரு வேனென்று

பி - ம். 1 'சொல்லிவந்தப்' 2 'மின்னிடைவன்' 3 'அவளைவரக் காணேனே யென்' 4 மிசிரதாளம்.

மேலகன் ருள்மதி தாமதி யாள்சொல்லும்
வேலை தெரிந்துநிற்பாள் போல விருக்குது (இன்னம்)

3 சகியேயென் றேன்சற்றுச் சகியேயென் றளவள்வஞ்
சகியேயிப் படியென்னைத் தவிக்கவிட்டுச் சென்றாள்
மகிபாலன் சரபோஜி மன்னன் றனக்கிசைந்தால்
வருவான் வரச்சொல்வான் மாலையா கினுங்கொடுப்பான்
(இன்னம்)

(கு - உரை.) 1. பா ஆய் - பாட்டுக்களை ஆராய்ந்திரு; "பாவாய்வண் பாவாய் கிலர்போல நிற்றல்பண் பாவுனக்கே" (கோடீச். 6.) காவாய் - சோலையினிடத்தேயுள்ள. ஓவாது - ஒழியாமல். 2. அனமே அன்பால் பாலனம் செய்திடு; பாலனம் - பாதுகாப்பு. பாலனங்கொண்டு - பாற் சோற்றைக்கொண்டு. சொல்லும்வேலை - அறிவிக்கும் செவ்வியை. 3. சகியே என்றேன் - பாங்கியே என்று அழைத்தேன். சற்றுச் சகியே - சிறிது பொறுத்திரு. அவள் வஞ்சகியே - அவள் வஞ்சகத்தையுடையவள். (உக)

குறத்தி வருதல்.

வசனம்.

இப்படித் தூதுபோன சகியை வரக்காணேனென்று மோகினி சொல்லிக் கொண்டிருக்கிற வேளையில் அங்கே ஒரு குறத்தி வருகிறாள்.

30. நேரிசை ஆசிரியப்பா.

இப்படி யிவர்க ளிருந்திடு காலையில்
மைப்படி விழியளோர் மலைக்குற மடந்தை
மும்மதக் களிற்றின் முகபடா மென்ன
வெம்முலைத் தடத்தின் மேற்கச் சணிந்து
5 மதன்கொலு மண்டபம் வளைத்திடு திரைபோல்
விதமுறு சித்திர மென்றுகி லுடுத்துப்
பிரியலென் [1]றவ்வேள் பிடித்தகை விரல்கள்போல்
மருவிடு முன்கை மணிவளை வனைந்து
சந்திர னிரண்டெனத் தந்திவெண் கோட்டுச்
10 சுந்தரத் தோடு தொகுசெவி [3] யணிந்து
குன்றிமா மணியுங் குலச்சங்கு மணியும்

பி - ம். 1 'றவள்வேள்' 2 'மிலைந்து' 3 'அலைந்து'

துன்றிடு கவடியுந் தொகுத்திடு பணிகளும்
புலிப்பற் றாலியும் புனைந்துமாத் திரைக்கோல்
வலக்கையி லேந்தி மணிக்குறக் கூடை
15 மருங்கினி லிடுக்கி வசிகரத் திலகம்
இருங்கதிர் நெற்றி யிடைத்தரித் தெய்தி
சிருஅ பொருளாற் றிடத்திறற் றனக்கு
நேரிலா தோங்கிய நேரிமா மலையும்
ஞாலந் தன்னி னண்ணிடு முயிர்க்கெலாம்
20 காலமோர்ந் துதவுங் காவிரி நதியும்
பொன்னுல கென்னப் புவிபுகழ் சிறப்பு
மன்னிய சோழ வளநா டதுவும்
சக்கர வாளமுந் தகுபுறக் கடலும்
இக்குவ லயத்தை யினிதுசூழ்ந் திடுதல்போல்
25 கார்வளர் மதிலும் நீர்நிறை யகழியும்
மஞ்சுறக் [1] கலவும் தஞ்சைமா நகரும்
பற்றலர் குழுவைப் பகர்புறத் தொதுக்கி
வெற்றிகொண் டிலகும் வெற்றிமா லிகையும்
உச்சையிச் சரவமா முயர்பரி யென்ன
30 இச்சையி னெழிலின் மிகுபரித் திரளும்
நிலவுமெண் டிசையினு நிலவுறு மிபங்கள்போல்
குலவிடு முன்றில்சூழ் குஞ்சரக் குலங்களும்
பூமிவா ழரசர் பொருந்துசீ ரெவற்றினும்
[2] தாமுயர் வினமென நாட்டிய பதாகையும்
35 மன்றல்பே ருதவி வலனுறு வெற்றியால்
முன்றிலின் முழங்கு மூவகை முரசும்
மானமுற் றிலங்கு மனுநூன் முறையே
நானிலந் துதிக்க நடத்துசெங் கோலும்
பிரகதி சுரர்தம் பேரரு ளாற்பெறு
40 சரபோஜி மன்னர் தமையெதிர் போற்றி
அன்னவ ருதவிய வளவில்பொற் பணிகளும்
மன்னெழிற் கலைகளும் வரிசையாக் கொண்டே
ஆவணஞ் சந்திக ளணிநெடு வீதிகள்
மேவியங் கிருக்கு மின்னா ரெவர்க்கும்

பி - ம். 1 ‘குலவும்’ 2 ‘தாமுயரினம்’

45 கையினிற் காலிற் கலந்திடு ரேகையும்
மெய்யுறு மறுவொடு விளங்கிடு தழும்பும்
சுழிகளு மின்னுந் தோற்றுசில் குறிகளும்
விழியினு ளோக்கி மெய்ப்பல னுரைத்திட்
டவரவ ருதவிடு மணிகளுங் கலைகளும்
50 குவிதரு நிதியுங் கொடுவர வன்னாள்
குறிப்புவரு நெறிப்புமொழி முறுக்குமதி லுருக்குநிறை
களிப்புமிசை நெளிப்புமியல் பசப்புமுலை யசைப்புமெதிர்
கண்டிளைஞ ரானவர்கண் மண்டியரு கேயுலவ
கெண்டைவிழி யாயொருசொ னின்றுசொல டியுரிய
55 தொண்டரல வோவெளிய மின்பமுற வேபுகலும்
உனது [1]மனமறிய மனது பதறுதடி
எனமு னவிலமிக வவளு நலதுபினர்
வந்துசொலு வேனதுங்கள் சிந்தைமகிழ் கூரவிங்கு
நின்றிடுக நின்றிடுக வென்றுரைசெய் தந்தமிகு
60 கயலிரண் டிலகு கலைமதி தன்மேல்
புயல்புறஞ் சூழப் பூத்ததோர் கொடியோ
புவியினில் வந்து பூண்பல புனைந்து
நவிலனம் போல நடந்திடு மின்னோ
இரதியோ வரம்பையோ வெழிலூர் வசியோ
65 திருவெனு மடந்தையோ திலோத்தமை தானோ
என்னவொண் ணுதலா ரியல்கண நடுவே
மன்னிவீற் றிருக்கு மதன வல்லிதன்
பொன்மனைக் கெதிருறப் பொற்பு
மன்னிடு மறுகினில் வந்தணைந் தனளே.

(கு - உரை.) 1. மை படி-அஞ்சனம் படிந்திருக்கின்ற. 3-4. "கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர், படாஅ முலைமேற் றுகில்" (குறள். 1087.) 7. பிரியல் - பிரியாதே. 7 - 8. வளைகளுக்கு மன்மதன் விரல்கள் உவமை. 12. கவடி - பலகறை (சோழி.) 13. புலிப்பற்றாலி: "புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி" (அகநா. 7.) மாத்திரைக்கோல் - குறத்தி வைத்துக்கொள்ளும் ஒரு கோல்; "சீர்பெறுதன், அங்கையிற் கோலை யதினீட்டி" (பெருவுடை. 194.) 14. மணி - அழகு. குறக்கூடை; சா. குற. 63. 15. மருங்கினில் - இடையில். 13 - 5. மாத்திரைக்கோலும் குறக்கூடையும்: "கூடல்வளைக் கரமசைய மாத்திரைக்கோ லேந்திமணிக்

[1] பி - ம். 1 'குறியறிய'

கூடை தாங்கி, மாடமறு கூடுதிரி கூடமலைக் குறவஞ்சி வருகின்றாளே" (குற்றாலக்குறவஞ்சி, 39); "மாத்திரைக் கோலு மருங்கினில் வற்றுப், பாத்திர மான பருங்குறக் கூடையும்" (கும்பேசர் குறவஞ்சி); "குலவிய செம்பொற் குறப்பெட்டி யேந்தி, மலரெனுங் கரத்தின் மாத்திரைக் கோலுங், கொண்டு" (திருவாரூர்க் குறவஞ்சி); "சாத்திரம் புகலு மாத்திரைக் கோலும், தடக்குறக் கூடையு மிடுக்குநற் பேடை" (அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி.) 17. இதுமுதல் சரபோஜியரசர் தசாங்கம் கூறப்படும். 18. நேரிமாமலை முன்பு இருந்ததென்றும் பின்பு அகத்தியரால் அழுத்தப்பட்டதென்றும் சேவ்வந்திப்புராணம் கூறும். மஞ்சு உற - மேகம் தங்க, அழகுபொருந்த. 20. காலமோர்ந்துதவுங் காவிரி: "ஆர்புனை வளவர் நாட்டினிற் கால மறிந்துவந் துதவிடும் பொன்னி" (திருவிடை. உரோமசச். 25.) 23 - 6. (சா. குற. 3.) 27. பற்றலர் - பகைவர். 28. மாலிகை -.மாலை. உச்சையிச்சரவம் - இந்திரனது குதிரை. 31. இபங்கள் - யானைகள். 32. முன்றில் - வீட்டுவாயில். 34. உயர்வினம்- உயர்ச்சியையுடையேம். பதாகை-பெருங்கொடி. 35. மன்றல்-கல்யாணம். பேருதவி - கொடை. 36. மூவகை முரசு - மணமுரசு, கொடைமுரசு, வெற்றிமுரசு; "மூவகை முரசு முழங்குமண் டபத்தான்" (கும். குற.) "மூவுலகும் புகழ்ந்திடவே மும்முரசறையும் வாசலிது" (அர்த்த. குற.); "மேன்மைமும் முரசும் விளங்கிய வாசலான்" (திருமலை. குற.) 37. மானம் - பெருமை. 42. கலைகளும் - ஆடைகளும். வரிசை - முறை. 43. ஆவணம் - கடைவீதிகள். சந்திகள் - முச்சந்தி, நாற்சந்தி. 45. கலந்திடு ரேகையும். 50. வர - குறத்திவர. அன்னாள் - அக்குறத்தியுடைய. 51. குறிப்புவரு - குறிப்பைப் புலப்படுத்தும். நெறிப்பும் - கண்ணை நெறித்தலும்; "விறற்றனு வுருவைப் பறித்திடும் புருவ, நெறிப்புடனகைத்து" (அர்த்த. குற.) மொழி முறுக்கும் - சொற்களின் கம்பீரமும். அதில் - அச்சொல்லில். உருக்கும் - உருக்கமும். 53. மண்டி - மேற்சென்று. 54. "ஒருவார்த்தை சொலடீ" (கும்பேசர் குறவஞ்சி.) 57. என முன் நவில. நலது: உடன்பாட்டுக்குறிப்பு; "நலதிப்படியே நாஞ்செய்தால்" (71) என்பர்பின். 59. அந்தம் - அழகு. 60. கயலென்றது கண்களை. கலைமதி என்றது முகத்தை. 61. புயல் கூந்தல். 69. மறுகு- வீதி. குறத்தி வந்தனைந்தனள். (௩௦)

மதனவல்லிக்குப்
பாங்கி குறத்திவருதலைக் கூறுதல்.

31. வெண்பா.

இந்தவகை யிக்குறத்தி யெய்துமிதை யேயொருபூங்
கொந்திலகு கோதையினாள் கூறுகின்றாள்—வந்துநின்று

மண்டலம் போற்றுஞ் சரபோஜி மன்னவனைக்
கண்டுமயல் கொண்டவளைக் கண்டு.

(கு - உரை.) கோதையினுள் - பாங்கி. மயல்கொண்டவளை - மதன வல்லியை. கண்டுமயல் கொண்டு: "பண்டுமைக்கோர் பால்கொடுத்த பண்பனைக்கோ டீச்சுரத்துக், கண்டுமயல் கொண்டு" என்பது இந் நூலாசிரியரியற்றிய தனிப்பாடல். (௩௧)

32. பியாகடை ராகம்—ஆதி தாளம்.

பல்லவி.

குறத்தி வருகிறாளம்மா குறிசொல்லும்
குறத்தி வருகிறாளம்மா.

அனுபல்லவி.

பொறுத்த புகழ்த்தஞ்சைப் புரத்தின் வளர்சர
போஜி நரபதி மேவு மெழில்கண்டு
திறத்தின் மிகுமயல் பரித்த சிலைநுதல்
கறுத்த கயல்விழிச் சிறுத்த கொடியிடை (குறத்தி)

சரணங்கள்.

1 தங்கக் குடமன கொங்கைத் துணைகளிற்
சந்தக் களப மிலங்கவே
சங்கக் குலவளை செங்கைப் புதுமலர்
தங்கிக் [1] கலினென் றலங்கவே
சிங்கத் துவளிடை பொங்குற் றிடுமெழில்
சிந்தித் தெவரு மயங்கவே
கங்குற் [2] கணுமொளிர் கஞ்சப் பதநடைக்
கஞ்சப் பெடைக [3] ளுயங்கவே (குறத்தி)

2 கன்ன மதிலணி பொன்னி னுறுகுழை
மின்னு மொளிவுற மின்னவே
வன்ன நறுமலர் [4] நண்ணு குழலெழில்
[5] மன்னு மதனடி பின்னவே
பன்னு குழன்மிசை யண்ணலளிகுலம்

---

பி - ம். 1 'கலிரென்' 2 'கணையொளிக் கஞ்சப்படநடை' 3 'ஒதுங்கவே' 4 'கண்ணிக் குழலெழில்' 5 'மன்னுதனதடி'

முன்னு மிசையெதிர் துன்னவே
1 அன்ன ளடிபுனை சொன்ன பரிபுரம்
இன்னள் பதுமினி யென்னவே (குறத்தி)

3 மாசு தவிர்பிறை யாசை கொளுநுதல்
ஈசர் மகிழ்பொடி பூசியே
பாச விளைஞர்க டாச ரெனவுற
மோச விழிவலை வீசியே
கோசு களினியல் வாச முளகுறி
நேச முடனேவி லாசியே
தேசி னுயர்சர போசி யெனுமக
ராச னுறுபுகழ் பேசியே. (குறத்தி)

(கு - உரை.) அனு. பொறுத்த புகழ் - புகழைத்தாங்கிய. பரித்த - தாங்கிய. கொடியிடை : விளி; விளித்தது மதனவல்லியை. 1. சந்தக்களபம் - கலவைச்சந்தனம். அலங்க - அசைய. சிங்க இடை, துவளிடை யென்க. கஞ்சுற் கண்ணுமொளிர் கஞ்சம் : இல் பொருளுவமை. அஞ்சப் பெடைகள் - பெண் அன்னங்கள். உயங்க - வருந்த. 2. கன்னமதில் - காதில். ஒளிவுற - ஒளிக்க. எழில் - எழிலால். மதன் - மன்மதன். அண்ணல் அளிகுலம் - பெருமையையுடைய வண்டுக் கூட்டம். சொன்ன பரிபுரம் - பொற்சிலம்பு. 3. ஈசர் மகிழ்பொடி - திருநீறு. தாசர் - ஏவலாளர். கோசுகளில் - குரோசதூரத்தில்; கோயுமாம்; கோய் - வாசனைப் பொருள்வைக்கும் செப்பு; சீவக. 764. விலாசி - அழகுறச்செய்து.(௩உ)

## குறத்தி மதனவல்லியிடம் வருதல்.

### வசனம்.

இப்படி, குறத்தி வருகிறாளென்று சொன்ன சகியைப் பார்த்து மோகினி அவளை இங்கே அழையென்றாள். அவளும் அழைக்கக் குறத்தி வருகிறாள்.

33. கேளவிபந்து ராகம்—சாபு தாளம்.

### பல்லவி.

குறவஞ்சி வந்தாள் மோகனக்
குறவஞ்சி வந்தாள்.

---

பி - ம். 1 'அன்னநடைபுனை'

அனுபல்லவி.

திறமுந் திருவும் நெறியு முறைதஞ்சைச்
செழுநகர்ச் சரபோஜி மகராஜ னருள்பெற்ற (குறவஞ்சி)

சரணங்கள்.

1 தரணியி லெங்கணு மதமொடு சென்று
தண்மலர்க் கணைகொண் டெவரையும் வென்று
வருமத னனேயடா வாய்த்ததோ வின்று
வாவெதி ரொருகை பார்ப்போமிங் கென்று (குறவஞ்சி)

2 கூடைகட்டலை முறங் கட்டலையோ வென்னக்
குயில்கூவு தல்போலக் கூவிக்கொண் டன்னப்
பேடென்ன நடந்தெழின் மயிலென மின்னப்
பெருமய லுடன்மகிழ்ந் தாடவர் துன்னக் (குறவஞ்சி)

3 பச்சை குத்தலையா வடியம்மே [1] பிச்சை
பகர்குறி கேளுங்கள் சொல்கிறேன் விச்சை
இச்சகத் தனைவருங் கேட்பவ ரிச்சை
எனச்சர பேந்திரன் றனைப்போற்றி மெச்சி (குறவஞ்சி)

(கு - உரை.) 1. வாய்த்தது - போர்செய்தற்குரிய சமயம் வாய்த்தது. 2. கூடை கட்டலையோ என்ன ஓகாரத்தை முன்புங்கூட்டுக. கட்டலையோ - கட்டவில்லையோ. அன்னப்பேடு - பெண் அன்னம். ஆடவர் - ஆண்மக்கள். துன்ன - நெருங்க. 3. விச்சை - மந்திரம். விச்சையையும் இச்சையையும் சொல்லுகிறேனென்க. (௩௩)

## குறத்தி வாசல்வளங் கூறுதல்.

34. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

நண்ணுபுகழ்ச் சரபோஜி மன்னன் றஞ்சை
நகருறையு மதனவல்லி மானே யந்த
[2] வண்ணமலைக் குறத்திதனை யழைத்தி டென்றாள்
வந்துரைத்தாள் சென்றழைத்தாள் வந்து நின்று
விண்ணிடைச்சென் றுடுக்கணத்தைத் துகிற்ப தாகை
மேதினியி லுதிர்க்குமுயர் மனையை நோக்கி
ஒண்ணுதற்சிற் றிடைத்தொடிக்கை யணைய வஞ்சி
உளங்களித்து மணிவாசல் வளஞ்சொல் வாளே.

---

பி - ம். 1 'பச்சை' 2 'வண்ணமுலை'

(கு - உரை.) மதனவல்லி : எழுவாய். மானே யென்றது ஒரு தோழியை. வந்துரைத்தாள் - குறவஞ்சியின் வரவை முன்புவந்து சொன்னவள். உடுக்கணத்தை - நட்சத்திரக்கூட்டங்களை. பதாகை - பெருங்கொடி. கொடி உடுக்களை உதிர்த்தல்: "கொடிகளினீட்டம், ஆங்கிரு விசும்பி னவிருடுத் திரளை யடித்துதிர்த் திடுகின்ற தென்ன" (திருவிடை. நகர. 17.) மனை - அரண்மனை. வஞ்சி - குறவஞ்சி. வாசல் வளம் - சரபோஜி மன்னருடைய வாயிலின்வளத்தை. (௩௪)

## வாசல்வளம்.

35. **பரசு ராகம்—திச்ர தாளம்.**

**கண்ணிகள்.**

1 வாசலிது வாசலிது மகராஜன் வாசலிது
தேசுறுபோ சலகுலத்தைச் செழிக்கவைக்கும் வாசலிது
(வாசலிது)

2 நன்னயஞ்சேர் தஞ்சைதனி னலம்பெருகும் வாசலிது
மன்னுசர போஜிமன்னன் மகிழ்ந்திருக்கும் வாசலிது
(வாசலிது)

3 திருமகளு நாமகளுஞ் சிறந்திருக்கும் வாசலிது
வரமுதவும் பெரியோர்கள் வாழ்த்திசைக்கும் வாசலிது
(வாசலிது)

4 விதிதரும்வே தாகமங்கள் விளங்குமணி வாசலிது
சதுரங்க சேனைகளுஞ் சந்ததஞ்சூழ் வாசலிது (வாசலிது)

5 நேசமுறு சேனைகட்கு நிதியளக்கும் வாசலிது
பூசுரர்க்கும் புலவோர்க்கும் பொன்சொரியும் வாசலிது
(வாசலிது)

6 இத்தரணி மன்னரெல்லா மிறைஞ்சிநிற்கும் வாசலிது
மொய்த்திடுசீர் மும்முரசு முழங்குமணி வாசலிது
(வாசலிது)

(கு - உரை.) 4. விதி - விதித்தல் ; பிரமாவுமாம். மணி - ஆராய்ச்சி மணி ; பெருவுடை. 100. சந்ததம் - எப்பொழுதும். 6. மும்முரசு - கொடை முரசு, வெற்றிமுரசு, மணமுரசு ; சீ. குற 30 : 35 - 6. (௩௫)

## மதனவல்லி குறத்தியை வினவல்.

**வசனம்.**

இப்படி வாசல்வளங்கூறிய குறத்தியைப் பார்த்து மோகினி யாகிய மதனவல்லி நீயாரென்று கேட்கிறாள்.

36. சஹானா ராகம்—1 அட தாளம்.

பல்லவி.

வாசல் வளமிங்கே நேசமுடனே சொல்லும்
மடந்தையே நீயாரடி

அனுபல்லவி.

தேசமெங் கும்புகழ் வீசு மெழிற்றஞ்சை
வாசன்சர போசிமக ராச னுயர்மனை (வாசல்)

சரணங்கள்.

1 வானுல கத்துறு மேனகை யோவென்று
வையகத் தோரெண்ண மறுகுதொறுஞ் சென்று
மானினி யார்கைக் குறிகள் சொல்லியின்று
வடிவமுற்றிடு மடமைமென்மயி
லெனமுன் வந்துபின் இனிதுகந்திட (வாசல்)

2 கனத்திடு குறக்கூடை யெடுக்குமின் னிடையும்
கைவீச் சுடனன்ன மன்னமென் னடையும்
சினத்திடும் வேல்கணை யனவிழிக் கடையும்
திருகவாடவர் [2]மனது நாடொறும்
உருகமாமயல் பெருகவந்தெழில் (வாசல்)

3 மருவிநின் பேரொடு வளர்தேசப் பேரும்
மலைவளத் துடனுங்க ளொருசாதிச் சீரும்
திருவுநீ யறிந்திடு நதிகளு மூரும்
[3] திரமு நீபெறு வரமுமேலத
னுரமுநானெதி ரறியவோதிடு (வாசல்)

(கு - உரை.) 1. மானினியார் - மகளிர். கைக்குறிகள் - கையிலே யுள்ள இரேகைகளின்பயன். 2. ஆடவர்திருக ; திருக - மாறுபட. 3. திரம் - நிலை.

(௯௬)

குறத்தி சாதிவளம் கூறுதல்.

வசனம்.

இப்படி கேட்ட மோகினியைப் பார்த்துக் குறத்தி தன் சாதிவளம் கூறுகின்றாள்.

---

பி - ம். 1 மிசிரதாளம் 2 ‘மனதைநீடது’ 3 ‘திறமு’

37. சௌராஷ்டிர ராகம்—1 திச்ர தாளம்.

பல்லவி.

எங்கள் குறச் 2 சாதிவள மெடுத்திசைப்பே னம்மே சாதிவளம்
எடுத்திசைப்பே னம்மே

அனுபல்லவி

மங்களஞ்சேர் தஞ்சைநகர்ச் சரபநர பாலன்
மகிழ்ச்சியுட னுளமிந்தப் புவிக்குளுயர் மின்னே (எங்கள்)

சரணங்கள்.

1 மானினொடு பன்றிமறை யொளிவிருந்து கொல்வோம்
வந்தெதிர்த்தோர் தங்களைமேன் மிஞ்சவிடோம் வெல்வோம்
கானகத்திற் 3 கிழங்கானை மருப்பதனைற் கெல்வோம்
கைக்குறிகண் மெய்க்குறிக ளெக்குறியுஞ் சொல்வோம் (எங்)

2 வாவுமொரு முயலைவிட்டு மதகளிற்றைப் பிடிப்போம்
மணலதனைத் தகவறுத்து வருதைலம் வடிப்போம்
மேவுமவ லிடிப்பதுபோ லுரலதனை யிடிப்போம்
மேன்மைதனக் கிழிவுவரின் மிகவதற்குத் துடிப்போம் (எங்)

3 செந்திருமா லென்றனக்கு மைத்துனன்கா ணம்மே
திங்களணி சிவனெனக்குத் தமையன்முறை யம்மே
அந்தமிகுங் கந்தனெங்கண் மருமகன்கா ணம்மே
அன்னநடை வள்ளியெங்கள் கன்னிகைகா ணம்மே (எங்)

4 மாமனைமுன் கைப்பிடிப்போங் கொழுந்தனொடு படுப்போம்
வாழுமெங்கள் சாதிமெத்த மானமுள்ள சாதி
நாமமுறு மாமிதனைத் தாயெனவே மதிப்போம்
நாத்தியெனுஞ் சொல்லுரையோம் போற்றிடுவோம்நீதி (எங்)

(கு - உரை.) 1. ஒளிவு இருந்து-மறைவிடத்தில் இருந்து. கிழங்கு - கிழங்கை. கெல்வோம் - தோண்டுவோம். 2. வாவும் - தாவும். வாவும்... பிடிப்போம்: "கான முயலெய்த வம்பினில் யானை, பிழைத்தவே லேந்த லினிது" (குறள். 772.) மேவுமவல்......இடிப்போம்: "அவலை நினைத்து உரலை இடிப்பது" என்பது ஒரு பழமொழி. 3. திருமாலை மைத்துன னென்றது வேடர்தலைவனை குகனுக்குத் தமையனென்பதுபற்றி. சிவ

பி - ம். 1 மிசிரதாளம் 2 'சாரி வளமெடுத்துரைப்பேன்' 3 'கிழங் கையானை'

னைத் தமையனென்றது பல காலங்களில் அவர் வேடவடிவங்கொண்டது பற்றி. 4. நாமம் - அச்சம்; புகழுமாம். "கொழுந்தனை யழைத்தொரு குடிசைக்குட் படுப்போம்" (கும். குற.) "தம்பிமனைவியைத் தமையன் விரும்புவான்" (அர்த்த. குற.) நாத்தி - நாஸ்தி; இல்லை. இதில் நாத்தூணரென்ற பொருளும் தொனிக்கின்றது. நீதியைப் போற்றிடுவோம்.

## குறத்தி மலைவளம் கூறுதல்.

**வசனம்.**

அதன்பிறகு மலைவளஞ் சொல்லுகின்றாள்.

38. **பைரவி ராகம்—ஆதி தாளம்.**

**பல்லவி.**

மலைவளஞ் சொல்வேன்கே ளம்மே நானறிந்த
மலைவளஞ் சொல்வேன்கே ளம்மே

**அநுபல்லவி.**

சிலைவளங்கொள் சரபோஜி மன்னர்தென் றஞ்சைத்
திருநகர் தனில்வாழு மருமலர்க் கோதாய் (மலைவளம்)

**சரணங்கள்.**

1 மல்லிகார்ச் சுனமெனவோர் விண்டு
மனத்தொன் றதிலெண்ணிக் கொண்டு
மகிழ்ந்தேறி விழுந்தவர்கள் பண்டு
மதித்ததெல் லாமடைவர் கண்டு (மலைவளம்)

2 சொல்லுமதைப் புகழுமிந்த ஞாலம்
தொகுபணிக்கு மயில்களினின் சாலம்
தோகைநிழ லுதவியனு கூலம்
தோற்றிடவே யாற்றும்பகற் காலம் (மலைவளம்)

3 கன்மாம் பொதியமலைச் சித்தர்
கருத்தினில் வெகுபரி சுத்தர்
கறைக்கண்டர் தமக்கவர் பத்தர்
காலங்கள் பலகண்ட நித்தர் (மலைவளம்)

4 தினமுஞ் சிவாகமம் படிப்பார்
சித்தாந்த மேபெரிதாய் முடிப்பார்

செறிந்திடைம் புலன்களை யடிப்பார்
சிவபதம் நிலைபெறப் பிடிப்பார் (மலைவளம்)

5 [1] இனுமதி லொருநெல்லி யடுக்கும்
எடுத்தருந் திடின் [2] மூப்பைத் தடுக்கும்
எழினுறு மிளமையைக் கொடுக்கும்
[3] இமையவ ருணவினைக் கெடுக்கும் (மலைவளம்)

6 தனுவாய் வளைந்ததொரு வெற்பு
தழலா யெழுந்ததொரு வெற்பு
சலமாய் நிறைந்ததொரு வெற்பு
தனிக்குடை யானதொரு வெற்பு (மலைவளம்)

7 திருவுட னொருமலை வாழும்
தேறிரு கழுகதிற் சூழும்
தெரிசிக்கி னதைப்பிறப் பேழும்
சேர்ந்துமேற் றொடராம லாழும் (மலைவளம்)

8 தரணியிற் பலவுள நாகம்
தருமதி சயங்கள நேகம்
தந்திகர் சரபோஜி மன்னர்
தஞ்சைக் கணிதரும் வஞ்சி (மலைவளம்)

(கு - உரை.) அனு. மரு - வாசனை. 1. விண்டு - மலை. 2. பணிக்கு - பாம்புக்கு. சாலம்-கூட்டம். தோகை-கலாபத்தினுடைய. ஆற்றும்-செய்யும். 4. செறிந்திடு ஐம்புலன்களை. 5. இமையவர் உணவினைக் கெடுக்கும் - அமிழ்தத்தைச் சுவையினாற் கீழ்ப்படுத்தும்; "நெல்லி, அமிழ்துவிளை தீங்கனி" (சிறுபாண். 100 - 101.) 6. தனுவாய்வளைந்ததொரு வெற்பு - மேரு; தனு - வில். தழலாயெழுந்தது திருவண்ணாமலை. சலமாய் நிறைந்தது தீர்த்தகிரி. தனிக்குடையானது கோவர்த்தனகிரி. 7. திருவுடன் - செல்வத்துடன். ஒருமலை - திருக்கழுக்குன்றம். அதில் இருகழுகு சூழும். அதைத் தெரிசிக்கின் பிறப்பேழும் மேலேசேர்ந்து தொடராமல் ஆழும்; ஆழும் - அழுந்திவிடும். 8. நாகம் - மலை. வஞ்சி - வஞ்சியே. (௩௮)

## மதனவல்லி வினவுதல்.

**வசனம்.**

மோகினி, 'உன் சொந்தமலை எது ?' என்று கேட்கிறாள்.

---

பி - ம். 1 'இனி மலையிலொரு' 2 'மூப்பைக்கெடுக்கும்' 3 'இமையவருணர்வினை'

39. எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

நிலவுமதி [1] புனேவேணிப் பிரக நீசர்
நிகழ்கருணை [2] யேற்றினிய வரங்கள் பெற்றே
உலகுபுரந் தருள்சரப நிருபர் தஞ்சை
உயர்நகரி லனம்போல நடந்து வந்து
திலகநுதன் மயில்போல நின்று நீடு
சிறந்தபசுங் கிளிபோலப் பேசு மின்னே
குலவுமிந்த மலைகளுக்கு ளுனது சொந்தக்
குடிசையெந்த மலையிலதைக் கூறு வாயே. (௩௧)

குறத்தி தான் வாழும் மலையைக் கூறுதல்.

வசனம்.

குறத்தி சொந்தமலை சொல்லுகிறாள்.

40. ஆனந்தபைரவி ராகம்—[3] தீர்த்ர தாளம்.

[4]பல்லவி.

குடிசைவைத்து வாழுமலை கூறுவன்பூங் கொடியே
கோகிலமே யனப்பெடையே குலவுமிளம் பிடியே

சரணங்கள்.

1 தங்கமகா மேருவினிற் றண்குடிசை தொடுத்தோம்
சாபமலை யென்றுரைத்தார் தாபமொடு விடுத்தோம்
சங்கரனார் கைலைமலை தனினுறையச் சென்றோம்
தவப்பூத கணங்கள்கண்டோஞ் சிவப்பிரீதி யென்றோம் (குடி)

2 திங்களணி காளத்தி கண்டதனை நயந்தோம்
திண்ணன்கண்ணைப் பறித்ததுமுன் னின்னதென்றார் பயந்தோம்
அங்குலவு குற்றால மலையினுறப் போனோம்
அருவியின்மூழ் கிடுவிரென்றார் நழுவிவர லானோம் (குடிசை)

3 ஏறிவட வேங்கடத்தி லிருக்கவிடம் பார்த்தோம்
இன்னதுமால் கொண்டமலை யென்றுரைத்தார் தீர்த்தோம்
ஈறிலுயர் பழனிமலை யினிதெனவே குறித்தோம்
இடும்பன்மலை யெனப்புகன்றார் திடங்கொளதை வெறுத்
தோம் (குடிசை)

பி - ம். 1 'புனல்வேணி' 2 'பெற்றினிய' 3 ரூபகதாளம் 4 கண்ணிகள்

4 தூறுமுகில் சூழுமொரு தூயமலை தொட்டோம்
தூங்கன்மலை யீங்கிதென்று ராங்கதனை விட்டோம்
கூறுபுகழ்ச் சேரலன்றன் குவடணைந்தோ மப்பால்
கொல்லியிது வென்றுரைத்தார் தள்ளிவந்தோ மிப்பால்
(குடிசை)

5 விராலிமலை சோலைமலை ஸ்வாமிமலை யம்மே
விளங்குமெங்கள் குலவள்ளிக் குகந்தளித்தோ மம்மே
பிரான்மலையுஞ் சிராமலையும் [1] பிறமலையு மம்மே
பிறைமுடிமேல் வைத்திருக்கும் பிரான்மலைக ளம்மே
(குடிசை)

6 தராதலம்போற் றிடமேவுந் தஞ்சையிலென் நாளும்
தங்குசர போஜிமன்னர் சிந்தைமகிழ்ந் தாளும்
புராதனமா மலையாகிப் புகழ்தவத்தோர் முந்தப்
பொருந்திவளர் நேரியெங்கள் சிறந்தமலை யம்மே (குடிசை)

7 நேரிமலை மேற்குடிசை நிலைக்கவைத்தோ மம்மே
நீடுமது வெங்கள்குடி தழைக்கவைத்த தம்மே
தாரகைகள் போலமுத்தந் தயங்குமதி லம்மே
சந்தமுறு நேரியெங்கள் சொந்தமலை யம்மே (குடிசை)

(கு - உரை.) பல்ல. பிடி - பெண்யானை. 1. தங்கம் - பொன்; தங்க - தங்குதற்கு எனவுமாம். சாபம் - வில்; சபித்தலென்பது மற்றொருபொருள். 2. திண்ணன் - கண்ணப்பநாயனர்; "மேவவருந்திருக்காளத்தி மாமலை மீதிற் குடில்கட்டப் புகுந்தோம் - அதில், வேடுவன் கண்ணைப் பறித்திடுஞ் செய்தியைக் கேட்டு மந்தக்ஷண மகன்றோம்" (பாண்டிக்கொடுமுடிக் குறவஞ்சி.) உற - அடைவதற்கு. மூழ்கிடுவிர் - ஆடுவீராக; மூழ்கியிறந்துவிடுவீர்களென்பது வேறுபொருள். 3. மால் - திருமால், மயக்கம்; சிலேடை. இடும்பன் - முருகக்கடவுளுடைய சேவகன்; இடும்பனென்பது பிறரை அஞ்சுவிக்கும் இயல்பினனைக் குறிப்பதொரு வழக்கச்சொல். 4. தூறும் - துளிக்கும். தூங்கல்மலை - ஆனைமலை; தூங்குதலையுடைய மலையென்பது வேறுபொருள். கொல்லி - கொல்லிமலை; கொல்லுவதென்பது மற்றொருபொருள். 7. முத்திற்குத் தாரகை உவமை: "வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங் கார்வரை மீன்பரப்பிச், சேய்தந்த வானக மானும்" சிற். 130. (சo)

---

பி - ம். 1 'பிராய்மலை', 'பராய்மலை'

## குறத்தி தலமகிமை கூறுதல்.

**வசனம்.**

இப்படி சொந்தமலை சொன்ன குறத்தி தலமகிமை சொல்லுகிறாள்.

**41. [1] அசாவேரி ராகம்—ஆதி தாளம்.**

**பல்லவி.**

தாரணியி லுனறிந்த தலங்களைக்கே ளம்மே நானறிந்த
தலங்களைக் கேளம்மே

**அனுபல்லவி.**

சீருறுதென் றஞ்சைநகர்ச் சரபோஜி மன்னர்
செழிக்கவருள் சரபேசன் றிரிபுவன மறிவேன் (தாரணி)

**சரணங்கள்.**

1 தேசுதருந் தழன்மலையாய்ச் சிவன்விளங்க மாலும்
திசைமுகனும் பாதமுடி தேடருணை யுடனே
[2] நேசமுட னிமயவல்லி நீடுமொரு மாவின்
நிழலிருந்து தவம்புரியே காம்பரநா னறிவேன் (தாரணி)

2 குலவுமிரா வணன்கரத்தா லெடுத்தசிவ லிங்கம்
கோவினது செவியுருவாங் கோகரணத் துடனே
இலகனுறு வரணையசி யிருநதியின் பேரால்
இசைவார ணசியெனு மெழிற்காசி யறிவேன் (தாரணி)

3 கனத்தமறக் குலத்தர்சங் கரன்விழியிற் றமது
கண்ணையெடுத் தணிந்ததிருக் காளத்தி யுடனே
சினத்தின்மிகு திரிபுரத்தைக் கணைப்பொழுதி லீசன்
சிறுநகைசெய் தெரித்திருக்குந் திருவதிகை யறிவேன்
(தாரணி)

4 பதஞ்சலியு முயர்புலிக்காற் பண்ணவனுங் காணப்
பரமசிவ னடம்புரியுஞ் சிதம்பரத் துடனே
கதங்கொடுசூழ் கடலுலகைக் கட்டழிக்கும் போதோர்
கப்பல்வடி வாய்மிதந்த காழிநக ரறிவேன் (தாரணி)

---

பி - ம். 1 சாவேரி 2 'நேசமுளவிமயவல்லி'

5 ஒருகோவி லிடைமூன்று குளமிருக்கு மந்த
ஊரறிவேன் பேரறிவே னோதுமத னுடனே
கருதுமொரு மறையவனைத் தொடர்காலன் றன்னைக்
கண்ணுதல்கால் கொண்டுதைத்த திருக்கடவூ ரறிவேன்
(தாரணி)

6 உமைமயிலாய்ப் பூசித்த வொருதலத்தி னுடனே
ஓங்கிடுமோ ரரசுசிவன் கோயிலுறை தலமும்
கமலைதவஞ் செய்தலமு மிடைமருதுங் குடந்தைக்
கடிநகரு மேரண்ட [1] நகரமுநா னறிவேன் (தாரணி)

7 ஐயாறுஞ் சிரகிரியுந் திருவரங்க நகரும்
ஆனைக்கா வுடன்மதுரைப் பெரும்பதியு மிராமன்
மெய்யான பத்தியொடு சிவனையருச் சித்து
வேண்டுவரம் பெற்றவிரா மேசுரமு மறிவேன் (தாரணி)

(த - உரை.) அனு. சரபேசன் : திரிபுவனத்தில் சரப மூர்த்தி எழுந்தருளியிருந்து விசேஷமாக வழிபடப்பெற்று வருகின்றார். திரிபுவனம் : இத்தலம் திருவிடைமருதூருக்கு மேற்கேயுள்ளது. 1. தழல் மலையாய் - அக்கினிமலையாகி. அருணை - அருணாசலம். மாவின்நிழல் - மாமரத்தின் நிழலில். ஏகாம்பரம் - காஞ்சீபுரம். 2. கோவினது செவி உருவாம் - பசுவினது காது வடிவமாகிய. வரணை அசியென்பன இரண்டு நதிகளின்பெயர். வாரணாசியென்பது காசியின் திருநாமங்களுள் ஒன்று. 3. மறக்குலத்தர் - கண்ணப்பநாயனார். கணப்பொழுதில் - க்ஷணநேரத்தில். திருவதிகை - அட்டவீரட்டத்துள் ஒன்று; இது திரிபுர சங்கார க்ஷேத்திரம். 4. புலிக்காற் பண்ணவன் - வியாக்கிரபாதர். கதங்கொடு .........காழிநகர் : காழி பிரளயகாலத்தில் தோணி வடிவாக வெள்ளத்தின்மேல் மிதந்ததென்பது புராண ஐதிஹ்யம். 5. மூன்று குளம் - சோம புஷ்கரிணி, சூர்யபுஷ்கரிணி, அக்கினிபுஷ்கரிணி; இவை தேவாரத்தில் முக்குளமென்று வழங்கப்பெறும்; "வெண்காட்டு முக்குளநீர்" (திருஞா.) இவற்றுள் முதலிரண்டும் பட்டினப்பாலையிலும் சிலப்பதிகாரம் கனாத்திறம் உரைத்த காதையிலும் பாராட்டப் பெற்றுள்ளன. அந்தவூர் - திருவெண்காடு; "வெவ்வினை தொலைக்கு முக்குளந்திகழ் பதியது" (திருவிடை. யுவ. 10.) மறையவனை - மார்க்கண்டேயரை. 6. ஒரு தலம் - கௌரிமாயூரம். அரசு - அரசமரம்; உறைதலம் - திருவாவடுதுறை; இதனால் அரசவனமென்று இதற்கொரு திருநாமமுண்டு. கமலை - திருமகள்; தலம் - திருவாரூர். இடைமருது - திருவிடைமருதூர். எரண்டநகரம் -

பி - ம். 1 'நகர்முதனா னறிவேன்'

கொட்டையூர்; எரண்டம் - கொட்டைச்செடி. 7. ஐயாறு - திருவையாறு. சிரகிரி-திரிசிரகிரி. ஆனைக்கா - திருவானைக்கா. (சக)

## குறத்தி நதிவளம் கூறுதல்.

**வசனம்.**

அதன்பிறகு நதிவளஞ் சொல்லுகிறாள்.

42. **மோகன ராகம்—திச்ர தாளம்.**

**பல்லவி.**

நானறிந்த நதிகளெல்லாம் நயந்துரைப்பே னம்மே
நதிகளெல்லாம் நயந்துரைப்பே னம்மே

**அனுபல்லவி.**

வானவர்போற் றிடுந்தஞ்சை நீடுசரபோஜி
மன்னவர்காத் திடுமிந்த மன்னுபுவி மீதே (நானறிந்த)

**சரணங்கள்.**

1 பன்னிடுதாம் பிரவருணி பரவுபெரு வைகை
பொன்னிநதி முத்தாறு புகழ்ந்திடுபா லாறு
சொன்னமுகி கம்பைநதி துலங்கிடுஞ்சே யாறு
கன்னிநெடு யமுனைநதி கண்டறிவே னம்மே (நானறிந்த)

2 பொங்குதுங்க பத்திரையே போற்றுதிரு மறையே
[1] மங்களஞ்செய் கெடிலநதி மருவு [2] கோதா விரியே
சங்கநதி கபிலநதி சரஸ்வதிகிட் டினையே
கங்கைநதி யாதிநதி கண்டறிவே னம்மே (நானறிந்த)

3 [3] இந்தநெடு நதிகளெலா மூழ்கிவந்தே னிங்கே
முந்தியொரு சோழன்மயன் மூண்டகொடும் பிணியே
சிந்திடச்சேர்த் தின்பமருள் சிவகங்கை தனிலே
அந்தமிலா வினைதீர்தற் காடவந்தே னம்மே (நானறிந்த)

(கு - உரை.) 1. தாம்பிரவருணி - தாம்பிர வருணத்தையுடையது. பொன்னிநதி - காவிரியாறு. முத்தாறு - மணிமுத்தா நதி; இது விருத்தாசலத்தைச் சார்ந்தோடுவது. சொன்னமுகி-பொன்முகரி; இது காளத்தி

பி - ம். 1 'மங்களஞ்சேர்' 2 'மறுவரு கோதா விரியே' 3 இந்தச் சரணம் தஞ்சைப்பிரதியில் இல்லை.

மலையைச்சார்ந்தது. கம்பைநதி: இது காஞ்சிபுரத்தைச் சார்ந்தது; இப்பொழுது திருக்குளவடிவாக உள்ளது. சேயாறு: இது திருவோத்தூர் முதலிய தலங்களைச் சார்ந்தோடுவது; "காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்", "கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று" (மலைபடு. 476, 555.) 2. திருமதை: பெருவுடை. 10. கபிலநதி - மைஸூர் ராஜ்யத்தில் நஞ்சுண்கூடலுக்கு அருகிலுள்ளது. கிட்டிணை - கிருஷ்ணை. ஆதிநதி - முதலிய நதிகளை. 3. சோழனென்றது கரிகாலனென்னும் ஒருமன்னனை. சிவகங்கை - தஞ்சையிலுள்ள ஒரு தீர்த்தம்; பெருவுடை. 288. (சஉ)

## குறத்தி தேசவளஞ் சொல்லுதல்.

**வசனம்.**

*அதன் பிறகு தேசவளஞ் சொல்கிறாள்.*

43. **சங்கராபரண ராகம்—1 தீச்ர தாளம்.**

**பல்லவி.**

தேசங்கள் மருவிய பெரும் வளமையும்
தெரியக் கூறுவன் மின்னே

**அனுபல்லவி.**

வாச மலர்ச்சோலை சூழு முயர் தஞ்சை
வாழுஞ் சரபோஜி மன்னவர் போற்றிடு (தேசங்கள்)

**சரணங்கள்.**

1. வங்க தேசமோ டாரபி குர்ச்சரம்
மாக தம்புகழ்வி தேகமே
துங்க முற்றிடு கொங்க ணாந்திகழ்
துளுவ தேசமெனுந் தேகமே
சிங்க ளங்கவு டங்க லிங்கநற்
றெலுங்கம் நீடுவி வேகமே
இங்கி தந்தரு சோழ தேசமுன்
இலங்கு [2] தேசம நேகமே (தேசங்கள்)

2. அங்க தேசமதி லாறு கோட்டையுன்
டவற்று ளொன்றுறு வட்டமே
[3] தங்கு மன்னதிற் காவ லங்கரன்
சதுர மேலொன்று திட்டமே

---

பி - ம். 1 மிசிரதாளம் 2 'தேசமென்ன நேகமே' 3 'தங்கமன்னெதிர்'

பொங்கு மன்னது காவல் செய்வது
புகலு நான்முகற் கிட்டமே
மங்க ளங்கொண்மே லொன்று வெண்பிறை
வடிவ மாலதிற் பட்டமே (தேசங்கள்)

3 மீது கோணமோர் மூன்றி லொன்றதின்
மேலு ருத்திர னீடுமே
ஓது மேலிரு மூன்று கோணத்தொன்
றோங்கு மீசுரன் கூடுமே
ஏத மில்லதின் மூன்று வட்டமொன்
றிறைச தாசிவ னூடுமே
போது மின்னவை மூல மாதிய
பொருந்து நாமங்கள் சூடுமே (தேசங்கள்)

(கு - உரை.) அனு. போற்றிடு - பாதுகாக்கின்ற. 1. வங்கதேசம் - வங்காளம் (Bengal.) அரபி - அரேபியா (Arabia.) குச்சரம் - குஜராத் (Gujarat.) மாகதம் - மகததேசம். விதேகம் - விதேகதேசம். தேகம் - தேசம்; திசை திகையென்றுவந்தாற்போல. சிங்களம் - சிங்கள தேசம்; இலங்கை. கலிங்கம் - கலிங்கதேசம். தெலுங்கம் - ஆந்திரதேசம். விவேகத்தையும் இங்கிதத்தையும் தருகின்ற. 2. அங்கதேசமென்றது ஒருதேசத்தின்பெயர்; இங்கே உடம்பைச்சுட்டியது. ஆறுகோட்டையென்பது மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களை. மூலாதாரம் வட்டவடிவமானது; இதற்கு அதிட்டான தெய்வம் கணபதி. மேலொன்று-சுவாதிஷ்டானம்; இது சதுர வடிவமுள்ளது; இதற்குக் கடவுள் பிரமன். மங்களங் கொள் மேலொன்று - மணிபூரகம்; இது பிறைவடிவமானது; இதன்கடவுள் திருமால். 3. மீது.........ஒன்று - அநாகதம்; இது முக்கோண வடிவமுள்ளது; இதன் தெய்வம் உருத்திரர். ஓதும் மேல்.........ஒன்று - விசுத்தி; இஃது ஆறுகோண வடிவமுள்ளது; இதன் தெய்வம் மகேசுவரர். ஆக்ஞையென்பது மூன்று வட்டவடிவமுள்ளது; இதன்கடவுள் சதாசிவன். மூலம் - மூலாதாரம். (௪௩)

## குறத்தி சோழநாட்டு வளம் கூறுதல்.

44. கேதாரகௌள ராகம்—ஆதி தாளம்.

பல்லவி.

சோழநாட்டின் வளமை யுனக்குநான்
சொல்லுவேன் கேளடி மானே

அனுபல்லவி.

வாழு முயர்மதிற் றஞ்சைச் சரபோஜி
மகராஜன் மனுநூல்சொல் முறையே யுளமகிழ்ந்து (சோழ)

சரணங்கள்.

1 நாடு தனிலூர்க ளெல்லா [1]நகரங்கள்
நண்ணிடு மந்நகர் தம்மி லிலங்கிடும்
வீடுகள் யாவையுஞ் சந்தனத் [2] தாருவின்
மேலிடு முத்தரந் தூண்க ளிசைந்திடும்
மாடமா ளிகைகளு நீணிலா முற்றமும்
வாதாய னங்களு மாகி விளங்கிடும்
நீடுமம் மாளிகை யெங்கு மணிதரு
நெல்லு மணிகளும் பொன்னு மலிந்திடும் (சோழ)

2 நகரங்க டோறு மருவி யிருக்கின்ற
நால்வகைச் சாதியி னோரும் பிறர்களும்
தகுமவர் தங்கட் கிசையுந் தொழிலொடு
சந்ததம் வாழ்வர்கள் மங்கள மாகவே
புகலுந்தே வாலய மெங்கு [3] நன் மண்டபம்
போற்றும் விமானங்கோ புரங்களெல் லாம்பொன்னின்
சிகர மிலங்குமெந் நாளுந் துலங்கிடும்
தேரு முயர்திரு விழாவு நடந்திடும் (சோழ)

3. நன்னக ரின்புற மெங்கு மலர்க்காவும்
நளினத் தடாகமு நதியும் வயல்களிற்
கன்ன லெனச்செழுஞ் செந்நெல் பொலிந்திடும்
கன்னல்கள் யாவுங் கமுகி னெழுந்திடும்
மின்னிடை யார்துடை காட்டுங் கதலியும்
மேனி யழகினைக் காட்டுந் தளிர்மாவும்
அன்னவர் கொங்கை யெழில்காட் டிளநீர்கள்
அங்குறு [4] தெங்கமு மெங்கு நெருங்கிடும் (சோழ)

(து - உரை.) 1. நாடுதனி லூர்களெல்லா நகரங்கள்: "தேசுறு மருத நாடெலா நகர்கள்" (திருவிடை. நாடு. 42.) சந்தனத் தாரு -

---

பி - ம். 1 'மந்திரங்கள்' 2 'தாலின' 3 'பொன்மயம்' 4 'தேங்கமு கெங்கும்'

சந்தனமரம். வாதாயனம் - பல்கணி; "வாதா யனந்திறந்து வைப் பையே" (ஏகாம்பரநாதருலா); "வாதா யனத்திடத்தும் வந்திருந்து" (பத்மகிரி நாதர் தென்றல்விடு தூது, 53.) 2. தேர் - தேர்விழா. 3. நளினத்தடாகம் - தாமரைக்குளம். கன்னலென - கரும்பைப்போல, கன்னலெனச்செந்நெல்: "செந்நெல், இயல்பினெழு கன்னலென", "செந்நெலோங்கெழிற் கன்னலிற் செறிந்திடும்" (திருவிடை. உரோமசச். 41, சுகீர்த்திமன். 14.) கதலி - வாழை. தெங்கம் - தென்னை. (௪௪)

## மதனவல்லி வினவுதல்.

**வசனம்.**

பின் மோகினியானவள் குறத்தியைப் பார்த்துக் கேட்கிறாள்.

45. **அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

பலகலைக ளுணர்ந்ததஞ்சைச் சரபோஜி மன்னவர்தம்
பார்மே லுள்ள
மலைவளமே முதலான வளங்களெலா மெடுத்தெனக்கு
வளமாச் சொன்னாய்
சிலைவளங்கொ ணுதலணங்கே யென்னவென்ன தேசங்கள்
சென்று யங்கே
இலகெவர்க்குக் குறியுரைத்தா யவர்களென்ன கொடுத்திட்டா
ரிசைவாய்ச் சொல்லே. (௪௫)

## குறத்தி தான்பெற்ற வரிசைகளைக் கூறுதல்.

**வசனம்.**

அப்படிக்கேட்ட மோகினிக்குக் குறத்தி சொல்லுகிறாள்.

46. **சுத்தசாவேரி ராகம்—ஆதி தாளம்.**

**பல்லவி.**

சொன்ன குறிகளும் பெற்ற வரிசையுஞ்
[1] சொல்லுகி றேனடி கண்ணே

**அனுபல்லவி.**

கொங்கு தேசமுத லெங்கு மேகிமுன்
[2] குறியு ரைத்தன னங்கே

பி - ம். 1 'சொல்வேன் கேளடி' 2 'குறியுரைத்தேனணங்கே'

கோதை மார்மன மகிழ்ந்து மாநிதி
குலவு நற்றுகி லீந்தார் (சொன்ன)

**சரணங்கள்.**

1 கங்கைமாதினுக் குனக்கொர்காதலன்
கைக ளாறிரண் டுடனே
கடிது [1] தோன்றுவ னெனவு ரைத்தனன்
சுடிகை யின்னது தந்தாள் (சொன்ன)

2 மங்க ளங்கொள்சீ மந்தினிக்குன்
மணாளன் வந்திடு மென்று
மலர்க்கை பார்த்துரைத் தேனெனக்கவள்
கனத்த பொற்குட மீந்தாள் (சொன்ன)

3 அங்கயற்கணாள் செங்கை பார்த்துமே
லரனு னக்கிறை யாவனென்
றறிந்துரைத்தனன் மகிழ்ந்தெனக்கவ
ளளவிலாவரிசை தந்தாள் (சொன்ன)

4 தண்மலர்ப்புன லகழிசூழ்ந்திடுந்
தஞ்சையாமிது தன்னில்
தாமரைத்திருக் கோயின்மேவிய
தையல்போல்வளர் மின்னே (சொன்ன)

5 நண்ணிடங்கொரு தெலுங்கமானினி
நாசெய்சூடெனச் சொன்னாள்
நாடிநற்குறி யோதினேனிந்த
நாசிகாபரண மீந்தாள் (சொன்ன)

6 வண்ணமாரொரு மராடமாது [2] மஜ
ஹாத்பஹஆக வென்றாள்
மற்றவட்கிசை கைக்குறிக்கவள்
வச்சிரத்தொடி தந்தாள் (சொன்ன)

7 [3] கண்ணி யிங்கொரு கன்னடப் பெண்நன
கையினநோடே யென்றாள்
கருதவட்கிசை குறிதனக்கவள்
காதினோலை யளித்தாள் (சொன்ன)

---

பி - ம். 1 'கடிது தோன்றுமென' 2 'மஜஹாத் பஹாவ்கே', 'மச ஆத்து பாவகே' 3 'கன்னி'

8 [1] அண்ணலங்கொளோர் துனுக்கவஞ்சி [2] மை
ஹாத்தேக்கர்பொலாங் என்ருள்
[3] அன்ன கைக்குறி சொன்னதற்கவள்
மின்னிடார மளித்தாள் (சொன்ன)

9 [4] ஒண்ணுதல்பெறு மிங்கிலீஷ்மா
தொருத்தி லுக்மைஹாண் டென்ருள்
ஓதினேனவள் பாணிரேகைகண்
டுதவினுளிந்த மேகலை (சொன்ன)

(கு - உரை.) 1. காதலன் - பிள்ளை. சுடிகை - தலையிலணியும் ஆபரணம். 2. சீமந்தினியென்பவள் கற்பிற்சிறந்த ஒருமாது; இவள்சரிதை பிரமோத்தரகாண்டத்தாலறியப்படும். 4. தையல்-திருமகள். 5 மானினி - பெண். நா செய் சூடு - என்கையைப்பார்; இது தெலுங்கு. நாசிகாபரணம் - மூக்கணி. 6. மஜஹாத் பஹஆுக - என் கையைப் பாரடி; இது மகாராஷ்டிரம். தொடி - வளை. 7. கண்ணி - நினைந்து. நனகையின நோடே - என் கையைப்பாரடி; இது கன்னடம். 8. அண் நலம் கொள்- அண்ணுகின்ற நலத்தைக்கொண்ட. மைஹாத் தேக்கர் பொலாங் - என் கையைப்பார்த்துச்சொல்; இது ஹிந்துஸ்தானி. மின்னிடு ஆரம் - ஒளி வீசுகின்ற முத்துமாலையை. 9. லுக் மை ஹாண்ட் (Look my hand) - என்கையைப் பார்; இஃது ஆங்கிலம். பாணிரேகை - கைரேகை. கண்டு ஓதினேன். (௬௬)

குறத்தி சரபோஜிமன்னர் தந்த வரிசைகளைக் கூறுதல்.

வசனம்.

இப்படி அங்கங்கே சிலருக்குக் குறி சொன்னதும் அவர்கள் கொடுத்த வரிசையும் சொன்ன பிறகு சரபோஜி மஹாராஜா கொடுத்த வரிசையைக் குறத்தி சொல்லுகிருள்.

47. [5] தன்யாசி ராகம்—சாபு தாளம்.

பல்லவி.

மன்னர் சரபோஜி மகராஜ ரெனக்கீந்த
வரிசையைக் கேளடி மானே

---

பி - ம். 1 'அந்நலங்கொளோர்' 2 'மேஹாத் தேக்கர் போல்நா' 3 'அன்னவள் கைக்குறி' 4 'ஒண்ணுதலிங்கிலீஷ்' 5 தனுசரிராகம், மிசிரதாளம்.

அனுபல்லவி.

அன்னம் வளர்சோலை மன்னு முயர்தஞ்சை
அணிநகர் தனின்மேவுந் தனபதியெனச்சொல்லும் (மன்னர்)

சரணங்கள்.

1 அந்தணர் தங்க ளுடன்புல வோருக்கும்
அனைவர்க்கும் பொன்னு மணியு மிகக்கொண்டு
சந்தத முஞ்சொரி யன்னவர் கைம்மலர்
தனினுற் றிருந்திடும் ரேகையெல் லாங்கண்டு
முந்திடு மாதிரை நாளி னுதித்திட்டீர்
முன்னுங் கவியுடன் பொன்னும் பதினொன்றிற்
சுந்தர மாகவி ருந்தத னால்வெகு
சுகத்துடன் சிரஞ்சீவி யாயிருப் பீரென்றேன் (மன்னர்)

2 மகுடரே கையுடன் விஜயரே கையும்[1] வளம்
வாய்த்திடு பாக்கிய ரேகைய துவுமேலே
தகவினுற் றிடுமுயர் புகழினு டன்வித்தை
தருமணி ரேகையு மருவின வதனாலே
புகழுட னிப்புவி யாளுவீர் செல்வமும்
புகழும் வெற்றியும்பெற் றிந்திரன் போலே
அகமகிழ் கொண்டென் றுரைத்தே[2] னதனுக்கென்
அகமகிழ் வெய்தவே யுதவினர் மெத்தவே (மன்னர்)

3 இலங்கிரு சால்வையு முயர்முத்து மாலையும்
ஏறுஞ் சிவிகையு மீராயி ரம்பொன்னும்
நலங்கொள் கடகமும் பலவர்ணச் சேலையும்
நவிலும்பொற் காறையும் நல்கி யதன்பின்னும்
புலன்கொண் மதிதோறு மிருப திருபது
பொன்னும் பெறும்படி யருள்செய்த னர்துன்னும்
வலன்கொண் டிடுவிளை நிலமு முதவினர்
மகிழ்ச்சியு டன்கொண்டு வணக்கமுற் றேன்முன்னம் (மன்னர்)

(கு - உரை.) பல்ல. வரிசை - பரிசுகள். அனு. தனபதி-குபேரன். 1. கவி - சுக்கிரன். பொன் - வியாழன். பதினொன்று - லாபஸ்தானம். 3. கடகம்-கைக்கிடும் காப்பு. காறை - கழுத்திலணியும் ஓரணி; "தங்கக் காறை முத்துத்தொங்கற் றோடிலங்க" ஆநூர்க்குற. (௬௭)

பி - ம். 1 'வாழ்வு' 2 'அதைக்கேட்டு.'

மதனவல்லி கூறுதல்.

வசனம்.

மோகினி குறத்தியைப் பார்த்து என்னுடைய கையையும் பார்த்துச் சொல்லென்ருள்.

48. எண்சீர்ச்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

குலவுமல யத்துதித்து வந்த தென்றற்
குழவிமலர் பறித்துவிளை யாடுஞ் சோலை
சுலவுமெழிற் றஞ்சைநகர் தன்னில் வாழும்
தோன்றலெனுஞ் சரபோஜி மன்னர் செங்கைத்
தலமினிது பார்த்துரைத்தா யெனது கையுந்
தகவுபெறப் பார்த்துள்ள துரைப்பா யென்னின்
அலகில்கலை கற்றகுற மாதே யுன்ற
னகமகிழ வேண்டுபொரு ளுதவு வேனே.

(து - உரை.) சுலவும் - சுற்றியுள்ள. (௪அ)

குறத்தி கூறுதல்.

வசனம்.

குறத்தி குறி சொல்லுவதற்கு வேண்டிய காரியங்களைச் சொல்லுகிருள்.

49. பாகு ராகம்—1 திச்ர தாளம்.

கண்ணிகள்.

1 சாணகத்தான் முழச்சதுர மெழுகிவிளக்
கேற்றிவைத்தி 2டம்மே—அதில்
தந்திமுக 3மைந்தனையே சந்தனம்பூ
வறுகணிந்தி டம்மே

2 4காணலுறு கனிவகையெள் பொரிதேங்காய்
நிவேதனஞ்செய் யம்மே—பின்பு
5கவினுறவெற் றிலைதுவர்க்காய் வைத்தொருபொற்
காசும்வைத்தி டம்மே

பி - ம். 1 ஏகதாளம் 2 ‘டம்மேயம்மேயம்மே’ 3 ‘மைந்தனைவை’ 4 ‘காணவொரு’ 5 ‘கவினுறு’

3 மாணுறுதூ பங்காட்டு மந்திரத்தா
லருச்சனைசெய் யம்மே—எதிர்
வந்தனஞ்செய் தேத்திடுன்றன் மனக்குறிப்பைக்
குறித்துக்கொள்வா யம்மே

4 நீணிலங்கொள் சரபோஜி மன்னவர்வாழ்
தஞ்சைவள ரம்மே—உன்றன்
நீண்மலர்க்கை தன்னையிங்கே நீட்டுகுறி
பார்த்துரைக்க வம்மே.

(கு - உரை.) 1. சாணகம் - சாணம். தந்திமுக மைந்தன் - விநாயகர். 2. எள் பொரி - எள்ளையும் நெற்பொரியையும். துவர்க்காய் - பாக்கு. 3. குறித்துக்கொள்வாய் - எண்ணிக்கொள்க. (௪௯)

50. சாரங்கா ராகம்—திச்ர தாளம்.

கண்ணிகள்.

1 உள்ளபடி குறியுனக்குக் கூறிடுவே னம்மே - முன்னம்
ஒருசிறங்கைக் கஞ்சிபசி யாறிடவா ரம்மே

2 பிள்ளைதலைக் கொருகரண்டி யெண்ணெயூற்றி டம்மே-அந்தப்
பிள்ளையார்க்குப் படைத்தவெலா மெடுத்துதவிங் கம்மே

3 தள்ளவொண்ணு வெற்றிலைபாக் கித்தனைதா வம்மே-
சத்தமிட்டுன் வலப்புறத்திற் கத்துதல்கே ளம்மே [1 கௌளி

4 கள்ளமில்லாச் செல்வமிக வருகுதுபா ரம்மே - அங்கோர்
காரிகைதான் வீதியில்வந் தேனெனலோ ரம்மே

5 கந்தனுக்குப் படைத்ததினை [2] மாவையுத வம்மே - உன்றன்
கையதனுல் வைத்தநிறை நாழியுநல் கம்மே

6 இந்தவகை யெலாமெங்கட் கீந்திடுத லம்மே - பாரில்
எங்குமுள்ள முறைமையதா மின்றைக்கல்ல வம்மே

7 சுந்தரமார் நின்கையை நீட்டிடுமுன் னம்மே—குறி
சொல்லுசொல்லென் ருந்தைபல்காற் சொல்லுதல்கா ணம்மே

8 சந்ததமுஞ் செம்பொன்மழை பொழிந்துமகிழ்ந் தம்மே—
தஞ்சையில்வாழ் சரபமன்ன ரருளுனக்குண் டம்மே. [நாளும்

பி - ம். 1 'கெவுளி' 2 'மாவிலுதவம்மே'

(கு - உரை.) 1. சிறங்கை - சிறு அங்கை; "முச்சிறங்கை நெல் லளந்து கொடுவா" (மீனுட்சி. குறம்.) கஞ்சி: "என்றன் வயிற்றுக்கித் தனைபோதுங் கஞ்சிவாரம்மே" (குற். குற. 54.) 3. கெளளி - பல்லி; "இடத்தெழுந்த கெளளி நன்று" (மீனுட்சியம்மைகுறம்); "பலப லெனக் கெளளிசொல்லும் பல்லி காதனல்லது" (ஆநுரிக்குற.) 4. என் எனல் ஓர். நிறை நாழி - படி நிறைய வைத்த தானியம்; "பொற்கோல மிட்டுநிறை நாழி வையாய்" (மீனுட்சியம்மைகுறம்); "நிறைநாழி யளந்து வைப்பாய்" (குற். குற. 56); "முத்துக் கொண்டு வாடிநிறை நாழி" (அர்த்த. குற.); "பாங்குடனே நிறைநாழி பூங்கொடியே வைப் பாய்" (திருமலை. குற.) 7. ஆந்தைசொல்லல்: "அல்லது கிளைகூட்டம்புற் ருந்தைவீச் சழகிதம்மே" (மீனுட்சியம்மை குறம், 27); "மேல்புறத்தி லாந்தையிட்ட வீச்சு நன்றம்மே" குற். குற. 54. (௫௦)

## குறத்தி குறிசொல்லுதல்.

வசனம்.

குறத்தி குறி சொல்லுகிறுள்.[1]

51. பெளளி ராகம்—திச்ர தாளம்.

கண்ணிகள்.

1 ஈது வச்சிர ரேகை முன்னிதை
யிந்தி ராணிகையிற் கண்டேன்
இன்ன தானுன் மணுள னிந்திர
[2] னெய்து போகமுள னம்மே

2 மாது கேளிந்த மகுட ரேகையை
வள்ளி யம்மைகையிற் கண்டேன்
மருவி தானுன்றன் கொழுநன் வேளென
வருவ னின்புற வம்மே

3 ஓது மின்னது சூல ரேகையீ
துமைமலர்க்கையிற் கண்டேன்
ஓங்கு மின்ன தானுன் காதல
னுயர்ச்சி பெற்றிருப்பா னம்மே

---

[1] இதன்பின் 'ராமகவி' என்ற ஒருசொல் தஞ்சைப்பிரதியிற் காணப்படுகிறது.

பி - ம். [2] 'னேயனுபவமுண்டம்மே'

4 கோதில் சக்கர ரேகை யீதிதைக்
குலவு செல்விகையிற் கண்டேன்
குறிக்கி னின்மண மகனிம் மேதினி
புரப்ப னின்னதா லம்மே

5 குமரி யாகிய துர்க்கை கைதனிற்
குலவி ரேகையீ தம்மே
கூறு மின்னது தேறு வெற்றிநின்
கேள்வற் கீந்திடு மம்மே

6 கமல ரேகையீ திரதி தன்கையிற்
கண்ட [1] ரேகையா மம்மே
கருது நின்கணவ னீடி தால்வெகு
காமி யாயிருப்ப னம்மே

7 தமரு கத்தனி ரேகை யாமிது
சங்க ரேகையீ தம்மே
தங்கு நின்மணை யி லென்றும் வாத்தியத்
தகமு ழக்குமிவை யம்மே

8 விமல முற்றிடும் வாணி செங்கையில்
விளங்கு ரேகையீ தம்மே
மேவு மின்னது யாரு மெச்சிடும்
வித்தை நல்கிடு மம்மே

9 [2] ஓர்வ லஞ்சுழி யுனது மார்பினி
லுற்றி லங்குமீ தம்மே
உன்றனக்கி தென்று மன்னிடு
நன்றி யேதரு மம்மே

10 தார்வி ளங்குமுன் வலமு லைக்கணோர்
தழும்பு தோற்றிய தம்மே
தாங்கு பெண்களோர் நான்கு மைந்தனு
முனக்களித்திடு மம்மே

11 வார்பொ ருந்திடத் தோளி லேயொரு
மறுவிருக்கிற தம்மே

---

பி - ம். 1 'ரேகையீதம்மே' 2 இக்கண்ணிக்குமேல் 'மெய்க்குறி' என்ற ஒருதலைப்புக் காணப்படுகிறது.

மற்றிதானுனை யெவரு மெச்சிட
மகிழ்ந்தி லங்குவை யம்மே

12 பார்வை நீடுறு மேரி னுல்வெகு
பாக்கி யம்வரு மம்மே
பன்னு சீர்ச்சர போஜி மன்னவன்
மன்னு தஞ்சைவள ரம்மே.

(கு - உரை.) 2. வேள் - முருகக்கடவுள். 3. காதலன் - கணவன். 4. செல்வி - திருமகள். 6. நீடு இதால். 7. தமருகத்தனிரேகை - உடுக்கைரேகை ; தமருகம் - டமருகம். 8. விமலம் - தூய்மை. வாணி - கலைமகள். 9. வலஞ்சுழி - வலமாகச் சுழித்துள்ள சுழி. 10. தார்........ அம்மே: (பெருவுடை. 197.) 12. ஏர் - அழகு.

இப்பாட்டோடு பெருவுடையாருலாவில் வரும், "மீன விடப விரேகையினல் வெற்றிபெறும், மான வரசர் மணமுரியாய் - ஈனமிலாச், சூலவரையொன்று தோன்றுதலாற் பொற்குவைகள், ஞாலமிசை வேண்டினர்க்கு நல்குவாய் - கோலச்செவ், வண்ணமறு வொன்று வலமுலைக் கண் மேவியதால், பெண்ணுலு மோராணும் பெற்றெடுப்பாய் - நண்ணும், வலமுதுகின் மார்பில் வலஞ்சுழிதா மேலாம், நலமே யுனக்களிக்கு நாளும்" (195 - 8) என்னும்பகுதி ஒப்புநோக்கற் குரியது. (௫௧)

மதனவல்லி சொல்லுதல்.

வசனம்.

பிறகு மோகினி சொல்லுகிறுள்.

52. எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

இனக்கதிர் முத்து மாலையுங் களிறு
மெழிலுறு சிவிகையும் பரியும்
தனக்குவை பிறவு முயர்புல வோர்க்குத்
தருதலாற் புயலினை வென்ற
கனத்திடு கீர்த்திச் சரபோசி மன்னர்
கவின்பெறுந் தஞ்சைமா நகரில்
அனப்பெடை போல வருகுறக் கொடியே
யகத்துநான் குறித்ததோர்ந் திசையே.

(கு - உரை.) அகத்து - மனத்தில். குறித்தது ஓர்ந்து - எண்ணியதை ஆய்ந்தறிந்து. (௫௨)

## குறத்தி தெய்வங்களை வேண்டுதல்.

**வசனம்.**

மனக்குறி சொல்லுகிறதற்குத் தேவதைகளை வேண்டுகிருள்.

53. [1] நேரிசை ஆசிரியப்பா.

தலமிது புரந்திடுஞ் சரபோஜி மன்னர்
நலனுறு மதிகொடு நாளும் பணிந்திடச்
சுத்தமார் தஞ்சைத் தொல்பெரும் பதியில்
உத்தம வாலயத் துறைபெரு வுடையாய்
5 பிறைநுதற் சிற்றிடைப் பெரியநா யகியே
நிறைமலர்க் கோதை நிமலிகா மாட்சி
தென்றிரு வீதி திகழ்ந்திடுங் காளி
வென்றிகொள் குணபால் வெள்ளைப் பிள்ளையே
ஆனந்த வல்லி யருட்கனு கூலா
10 ஈனந் தவிர்த்திடு மிரட்டைப் பிள்ளையீர்
சரவண பவனே சத்தகன் னியர்காள்
வரமிக வுதவும் வள்ளிநா யகியே
எக்கலா தேவி யிறைஞ்சினே னுங்களை
மிக்கவுண் மகிழ்வொடு மேவியென் முன்னின்
15 றிந்தமெல் லியலா ளெண்ணிய வெண்ணம்
முந்துதெய் வங்களை முன்னிய வகையோ
காசோ பணமோ கனகமோ வெள்ளியோ
மாசிலாப் பவழமோ வைரமோ முத்தோ
மாலையோ பணியோ மரமோ கொடிகளோ
20 சேலையோ கனியோ திருமணச் செய்தியோ
நாலுகாற் சீவனோ நரர்களோ பறவையோ
கொடுத்திடுங் குறிப்போ கொள்வதற் கெண்ணமோ
வாகைவே லரசர் வரவிடுந் தூதோ
தோகைதா னவர்பாற் றொடர்ந்திடுஞ் செய்கையோ
25 இன்ன தென்னவே யெடுத்து
மன்னுற நான்சொல வகுத்தருள் வீரே.

---

[1] இவ்வாசிரியப்பாவின் ஐவைந்து அடிகளுக்கு ஒவ்வோரிராகமாகத் தோடி, காம்போதி, அடாணு, பைரவி, கலியாணி என்பவை முறையே ஒரு பிரதியிற் காணப்படுகின்றன.

(கு - உரை.) 4. உத்தமவாலயம் : "உத்தமவி மானத்தன்" (பெரு வுடை. 14.) பெருவுடையாய் - பிருகதீசுவரரே. 6. நிமலி - தூயவள்; "நிமலியம் பிகைமா தேவி" (அர்த்த. குற.) காமாட்சி: தஞ்சை மேலவீதி யின் மேல்பாலுள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள அம்பிகை. 8. குணபால்- கிழக்கு. வெள்ளைப்பிள்ளை - வெள்ளைப்பிள்ளையாரென்றும் சுவேதவிநா யகரென்றும் வழங்கப்படுவார்; கீழைவாசலில் எழுந்தருளியுள்ளார். இவர் மீது ஒரு குறவஞ்சி உண்டு. 9. ஆனந்தவல்லி: விண்ணாற்றங்கரையிலுள்ள தஞ்சேசர் ஆலயத்திலுள்ள அம்பிகையே. அருட்கு அனுகூலா - தஞ் சேசா. 10. இரட்டைப்பிள்ளையார்: வடவாற்றங்கரையின் தென்பக்கத்தி லுள்ள கோயிலில் எழுந்தருளியிருக்கும் இரண்டு விநாயக மூர்த்திகள். 11. ஸப்தகன்னியர்களின்கோயில் தஞ்சைக்கு நான்கு மைலுக்கப்பாலுள்ள சூரக்கோட்டையிலுள்ளதென்று தெரிகிறது. 13. எக்கலாதேவி - குற வர்கள் தெய்வம்; "ஏகா சனத்தி யெக்கலா தேவி" (தும். குற.); "எக் கலா தேவி துர்க்கை பிடாரி" (குற். குற. 62); "எல்லம்மை போலே யெக்கலா தேவி" (ஆநர்க்குற.) 21. நாலுகால் சீவனோ - விலங் கினமோ? 23. வாகை-வெற்றி. 24. அவர்பால்-அந்த அரசரிடத்து.(௫௩)

## குறத்தியும் மதனவல்லியும் பேசிக்கொள்ளுதல்.

### வசனம்.

இனி, குறத்தியும் மோகினியுமாக எதிர் எதிர் பேசுகிறார்கள். மோகினி மனக் குறிப்பு குறத்தி சொல்லுகிறாள்.

**54.** எதுகுலகாம்போதி ராகம்—திச்ர தாளம்.

1 கண்ணிகள்.

குறத்தி கூற்று.

1 அன்னநடை யாயெழில்கொண் மாமயிலே மின்னே
அம்புயத்தின் மேல்வளர் கும்பமுலைப் பொன்னே

2 கன்னிகையே சிற்றிடையே பைங்கிளியே மேலுன்
கருத்திலொரு கவலையுண்ட துரைத்திடுவே னம்மே

3 துன்னுமத யானைமேலோர் மன்னவன்றான் சேனை
சூழநெடு வீதிதனிற் றோகையர்க ளுடனே

4 மன்னிவிளை யாடிடுங்காற் பவனிவந்தான் வந்த
மதயானை தனைக்கண்டு மருண்டனைநீ யம்மே

பி - ம். 1 சிந்து

மதனவல்லி கூற்று.

5 என்னடி மலைக்குறத்தி குறிசொன்னான் முன்னம்
இசைத்துவந்த படிமுற்று மிசைக்கவேண்டு மல்லோ

6 சொன்னவழி தன்னைவிட்டு வேறொன்றை யிங்கே
தொடுத்துக்கொண்டா யதற்குள்ளென்ன நினைத்துக்
கொண்டா யோடி

7 வன்னமத யானையைமுன் கண்டறியே னேங்கு
மதயானை கண்டவரை மதியமுங்காய்ந் திடுமோ

8 [1] இன்னுலவை சீறிடுமோ சிலைமதனன் போருக்
கிசைந்திடுமோ பாலமுது [2] கசந்துவிடு மோடி

குறத்தி கூற்று.

9 உள்ளபடி சொல்லுகிறேன் பெண்ணரசே யுந்த
ஓங்குமத யானையின்மே லாங்கிருந் திசைந்த

10 வள்ளலினைக் கண்டுளத்தி லாசைகொண்டாய் கொண்ட
வண்மையினா னண்ணியதிவ் [3] வுண்மயக்க மம்மே

11 கொள்ளுமிந்த வகையெல்லா முன்னுனக்கே யெண்ணிக்
குறித்துரைத்தான் முனிவையென்று மறைத்துரைத்தேன்
[மின்னே

12 விள்ளுமிந்த வெதுப்புமெய்யிற் கண்டதுவு மிதனால்
வேறொன்று மில்லையது கூறினேன்கே ளம்மே

மதனவல்லி கூற்று.

13 குஞ்சரத்தி லெவரேனு மேறிச்சென்றா லாசை
கொள்ளுவனோ வப்படிநீ கொண்டதுண்டே சொல்லு

14 வஞ்சியிங்கே வாய்த்துடுக்கான் மிஞ்சிப்பேசா தொன்றும்
மற்றவன்றா னெந்தவூர னவன்பேரென் னேடி

குறத்தி கூற்று.

15 கஞ்சமல ரானனத்தாய் குறிநான் சொல்வ தோவென்
கருத்திலிருந் துரைக்கின்றா ளெக்கலா தேவி

16 தஞ்சைநகர் தனில்வாழ்வோ [4] னுலகத்தை யாள்வோன்
சரபோஜி மன்னவனா மன்னவன் [5]பே ரம்மே

---

பி-ம். 1 'இன்னிலவு' 2 'கசந்திடுமோ' 3 'மனமயக்கமடி' 4 'உல காள்வோன்' 5 'போராகும்'

17 நிறைசெல்வத் தன்னவன்மே லாசைகொள்ள நோற்று
நீமுன்பு செய்ததொரு புண்ணியங்காண் பாயே

18 பிறைநுதலா யினியெனக்கு நீமறைக்க வேண்டாம்
பெருவுடையா ரருளதனு லவனைச்சேர் வாயே

19 நறைமலர்த்தா ருடன்றாது வந்திடுமின் றென்ன
நவின்றனளம் மதனவல்லி நாணுடனே கேட்டே

20 உறுமகிழ்ச்சி கொண்டுமணிப் பணிகளுடன் மற்றும்
உற்றகலை நல்கவவள் பெற்றிறைஞ்சி னாளே.

(கு - உரை.) 1. திருமகளே. 6. தொடுத்துக் கொண்டாய் - தொடங்கினுய். 8. உலவை - காற்று. 11. முனிவை - கோபிப்பாய். 15.கஞ்சமலர் ஆனனத்தாய் - தாமரைமலரைப் போன்ற முகமுடையாய். 19. நறை - தேன். (௫௪)

சிங்கன் வருதல்.

வசனம்.

இவள் இங்கே இப்படி யிருக்கும்போது குறச்சிங்கன் சிங்கியைத் தேடிக்கொண்டு புறப்பட்டு வருகிறுன்.

55. எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

நீடானைச் செவியனொடு குதிரை வாலன்
நிகழ்த்துபுலி வாயனென்னும் நாய்கள் பக்கத்
தோடாமற் புலனையடக் குணர்ந்தோர் போல
வொருவழியாய் வரக்கூவிக் கொண்டு பின்னும்
ஈடான கண்ணிவலை தடங்கை யிற்கொண்
டிசைகுளுவ னொடுசிங்கன் வந்தான் சோழ
நாடாளுஞ் சரபோஜி மன்னர் தஞ்சை
நகர்ப்புறத்திற் சிங்கிதனை நாடித் தானே.

(கு - உரை.) அடக்கு உணர்ந்தோர் - அடக்குதலை உணர்ந்த ஞானிகள். கண்ணி - பறவைகளைப் பிடிக்கும் சுருக்கு. குளுவன் - சிங்கனுடைய உதவியான ஆள். சிங்கன் - குறவஞ்சியினுடைய கணவன். (௫௫)

56. மத்தியமாவதி ராகம் - திச்ர தாளம்.

பல்லவி.

சிங்கன் வந்தானே மலைக்குறச்
சிங்கன் வந்தானே

அனுபல்லவி.

மங்களம் பெருகிடுந் தஞ்சைநன் னகரின்
மருவுஞ் சரபோஜி மகராஜர் நாட்டினில் (சிங்கன்)

சரணங்கள்.

1 கையினி லீட்டி யெடுத்துக் கொண்டு—நல்ல
காவிச் சல்லடந் தொடுத்துக் கொண்டு
மெய்யினில் வெண்ணீறு பூசிக் கொண்டு—வெகு
வேடிக்கை யாகப் பேசிக் கொண்டு (சிங்கன்)

2 வெறிக்கச் சிலர்களை யுறுக்கிக் கொண்டு—நீடு
மேன்மீசை தன்னை முறுக்கிக் கொண்டு
நெறிக்குட் பறவைமே ளூட்ட மோடு—எதிர்
நேரு மதன்மீது வேட்ட மோடு (சிங்கன்)

3 கொங்கொடு பாண்டிய மெங்கு மலைந்து—நறுங்
கொங்கலர் குந்தள மெங்கு மிலைந்து
பங்கமில் பூவணை தங்கிமுன் கூடி—மிக
இங்கித மேதருஞ் சிங்கியைத் தேடி (சிங்கன்)

(கு - உரை.) 1. காவிச் சல்லடம் : சர. குற. 6 ; " காவிச் சல்லடந் தொட்டுக் கச்சை யிறுக்கியே " (கும்பேசர் குறவஞ்சி.) 2. மீசைமுறுக்கல் : " துள்ளுமீசை முறுக்கிக்கொண்டு " (குற். குற. 73.) வேட்டம் - வேட்டை. 3. பாண்டியம் - பாண்டி நாடு. குந்தளம் - கூந்தல். நறுங் கொங்கலர் என்பது முதலியன சிங்கிக்கு அடை. (௫௬)

சிங்கன் குளுவனுக்குக் கண்ணிகுத்தும் வகை கூறுதல்.

வசனம்.

வந்த சிங்கன் தன்னுடைய தோழனாகிய குளுவனைப் பார்த்துப் பறவை வேட்டைக்குரிய கண்ணி குத்தச்சொல்லுகிறான்.

57. எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

இந்தவகை வந்தகுறச் சிங்கன் பூமிக்
கிந்திரனு மெங்கள்சர போஜி மன்னன்
சந்ததமுங் கொண்டலெனச் செம்பொன் மாரி
தனையுற்றோர் கொளப்பொழிந்து மகிழ்ந்து வாழும்

சுந்தரமார் தஞ்சைநகர்ப் புறத்தி[1] னீடித்
தொகுபறவைக் குலங்கண்டு வேட்டை யாடப்
பந்தமுறு குளுவனைப்பார்த் திங்கே கண்ணி
பாச்சென்று னவனுமிதோ வாச்சென் றனே.

(கு - உரை.) பாச்சு - பாய்ச்சு ; குத்துவாயென்றபடி.

58. அமீர்கல்யாணி ராகம் - திச்ர தாளம்.

பல்லவி.

கண்ணி குத்தடா குளுவா வகையாக்
கண்ணி குத்தடா

அநுபல்லவி.

எண்ணிய பறவைகள் சிக்கிநூற் பிரகதீசர்
இளைய பிள்ளையா ரேறித் திரிந்திட
வண்ண மயிலொன்று விடுவோ மெனநன்றாய்
மனத்திற் றிடமாகக் குறித்துக்கொண் டிங்கே (கண்ணி)

சரணங்கள்.

1 காலினின் மாட்டிய கண்ணியைப் பக்கிகள்
கடித்துத் தகர்த்திடு மப்பால்
மேலிற் கழுத்தினின் மாட்டிக்கொண் டாற்காலால்
மெல்ல விழுத்திடுங் குளுவா
சாலத் திருடர்கள் காலினுங் கையினுஞ்
சாற்றுந் தொழுக்கட்டை மாட்டிவிட் டாற்போலக்
காலினுங் கழுத்தினு மாட்டிக் கொள்ளும்படி
கருதிக் குத்தடா குளுவா (கண்ணி)

2 ஊடுறக் கண்ணியை விரித்துவைத் தானுழைந்
தோடிப் போமடா பக்கி
வாடுறக் கண்ணியைச் சுருக்கிவைத் தாற்றலை
மாட்டிக்கொள் ளாதடா குளுவா
நாடுங் கயவரை யாளு மறிவினோர்
நடுத்தர மாக விடுத்து வருதல்போல்
நீடுங்கண் ணியைமிக விரியாமற் குவியாமல்
நேராகக் குத்தடா குளுவா (கண்ணி)

பி - ம். 1 'னீடு'

3 பாவத் தொழிலவன் பிறரையுந் தனைச் சேரப்
    பண்ணுந் திறமெனப் புள்ளின மெலாந்தன்போல்
காவற் படச்செய்யுந் தீவக் குருவியைக்
    கண்ணிக்குள் வைத்திடு குளுவா
பூவுல கந்தனை யாளு முயர்சர
    போஜி யெனுமக ராஜன் மகிழ்வொடு
மேவுந்தென் றஞ்சை நகர்ப்புறத் தேயொரு
    வேடிக்கை பார்ப்பமடா குளுவா (கண்ணி)

(கு - உரை.) பல்ல. கண்ணி குத்தல்: "கலந்த கண்ணியை நெருக்கிக் குத்தினுற் காக்கையும் படுமே" (குற். குற. 87.) அனு. சிக்கினுல் - அகப்பட்டால். இளைய பிள்ளையார் - முருகக்கடவுள். முருகக் கடவுளுக்கு மயில்விடுதல் : (கோடீச். 338.) 1. பக்கிகள்-பட்சிகள். 3. தீவக் குருவி - தீபகக்குருவி ; பறவைகளைப் பிடிப்பதற்காகப் பழக்கி வளர்க்கப்படுவது ; இது தீவகமென்பதன் திரிபு. (௫அ)

சிங்கன் பல பட்சிகள் வருதலைக் கூறுதல்.

வசனம்.

கண்ணிக்குள்ளே வருகிற பறவைகள் குளுவன் பேசுகிறதைக் கண்டு கலைந்துபோகின்றனவென்று அவனை இரையாதேயென்று, பறவைகள் மேய்வதும் போவதும் தோன்றும்படி குறவன் சொல்லுகிறான்.

59. பூரிகல்யாணி ராகம் - தீச்ர தாளம்.

பல்லவி.

கூப்பிடாதையே பொறு பொறு
கூப்பிடா தையே ஐயே

அனுபல்லவி.

காப்புறு தாஸ்தான்ம ஹால்பெருந் தோட்டத்தில்
கவின்மயில் வருகுது குமரற்கு விடலாகும் (கூப்பிடா)

சரணங்கள்.

1 பரந்த சிறைப்பெருங் கம்புள் வருகுது
பச்சைப் புருவி [1] லொரு லெச்சம் வருகுது

---

பி - ம். 1 'லோரெச்சம்'

கருங்குயில் வருகுது நெருங்கிடுங் கவுதாரி
கள்ளத் தனங்கொண்டு மெள்ளப் பதுங்குது (கூப்பிடா)

2 செந்தமி ழிலக்கணந் தெரியார் கவிசொல்லிச்
சேரு [1] மதன்குற்றந் தெரிந்தோர் வினவுங்கால்
சிந்தை மயங்கி விழித்தல்போற் கண்ணியில்
சிக்கிக்கொண் டிங்கொரு பக்கி விழிக்குது (கூப்பிடா)

3 மாடப் புறவொடு காடையுங் [2] கலவிசெய்
மாதர் களத்தொலி போலவே கூவிக்கொண்
டோடி வருகுது நாய்களைத் தூரவே
ஓதுங்கவைத் திடுநீயும் பதுங்கி யிருந்திடு (கூப்பிடா)

4 கொக்குக் கறியினிப்புச் சற்று மறியாயே
கூறிய சேலத்துச் சர்க்கரை போலுரு
சிக்கும் வயிறு பசிக்குது மெள்ளவந்து
சிக்கிக்கொண் டாலதுனக் கித்தனை தாரேன் (கூப்பிடா)

5 சாக்கிர மாதியைந் திடத்துஞ் சில சில
தத்துவத் தோடுயிர் சாரத் திரிதல்போல்
தேக்கிடு மங்கங்கே சிலபக்கி கணிற்கத்
திகழொரு குஞ்சுடன் வருகு தொருபக்கி (கூப்பிடா)

6 ஆங்காரந் தன்னை யடக்கிப் புலனைவென்
றகத்தைப் பரத்தி னிடத்தி னிறுத்தியே
தூங்காமற் றூங்கிடு மாங்கவர் போலவே
தூய வொருநாரை யோய்வுற் [3] றிருக்குது (கூப்பிடா)

7 ஒருவன்பல் வகைச்சொற்க ளுரைப்ப தெனப்புட்கள்
ஒலிவகை யெலாங்கூவுங் குருவி வருகுது
வருமிக் குருவியைத் தஞ்சைச் சரபோஜி
மகராஜ னுக்கீந்தால் வெகுமானம் வாங்கலாம் (கூப்பிடா)

(கு - உரை.) அனு. தாஸ்தான் மஹால்தோட்டம்: இது தஞ்சை அரண்மனையுள் உள்ள ஒரு பாகம். இதன் நடுவில் தாஸ்தான் மஹால் இருக்கிறது. 1. கம்புள் - சம்பங்கோழி. லெச்சம் - லட்சம். பதுங்குது - ஒளிக்கின்றது. 3. களத்தொலி - கழுத்திலெழும் ஓசை. கொக்குக்கறி சேலத்துச் சர்க்கரைபோல் உருசிக்கும் என்க. 5. சாக்கிரமாதி

---

பி - ம். 1 'தினக்குற்றம்' 2 'கன்மிசை' 3 'இருக்குரு'

ஐந்திடம் - சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். 6. ஆங்காரம்....தூங்கிமேவர்: "ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே, தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே" (தாயுமானவர். பராபரக். 74.) 7. பல பட்சிகளின் ஒலிக்குப் பல பாஷைப் பேச்சு உவமை: "ஆரிய முதலிய பதினெண் பாடையிற், பூரிய ரொருவழிப் புகுந்ததா மென, ஓர்கில கிளவிக ளொன்றொ டொப்பில, சோர்வில விளம்புபுட் டுவன்று கின்றது" (கம்ப. பம்பை. 14.) வெகுமானம் - பரிசு.     (௫௯)

குளுவன் சிங்கனிடம் கூறுதல்.

60.     எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

காவென்றுங் கீயென்றுங் குக்கூ வென்றுங்
    ககவென்றுங் கிகியென்றுங் கக்கோ வென்றும்
கூவிக்கொண் டிருந்தவெல்லாஞ் சும்மா விங்கே
    குந்தியிரு நாங்கள்போய் வருவோ மென்று
போவதுபா ருனைநாப்புக் காட்டி நீயிப்
    போதுபக்கி பிடித்ததினிப் போது முன்றன்
ஆவியன்ன சிங்கிதனைத் தேடு சிங்கா
    வண்ணல்சர போஜிதஞ்சை யணுகித் தானே.

(கு - உரை.) நாப்புக்காட்டி: ஒரு வழக்கு.     (௬௦)

சிங்கன் சிங்கியை நினைந்து இரங்கல்.

**வசனம்.**

*சிங்கன் புலம்பல்.*

61.     அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

மறந்து விட்டேன் சிங்கிதனை
    மன்னும் அன்னையாள் முலைகாட்டும்
நிறங்கொ ணேமிப் புள்ளினங்கா
    ணிலவு நடைகாட் டனக்குலங்கள்
திறங்கொண் மொழியைக் [1] காட்டுகிளித்
    திரள்கா டஞ்சை நகரினிடைச்
சிறந்தி டவளை யெதிர்கண்டாற்
    சேர லாநீர் சொல்வீரே.

---

பி - ம். 1 'காட்டுமெழிற் கிளிகாள்'

(கு - உரை.) நேமிப்புள் - சக்கரவாகப் பறவை. அனம்: "திவள வன்னங்க டிருநடை காட்டுவ" கம்ப. பம்பை. 18. (௬௧)

62. கொச்சகக்கலிப்பா.

பரிக்குலஞ்சூழ் சேனையினான் பார்மே லுயர்கீர்த்தி
விரித்தசர போஜிமன்னன் மேவுதஞ்சை தன்னிடைநான்
வரித்தடங்கட் சிங்கி மணிமார் பிடந்தன்னில்
தரிக்குமொரு பூணுகிற் றனத்தைவிட்டுப் பிரியேனே.

(கு - உரை.) சிங்கி......பிரியேனே: கோடீச். 169; "செட்டிக் கிரங்கிவினை தீர்த்தவர்குற் றுலர்வெற்பிற், சுட்டிக் கிணங்குநுதற் சுந்தரி யாள் கொங்கையின்மேல், முட்டிக் கிடந்துகொஞ்சி முத்தாடிக் கூடிநன் றுய்க், கட்டிக் கிடக்கமுலைக் கச்சாய்க் கிடந்திலனே" (குற். குற. 84); "சேலுலவும் பண்ணைவயல் செங்நெனிறை பண்பையில்வாழ், கோல வடி வேற்கைக் குமரன்வளர் காவிவெற்பில், வாலமதி போல வளைந்த நெற்றி மாதர்முலை, மேலணியுங் கச்சாய் விதிவிதித்தா னில்லையே" திருமலை. குற. (௬௨)

63. நாடு புரக்குமெங்கள் சரபோஜி நரேந்திரன்றன்
நீடுபுகழ்த் தஞ்சை நெடுநகரிற் சிங்கிதனைத்
தேடி யலைவேனோ செப்புமவ ளேந்துகுறக்
கூடைவடி வாயிருந்தாற் கூடவே வருவேனே.

(கு - உரை.) குறக்கூடை: சர. குற. 30: 14. (௬௩)

சிங்கன் சிங்கியைத் தேடுதல்.

64. கானடா ராகம்—[1] ஆதி தாளம்.

பல்லவி.

வஞ்சியைக் காணேனே ஐயேகுற
வஞ்சியைக் காணேனே

அனுபல்லவி.

மஞ்சுலவுஞ் சோலைகளும் வான்மதிலுஞ் [2] சூழுமுயர்
தஞ்சைநகர் வாழுமெங்கள் சரபோஜி மன்னர் நாட்டில்
[3] சட்டெனவே ளிட்டகல கத்திலென்னை விட்டகன்ற
(வஞ்சியை)

பி - ம். 1 திசிரதாளம் 2 'உயருமுயர்' 3 'சட்டெனவேமத னிட்ட கலகத்தினுற் பொட்டென வேயென்னை விட்டகன்ற'

**சரணங்கள்.**

1 தாளத் தனத்தைப்பார்க்க மேலே கலையைநீக்கச்
சற்றே தொடுவே னுசை கொண்டு—கையைத்
தள்ளிவிடு வாளொரு கிள்ளுமிடு வாள்கன்னந்
தன்னிலவள் பின்னுமது கண்டு—அவள்
வாள்விழியால் மதனுக்கென்னைக் காட்டுவாள்—[1] அவன்
வன்கணையி னுலுடலை வாட்டுவாள்—காம
வன்னிதன்னை முன்னியெழ மூட்டுவாள்—கிட்ட
வாவெனச்செவ் வாய்மலர்த்தே னூட்டுவாள்— [2] அந்த
வங்கணச் சிங்கிதன் கொங்கைத் [3] துணையெண்ணி
மனமீங் குருகுது—தரு
மயலோ பெருகுது—ஒரு
வகையாய் வருகுது—பஞ்ச
வன்னக் கிளியையின்சொ லன்னப் பெடையையென்றன்
(வஞ்சியை)

2 [4] பந்துவராளிபுன் னுகவுராளி
பைரவி [5] தோடியிற் பாடுவாள்—பின்பு
பரிவுதர வெழுந்து சரிவுபெற மகிழ்ந்து
பழகு முபரியிற் கூடுவாள்—மிக
விந்தைவிந்தை யாகப்பேச்சுப் படிப்பாள்—கொம்பின்
மேவுமயில் போற்சுழன்று நடிப்பாள்—என்கை
வெள்ளிலைவாய் கொள்ளத்துடி துடிப்பாள்—சுரத
வித்தையினை முற்றுமங்கே முடிப்பாள்—ஐயே
மெய்யாகச் [6] சொல்லுறேனந்த வொய்யாரக் காரிமதன்
[7] மின்னின் மிஞ்சுவாள்—மருவப்
பின்னுங் கெஞ்சுவாள்—இந்த
வண்ணங் கொஞ்சுவாள்—மானின்
மிகவுங் குதிப்பள்பேணித் தகவுந் துதிப்பளந்த (வஞ்சியை)

3 இன்றைக் கெல்லாமவ ளழகைப் பார்த்துக்கொண்
டிருக்கலாஞ் சற்றும் பசியாது—மேலும்
என்று மவள்வடிவைக் கண்டோர் தமக்குரம்பை
யெழிலு மனத்துக்கு ருசியாது—இளந்

---

பி - ம். 1 'பின்பு' 2 'ஐயே' 3 'துணையே யெண்ணி' 4 'பந்துவராளியும்' 5 'தோடியும்' 6 'சொல்லென்றே' 7 'முன்னின்'

தென்றல் புலிபோலப் பாயுதே—வானில்
திங்கள்செங் கதிர்போலக் காயுதே—கடல்
திரையோசை யுயிரெங்கென் றாயுதே—அன்றிற்
சிறுபுட்கள் பெடையொடு மேயுதே—ஐயே
தேசாதே சம்போனேன் றேடியலைந்துங் காணேன்
சின்னஞ் சிறியாள்—நலன்
எண்ணு நெறியாள்—புற
நண்ணி யறியாள்—எங்கே
சென்று தியங்கினளோவெங்கே நின்று மயங்கினளோ அந்த (வஞ்சியை)

(கு - உரை.) அனு. சட்டென - விரைவாக. வேள் - காமன். 1. வாள்விழியால்......காட்டுவாள்: "கலகமதனப் பயலை யென்மேற் கண் காட்டிவிட்ட சிங்கி" (குற். குற. 108.) கிட்ட - அருகே. வங்கணம் - அன்பு; "வங்கண நாயகி" (கும். குற.) 2. வெள்ளிலை - தாம்பூலம். மதன் மின்னின் - இரதிதேவியைக்காட்டிலும். 3. தேசாதேசம் - பல தேசங்கள். (௬௪)

குளுவன் சிங்கனைக் குறத்தியின் அடையாளம் வினவுதல்.

வசனம்.

இப்படிக் குறவன் சொல்லக்கேட்டவன் அந்தக் குறத்திக்கு அடையாளமென்ன வென்று கேட்கிறான்.

65. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

திறத்தினுயர் சரபோஜி மன்னன் றஞ்சைத்
திருநாட்டில் யாவர்களுஞ் செல்வ மிக்கோர்
மறத்தடங்கண் மாதரெல்லா மணிக ளாலும்
வடிவாலுந் திருமகளை நிகர்வர் கண்டாய்
நிறத்தனிவேல் பிடித்திடுகைக் குறவா விங்கே
நிலைபெறவே 1 வுருவாதி யின்ன வென்றுன்
குறத்திதனக் கடையாள முரைத்தா னென்மேற்
கூறலா நீகண்டு சேற லாமே.

(கு - உரை.) சேறலாம் - செல்லலாம். (௬௫)

பி - ம். 1 'விரிவாக'

## சிங்கன் சிங்கியின் அடையாளங் கூறுதல்.

**வசனம்.**

குறவன் சொல்லுகிறான்.

66. **சுருட்டி ராகம்—தீச்ர தாளம்.**

**பல்லவி.**

கேளடையே சிங்கிக்கடையாளம்
கேளடையே

**அனுபல்லவி.**

நாளுமூல காளுஞ்சர போஜிமக ராஜர்
நண்ணுமுயர் தஞ்சை யென்னும் நகரிடை (கேளடையே)

**சரணங்கள்.**

1 கன்னமதி லேயிரண்டு சின்னவடு வுண்டு
கள்குடித்த வெறியினுனன் கடித்ததுண்டு பண்டு
வன்னமுலை நன்னயங்கொள் சொன்னமலர்ச் செண்டு
வாயமுதம் பால்கனிதேன் சீனியொடு கண்டு
மன்னு மனநடை யன்ன நடையளொரு
மின்னு மிணையலவே யென்னுநடைய ளின்னம்
(கேளடையே)

2 வதனஞ்செந் தாமரையின் போதெனவே கூடும்
வண்டினங்கள் போல்விழிகள் காதினள வோடும்
எதிர்வோர்கண் மனமேறிக் காதுாச லாடும்
ஏற்றகுமிழ் மூக்கினெழில் [1] பார்க்கினிகந் தோடும்
இன்ப மொருவுருக் கொண்ட திவள்வடி
வென்று மனிதர்கள் கண்டுசொலுவர் நன்றாய்
(கேளடையே)

3 கறுத்த குமரியென்மேல் மெத்தவிசு வாசி
கனத்தினைமுன் பழித்ததையர் தரத்தில்விட்ட கேசி
குறித்துணர்ந்த திறத்தினர்கள் போற்றுசர போசி
குரிசிலுயர் தஞ்சைகண்டு வருவனென்று பேசி
[2] குடக்கி னுயர்சேரி யடுக்க லிடையென்னை
நிறுத்தி யவளிந்த நெறிக்கண்வந் தாள்சொல்லக்
(கேளடையே)

பி - ம். 1 'பார்க்கினிதந்தேடும்' 2 'குடத்தினுயர்'

(கு - உரை.) பல்ல. கேளடையே - கேள் அட ஐயே. 1. நகிலுக்கு மலர்ச்செண்டு: "மாரின் முலைகள் ரெண்டு மலர்ச்செண்டு" (ஆநந்த் குற.); "களபமணி கொங்கைகளும் ரண்டு மலர்ச்செண்டு" (அர்த்த. குற.) 2. பார்க்கின் இகந்து ஓடும். 3. கனத்தினை - மேகத்தை. கேசி - கூந்தலை யுடையவள். அடுக்கல் - மலை. (௬௬)

குளுவன் கூறுதல்.

வசனம்.

இந்தப்படி அடையாளங் கேட்டவன் சொல்லுகிறான்

67. வெண்பா.

சொன்னவடை யாளந் துலங்கவந்தித் தஞ்சையினோர்
கன்னி யிருக்கின்றாள் காட்டுகின்றேன்—அன்னவளைக்
காட்டினா லேயெனநீ கைக்கூலி தந்திடுவாய்
ஈட்டமுறச் சிங்கா வெனக்கு.

(கு - உரை.) காட்டினாலே நீ என்ன கைக்கூலி தந்திடுவாய்; ஏ: விளியுமாம். (௬௭)

சிங்கன் குளுவனிடங் கூறுதல்.

வசனம்.

சிங்கன் சொல்லுகிறான்.

68. நாதநாமக்கிரியை ராகம்—தீவ்ர தாளம்.

பல்லவி.

காட்டிவிடையே சிங்கியைக்
காட்டிவிடையே

அனுபல்லவி.

நாட்டி லுயர்சோழ நாடு புரந்திடும்
நரபதி சரபோஜி மகராஜர் நகரினில் (காட்டி)

சரணங்கள்.

1 ஆயிரம் பெண்களைக் கூடினா லுங்காமம்
அடங்கா திருக்க மருந்து தருகிறேன்
மேய வுலகெங்கு மோர்நொடி தனிற்சென்று
விரைவில் வரவொரு குளிகை தருகிறேன்

தூய நகைமட மாதர் தொடர்ந்திடத்
தாவும் படிவாடைப் பொடியொன்று தருகிறேன்
பேயொடு பூதங்க [1] ளேவியது செய்யப்
[2] பிறங்கொரு மந்திரஞ் சொல்லித் தருகிறேன் (காட்டி)

2 காற்றைப் பிடித்துக் கரகத் தடைப்பதுங்
கண்கட்டு வித்தையுங் காட்டித் தருகிறேன்
ஆற்றல்கொ ளக்கினித் தம்பஞ் சலத்தம்ப
மாகரு டணம்வசியஞ் சொல்லித் தருகிறேன்
ஏற்றிடு மூப்பினர் சிறுபிள்ளை களாகி
யிலங்கிட மூலிகை யிருக்குது தருகிறேன்
மாற்றற் கரிய பிணிகளை மாற்றிட
மணியொன் றிருக்கிற ததுவுந் தருகிறேன் (காட்டி)

3 பகர்ந்திடும் பேச்சினிற் பிறர்பொரு ளினைத்தெட்டிப்
பறிக்கும் படியொரு நரிக்கொம்பு தருகிறேன்
இகனு மிரும்பினைப் பொன்னுக்கிக் கொள்ளலாம்
இதற்கொரு பச்சிலை யுனக்குத் தருகிறேன்
திகழிங் கொருவர்தம் மனத்தெண் ணினவெல்லாம்
தெரிந்து சொலும்வித்தை [3] பரிந்து தருகிறேன்
தருமிவை யெல்லாநீ யுணர்ந்துகொண் டாலுன்னைச்
சரபோஜி [4] மன்னர் புகழ்ந்துகொள் வார்மெத்தக்
(காட்டி)

(கு - உரை.) 1. நொடி - மாத்திரை. வாடைப்பொடி - சொக்குப் பொடி ; "வாடைப்பொடியும் வகைவகையாய்த் தருவேன்" (ஆநூர்க் குற. ; குற். குற. 89.) 2. காற்றைப்பிடித்துக் கரகத்தடைப்பது : "காற் றைப் பிடித்துக் கடத்தி லடைத்து" (சிலப். அடியார்க்கு நல்லாருரைச் சிறப்பு.) "காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி" (தாயுமானவர்.) கண்கட்டுவித்தை : சோடீச : 246. மணி - குளிகை. 3. தெட்டி - வஞ் சித்து. நரிக்கொம்பு : "ராச வசீகரமான நரிக்கொம்பு நான்றரேன்" (கும். குற.) ; "நரிக்கொம்பாகிலுந் தாரேன்" (குற். குற.) ; "நல்ல மோக மாய் நரிக்கொம்பு தருவேனே" ஆநூர்க்குற. (சுஅ)

பி - ம். 1 'ஏவிப்பணிசெய்ய' 2 'பிறங்குமொரு மந்திரம்' 3 'பகிர்ந்து' 4 'மகராஜர்'

### கண்டோனொருவன் கூறல்.

**வசனம்.**

குறத்தி அங்கே இருக்கிறுளென்று ஒருவன் குறவனுக்குச் சொல்லுகிறுன்.

69. **எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

தரியலரை வென்றுபுவி யாளு மெங்கள்
சரபோஜி மன்னவர்தென் றஞ்சை யுற்றோர்
பெரியதல மருவிமன மகிழ்ச்சி நீடு
பெற்றிடுவா ரின்னதுதான் சித்த மாகும்
உரியவித னிந்த நகரை நீயு
முற்றனையே பெற்றிடுவை யுறுதி யாயுன்
கரியமலர்க் கோதையதோ நிற்கின் றுள்பார்
கருதுவரைக் குறமகனே யணுகித் தானே.

(கு - உரை.) தரியலரை - பகைவரை. சித்தம் - நிச்சயம். (௬௯)

### சிங்கன் சிங்கியைக் காண்பதும் அவ்விருவருடைய சல்லாபமும்.

**வசனம்.**

அப்படியே குறவன் சிங்கியைக் கண்டான். இருவரும் பேசிக் கொள்ளுகிறுர்கள்.

70. **அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.**

தாரணி புகழுந் தஞ்சைச் சரபோஜி மன்னர் நாட்டில்
கூரணி நெடுவேற் சிங்கன் குறச்சிங்கி தன்னைக் கண்டான்
வாரணி தனத்தி னளோ மற்றவன் சிலமுன் கேட்க
ஏரணி மாதுங் கேட்க விருவருங் கூறு வாரே.

(கு - உரை.) கூர் அணி - கூர்மையையுடைய. ஏர் - அழகு. (௭௦)

71. **[1] முகாரி ராகம்—திச்ர தாளம்.**

**கண்ணிகள்.**

1 எந்தத் தேசம்விட் டெந்தத்தே சம்வந்தாய் சிங்கி—மேல்
எங்கெங்குத் தேடினே யெனக்கின் றுரையடா சிங்கா

2 ஆலங் குடிகண் டிக்குடி தேடினேன் சிங்கி—கூறும்
[2] அம்பலந் தேட வறிவுனக் கில்லையே சிங்கா

---

பி - ம். 1 சிங்கி ஏசல். 2 ' அம்பலே '

3 வலம்புரிக் களம்பார்க்கத் தினங்குறித் தலைவுற்றேன் சிங்கி—
மற்றதல்லா தூரத்து வல்லநீ தேடலையோ சிங்கா [அடா

4 வன்னக்குற் றால வயினுறத் தேடினேன் சிங்கி—அன்று
மன்னு மியலுறு மாயூரந் தேடலையோ சிங்கா

5 இலங்கிய காஞ்சி யிடைமிகத் தேடினேன் சிங்கி—நல்ல
இசைதரு நாகைதே டெண்ணமாங் கில்லையோ சிங்கா

6 கூடலூ ருக்குமேற் கூடவுந் தேடினேன் சிங்கி—நான்
கூட விருந்திட்டாற் குறித்தவை தேடாயோ சிங்கா

7 தஞ்சையைப் பாரென்று சகலருஞ் சொன்னார்கள்—சிங்கி இங்கே
சாற்றுங் குறிசொல்லித் தனந்தேட வந்தேனடா சிங்கா

8 உனக்குள்ள தனந்தான்மே லெனக்குமுதவலாமே சிங்கி—
ஊரார் தனத்தினுக் கேனித் தனையாசை சிங்கா [அடா

9 மறுதுணை யில்லாமற் றனியே வரலாமோ சிங்கி—பாரில்
பிறைநுத லார்க்குத்தந் நிறைதானே துணையன்றோ சிங்கா

10 இருதனமேலு மிலுப்பைப்பூ வருவானேன் சிங்கி—அது
சரபோஜி மன்ன ருருண்முத்து மாலையடா சிங்கா

11 புதுமதி நெற்றியிற் பூனைக்கண் ணிருப்பானேன் சிங்கி—அது
மதனவல்லி யீந்த வைடூரியச் சுட்டியடா சிங்கா

12 பாம்புரி தன்னை யிடையி [1] லுடுப்பானேன் சிங்கி—அது
பாம்புரி யோமணிப் பட்டிகை யல்லவோ சிங்கா

13 அடிமை வேலையிட் டாள்வதெப் போதடி சிங்கி—மெத்தத்
துடியாதே நானதற்குச் சொன்னேனே யல்லென்று சிங்கா

14 பந்து பிடிக்கக்கை பதைக்குது பாரடி சிங்கி—நீ
விந்தைபே சுவையென்னின் மேலா யிருப்பேனான் சிங்கா

15 காமவே டன்கையிற் காட்டிக் கொடுக்காதே சிங்கி-என்றும்
நாமிரு வருங்கூடி நயந்துவாழ் வோமடா சிங்கா

---

பி - ம். 1 'பரிப்பானேன்'

16 குலவுஞ் சரபோஜி மகராஜர்தமைவாழ்த்திக்
கொண்டிங் கிருப்பமடி சிங்கி—இங்கு
நலதிப் படியேநாம் செய்தாலவர்தயை
நமக்குக் கிடைக்குமடா சிங்கா

17 அவர்சுக மாக விருக்கப் பிரகதீச
[1] ரருட்பதம் போற்றுவோம் சிங்கி—இந்த
அவனியி லெவர்களுஞ் சுகமே யிருக்கணு
மவர்பதம் போற்றுவோம் சிங்கா

(கு - உரை.) 2. ஆலங்குடி கண்டு இக்குடி. அம்பலம் - தில்லை; வேறு பொருளும் உண்டு. 3. வலம்புரிக்களம் - வலம்புரிபோன்ற கழுத்து; திருவலஞ்சுழியென்பது வேறுபொருள். உரம் - மார்பு. வல்லம் - சூதாடு கருவிபோன்ற தனம், ஓரூர். 4. குற்றாலவயின் - குறுகிய ஆலம்போன்ற வயிற்றை, குற்றாலமென்னும் ஊரினிடத்தே. மாயூரம் - மயில், ஓரூர். 5. காஞ்சியிடை - காஞ்சியை யணிந்த இடுப்பு, காஞ்சீபுரத்தில். நாகை - நாகம், ஓரூர். 6. கூடலூருக்குமேல்: ஊரு - துடை; கூடலூர் - ஓரூர். 7. தனம்: சிலேடை. 9. பிறைநுதலார்க்குத்தம் நிறைதானே துணை: "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை" (குறள். 57.) 11. வைடூரியத்திற்குப் பூனைக்கண் உவமை. 12. பாம்புரி - பாம்பின்தோல். குறத்தி இடையிலுடுத்தியிருந்த பட்டிகை அரவுரிபோற் றோன்றியதாதலின், 'பாம்புரிதன்னை உடுப்பானேன்' என்றான். 15. காமவேள் தன்; வேடன் என்பது இதில் தொனிக்கின்றது. 16. நலது: உடன்பாட்டுக் குறிப்பு. (எச)

பல்லவி.

* மங்களஞ் சரபேந்திரற்கு ஜயமங்களம்.

சரணம்.

புகழ்சோழ தேசருக்குப் போசலகு லேசருக்குச்
சகலருக்கு நேசருக்குத் தஞ்சைநகர் வாசருக்கு (மங்களம்)



பி - ம். 1 'உடைப்பதம்'

* இந்தப் பாட்டின் முழுப்பகுதியையும் 293-ஆம் பக்கத்திற் காண்க.

# சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்.

## பாட்டுக்களின் முதற்குறிப்பகராதி.

[எண்கள் பக்க எண்கள்.]

[அ - அகவல். கீ - கீர்த்தனை. கோ - கோச்சககலிப்பா. வி - விருத்தம். வெ - வெண்பா.]

# சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள்.

## அரும்பத முதலியவற்றின் அகராதி.

[எண்கள் பக்க எண்கள்.]

### இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய

# மேற்கோள் நூல்களின் அகராதி.

---

அகநானூறு.
அம்பிகாபதிகோவை.
அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி.
அருணாசலபுராணம்.
அருணைக்கலம்பகம்
அழகர் கலம்பகம்.
அறப்பளீசுவரர் சதகம்.
இரகுநாதன் ஒருதுறைக்கோவை.
இரத்தினச் சுருக்கம்.
இலக்கண விளக்கம்.
இறையனாரகப் பொருள்.
உத்தரராமாயணம்.
உற்பலபரிமளம் - ஒரு வடநூல்.
ஏகாம்பரநாதருலா.
ஐங்குறுநூறு.
கச்சிஆநந்தருத்திரேசர் வண்டுவிடு தூது.
கந்தபுராணம்.
கம்பராமாயணம்.
கலித்தொகை.
காசிக்கலம்பகம்.
காஞ்சிப்புராணம்.
கும்பேசர் குறவஞ்சி.
குலோத்துங்கசோழன்கோவை.
குறிஞ்சிப்பாட்டு.
குறுந்தொகை.
கூர்மபுராணம்.
கூளப்பநாயகன் காதல்.
கொன்றைவேந்தன்.
கோடீச்சுரக்கோவை.
கோயில் நான்மணி மாலை.
சமிவனக்ஷேத்திர மாஹாத்மியம் (வடநூல்.)
சரபேந்திரபூபால குறவஞ்சி.
சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சை.
சரபேந்திரர் வைத்தியம்.
சரபேந்திரர் வைத்தியமுறைகள்.
சிலப்பதிகாரம்.
சிவப்பிரகாசர் (துறைமங்கலம்) பாடல்.
சிறிய திருமடல்.
சீகாளத்திப்புராணம்.
சீவகசிந்தாமணி.
சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்.
சூடாமணி நிகண்டு.
செவ்வந்திப்புராணம்.
சேயூர்முருகனுலா.
சொக்கநாதருலா.
தக்கயாகப்பரணி.
தஞ்சைமகாராஷ்டிரர் சரித்திரம்.
தஞ்சைவாணன்கோவை.
தண்டியலங்காரம்.
தணிகைப்புராணம்.
தமிழ்நாவலர் சரித்திரம்.
தமிழ்நெறி விளக்கம்.
தமிழ்வரலாறு (வசனம்).
தமிழ்விடுதூது.
தனிப்பாடல்.
தனியூர்ப்புராணம்.
தாயுமானவர் பாடல்.
திணைமாலைநூற்றைம்பது.
தியாகராச லீலை.
திரிகடுகம்.
திருக்குற்றாலக் குறவஞ்சி.
திருக்குற்றாலப்புராணம்.
திருக்குறள்.
திருக்கைலாயஞானவுலா.
திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்.
திருநாகைக்காரோணப்புராணம்.
திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 18 | 27 | பரிவருததனை | பரிவருத்தனை |
| 34 | 28 | இவனை | இவளை |
| 42 | 5 | | இந்த வரியிற் 'சிவலோகம்' என்பதை எடுத்து விடுக. |
| 44 | 34 | நயம் | நயம். |
| 111 | 16 | தலைவிக்கு | தலைவனுக்கு |
| 137 | 16 | துதிரப்ப தென்னோ | துதிர்ப்ப தென்னோ |
| 140 | 21 | தலைவிக்குப் பாங்கிகூறல் | தலைவிபாங்கிக்குக்கூறல் |
| 160 | 19 | சொல்லுஞ் கருதியர் | சொல்லுஞ் சுருதியர் |
| 161 | 12 | செய்வோர் | செய்வோர். |
| 179 | 16 | (வேள் - சிற்றரசன்) | வேள் - (சிற்றரசன்) |
| 211 | 10 | கன்னிதனை | கண்ணிதனை |
| 253 | 28 | பாங்குக்கு | பாங்கிக்கு |
| 259 | 10 | வலஞ் சுழிதான் | வலஞ் சுழிதாம் |
| 261 | 10 | கன்னிதனை | கண்ணிதனை |
| 264 | 24 | கெடுஞ்சுரம் | கொடுஞ் சுரம் |
| 270 | I6 | துன்னுவேட் | துன்று வேட் |
| 289 | 1 | குறவஞ்சி நாடகநூன் முகம் | தஞ்சைச் சரபோஜி மன்னர் சரித்திரம் |
| 295 | 7 | பிள்ளைக். | பிள்ளைத். |
| 302 | 7 | சரபேந்திரன் | சரபேந்திரர் |
| 318 | 27 | 1 | 2 |
| 319 | 14 | உச்சையிச் சரவம் | 29. உச்சையிச் சரவம் |
| ,, | 24 | கண்ணை | புருவத்தை |
| 328 | 28 | ர்றிலுயர் | ஈறிலுயர் |